உ

சிவமயம்

உமாபதி சிவாசாரியர்

அருளிச்செய்த 1909

# சிவப்பிரகாசம் மூலமும்

மதுரைச் சிவப்பிரகாசர்

அருளிய

## உரையும்



சைவ சித்தாந்த மகா சமாஜம்

22-ஏ., திருவருளகம், கல்லுக்காரத் தெரு, மயிலாப்பூர்

சென்னை



1940

விலை ரூபா ஒன்று

சிவமயம்

# பதிப்புரை

சிவப்பிரகாசம் (மூலமும் உரையும்) நமது சமாஜப் பதிப்பாகத் திருவண்ணாமலை அண்ணல் திருவடிகளில் இன்று சமர்ப்பிக்கப் பெறுகின்றது. இவ்வுரையே பதினான்கு சாத்திர உரைகளுள் மிகப் பழமையானது. இது முதன் முதலாக 1872-ம் வருஷத்தில் அச்சிடப் பெற்றது. இற்றைக்கு ஐம்பது ஆண்டுகளாக இவ்வுரை யின் அச்சுப்பிரதிகள் கிடைத்தில. பல அன்பர்கள் வேண்டுகோளுக்கிணங்க இது இப்போது சமாஜப் பதிப்பாக வெளியிடப்படுகின்றது. இதைச் செம்மை யாக வெளியிடத் துணைபுரிந்தவர்களுள் தலையாயவர் திரு. மு. அருணாசலம் பிள்ளை, எம். ஏ. அவர்களேயாவர். அவர்கட்கும் ஏனைய துணைவர்கட்கும் சமாஜம் நன்றி செலுத்துகின்றது. இப்பதிப்பு, சித்தாந்த சைவர்கட்குப் பெரும் பயனளிக்குமாறு சுயம்பிரகாச சிவம் அருள்புரிக.

இங்ஙனம்

திருவண்ணாமலை
கார்த்திகைத்
தேர்த்திருநாள்
9-12-1940

ம. பாலசுப்பிரமணியன்
காரியதரிசி
சைவ சித்தாந்த மகா சமாஜம்

## உள்ளுறை

௨

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

கொற்றவன்குடி - உமாபதிசிவாசாரியார்

அருளிச்செய்த

# சிவப்பிரகாசம் மூலமும் மதுரைச் சிவப்பிரகாசர் உரையும்



உரையாசிரியர் செய்த காப்பு

திருமேவு முண்மைச் சிவப்பிரகா சத்தின்
மருமேவு பேருரைக்கு மாணுச் - செருமேல்
தொடக்குஞ் சமர்க்கட் சுரிகுழல்மான் தந்த
கடக்குஞ் சரக்கன்றே காப்பு.

இந்தச் சிவப்பிரகாசமென்று சொல்லப்பட்ட நூலுக்கு **வரலாறவது** :—பூரணகர்த்தாவாயிருக்கப்பட்ட ஸ்ரீகண்டபரமேசுவரன் தானருளிச்செய்த முன்னூலாகிய சிவாகமத்தில் ஞான காண்டமா யிருக்கப்பட்ட பதி பசு பாசத்தினுண்மையை ஸ்ரீநந்தி தேவ தம்பிரானுர்க்குக் கடாக்ஷித்தருள, அந்த உபதேசத்தின் பயனு யிருக்கப்பட்ட சிவஞானபோதமாகிய மூலக்கிரந்தம் பன்னிரண்டையும் ஸ்ரீ நந்திதேவ தம்பிரானுர் சநற்குமாரபகவான் முதலாயுள்ள இருடிகளுக்குக் கடாக்ஷித்தருள, அந்தச் சநற்குமாரபகவான் சத்திய ஞானதரிசனிகளுக்குக் கடாக்ஷித்தருள, அந்தச் சத்தியஞானதரிசனிகள் பரஞ்சோதிமாமுனிகளுக்குக் கடாக்ஷித்தருள, அந்தப் பரஞ் சோதிமாமுனிகள் திருவெண்ணெய்நல்லூரே திருப்படை வீடாக வுடைய மெய்கண்டதேவ தம்பிரானுர்க்குக் கடாக்ஷித்தருள, அந்த மெய்கண்டதேவ தம்பிரானுர் அந்த மூலக்கிரந்தம் பன்னிரண்டின் வழியே பன்னிரண்டு சூத்திரமாக வகுத்து அந்நூற்பெயராலே சிவ ஞானபோதம் என்னுந் திருநாமத்தினையுஞ் சாத்தி வழிநூலாகச்

செய்தருளித் தமது திருவடியைப்பெற்ற அருணந்திதேவ தம்பிரா ஞர்க்குக் கடாக்ஷித்தருள, அவர் அந்நூலை ஆராய்ந்துபார்த்தருளி அந் நூல் சொற்சுருங்கி அத்தமாழ்ந்திருக்கையினலே அந்நூலின் அத் தத்தை விரித்துச் சிவஞானசித்தி யென்னுந் திருநாமத்தினையுஞ் சாத்தி வழிநூலாகச் செய்தருள, இந்த இரண்டு நூலையுங் கொற்ற வன்குடியில் எழுந்தருளிய உமாபதிதேவ தம்பிரானர் திருவுள்ளத் தடைத்தருளி, அந்த இரண்டு நூலின் அத்தமுந் தீவிரதரமுள்ள புத்திமான்களுக்கொழிந்து மற்றொருவர்க்குந் தெரியாதென்று கண்டு யாவர்க்கும் எளிதாய் அறியத்தக்கதாக அந்த இரண்டு வழிநூலின் அத்தமும் முன்னூலாகிய சிவாகமத்தின் அத்தமுந் தம்மிடத்தில் விளைவதாயிருக்கப்பட்ட திருவருள்ஞானமுங் கூட்டிப் பொது ஐம் பது செய்யுளாகவும் உண்மை ஐம்பது செய்யுளாகவும் ஆகத் திரு விருத்தம் நூருகக் கொண்டு சிவப்பிரகாசம் என்னுந் திருநாமத் தினையுஞ் சாத்திச் சார்பு நூலாகச் செய்ததென அறிக.

என்றிங்ஙனஞ் சிவாகமம் முன்னூலென்பதற்குஞ் சிவஞான போதமுஞ் சிவஞானசித்தியும் வழிநூலென்பதற்கும் இந்தச் சிவப் பிரகாசஞ் சார்புநூலென்பதற்கும் பிரமாணமாவது : "வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன் கண்டது முதனூலாகும்", "முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப் பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி அழியா மரபினது வழிநூ லாகும்", "இருவர் நூற் கும் ஒருசிறை தொடங்கித் திரிபுவே றுடையது புடைநூ லாகும்" (நன்னூல், சூத்திரம் 6, 7, 8), "தன்கோள் நிறீஇப் பிறர்கோள் மறுப்பின் எதிர்நூ லென்ப ஒருசா ரோரே" என்னும் இலக்கண விதி யைப்பற்றி; "வினையி னீங்கி...முதனூலாகும்" என்னும் விதியால் சிவாகமம் முன்னூலானதென அறிக; இரண்டாவது "முன்னோர்... வழிநூலாகும்" என்னும் விதியால் சிவஞானபோதமுஞ் சிவஞான சித்தியும் வழிநூலானதென அறிக; மூன்றாவது "இருவர் நூற்கும்... புடைநூலாகும்" என்னும் விதியால், முன்னூலாகிய சிவாகமத்தின் அத்தமும் வழிநூலாகிய சிவஞானபோதஞ் சிவஞானசித்தியின் அத்த முங் கருத்திலுறை திருவருளாகிய வேற்றுமை அத்தமுங்கூட்டி யரு ளிச்செய்கையால் இந்தச் சிவப்பிரகாசஞ் சார்புநூலானதென அறிக.

என்றிங்ஙனஞ் சிவாகமம் முன்னூலென்பதற்குஞ் சிவஞானபோத மூஞ் சிவஞானசித்தியும் வழிநூலென்பதற்குஞ் சிவப்பிரகாசம் புடை யாகிய சார்புநூலென்பதற்கும் பிரமாணமேதென்னில் [1]ஞானதீக் கைத் திருவிருத்தத்தில்,"தேசுமிகு மருட்பயின்ற சிவப்பிரகாசத்தில் திருந்துபொதுச் சங்கற்ப நிராகரணந் திருத்தி, ஆசிலருள் விளுவெண் பாச் சார்பு நூலா லருளொளிதிற் குறிகூட வளித்து ஞானப், பூசை தக்ககாரணமுன் புகன்றதனிற் புரிந்து புணர்விக்கச் சிவஞானபோத சித்திவழிநூன், மாசில்சத மணிக்கோவை முன்னூல்சான்று மருவு திரு முறைத்திரட்டு வைத்தனன்மன் னுயிர்க்கே" என்பது கண்டு கொள்க. அன்றியும் இந்தச் சார்புநூலாகிய சிவப்பிரகாசமென்னும் நூலிலே முன்னூலின் அத்தமும் வழிநூலின் அத்தமும் அது நீங்க லாக வேற்றுமை அத்தமுங்கூட்டி யருளிச்செய்ததற்குப் பிரமாணம்: இந்நூலிலே, "தெரித்தகுரு முதல்வருயர்" (11) என்ற செய்யுளிலே "இறைவனூ லுங் கலந்து" என்றமையான் முன்னூலின் அத்தமுங் கூடினதென அறிக; "விளம்பியநூ லவையிரண்டும் விரும்பிநோக்கி" என்றமையால் வழிநூலின் அத்தமுங் கூடினதென அறிக; "கருத்தி னுறை திருவருளும்" என்றமையால் திரிபுவேறுடைய வேற்றுமை யத்தமுங் கூடினதென அறிக. ஆக மூன்றுவகையும் இங்ஙனங் கண்டு கொள்க.

இந்தச் சிவப்பிரகாசமாகிய நூலிற் செய்யுள்நூற்றுக்குங் கருத்து ஏதென்னில் :—பாயிரமீ ராறு பதியாறு பல்லுயிரொன், றேயுந் திரோதமல மொன்றென்பர்—தூயபத, முத்திதரு மாமாயை யொன் றுகும் மூவுலகிற், புத்திதரு மாயைப் புணர்ப்பாறு—பெத்தம்விட, நன்றுதீ தாகும்வினை நாலாகும் நாடோறுந், துன்று மலத்தின் தொகையொன்று—பொன்றவருங், கேவல மைந்து கிளக்கி லுயிருக் குப், பாவுணர்த்தும் வைகரியின் பாலிரண்டு—தேவர்களுங், கூடுஞ்

[1] கொற்றவன்குடி உமாபதிசிவாசாரியார் செய்தனவாகச் சொல்லப்படும் ஞான பூசாகரணம், ஞான பூசை, ஞான தீக்ஷாவிதி, ஞான அந்தியேட்டி, போசன விதி என்னும் ஐந்து சிறு சாத்திர நூல்கள் தருமபுர ஆதீனத்தாரால் பயிலப்படுகின்றன. அவற்றுள், இங்கு வரும் பாடல் ஞான தீக்ஷாவிதியில் 8-வது செய்யுள்.

சகலநா லந்தாகுங் கூடுமலம், வீடுகின்ற சுத்த வியப்பொன்று—நீடு மின்ப, முத்தியொன் றாக மதித்தருளால் முன்னோர்கள், பத்தியாற் சொன்ன பரிசினால்—இத்தலமேல், உண்மை யுரைக்கி லுயிருண்மை ஒன்பதாம், நண்ணவத்தை மூன்று நலமாக—எண்ணரிய, தன்னை யுணர்த்துந் தகையைந்து தன்னுணர்த்து, மன்னுணர்வின் ஞான வகைமூன்று—பின்னுயிரை, மாசறவே காணும் வகையைந்து மற் றதனில், ஆசொழிக்குந் தன்மை யதுநான்கு—தேசனுருப், பார்வை யறப் பார்க்கும்வகை பத்தாம்பஞ் சாக்கரத்தைத், தேரும்வகை மூன்று தெரியுங்கால்—சீர்மருவும், அன்பாற் சிவனை அநுபவிக்கு மெய்யடியார், இன்பப் பகுதி யிருமூன்று—துன்பமறச், சொற்றரு நூலின் கருத்தொன்று சொற்றருநூல், நற்றவருக் கீயு நலமொன்று—முற்றவரும், பந்த மறுத்த சகநாதன் பார்வையென, வந்தளித்த **சம்பந்த மாமுனிவன்**—எந்தைபதஞ், சென்னியின்மேல் வைத்துச் சிவப்பிரகா சக்கருத்தை, யன்ன வயற்**காவை யம்பலவன்**—நன் னயத்தாற், சொன்னானெழுபிறப்புந் தொல்லைவினை யுந்தீர, மன்னா கமத்தை மதித்து எ - று கண்டுகொள்க.

அன்றியும், இந்நூலுக்குத் திருவடிவரைவும் அதிகாரமுமொக்க வரும் வகையாவது : "ஓங்கு பரந்த நலம்வளந் தேவர்பார் - ஈங்கிவை யாறும் இறைவன் வணக்கம் - புறச்சம யத்தவர் நூற்கருத் தாகும் - மூவகை விரும்பிய கிரியையென மூன்று-மாவது தீக்கா முறைமைய தாகும் - தெரித்த தொன்மை யெனவிவ் விரண்டும் - விரித்த நூன் மர பவைய டக்கமே-பலகலை நீடிங் குலகங் கந்த - மேற்ற விவ்வாறு மிறைவ னிலக்கணம் - எண்ணரி தொன்றும் பசுவி னிலக்கணம் - ஏகமா யொன்று மலமுந் திரோதமும் - உன்ன லொன்றுங் குடிலையி னியல்பாம் - உருவாதி யென்னை படைத்த வல்லல் - அருத்தி மன் னிய வாறு மசுத்தத் - திருத்தகு மாயையின் செய்திய தாகும் - நண் ணிய கன்ம மேலை யுற்றவென் - றெண்ணிய நான்குங் கன்மத் தியல் பே - மோக மிகவென் றெண்ணிய வொன்றும் - வேக மிகுமல மைந் தின் விதியே - ஓங்கின்மை மாயை யந்நியம் புகலும் - ஈங்கிவை யைந் துங் கேவலத் தியல்பே - வந்தடைந் தித்தகை பேசரி யைவகை - அந்தமி லலகில் குணமான தனுவுடன் - சொன்ன முந்தி யிந்நிலை

தோற்றி - யன்ன பத்துஞ் சகல வவத்தையே - இனைய நாடி யென விவ் விரண்டும் - முனைவன் சுத்த முறைமைய தாகும் - அரிவைய ரொன்றும் பரசம யத்தவர் - மருவிய முத்தியின் வாய்மைய தாகும் - என்னும் பொதுவியல் விருத்த மைம்பதின் - மன்னிய கருத்தை வகுத்தன னிப்பால் - ஈங்கிவை யொன்று முண்மையிற் பாயிரஞ் - செறிந்திடு முருவுண ரறிவெனில் வாயில் - அறிவிற லெவ்வறி வசத் தறிந் ததுவுஞ் - சத்தி கண்ணொளி யோரிடத் தெட்டும் - இத்திற மான்ம விலக்கண மாகும் - எண்ண விவ்வகை நீக்கமின் மூன்றும் - அண்ண லளித்த வவத்தைய தாகும் - மருவிய தனக்கெனக் கண்டறி புலன்கள் - இருள்நனி யறிந்திடு மிவையோ ரைந்தும்-பொருவிலான் மாவை யுணர்த்தல் புகலுங் - காட்டிடும் பன்னிற மாயையிம் மூன் றும் - ஊட்டு ஞான வாய்மையை யுரைக்குந் - தேசுற மும்மையின் பாரிப்ப தாகுந் - தன்னறி தத்துவ முறைதரு சுத்தம் - இன்னவை நான்கு மன்னுயிர்த் தரிசனம் - புகலரு மின்றுநோக் கிங்கிலை யடைப வர் - இகலறு நான்கு மிலங்குயிர்ச் சுத்தி - பொற்புறு மொடுங்கிடா பற்றிடு முந்திய - சொற்பெறு பாசம் விளம்பிய பாவிக்கில் - ஒன் றிரண் டாகி யழிந்திடு மெல்லை - என்றிவை பத்து மிலங்குயி ரிலா பம் - பந்தந் திருவெழுத் தைந்தி லாசுறும் - அந்தமின் மூன்று மைந் தெழுத் தருணிலை - தீங்குறு குறிப்பக மண்டமண் தொண்டரென் - றுங்கிவை யாறு மணைந்தோர் தன்மை - நிலவுல கொன்று நூற்கருத் தாகும் - திருவரு ளொன்று மருளுறை நூலைக் - கொடுக்கு முறை மைப் பகுதிய தாகுமென் - றிப்படி யுமாபதி தேவ னுரைத்த-மெய்ப் படு சிவப்பிர காச விருத்தக் - கருத்தின துண்மை விரித்துரைத் தருளினன் - சன்னபையில் வாழுந் தவகுரு நாதன் - பண்பமர் சிற்றம் பலவன் தானே " எ - து கண்டுகொள்க.

என்றிங்ஙனங் கூறிவந்தவகையில் முன்னுள்ள சிவஞானபோதத் தின் அத்தமுஞ் சிவஞானசித்தியின் அத்தமும் இந்தச் சிவப்பிரகாச வழிநூலின் அத்தமுங் கூடினதேயானால் அந்நூல்களைப்போலச் சூத்தி ரம் பன்னிரண்டும் இந்நூலினின்ற முறைமையெங்ஙனே யென்னில் அவை வருமாறு :—" ஓங்கொளியா "யென்ற விருத்தந்தொடங்கி " தொன்மையவா "மென்னும் விருத்தமுடிவாகிய செய்யுள் பன்னி

ரண்டும் பாயிரமாக வகுத்தருளிச்செய்து,மேற் பதியிலக்கணமாகிய "பலகலையென்ற" விருத்தந்தொடங்கி "ஏற்றவினையென்ற" விருத்த முடிவாகிய செய்யுளாறும் முதற்சூத்திரமாகவும்,பசுவிலக்கணமாகிய "எண்ணரிதா" வென்ற விருத்தந்தொடங்கி "அரிவைய ரின்புறு முத்தி"யென்றவிருத்தமுடிவாகிய செய்யுள்முப்பத்திரண்டும் இரண்டாஞ் சூத்திரமாகவும் ஆகப் பொதுவைம்பதும் இங்ஙனம் வகுத்து, மேல் உண்மை யைம்பதில் "இங்கிவை"யென்ற விருத்தமொன்றும் இந்த உண்மைக்கு அதிகார வகுப்பாகவும், மேல் ஆன்ம இலக்கணமாகிய "செறிந்திடு"மென்ற விருத்தந்தொடங்கி "ஓரிடத்திருத்த" லென்ற விருத்த முடிவாகிய செய்யுளேட்டும் மூன்றாஞ் சூத்திரமாகவும், அவத்தைத் தன்மையாகிய "எண்ணவொன்றிலாததீதம்", "இவ்வகையவத்தை", "நீக்கமிலதீதம்" ஆகச் செய்யுள் மூன்றும் நாலாஞ் சூத்திரமாகவும், உணர்த்து முறைமையாகிய "மருவிய பொறியி"லென்ற விருத்தந்தொடங்கி "அறிந்திடுமனுதி" யென்ற விருத்தமுடிவாகிய செய்யுளைந்தும் ஐந்தாஞ் சூத்திரமாகவும், ஞான வாய்மையாகிய "காட்டிடுங் கரணம்", "பன்னிறங்கவரு", "மாயை மாமாயை" யென்னும் விருத்தமூன்றினுள் "காட்டிடுங் கரண" மொன்றும் ஆறாஞ்சூத்திரமாகவும்,நின்றவிருத்தமிரண்டும் மேலதற் கோர் புறனடையாகிய ஏழாஞ் சூத்திரமாகவும், மேல் அதன் பயனென்னும் அதிகாரத்தினுள் "தேசுறமருவு" மென்ற விருத்தந் தொடங்கி "எல்லையில் பிறவி" யென்னும் விருத்தமுடிவாகிய செய் யுள் பத்தொன்பதும் "புனிதனும"மென்னு மதிகாரமாகிய "பந்த மானவை", "திருவெழுத்து", "ஆசறு" என்னும் விருத்தமூன்றும் ஆக முன்னுங் கூட்டிச்செய்யுள் இருபத்திரண்டினுள் "தேசுறமருவு" மென்ற விருத்தமொன்றும் இவையிற்றுக்கு அதிகார வகுப்பாகவும், ஆன்மதரிசனமாகிய "தன்னறிவதனு"லென்ற விருத்தந்தொடங்கிச் "சுத்தமாஞ்சத்தி" யென்ற விருத்தமுடிவாகச் செய்யுள் நாலும் எட்டாஞ் சூத்திரமாகவும், ஆன்மசுத்தியாகிய "புகலரு மசத்தர் தம்பா"லென்ற விருத்தந்தொடங்கி "அடைபவர் சிவமேயாகு" மென்ற விருத்தமுடிவாகிய செய்யுள் நாலும் பஞ்சாக்கர தரிசனத்தில் விருத்தமூன்றும் ஆக முன்னுங் கூட்டிச் செய்யுளேழும் ஒன்ப

தாஞ் சூத்திரமாகவும், ஆன்மலாபமாகிய "பொற்புறு கருவியென்ற' விருத்தந்தொடங்கி "எல்லையில் பிறவி"யென்ற விருத்தமுடிவாகிய செய்யுள் பத்தும் பத்தாஞ் சூத்திரமாகவும், மேல் அணைந்தோர் தன்மையாகிய "தீங்குறு மாயை"யென்ற விருத்தந்தொடங்கித் "தொண்டர்களிட"மென்ற விருத்தமுடிவாகச் செய்யுள் ஆறினுள் "தீங்குறு","குறிப்பிடம்", "அகம்புறம்", "அண்டம்", "மண்முத" லென்னும் விருத்தமைந்தும் பதினொன்றாஞ் சூத்திரமாகவும், "தொண்டர்களிட"மென்ற விருத்தமொன்றும் பன்னிரண்டாஞ் சூத்திரமாகவும் நின்றதென அறிக. இங்ஙனஞ் சூத்திரம் பன்னிரண்டும் வகுத்து, "நிலவுலகாயதாதி" யென்னும் விருத்தமொன்றும் இந் நூலின் கருத்தாகவும் "திருவருள் கொடுத்து" என்னும் விருத்தமொன்றுஞ் சீடனுக்கு நூலும் அத்தமுங் கொடுக்குமுறையாகவும் வகுத்து இந்நூலருளிச் செய்ததென அறிக. ஆக இங்ஙனஞ் சூத்திரங்கள் வகுத்ததற்கு மேலெழுதுகிற வியாக்கியிலே அந்தந்த அதிகாரங்கள் தோறுஞ் சிவஞானபோதத்திலுஞ் சிவஞானசித்தியிலும் வருஞ் சூத்திரத்தின் ஏதுக்களுங் காட்டியெழுதுகிற முறைமையிலே சூத்திரம் பன்னிரண்டுங் கண்டுகொள்க.

## உரை வரலாறு

இந்த வியாக்கியானஞ் செய்தது மெய்கண்டசந்ததியில் காவையம்பலநாதத் தம்பிரானுர் திருவடிமரபில் ஆசாரியரில் மதுரையில் ஞானப்பிரகாசத் தம்பிரானுர் திருவடியடியாரில் சிவப்பிரகாசன் செய்த வியாக்கியானமெனை அறிக. இந்தச் சிவப்பிரகாசமாகிய நூலுக்கு முன்னோர்களும் வியாக்கிசெய்திருக்க இப்பொழுது இந்த வியாக்கிசெய்யவேண்டுங் காரணமேதென்னில், முன்னுள்ள தம்பிரான்களெழுதின வியாக்கிகளெல்லாம் பொழிப்புரையாக எழுத அதனோடு சமயிகள் கருத்துக்களுங் காட்டி என் தம்பிரான் ஞானப்பிரகாசத்தம்பிரானுர் எழுதின வியாக்கியின் வழியே தொகையும் பாட்டுஞ் சேர்த்து, அது நீங்கலாகக் காவையம்பலநாதத் தம்பிரானுர் இந்நூலின் கருத்தாகச் செய்தருளின குறள்வெண்பா நூறும் இந்நூலிற் பாட்டுக்கள்தோறும் பகுத்துச் சேர்த்து அந்தக்

குறளின் கருத்தாகிய அத்தங்களுக்குந் தவறுவராமல் முன்னுண்டான வியாக்கிகளின் பொழிப்போடும் விரிவோடும் நுட்பமும் அகலமுங் காட்டி வழி நூல்களிலுண்டான சூத்திரம் பன்னிரண்டும் இந்நூலிலே வகுத்து வியாக்கி செய்ததென அறிக. இங்ஙனம் பலவகையாக வியாக்கி யெழுதுகைக்கு விதியேதென்னில், அஃதாவது: "பொழிப்பகலம் நுட்பநூல் எச்சமென் றுருக்,கொழித்தகலங் காட்டாதார் சொற்கள்-பழிப்பின்,திரையாமா சேக்கு நெடுங்குன்ற நாட, உரையாமோ நூலுக்கு நன்கு" (நாலடி, 319) என்றமையான் நூல்களுக்கு நால்வகைப்பொருள்களுங்கூட்டி வியாக்கிசெய்யும் விதியுண்டாகையால் அவ்விதியைப் பற்றிப் பொழிப்பும் அகலமும் நுட்பமும் நூலெச்சமுங் காட்டி வியாக்கியெழுதினதென அறிக. அஃதாவது "பொழிப்பெனப் படுவது பொருந்திய பொருளைப் பிண்ட மாகக் கொண்டுரைப் பதுவே" எ - ம், "அகல மென்ப தாசறக் கிளக்கின் விகல மின்றி விரித்துரைப் பதுவே" எ - ம், "நுட்ப மென்பது நுழை பொரு ளியாவுந் திட்ப மாகத் தெளியக் கூறல்" எ-ம், "எச்ச மென்ப திருபொரு ளொழிவு மிச்ச மாக விரித்துரைப் பதுவே" எ - ம் வரும் இலக்கண விதியைப்பற்றியென அறிக. இதிற் பொழிப்பாவது சத்தத்துக்கு அத்தமாகத் தொகுத்தெழுதுகையென அறிக; அகலமாவது அதனை விரித்தெழுதுகையென அறிக; நுட்பமாவது கடாவுக்கு விடைகொடுத்தெழுதுகையென அறிக. எச்சமாவது பாட்டிற் புகுதாத பொருள்களை யமைத்தெழுதுகையென அறிக.

---

மேற்பாயிரம் வருமாறு. இங்ஙனம் இந்த நூல்களுக்கு முந்தப் பாயிரங் கூறுகைக்கு விதியே தென்னில் : "ஆயிர முகத்தா னகன்றதாயினும் பாயிர மில்லது பனுவ லன்றே" (நன்னூல், 53) என்னும் விதியைப்பற்றி முந்தப் பாயிரம் அருளிச்செய்ய வேண்டி, இந்நூலுக்குக் காப்பு ஒரு செய்யுளாகவும் பாயிரம் பன்னிரண்டு செய்யுளாகவும் அருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

## காப்பு

ஒளியான திருமேனி உமிழ்தானம் மிகமேவு
களியார வரும்ஆனை கழல்நாளும் மறவாமல்
அளியாளும் மலர்தூவும் அடியார்கள் உளமான
வெளியாகும் வலிதாய வினைகூட நினையாவே.

ஒளியிது காப்பருட் கணபதி கழலிணை
தெளிபவ ருளம்வினை சேரா வென்றது.

(உரை) ஒளியான திருமேனி - ஞானப்பிரகாசமான திருமேனியிலே; உமிழ்தானம் மிகமேவு களியார வரும் ஆனை-பொழியாநின்ற மதத்தினை மிகவும்பொருந்தப்பட்டுக் கர்வமிகுதியாலேயெழுந்தருளாநின்ற யானைமுகத்தினையுடைய மூத்தநாயனார்; கழல் நாளும் மறவாமல் - அவனது ஸ்ரீ பாதத்தை நாடோறும் மறவாமல்; அளியாளும் மலர் தூவும் அடியார்கள் - வண்டுகளை யாட்சியாகவுடைய பூக்களினாலே அர்ச்சித்து வழிபடுகிற தொண்டராயுள்ளவர்கள்; உளமான வெளியாகும் - உள்ளமானது அஞ்ஞானமாகிய இருள்நீங்கிச் சிவ ஞானம் பிரகாசியாநிற்கும். ஆகையாலே; வலிதாய வினை கூட நினையாவே - அவர்களை மிக்க வினைகளானதும் பொருந்த விசாரியாது. இந்நூல் காப்பது நிமித்தமாக வழிபடாநின்றேமென்பது கருத்து.

(நுட்பம்) ஞானமென்றது அறிவென அறிக. தானமென்றது மதமென அறிக. அடியார்களென்றது தங்கள் சுதந்தரஹானியையறிந்து வழிபடுந் தொண்டர்களென அறிக. சுதந்தரஹானியாவது யானெனது கெட நிற்கையென அறிக. வலிதாய வினை யென்றது பிராரத்தம் புசிக்கச்செய்தே யேறுகிற ஆகாமியகன்மமென அறிக. இதற்குப் பிரமாணம், திருவருட்பயனில் "ஏன்ற வினையுடலோ டேகுமிடை யேறும்வினை-தோன்றி லருளே சுடும்" (98) என்பது கண்டுகொள்க. இதன் கருத்து இந்நூலுக்குக் காப்பென அறிக. இனிப் பாயிரம் பன்னிரண்டும் வருமாறு.

## பாயிரம்

நின்மல சொரூபமாயிருக்கப்பட்ட பரமசிவமானது ஆன்மாக்களுக்குண்டான ஜநநமரண துக்கத்தை நீக்குகைப்பொருட்டாகத் திருவம்பலத்தின்கண்ணே நின்று திருநடனஞ்செய்த அவதரத்தை நோக்கி இந்நூல் செய்துமுடிவது பொருட்டாகத் தோத்திரம் பண்ணுவா னெடுத்துக்கொண்டருளியது.

1. ஓங்கொளியாய் அருள்ஞான மூர்த்தி யாகி
உலகமெலாம் அளித்தருளும் உமையம்மை காணத்
தேங்கமழும் மலரிதழி திங்கள் கங்கை
திகழரவம் வளர்சடைமேற் சேர வைத்து
நீங்கலரும் பவத்தொடர்ச்சி நீங்க மன்றுள்
நின்றிமையோர் துதிசெய்ய நிருத்தம் செய்யும்
பூங்கமல மலர்த்தாள்கள் சிரத்தின் மேலும்
புந்தியினும் உறவணங்கிப் போற்றல் செய்வாம். க

மன்னிய கடவுள் பொன்னடி வாழ்த்தி
முன்னவ னுண்மை முறைமை மொழிந்தது.

(உரை) ஓங்கொளியாய் - நின்மல சொரூபமா யிருக்கப்பட்ட பரமசிவமானது மிகுந்த பிரகாசமான பரையினது சொரூபமாகிய பேரொளியாய்ப் பிரிவற நிற்கச்செய்தே பிரபஞ்சங் காரியப்படுத்துமவதரத்து ; அருள்ஞான மூர்த்தியாகி-தனது காருண்ணியத்தினலே இச்சா ஞானக் கிரியாசொரூபனாய் ; உலகமெலாம் அளித்தருளும் உமையம்மை காண-பிரபஞ்சத்தையெல்லாம் இரக்ஷித்தருளுகிற உமா பரமேசுவரியார் திருக்கண் சாத்தியருள ; தேங்கமழும் மலரிதழி திங்கள் கங்கை திகழரவம் வளர்சடைமேல் சேரவைத்து - மணம் விட்டு வீசாநின்ற கொன்றை மலரினையும் திருஇளம்பிறையினையும் கங்காபரமேசுவரியையும் பணமணிகளினலே விட்டுவிளங்காநின்ற நாகத்தினையும் நீண்ட திருச்சடாபாரத்திலே பொருந்தவைத்து ; நீங்கலரும் பவத்தொடர்ச்சி நீங்க - ஆன்மாக்களால் விட்டு நீங்குதற் கரிதாகிய பிறவித்தொடர்ந்தனை விட்டு நீங்குகைப் பொருட்டாக ; இமையோர் துதிசெய்ய மன்றுள் நின்று நிருத்தஞ்செய்யும் - தேவர்

களாயுள்ளோர்கள் தோத்திரம்பண்ணத் திருவம்பலத்தின்கண்ணே நின்று திருக்கூத்தாடல் செய்தருளுமவனது; பூங்கமல மலர்த்தாள்கள் சிரத்தின்மேலும் புந்தியினும் உற வணங்கிப் போற்றல் செய்வாம் - பொலிவினையுடைத்தாகிய தாமரைமலர்போன்ற ஸ்ரீபாதங்களை இந்நூல் செய்து முடிவதுபொருட்டாக எனது தலைமேலும் இதயத்திலும் அழுந்தவைத்துத் தோத்திரம் பண்ணுநின்றேன்.

ஓங்கொளியாய் என்பதற்கு அந்தப் பரமசிவமானது பரையினது சொரூபமாகிய பேரொளியாயிருக்குமென்று பொருள்கூறியதேதென்னில், அஃதாவது : ஆய் என்ற விகாரச்சொற்கொண்டே அந்தப் பராசத்தி யுடம்பாகப் பரமசிவம் நிற்கையாலே யப்படிச் சொல்லப்பட்டதென அறிக. அதற்கு வழியேதென்னில், தனக்கென்றொரு நிறமில்லாத சுத்த படிகமானது கூடினதன் நிறமாயிருந்தாற்போலத் தனக்கென்றொரு சொரூபமில்லாத அந்தப் பரமசிவமானது தனது பரையினது சொரூபமாகிய பேரொளி யாகையாலேயும் அந்தச் சத்தியிடமாக இச்சாஞானக்கிரியா சொரூபனுகையாலேயும் அப்படிச் சொல்லப்பட்டதென அறிக. இதற்கு பி-ம் சிவஞானசித்தியாரில் "பொன்மை நீலாதி வன்னம்...மூளையானன்றே" (1. 68) எ - து கண்டுகொள்க. அன்றியும் அந்தப் பரமசிவமானது தனக்கென்றொரு சொரூபமாயிராதென்பதற்கு பி - ம் சித்தியாரில் "குறித்தடியி னின்றட்ட குண மெட்டுச்சித்தி" (9. 6) என்னுஞ் செய்யுளில் "மேலொடுகீ ழில்லான், நிறுத்துவதோர் குணமில்லான் தன்னையொரு வருக்கு நினைப்பரியா னென்று மில்லான்" எ - ம் கண்டு கொள்க. அன்றியும் இந்நூலினும் "பலகலை" (13) என்னுஞ் செய்யுளிலே "பதிபரமே யதுதா னிலவும்அரு வுருவின்றிக் குணங் குறிகளின்றி நின்மலமாய்" எ - ம், தேவாரத்திலும் "இன்னதன்மைய னென்றறியொண எம்மானை" (7. 59. 1) எ - ம், திருவாசகத்திலும் "ஒருநாம மோருருவ மொன்றுமிலார்" (8. 11. 1) எ - ம் இப்பொருள்பற்றியென அறிக. அன்றியும், அந்தப் பரமசிவமானது அப்படிப் பேரொளியாயிருக்குமென்றது அது சோம சூரியாக்கினி நக்ஷத்திரங்கள் முதலாயுள்ளவையிற்றுக்கும் ஒளிகளையுங் கொடுப்பதாய் சக்ஷுவிந்திரியத்தை மறைக்கப்பட்ட

புறவிருளைப்போலன்றி மற்றுள்ள விடயவிந்திரியங்களையும் மறைப்ப தாய் ஆன்மாக்களுடைய இச்சா ஞானக் கிரியைகளையும் மறைக் கப்பட்ட பேரந்தகாரமாகிய ஆணவமலத்தை நீக்குகையாலே அப் படிச் சொன்னதென அறிக. அப்படிச் சிவன் பேரொளியுமாயிருப்ப னென்பதற்குப் பி - ம் தேவாரம் "காரொளிய திருமேனிச் செங்கண் மாலும்" (6. 1. 10) என்னுந் திருப்பாட்டிலே "பேரொளி யைப் பெரும்பற்றப் புலியூரானை" எ - து கண்டுகொள்க. அன்றி யும் திருவாசகத்தில் "வெளிவந்திலேனை விடுதிகண்டாய் மெய்ச்சுட ருக் கெல்லாம் ஒளிவந்த பூங்கழல்" (8. 6. 15) எ - ம், கோவைத் திருவாசகத்தில் "உருகுதலைச்சென்ற வுள்ளத்து மம்பலத்தும் மொளி யே, பெருகுதலைச்சென்று நின்றேன்" (104) எ - ம் கண்டுகொள்க. அன்றியும், சிவன் சோமசூரியாக்கினி நக்ஷத்திரங்கள் முதலாயுள் ளவையிற்றுக்கும் ஒளிகளைக் கொடுப்பானென்பதற்கு பி - ம் சித்தியாரில் "நாயகன் கண்ணயப்பால் தேயமா ரொளிகளெல் லாஞ் சிவனுருத் தேசதென்றோர்" (1. 52) எ-து கண்டுகொள்க. இனி அருள்ஞான மூர்த்தியாகி எ - கு ஞானமொன்றையுஞ் சொல்ல இச்சாஞானக்கிரியா சொரூபனென்று பொருள்கூறிய தேதென் னில் ஞானமுண்டான விடத்திலே இச்சையுங்கிரியையுமுண்டாகை யால் அப்படிச் சொன்னதென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "எத்திற ஞானமுள்ள தத்திற மிச்சைசெய்தி, வைத்தலான் மறைப் பின் ஞானல் மருவிடுங் கிரியையெல்லாம்"(1.62)எ-து கண்டுகொள்க. இனி, திங்கள்கங்கை திகழரவம் வளர்சடைமேற் சேரவைத்து எ-கு இவைகளைப் பொருந்தவைத்து என்றதேதென்னில் பாம்புஞ் சந்திர னுந் தம்மிற்பகையாயிருக்கவும் அவையிற்றைப்பகையற வைக்கையா லென அறிக. இதற்கு பி-ம் தேவாரத்தில் "பாம்பொடு திங்கட்பகை தீர்த்தாண்டாய்" (6. 99. 2) எ - து கண்டுகொள்க. நிருத்தமென்றது பஞ்சகிருத்தியத்தையென அறிக. இதற்கு பி-ம் சித்தியாரில் "உலகமே யுருவமாக...ஐந்து, நலமிகு தொழில்களோடு நாடக நடிப்பனுதன்" (5. 7) எ - து கண்டுகொள்க. பவத்தொடர்ச்சி நீங்க நிருத்தஞ் செய்யுமென்றதும் இப்பொருள்பற்றியென அறிக. அப்படிச் சிவன் பஞ்சகிருத்தியஞ் செய்யவே ஆன்மாக்களுக்கு மலபரிபாகம் வந்து

முத்தியைப் பெறுவார்களென்பதற்கு பி - ம் சித்தியாரில் "சொன்ன வித் தொழில்க ளென்ன...மலங்க ளெல்லாந் துடைப்பதுஞ் சொல்ல லாமே" (1. 36) எ - து கண்டுகொள்க. இனி, சிரத்தின் மேலும் புந்தியினு முறவணங்கிப் போற்றல் செய்வாம் எ - கு வஸ்து ஒன்று யிருக்க சிரத்தின்மேலும் புந்தியினுமென்று இருவகையானதேதென் னில் தீக்கையிலுண்டான சகளத்தையுந் தியானத்திலுண்டான நிட் களத்தையுமென அறிக. அவையாவன : சகளமென்றது ஆசாரிய மூர்த்தியாகிவந்து அறிவித்துத் திருவடியைவைத்ததென அறிக; நிட் களமென்றது உயிர்க்குயிராய் நின்றறிவிக்கிற பேரறிவையென அறிக. இதற்கு பி-ம் சித்தியாரில் "என்னைப் பவத்திற் சேரா வகை யெடுத் தென்சித் தத்தே, தன்னைவைத் தருளி னாலே தாளிணை தலை மேற் சூட்டும்" (பாயிரம் - 3) எ - ம், திருக்களிற்றுப்படியாரில் "சிந் தையினு மென்றன் சிரத்தினிலுஞ் சேரும்வகை, வந்தவனை மண் ணிடைநாம் வாராமல் - தந்தவனை" (100) எ - ம் வரும் எதுக்களைக் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது நின்மலசொரூபியாயிருக்கப்பட்ட பரம சிவமானது தனது பரையினது சொரூபமாகிய பேரொளியுமாய் இச்சா ஞானக் கிரியா சொரூபியுமாய்த் திருவம்பலத்தின்கண்ணே நின்று திருநடஞ்செய்த அவதரத்தை நோக்கி இந்நூற்செய்துமுடி வதுபொருட்டாகத் தோத்திரம் பண்ணுமுறைமையை யறிவித்தது.

இங்ஙனந் திருநடஞ்செய்தருளுகிற சிவனுக்குண்டான கிருத்தி யங்களுக்கெல்லாம் உடனுயிருக்கப்பட்ட பராசத்தியை நோக்கித் தோத்திரம் பண்ணுவான் எடுத்துக்கொண்டருளியது.

2. பரந்தபரா பரையாதி பரன திச்சை
 பரஞானம் கிரியைபர போக ரூபம்
தருங்கருணை உருவாகி விசுத்தா சுத்தத்
 தனுகரண புவனபோ கங்கள் தாங்க
விரிந்தஉபா தானங்கள் மேவி ஒன்றாய்
 விமலமாய் ஐந்தொழிற்கும் வித்தாய் ஞாலத்(து)
அரந்தைகெட மணிமன்றுள் ஆடல் காணும்
 அன்னையருட் பாதமலர் சென்னி வைப்பாம். உ

புத்தியும் முத்தியும் பொருந்தினின் றளிக்குஞ்
சத்திதன் பேதத் தகைமை சாற்றியது.

(உரை) பரந்தபராபரை-எங்கும் பரிபூரணமாயிருக்கிற மேலான பராசத்தியானது; ஆதி - திரோதசத்தியுமாய்; பரனதிச்சை பர ஞானங்கிரியை - பரனுடைய இச்சாசத்தியென்றும் மேலான ஞான சத்தியென்றுங் கிரியாசத்தியென்றும்; பரபோகரூபந் தருங்கருணை உருவாகி - மேலான சிவபோகத்தைத் தன்னடியார்க்குக் கடாக்ஷித் தருளுகிற காருண்ணியசத்தி இப்படி இச்சா ஞானக் கிரியா சொரூப மாகி; [இந்தப் பதத்துக்கு இதுவன்றியும் மேலான சுகசொரூபத்தைத் தன்னடியார்க்குக் கடாக்ஷித்தருளுகிற காருண்ணிய கர்த்தாவுக்குத் திருமேனியுமாய் என்பாருமுளர்] விசுத்தா சுத்தத் தனுகரணபுவன போகங்கள் தாங்க விரிந்த உபாதானங்கள்மேவி - சுத்தமாயையி லுண் டான தனுகரணபுவன போகங்களையும் அசுத்தமாயையி லுண்டான தனு கரண புவன போகங்களையுந் தருகிற்பதாகப் பரந்த விந்து மோகினி மானென்கின்ற மூன்று உபாதானங்களையும் பொருந்தி; ஒன்றாய் - இங்ஙனம் பெயருந்தொழிலும் பலவாயிருந்தும் தான் ஒன்றா யிருப்பதாய்; விமலமாய் - இந்த உபாதானங்களோடு கூடியிருந்தா லுந் தான் நின்மலமா யிருப்பதாய்; ஐந்தொழிற்கும் வித்தாய் - சிவன் செய்யப்பட்ட சிருஷ்டி திதி சங்காரந் திரோபவம் அநுக்கிரகம் என் னப்பட்ட பஞ்சகிருத்தியங்களுக்குங் காரணமாய்; ஞாலத்தரந்தை கெட மணிமன்றுள் ஆடல் காணும் - பிரபஞ்சத்திலுள்ளார் பிறவிக் கிலேசம் நீங்குகைப்பொருட்டாக அழகியதிருவம்பலத்தின்கண்ணே சிவனைத் திருக்கூத்துக் கண்டருளும்; அன்னை அருட் பாத மலர் சென்னி வைப்பாம் - இந்த இயல்புகளையுடைய உலக மாதாவினது கிருபை பொருந்தின ஸ்ரீபாதகமலத்தை எனது தலைமேலே வைத் துக் கொள்ளாநின்றேன்.

பரந்த பராபரை எ - கு பூரணமாகிய மேலான பராசத்தியென் றதேதென்னில் பூரண கர்த்தாவாகிய பரமசிவனுக்குச் சத்தியாய் நிற்கையாலென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "எத்திறம் நின் றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்பள்" (2.75) எ-து கண்டுகொள்க.

இனி ஆதியென்றதைத் திரோதசத்தி யென்றது; திரோதசத்திக்கு ஆதியென்ற பேரானதேதென்னில் அந்தத் திரோதம் அவதரசத்தி யாகி ஓரவதரத்திலே தோன்றுகையாலென அறிக. இனி மற்றுள்ள இச்சா ஞானக் கிரியா சத்திகளைப் பரனதிச்சை பரஞானங் கிரியை யென்று இந்தச் சத்திகளுக்குச் சிவனைக் கூட்டிச் சொன்னதேதென்னில் சிவனுக்கு இந்தச் சத்திகள் இச்சா ஞானக் கிரியாசத்திகளாய் நிற்கையாலென அறிக. அவையாவன : சிவன் ஆன்மாக்களை இரக்ஷிக்க வேணுமென்று திருவுளத்திலே யொருநினைவெழுந்திருந்த அவதரத்துக்கு இச்சாசத்தியாகையாலும், அதிலேயொரு அறிவெழுந்திருந்த அவதரத்துக்கு ஞானசத்தியாகையாலும், அந்த ஆன்மாக்களைப் பிரபஞ்சகாரியப்படுத்தும் அவதரத்துக்குக் கிரியாசத்தியாகையாலும் அப்படிச் சொன்னதென அறிக. இங்ஙனஞ் சொன்னதற்கு பி-ம் சித்தியாரில் "ஒன்றதா யிச்சா ஞானக் கிரியையென் றொருமூன் றாகி,நின் றிடுஞ் சத்தி யிச்சை யுயிர்க்கருள் நேச மாகும், நன்றெலாம் ஞான சத்தியால்நயந் தறிவன் நாதன், அன்றருட் கிரியை தன்னா லாக்குவன் அகிலமெல்லாம்" (1. 63) எ-து கண்டுகொள்க. இனி, பரபோகரூபந் தருங் கருணை யுருவாகி எ-கு மேலான சுகசொரூபமாகிய சிவபோகத்தைத் தன்னடியார்க்குக் கடாக்ஷித்தருளுகிற சத்தியென்று பொருள் கூறியதற்கு பி - ம் தத்துவவிளக்கத்தில் "பவமே வியநெறி பந்திக்கு மீசன் பசுக்கள் தம்மை" யென்னுஞ் செய்யுளில் "சத்திகண்ணைச் சென்று சார்ந்து பின்னர்ச், சிவமேவுவ ரென்றுகாண் கொச்சைக் காவலன் சித்திரிப்பே" எ-ம், இந்நூலினும் "முன்னைத் தகவிலா மலங்கள் வாட்டி யத்தனை யருளும்" (75) எ-ம், திருவாசகத்தினும் "அவனரு ளாலே யவன்தாள் வணங்கி" (8. 1. 18) எ-ம் கண்டுகொள்க. இனி விசுத்தாசுத்தத் தனுகரண புவனபோகங்கள் தாங்க விரிந்த உபாதானங்கள் எ-கு விந்துமோகினிமானென்று பொருள்கூறியதேதென்னில், விந்து என்றது சுத்தமாயையில் தோன்றப்பட்ட விந்துசத்தியெனஅறிக;மோகினியென்றது அசுத்தமாயையெனஅறிக; மானென்றது அவ்வியத்தமாகிய பிரகிருதிமாயையென அறிக. இவ்வுபாதான மூன்றுக்கும் பி-ம் சித்தியாரில் "மந்திரம் அத்துவாவின் மிகுத்தொரு வடிவ மாகத், தந்ததென் அரனுக் கென்னிற் சகத்தினுக்

குபாதா னங்கள்,விந்துமோகினிமான் மூன்று மிவற்றின்மே லாகி விந்துச், சிந்தையா ரதீத மான சிவசத்தி சேர்ந்து நிற்கும்" (1.57) எ-து கண்டுகொள்க. இனி ஒன்றாய் எ-கு பெயருந் தொழிலும் பலவாயிருந்துந் தானொன்று யிருப்பதாயென்று பொருட்படுத்தினதற்கு பி - ம் சித்தியாரில் " சத்திதான் பலவோ வென்னில் தானொன்றே யனேகமாக, வைத்திடுங் காரியத்தால் " (1. 61) எ-து கண்டுகொள்க. இனி ஐந்தொழிற்கும் வித்தாய் எ - கு சிவன்செய்யுங் கிருத்தியங்களுக் கெல்லாம் இந்தச் சத்தி காரணமா யிருப்பளென்று பொருள்கூறிய தேதென்னில் சிவன் யாதாமொன்றைச் செய்யுமிடத்து இந்தச் சத்தியைக் கூடாமற் செய்யாமையால் அப்படிச் சொன்னதென அறிக. இதற்கு பி - ம் திருக்களிற்றுப்படியாரில் " நங்கையினால் நாமனைத்துஞ் செய்தாற்போல் நாடனைத்தும், நங்கையினாற் செய்தளிக்கும் நாயகனும்"(78) எ-ம், "நேரிழையாள் தன்வசனா யேயிருப்பன் தான் " (46) எ-ம், சித்தியாரிலும் " அவளால் வந்த ஆக்கமிவ் வாழ்க்கை யெல்லாம்" (1. 69) எ-ம் வருமேதுக்களைக் கண்டுகொள்க. இனி அன்னை யருட் பாதமலர் சென்னி வைப்பாம் என்ற பதத்தில் அன்னையென்றதை உலகமாதா என்று பொருள் கூறியதேதென்னில், இந்தச்சத்தி சர்வான்மாக்களையுந் தோற்றுவித்து ஊட்டி யுறக்கி யநுக்கிரகித்து நிற்கையால் அப்படிச் சொன்னதென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் " பேசரிய வுயிரையெலாம் பெற்று நோக்கிப் பெரும்போக மவையளித்துப் பிறப்பினையு மொழித்திட், டாசகலு மடியருளத் தப்பனுட னிருக்கும் அன்னையருட் பாதமலர் சென்னி வைப்பாம்" (பரபக்கம், பாயிரம் - 3) என்பதனுள் " ஆசகலு மடியருளத் தப்பனுட னிருக்கும் அன்னை " எ - து கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது பராசத்தியானது திரோதசத்தியுமாய் இச்சாஞானக்கிரியா சத்தியுமாய்ச் சிவனுக்குத் திருமேனியுமாய்ச் சுத்தமாயையும் அசுத்தமாயையுமாகிய விந்து மோகினி மானென்கிற உபாதானங்களையுங் கூடிநின்று காரியப்படுத்திச் சிவன் செய்யும் பஞ்சகிருத்தியங்களுக்குங் காரணமாய்ஆன்மாக்கள் ஜனனநீங்குகைப் பொருட்டாகத் திருவம்பலத்தின்கண்ணே சிவனைத் திருக்கூத்துக் கண்டருளுகிற பராசத்தியை நோக்கித் தோத்திரம்பண்ணின முறைமையை யறிவித்தது. இவையிரண்டும் வழிபடுதெய்வ வணக்கம். உ

இங்ஙனஞ் சொல்லப்பட்ட பரமேசுவரியோடும் பரமேசுவரன் கூடின அவதரத்துத் திருவவதாரஞ் செய்தருளின மூத்தநாயனாரை நோக்கித் தோத்திரம் பண்ணுகின்றது :

3. நலந்தரநூல் இருந்தமிழின் செய்யுட் குற்றம்
   நண்ணாமை இடையூறு நலியாமை கருதி
இலங்குமிரு குழையருகு பொருதுவரி சிதறி
   இணைவேல்கள் இகழ்ந்தகயற் கண்ணியொடும் இறைவன்
கலந்தருள வரும்ஆனை முகத்தான் மும்மைக்
   கடமருவி யெனநிலவு கணபதியின் அருளால்
அலந்துமது கரமுனிவர் பரவவளர் கமலம்
   அனையதிரு வடியிணைகள் நினைதல் செய்வாம். ௩

சொற்றரு நூலிற் குற்றமணு காவகை
பொற்புறு கரிமுகன் நற்பதம் பணிந்தது.

(உரை) நலந்தர நூல் - இந்நூலுக்கு எல்லா நன்மைகளு முண்டாம்படியும்; இருந்தமிழின் செய்யுட்குற்றம் நண்ணாமை - பெரிய தமிழாகிய தொல்காப்பிய முதலாயுள்ள இலக்கணங்களின் நீக்கப்பட்ட பஞ்சவதிகாரக்குற்றங்களும் வந்துபொருந்தாதபடியும்; இடையூறு நலியாமை கருதி - இந்நூல் செய்து முடிகைக்கு இராஜீகதெய்வீகங்களினால் ஒரு விக்கிநங்களும் வாராமலும் விசாரித்து ; இலங்கும் இரு குழையருகு பொருதுவரி சிதறி இணைவேல்கள் இகழ்ந்த கயற் கண்ணியொடும் இறைவன் கலந்தருள வரும் ஆனை முகத்தான்-விளங்கப்பட்ட இரண்டு மகரக்குழையளவுஞ் சென்று மோதிச் செவ்வரி பரந்து தனக்குவமையாகச் சொல்லப்பட்ட வேல்களையும் பழித்த கயல்போன்ற கண்ணினையுமுடைய பரமேசுவரியோடும் பரமேசுவரன் கூடியருள எழுந்தருளின யானைமுகத்தினையுடைய ; மும்மைக் கடம் அருவியென நிலவு கணபதியின் அருளால் - இரண்டு கன்னங்களாலும் உபத்தத்தினாலும் பாயும் மதமானது மலையிலே நின்றும் அருவி பாய்ந்தாற்போல என்னும்படிப் பொருந்தப்படாநின்ற விக்கிநேசுவரன் அநுக்கிரகத்தாலே ; அலந்து மதுகர முனிவர் பரவ வளர் கமலம் அனைய திருவடியிணைகள் நினைதல் செய்வாம் - முனிவராகிய

வண்டுகள் ஆசைப்பட்டுத் தோத்திரம் பண்ண நிறம்வளராநின்ற செவ்வித் தாமரைமலர்போன்ற அவனது ஸ்ரீபாதங்களைச் சிந்தியாநின்றேன்.

நலந்தரநூல் எ - கு நன்மையுண்டாக என்றதேதென்னில் சைவசித்தாந்த அத்தத்துக்கு மலைவுவராமலென்றதென அறிக. இருந்தமிழின் செய்யுட்குற்றம் நண்ணுமல் எ - கு பஞ்சவதிகாரக் குற்றங்களும் பொருந்தாமலென்றதேதென்னில், எழுத்துஞ் சொல்லும் பொருளும் யாப்பும் அலங்காரமுமென்னப்பட்ட இலக்கணவிதிகளுக்குக் குறைவுபடாம லென்றதென அறிக. இடையூறு நலியாமை எ-கு இராஜீக தெய்வீகங்களினுல் இடையூறுவராம லென்றதேதென்னில் இராஜீகமென்றது படைக்கலங்களினு லுண்டான விக்கினமென அறிக; தெய்வீகமென்றது பசிகளினுலும் நோய்களினுலுமுண்டான விக்கினமென அறிக. வரும் ஆனைமுகத்தான் எ - கு எழுந்தருளினயானைமுகத்தானென்ற தேதென்னில் எழுந்தருளினதென்றது திருவவதாரஞ் செய்ததென அறிக.

இதனுற் சொல்லியது இந்நூற் செய்து முடியுமிடத்து இந்நூலுக்கு நன்மையுண்டாம்படியும், இலக்கணவிதியிலுண்டான குற்றங்கள் பொருந்தாதபடியும், இடையூறு வாராதபடியும் விசாரித்து விக்கினேசுவரனை நோக்கித் தோத்திரம் பண்ணுமுறைமையினை யறிவித்தது. ௩

இன்னமும் இந்நூல்செய்து முடிகைக்கு விக்கினங்கள் வாராமல் விநாயகனுக்குப் பின்பு திருவவதாரஞ் செய்தருளின சுப்பிரமணியனை நோக்கித் தோத்திரம் பண்ணுகின்றது.

4. வளநிலவு குலஅமரர் பதியாய் நீல
மயிலேறி வரும்ஈசன் அருள்ஞான மதலை
அளவில்பல கலைஅங்கம் ஆரணங்கள் உணர்ந்த
அகத்தியனுக் கோத்துரைக்கும் அண்ணல்விற லெண்ணு
உளமருவு சூரனுரம் எனதிடும்பை ஓங்கல்
ஒன்றிரண்டு கூறுபட ஒளிதிகழ்வேல் உகந்த
களபமலி குறமகள்தன் மணிமுலைகள் கலந்த
கந்தன்மல ரடியிணைகள் சிந்தை செய்வாம். ௪

அருமறைச் சிரப்பொருள் அகத்தியற் குரைத்த
முருகன திருபதம் பரிவுடன் மொழிந்தது.

(உரை) வளம்நிலவு குலஅமரர் பதியாய் - புதுமை பொருந்தியிருக்கிற தேவர்கள் கூட்டத்திற்குக் கர்த்தாவாயிருக்கப்பட்ட; நீலமயிலேறிவரும் ஈசன் அருள்ஞான மதலை - நீலநிறத்தையுடைய மயிலை வாகனமாகவுடையனுமாய பரமேசுவரன் தந்தருளும் ஞானப்பிள்ளை; அளவில் பல கலை யங்கம் ஆரணங்கள் உணர்ந்த அகத்தியனுக்கு ஓத்துரைக்கும் அண்ணல் - அளவில்லாத பலகலையாகிய ஞானங்களையும் சிக்ஷை நிருத்தம் சந்தசு சோதிடம் கற்பம் வியாகரணம் என்னப்பட்ட ஆறங்கமாகிய அங்கமும் இருக்கு எஜுர் சாமம் அதர்வணம் என்னப்பட்ட நாலுவேதமும் ஓதியுணர்ந்த அகத்தியமஹாவிருடிக்குப் பிரணவசொரூபத்துக்கு வியாக்கியாநஞ்செய்த சுவாமி; விறலெண்ணு உளம் மருவு சூரனுரம் எனதிடும்பை ஓங்கல் ஒன்றிரண்டு கூறுபட ஒளிதிகழ்வேலுகந்த - பிறருடைய வெற்றியினை விசாரியாத மனத்தினையுடைய சூரபத்மாவினுடைய மார்பையும் என்னுடைய பிறவிக்கிலேசத்தினையும் அசுரரொதுங்கப்பட்ட கிரவுஞ்ச பர்வதத்தையும் ஒவ்வொன்று இவ்விரண்டு கூறுபடத்தக்கதாகப் பிரகாசம் விளங்காநின்ற வேலிலே திருவுளம் வைத்தருளின; குறமகள்தன் களபமலி மணிமுலைகள் கலந்த கந்தன் - வள்ளிநாச்சியாருடைய களபச்சேறு மிகவும் பொருந்தின ஒளியையுடைய திருமுலைத்தலங்களிலே முயங்கியருளின சுப்பிரமணியப்பிள்ளையாரது; மலரடியிணைகள் சிந்தைசெய்வாம் - தாமரைமலர்போன்ற ஸ்ரீபாதங்களையும் இந்நூல் விக்கிநமறச் சென்றுமுடிவதுபொருட்டாக நினையாநின்றேன்.

தேவர்களுக்கதிபதியென்றது அவர்களுக்குக் கர்த்தாவாகையாலென அறிக. நீலமயிலேறி வருமென்றது அஞ்ஞானமாகிய இருட்சியைவிட்டுத் தோய்வறநிற்கையாலென அறிக. ஞானமதலையென்றது ஒருவர் அறிவியாமல் தானே யறிகைக்குண்டான மகத்துவத்தினுலென அறிக. இடும்பையிரண்டுபட என்றது பிறவித்துக்கமாகிய இடும்பை ஆன்மாவினோடுங்கூடிநின்று ஜநநமரணப்படுத்தி வருகையினுலே அருளோடுங் கூடி வழிபடுமவதரத்து அது நீங்குகையாலென

அறிக. ஒளிதிகழ் வேலுகந்த என்றது தன்னைவழிபடும் அடியார்க்குண்டான துக்கங்களை ஜயிக்கவேணுமென்று திருவுள்ளத்தடைத்து வேலை எடுக்கையினுலென அறிக.

இதனாற் சொல்லியது இந்நூல் இடையூறுவராமல் முடிய வேண்டி ஈசனருள் ஞானமதலையாகிய சுப்பிரமணியப்பிள்ளையாரை நோக்கித் தோத்திரம் பண்ணுமுறைமையை யறிவித்தது. ௪

இந்நூல் அருளிச்செய்கிற அத்தமுண்டான முறைமையெப்படியென்றுவினவப் பாரம்பரியமாக உபதேசஞ்செய்தருளின சந்தான குரவர் திருமுடியடைவுமேல் அருளிச்செய்கின்றது.

5. தேவர்பிரான் வளர்கயிலைக் காவல் பூண்ட
திருநந்தி அவர்கணத்தோர் செல்வர் பாரிற்
பாவியசத் தியஞான தரிசனிகள் அடிசேர்
பரஞ்சோதி மாமுனிகள் பதியாம் வெண்ணெய்
மேவியசீர் மெய்கண்ட திறலான் மாறு
விரவுபுகழ் அருணந்தி விறலார் செல்வத்
தாவில்அருள் மறைஞான சம்பந்தர் இவர்இச்
சந்தானத் தெமையாளுந் தன்மை யோரே. ௫

ஆதிமா முனிவர்க் கம்பிகா பதிஅருள்
கோதிலா ஞானக் குருமர புரைத்தது.

(உரை) தேவர்பிரான் வளர்கயிலைக் காவல் பூண்ட திருநந்தி - தேவர்களுக்குக் கர்த்தாவாகிய ஸ்ரீகண்டபரமேஸ்வரன் எழுந்தருளியிருந்துள்ள மிக்க கயிலாயத் திருமலையைக் காக்கிறதே விரதமாகப் பூண்ட ஸ்ரீநந்திகேஸ்வரநாயனார்; அவர் கணத்தோர் செல்வர் - அவரது திருவடியைப்பெற்ற மஹாவிருடிகளில் ஒப்பில்லாத ஞானச் செல்வத்தையுடைய சநற்குமாரபகவான்; பாரிற் பாவிய சத்திய ஞான தரிசனிகள் - அவர் திருவடியைப்பெற்றுப் பூமியிலே எழுந்தருளின சத்தியஞானதரிசனிகள்; அடி சேர் பரஞ்சோதிமாமுனிகள் - அவரது ஸ்ரீபாதத்தைப்பெற்ற பரஞ்சோதிமாமுனிகள்; சீர் வெண்ணெயாம் பதி மேவிய மெய்கண்ட திறலான்-சிறப்புமிக்க திருவெண்ணெய்நல்லூரே திருப்படைவீடாகவுடைய மெய்கண்டதேவநாயனார்; மாறு விரவுபுகழ் அருணந்தி - அவரது திருவடியைப்பெற்ற

அழியாத புகழைக் கலந்த அருணந்திதேவநாயனார்; விறலார் செல்வத் தாவில் அருள் மறைஞானசம்பந்தர் - அவரது திருவடியைப் பெற்று வெற்றிபொருந்தின செல்வமாகிய குற்றமில்லாத அருளைப் பெற்ற மறைஞானசம்பந்த நாயனார்; இவர் இச்சந்தானத்து எமையாளுந் தன்மையோரே - இவர்கள் ஆறு திருப்பெயரும் இந்த மெய்கண்ட சந்தானத்து எம்மையடிமையாக ஏவற்செய்வித்துக்கொள்ளும் முறைமையினை யுடையோர்கள்.

தேவர்பிரானென்றது பிரமவிட்டுணுக்கள் முதலாயுள்ள தேவர்களுக்குங் கர்த்தா என்றதென அறிக. வளர்கயிலையென்றது உயர்ந்த கயிலையென்றதென அறிக. அந்தக் கயிலையைக் காவல்பூண்ட திருநந்தியென்றதேதென்னில், சிலாதரமுனி புத்திரனில்லாமல் தவஞ் செய்யுமவதரத்து அவனுக்குச் சிவன்முன்னின்று உனக்கு வேண்டியதேதென்று கேட்டருளத் தேவரீரைப்போலச் சாவாமூவா இயல்பினையுடைய புத்திரன் வேண்டுமென்று கேட்ப, அப்படிப் புத்திரனைக் கொடுத்தருளியபடி வருகையாலே அவர் கன்மபூமியிலேயிருக்க வொண்ணாதென்று திருவுள்ளத்தடைத்தருளி அவர்க்கு நந்திகேஸ்வர நாயனாரென்று ஞானாபிடேகமுஞ்செய்து மற்றுள்ள இருடிகளுக்கு ஞானோபதேசங் கொடுக்கக் கற்பித்து அவர்க்குக் கயிலாயத் திருமலையுங் காக்கிறது விரதமாக அன்றே கொடுத்தருளினதென அறிக. மெய்கண்ட திறலானென்றது உண்மைஞானமாகிய சத்தியத்தைத் தரிசித்த சாமர்த்தியத்தை யுடையவனென்றதென அறிக. விறலார்செல்வம் எ - கு வெற்றிபொருந்தின செல்வமென்றது அருட்செல்வத்தையென அறிக; அருட்செல்வ மென்றதேதென்னில் அருட்செல்வம் மேற்பட்ட செல்வமாகையாலும் அருட் செல்வமுடையவர்கள் பொருட்செல்வங் கொள்ளாதபடியாலும் அப்படிச் சொன்னதென அறிக. இவ்விரு செல்வத்தினுள்ளும் அருட்செல்வம் பொருட் செல்வத்தினும் மேற்பட்டதென்பதற்கு பி-ம் திருவள்ளுவப்பயனில் “அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம், பொருட்செல்வம் - பூரியார் கண்ணு முள” (திருக்குறள் - 241) என்னும் பொருள்பற்றி நின்றதென அறிக. அன்றியும் அருட்செல்வமுடையவர்கள் பொருட்செல்வங் கொள்ளார்களென்பதற்கு பி - ம் தேவாரத்தில் “துகிலுடுத்

துப் பொன்பூண்டு திரிவார் சொல்லுஞ் சொற்கேட்கக் கடவோமோ துரிசற் றோமே" (6. 98. 2) எ - ம், பெரியபுராணத்தில் "கேடு மாக்கமுங் கெட்ட திருவினார், ஓடுஞ் செம்பொனு மொக்கவே நோக்குவார்" (12. 5. 8) எ - ம், சித்தியாரில் "ஓட்டில் தபனியத்திற் சமபுத்தி பண்ணிச் சங்கரனோ,டொக்கவுறைந் திவரவனை யவனிவரை விடாதே யுடனதையாய்ச் சிவன்தோற்ற மொன்றுமே காண்பர்" (8. 29) எ - ம் கண்டுகொள்க. இச்சந்தானமென்ற சுட்டு கொண்டே மற்றுள்ள சந்ததிகளுக்கும் இப்படிப் பாரம்பரியமாக ஆசாரிய மரபுண்டாகையால் இந்த மெய்கண்ட சந்ததியென்று பொருள்படுத்தினதென அறிக.

இதனாற் சொல்லியது இந்த மெய்கண்ட சந்ததிக்குச் சைவ சித்தாந்த அத்தம் பாரம்பரியமாக உபதேசஞ் செய்தருளின சந்தான குரவரொழுங்கினை யறிவித்தது. ௫

இங்ஙனஞ் சொல்லப்பட்ட ஆசாரியரில் பிற்கூறிய மறைஞான சம்பந்தநாயனார் தம்மை இரக்ஷித்த ஆசாரியராகையால் அவரை நோக்கித் தனித்தொரு செய்யுளாகத் தோத்திரம் பண்ணுகின்றது.

பார்திகழ வளர்சாம வேதம் மல்கப்
  பராசரமா முனிமரபு பயில ஞானச்
சார்புதர வந்தருளி எம்மை யாண்ட
  சைவசிகா மணிமருதத் தலைவன் அந்தண்
கார்மருவு பொழில்புடைசூழ் மதின்மீதே மதியம்
  கடவாமை நெடுங்கொடியின் கரந்தையும் கடந்தைச்
சீர்நிலவு மறைஞான சம்பந்தன் எந்தை
  திருவளரு மலரடிகள் சென்னி வைப்பாம்.

மன்னிய வொருபொருள் வடிவுகொண் டிருபதஞ்
சென்னியின் வைத்த தேசிகன் வணக்கம்.

(உரை) பார் திகழ - பூமி விளங்குவதாகவும்; வளர் சாம வேதம் மல்க - ஆயிரஞ்சாகைகளாக விரியப்பட்ட சாமவேதம் வர்த்தியா நிற்கவும்; பராசரமா முனிமரபு பயில - பராசரப் பிரமவிருடி கோத்திரந் தழைக்கவும்; ஞானச் சார்புதர வந்தருளி எம்மை

யர்ண்ட சைவசிகாமணி-ஞானவொழுக்கமுண்டாகும்படி எழுந்தருளி ஒன்றுக்கும் பற்றாத என்னை அடிமையாகக் கொண்டருளின - சைவசமயத்துக்கு ஓர் அபிடேக மாணிக்கம் ; மருதத்தலைவன் - மருதூர்க்குக் கர்த்தாவானவன் ; அந்தண் கார்மருவு பொழில் புடைசூழ் மதில்மீதே மதியம் கடவாமை நெடுங்கொடியின் கரந்தகையுங் கடந்தைச் சீர்நிலவு மறைஞானசம்பந்தன் - அழகினையுங் குளிர்ச்சியினையுமுடைய மேகம் பொருந்தப்பட்ட சோலைப்பக்கங்களிலே சூழ்ந்த பெரிய மதிலுக்குமேலே சந்திரனோடாமல் நெடிய கொடியினது கைகளாலே தகையப்பட்ட சிறப்புடைய திருப்பெண்ணாகடத்துச் சிறப்பு விளங்காநின்ற மறைஞானசம்பந்தனென்கின்ற திருநாமத்தினையுடைய ; எந்தை திருவளரும் மலரடிகள் சென்னிவைப்பாம் - எம்முடைய சுவாமியது அழகுவளராநின்ற தாமரை மலர்போன்ற ஸ்ரீபாதங்களை யெனது தலைமேலே வைத்துக்கொள்ளா நின்றேன்.

பார்திகழ எ - கு பூமி விளங்க என்றதேதென்னில் பிரபஞ்சத்திலுண்டான ஆன்மாக்களுக்கு ஞானம் பிரகாசிக்க என்றதென அறிக. சாமவேதமல்க எ - கு சாமவேதம் வர்த்திக்க என்றதேதென்னில் மற்றுள்ளவேத மூன்றினும் இந்நூல் செய்துடையார்க்கு இது பாரம்பரியமாக அதிகரித்து வருகையாலென அறிக. பராசரமாமுனி மரபு பயில எ - கு பராசரப் பிரமவிருடி கோத்திரந் தழைக்க என்றதேதெனில் அநாதியே இந்நூல்செய்துடையார் ஆசாரியர் அந்தக் கோத்திரமாய் வருகையாலென அறிக. ஞானச் சார்புதர வந்தருளி எ - கு ஞானவொழுங்குண்டாக என்றதேதென்னில் இந்நூல் செய்துடையாரை ஞானவுபதேசத்தைச் செய்து அந்த ஒழுங்கிலே நிறுத்துகையாலென அறிக. மருதூரென்றும் பெண்ணாகடமென்றும் திருப்படைவீடு இரண்டாக வேண்டுவானேனென்னில் மருதூர் திருவவதாரஞ் செய்த ஊரென அறிக ; பெண்ணாகடம் ஆசாரியர் அபிடேகஞ்செய்த ஊரென அறிக.

இதனாற் சொல்லியது இந்நூல் மலைவறச் சென்றுமுடிய வேண்டித் தம்மை இரக்ஷித்த ஆசாரியரை நோக்கி வழிபடுமுறைமையை யறிவித்தது.

இந்நூலருளிச் செய்கிற அத்தமேதென்று வினயதற்கு உத்தரம் மேல் அருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

7. புறச்சமயத் தவர்க்கிருளாய் அகச்சமயத் தொளியாய்ப்
புகல்அளவைக் களவாகிப் பொற்பணிபோல் அபேதப்
பிறப்பிலதாய் இருள்வெளிபோற் பேதமும்சொற் பொருள்
பேதாபே தமும்இன்றிப் பெருநூல் சொன்ன[போல்
அறத்திறனுல் விளைவதாய் உடலுயிர்கண் அருக்கன்
அறிவொளிபோல் பிறிவருஞ்அத் துவித மாகும்
சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாம் சைவ
சித்தாந்தத் திறன்இங்குத் தெரிக்க லுற்றும்.

வளம்பயில் நூலின் மதிப்புடன் வகுத்து
விளம்புறு பொருளின் மேன்மையை விரித்தது.

(உரை) புறச்சமயத்தவர்க்கு இருளாய் - பரசமயிகளாயுள்ள உலோகாயதன் முதல் பாஞ்சராத்திரியீருகச் சொல்லப்பட்ட சமயிகளுக்குத் தெரியாததாய்; அகச்சமயத்தொளியாய் - உட்சமயமாயுள்ள சைவமுதல் வைரவமீருகச் சொல்லப்பட்ட சமயங்களாறுக் குஞ் சைவத்திற் பேதமாயுள்ள சமயிகள் எட்டுப் பெயர்க்கும் அறியப் படுவதாய்; புகழளவைக்களவாகி - சர்வராலும் புகழ்ந்து சொல்லப் பட்ட அளவைப் பிரமாணங்களிளுலே அளவிடப்படுவதாய்; பொற் பணிபோல் அபேதப்பிறப்பிலதாய் - கர்த்தாவும் பிரபஞ்சமும் பொன் ஞென்றுய்ப் பணிபலவாறுற்போல இருக்கு மென்கிற அபேதசித் தாந்தமுமடாததாய்; இருள்வெளிபோற் பேதமுஞ் சொற்பொருள் போற்பேதாபேதமுமின்றி - கர்த்தாவும் பிரபஞ்சமும் இருளும்வெளி யும்போல ஒன்ருேடொன்று கூடாமல் வேருயிருக்குமென்கிற பேதவாதிகள் சித்தாந்தமும் சொல்லும் பொருளும்போலச் சத்தத் தைச் சொன்னபொழுது அந்தச் சத்தந்தானேயத்தமாய்த் தோன்றி யும் அத்தத்தைக் கண்டபொழுது அந்தச் சத்தம் வேருயும் அத்தம் வேருயும் ஒன்றுமாயிரண்டுமாயிருந்தாற்போலக் கர்த்தா பிரபஞ்சமு மாயல்லவுமா யிருப்பானென்கிற பேதாபேதவாதிகள் சித்தாந்தமு மடாததாய்; பெருநூல் சொன்ன அறத்திஞல் விளைவீதாய் - பெரிய நூலாகிய வேதாகமங்களிற் சொல்லப்பட்ட சரியைகிரியாயோகங்

களை அநுட்டித்ததனுலே யுண்டாகப்படுவதாய்; உடலுயிர் கண் அருக்கன் அறிவொளிபோற் பிரிவறும் அத்துவிதமாகுஞ் சிறப்பினதாய்-யாதாமொன்றை யறியுமிடத்து உடலுமுயிருந் தன்னில் ஒன்றுபட்டறியும் அறிவைப் பிரிக்கவொண்ணுதாற்போலவும் யாதாமொன்றைக் காணுமிடத்துக் கண்ணினொளியும் ஆதித்தப் பிரகாசமுந் தன்னிலொன்றுபட்டு நிற்குந் தன்மையைப் பிரிக்கவொண்ணுதாற் போலவும் கர்த்தாவையும் பிரபஞ்சத்தையுந் தன்னிற் பிரித்தற்கரிதாய் அநந்நியமாயிருக்கிற சிறப்பினையுடைத்தாகிய; வேதாந்தத் தெளிவாம் சைவசித்தாந்தத் திறன் இங்குத் தெரிக்கலுற்றும்-வேதத்தின் முடிவில் தெளிவாயுள்ள சைவசித்தாந்தத்தின் உண்மையாகிய அத்தத்தை இந்நூலிலே விளங்கச் சொல்லாநின்றேன். (வேதத்தின் முடிவிற்றெளிவென்றது வேதாந்தம் உடம்புஞ் சித்தாந்தம் உயிருமாய் நிற்கையாலென அறிக).

புறச்சமயிகளுக்கு இருளென்றதேதென்னில் அவர்கள் திரிபதார்த்த நிர்ணயமுடையவர்க ளல்லவாகையாலுஞ் சிவனைக் கர்த்தா என்று கொள்ளுகையும் இல்லாதவர்களாகையாலுமென அறிக. அகச்சமயிகளுக்கு ஒளியென்றதேதென்னில் இவர்கள் பதிபசுபாசமூன்றுமுண்டென்று நாட்டுகையாலுஞ் சிவனைக் கர்த்தாவாகக்கொள்ளுகையாலுமென அறிக. இவர்களும் அம்மாத்திரமொழிந்து சைவசித்தாந்த உண்மைக்குரியவர்களல்லவென அறிக. அஃதெங்கே காணப்பட்டதென்னில் சங்கற்பநிராகரணத்தில் ஐக்கியவாதிமுதல் சிவாத்துவிதியாகிய சைவர்முடிவாகவுள்ள பேதமெட்டினுமுண்டான அத்தங்களை மறுத்தவொழுங்கிலேகண்டுகொள்க. அளவைகளினுல் அளவிடப்படுவதாயென்றதேதென்னில் அளவைப்பிரமாணமாகிய காண்டல் கருதல் உரையென்னப்பட்ட பிரத்தியக்ஷம் அநுமானம் ஆகமம் என்கின்ற மூன்றுவகையினுலும் அளவிட்டறியப்படுவதா யென்றதென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "அளவை காண்டல் கருதலுரை அபாவம் பொருளொப் பாறென்பர், அளவை மேலுமொழி புண்மையையீ கத்தோ டியல்பெனநான், களவை காண்ப ரவையிற்றின் மேலுமறைவ ரவையெல்லாம், அளவை காண்டல் கருதலுரை யென்றிம் மூன்றி னடங்கிடுமே" (அளவை-1) எ - து கண்டுகொள்க. எனவே

சித்தாந்தம் இம்மூன்றுவகையாலும் அறியப்படுமென்பது கருத்து. இனி, பொற்பணிபோ லபேதப் பிறப்பிலதாய் எ - கு பொன்னிலே நின்றும் பணி பலவாறுற்போலக் கர்த்தாவினிடத்திலே பிரபஞ்சமுண்டாமென்கிற அபேத சித்தாந்தமு மடாததா யென்றதேதென்னில், கர்த்தாவோ என்றால் சித்தாயிருப்பானொருவன், பிரபஞ்சமோ என்றால் ஜடமாயிருப்பதொன்று, ஆகையாற் சித்தினிடத்துச் சடந் தோன்றாதது கொண்டே சிவனிடத்துப் பிரபஞ்சந் தோன்றா தென்றதென அறிக. இருள்வெளிபோற் பேதமும் எ - கு இருளும்வெளியும்போலக் கர்த்தாவும் பிரபஞ்சமுந் தன்னில் வேறாயிருக்குமென்கிற பேதசித்தாந்தமும் அடாததாயென்றதேதென்னில் இந்தப் பிரபஞ்சங் காரியப்படுமிடத்துக் கர்த்தாவாலே காரியப்படவேண்டுகையால் அப்படி வேறென்று சொல்லவொண்ணாதென அறிக. இனி, சொற்பொருள்போற் பேதாபேதமும் எ - கு சொல்லும் பொருளும்போலக் கர்த்தாவும் பிரபஞ்சமுந் தன்னிலொன்றுமாயிரண்டுமா யிருக்குமென்கிற பேதாபேத சித்தாந்தமும் அடாததாயென்றதேதென்னில் சித்தாயுள்ள சிவனிடத்துச் சடமாயுள்ள பிரபஞ்சந் தோன்றாதாகையால் ஒன்றெனவொண்ணாதென்றுஞ் சடமாயுள்ள பிரபஞ்சஞ் சித்தாயுள்ள சிவனாலே காரியப்படவேண்டுகையால் வேறெனவொண்ணாதென்றுஞ் சொன்னதென அறிக. பெருநூல் சொன்ன அறத்திறனால் விளைவதாய் எ - கு அறத்திறனாலென்றதை குருபூசை சிவபூசை மகேஸ்வரபூசைகளினால் உண்டாவதாயென்னவுமாமென அறிக. இதற்கு பி-ம் சித்தியாரில் "புண்ணியமேல் நோக்குவிக்கும் பாவங்கீழ் நூக்கும் புண்ணியனைப் பூசித்த புண்ணியத்தி னாலே, நண்ணியஞா னத்தினால் இரண்டினையும் அறுத்து" (8. 31)எ-ம், "தாபர சங்கமங்க ளென்றிரண் டுருவி னின்று, மாபரன் பூசை கொண்டு மன்னுயிர்க் கருளை வைப்பன்" (2. 28) எ-ம் கண்டு கொள்க. இதில் தாபரமென்றது இலிங்கமூர்த்தமென அறிக. சங்கமமென்றது குருவையும் மகேஸ்வரரையுமென அறிக. இனி, உடலுமுயிருங்கூடின அறிவையுங் கண்ணுமருக்கனுங் கூடின ஒளியையும் பிரிக்கவொண்ணாதாற்போலக் கர்த்தாவையும் ஆன்மாக்களையும் பிரிக்கவொண்ணாதாய் அத்துவிதமா யிருக்குமென்றதேதென்னில்

சிற்றறிவாயுள்ள ஆன்மாக்களைப் பேரறிவாயுள்ள சிவன் அறிவிக்குமிடத்து இரண்டறிவையும் பிரிக்கவொண்ணாதென்றதென அறிக. அத்துவிதமென்றதேதென்னில் ஒன்றுமல்ல இரண்டுமல்ல என்றதென அறிக. அஃதாவது ஒன்றல்ல என்றது ஆன்மாவுஞ் சிவமுமொன்றல்ல என்றதென அறிக. இரண்டல்ல என்றது ஆன்மாக்கள் சீவிக்குமிடத்துச் சிவனறிவிக்க அறிந்து பிரிவறநின்று சீவிக்கையாலென அறிக. இதற்கு பி - ம் இருபாவிருபதில், "ஒன்றா காமல் இரண்டா காமல், ஒன்று மிரண்டு மின்றா காமல்" (20. 9-10) எ-து கண்டுகொள்க. சிறப்பென்றது அத்தத்தின் மான்மியமென அறிக. வேதத்தின் முடிவிற் றெளிவென்றது சொல்லிறந்த பொருளென அறிக. இதற்கு பி - ம் கோயிற்புராணத்தில் "ஆரணங்கள் முடிந்த பதத் தானந்த வொளியுலகிற், காரணங் கற்பனை கடந்த கருணை" (பாயிரம் - 2) எ - ம், இந்நூலினும் "ஈங்கிதுவென் றதுகடந்த இயல்பினாலும்" (15) எ - ம் கண்டுகொள்க. அன்றியும் வேதாந்தத் தெளிவென்றதை வேதாந்தப் பொருளை விட்டப்பட்ட சித்தாந்தமென் பாருமுளர். அஃதத்தமன்று. அதுவேனென்னில் வேதாந்தம் உடம்புஞ் சித்தாந்தம் உயிருமாய் நிற்கையால் அப்படி நீக்கஞ் சொல்லவொண்ணாதென்றதென அறிக. இதற்கு பி - ம் இந்நூலில் "வேதத் தலைதரு பொருளாய்" (99) எ - து கண்டுகொள்க. சைவசித்தாந்தமென்ற தேதென்னில் சைவமென்றது சிவாகமத்தையென அறிக; சித்தாந்தமென்றது அந்தச் சிவாகமத்தின் கருத்தாகிவந்த அத்தத்தையென அறிக.

இதனாற் சொல்லியது இந்நூலிலே சொல்லுகிற அத்தமானது புறச்சமயமாகிய உலகாயதனுக்கும், புத்தரிற் சௌத்திராந்திகன் யோகாசாரன் மாத்தியமிகன் வைபாடிகன் ஆகப்பேர் நால்வருக்கும், அமணரில் நிகண்டவாதி ஆசீவகன் ஆகப்பேர் இருவருக்கும், மீமாஞ்சிகரில் பட்டாசாரியன் பிரபாகரன் நையாயிகன் ஆகப்பேர் மூவருக்கும்; அகம்பிரமவாதியான மாயாவாதி பாற்கரியன் நிரீச்சுரசாங்கியன் ஆகப்பேர் மூவருக்கும், வைணவனாகிய பாஞ்சராத்திரிக்கும் ஆக இங்ஙனஞ் சொல்லப்பட்ட சமயம் ஆறினால் பேதமாகச்சொல்லும் பேர்பதினாலுக்குந் தெளிவில்லாததாயிருக்குமென்னு முறைமையும், உட்சமயமாகிய சைவம் பாசுபதம் மாவிரதம் காளாமுகம் வாமம்

வைரவமென்னப்பட்ட சமயமாறுக்கும் முதற்கூறப்பட்டசைவத்திற் பேதமாயுள்ள ஐக்கியவாதி பாடாணவாதி பேதவாதி சமவாதி சங்கிராந்தவாதி ஈஸ்வரவவிகாரவாதி பரிணமவாதி சிவாத்துவிதியாகிய சைவர் ஆகப்பேர் எட்டுக்குந் தெளிவாயிருக்குமென்னு முறைமையும், அளவைப் பிரமாணமாகச் சொல்லப்பட்ட பிரத்தியக்ஷம் அநுமானம் ஆகமமென்கிற மூன்றுவகையினாலும் அளவிடப்பட்டிருக்குமென்னு முறைமையும், பொன்னும் பணியும்போலிருக்கு மென்கிற அபேதசித்தாந்தங்களும் இருளும் வெளியும்போலென்கிற பேத சித்தாந்தங்களும் சொல்லும் பொருளும்போலென்கிற பேதாபேத சித்தாந்தங்களும் ஆகமூன்றுவகையும் முன்னெண்ணப்பட்ட அகச்சமயத்தினும் புறச்சமயத்தினும் அடங்கியிருக்கையால் அந்த அத்தங்களுமல்லவா யிருக்குமென்னு முறைமையும், இந்தச் சைவசித்தாந்தஞ் சிவபுண்ணியத்தினாலே யுண்டாவதாய் வேதத்தின்முடிவிற் றெளிவுமாம் அத்துவிதமுமா யிருக்கிறதே சைவசித்தாந்தமென்னு முறைமையையும் அறிவித்தது. எ

இங்ஙனஞ் சொல்லிவந்த அத்தத்தைப்பெறுகிற ஆன்மாக்கள் எத்தனை வகைப்பட்டிருப்பார்களென்றும் அவர்களுக்கு இந்த அத்தத்தைச் சிவன் கடாக்ஷிக்கிற முறைமை எப்படியென்றும் வினவினை அவதரத்து மேலருளிச்செய்வா னெடுத்துக் கொண்டருளியது.

8\. மூவகைஆ ருயிர்வர்க்கம் மலத்தார் கன்ம
   மூலமலத் தார்மூன்று முடையா ரன்றே
தீவகமாம் எனவுருவாய் வந்து நாதன்
   திருநோக்கால் பரிசத்தால் திகழும் வாக்கால்
பாவனையால் மிகுநூலால் யோகப் பண்பால்
   பரவிவரும் அவுத்திரியாற் பாச நாசம்
மேவஅரு ளுதவும்அவுத் திரியிரண்டு திறனும்
   வியன்கிரியை ஞானமென விளம்பு மாறே. அ

மூவகை யுயிரின் முறைமையும் அவர்க்குக்
காவல னருள்புரி கடனும் நவின்றது.

(உரை) மூவகையாருயிர்வர்க்கம் - நிரம்பியிருக்கிற ஆன்மாக்கள் மூன்றுவகைப்பட்டிருப்பார்கள். அஃதாவது; மலத்தார் - ஆணவ

மலமொன்றையுடைய விஞ்ஞானகலரென்றும்; கன்மமூலமலத்தார் - கன்மமலமும் ஆணவமலமுமுடைய பிரளயாகலரென்றும் ; மூன்று முடையார்-ஆணவமலமுங் கன்மமலமும் மாயாமலமுமுடைய சகல ரென்றுஞ் சொல்லப்பட்டிருப்பார்கள். அவர்களுக்கு இந்த மலங்கள் எந்த அவதரத்திலே யுண்டானதோவென்னில் ; அன்றே-இவை யநா தியேயுள்ளதாயிருக்கும், அவர்களுக்கிந்த மலங்கள் நீங்கும்வழி எப் படியோவென்னில் ; நாதன் தீவகமாமென உருவாய் வந்து - சிவன் இந்த மூவகை யான்மாக்களுக்கு முண்டான மலங்களைப் பாகம் வருத்துமிடத்து யாதாமொரு பக்ஷிகளை மிருகங்களைப் பிடிக்கவேண் டினவர்கள் அதற்கதற்கேற்ற பார்வையைக்காட்டிப் பிடித்தாற்போல ஒரு மலத்தையுடைய விஞ்ஞானகலருக்கும் இரண்டுமலத்தையுடைய பிரளயாகலருக்கும் மூன்றுமலத்தையுடைய சகலருக்கும் அவரவர் நின்ற நிலைக்குத் தக்கதாகத் திருமேனிகொண்டு இரக்ஷிக்குமிடத்து விஞ்ஞானகலரும் பிரளயாகலரும் இந்தப் பூததேகசம்பந்தமறநிற்கை யால் அவர்களை நிராதாரமாகிய திருமேனிகொண்டு இரக்ஷித்து இந் தச் சகலரை இரக்ஷிக்குமிடத்து இவர்கள் இந்தப் பூததேகசம்பந்த மாய் நிற்கையால் அவர்களைப்போலச் சாதாரணமாகிய மானுடச் சட்டை சாத்திவந்து இரக்ஷிக்கும். இங்ஙனம் இரக்ஷிக்குமிடத்து ; திருநோக்காற் பரிசத்தால் திகழும் வாக்காற் பாவனையால் மிகு நூலால் யோகப்பண்பாற் பரவிவரும் அவுத்திரியாற் பாசநாசம் மேவ அருளுதவும் - திருநோக்கால் திருக்கண்சாத்தியும் ஸ்ரீபாத ஸ்ரீஹஸ் தங்களால் பரிசித்தும் விளங்க வுபதேசித்துந் தன்னைப்போல நின்மல மாகப் பாவித்தும் மகத்தாகிய நூலுரைத்துக் காட்டியும் பொரு ளோடுகூட்டியுங் குண்டமண்டலமிட்டுச் செய்யுந் தீக்கைகளாலும் பாசநாசமாம்படி பொருந்த ஞானத்தையுண்டாக்கும். இவையிற் றில் ; அவுத்திரி இரண்டு திறனும் - அவுத்திரியாகிய தீக்கை இரண்டு வகைப்பட்டிருக்கும். அஃதாவது ; வியன் கிரியை ஞானமென விளம்புமாறே - வியப்பத்தையுடைய கிரியாவதியென்றும் மனோ பாவத்தாற் செய்கிற ஞானவதியென்றுஞ் சிவாகமங்கள் சொல்லும்.

மூவகையாருயிர் வர்க்கம் எ-கு ஒருமலத்தையுடைய விஞ்ஞான கலரென்றும் இரண்டுமலத்தையுடைய பிரளயாகலரென்றும் மூன்று

மலத்தையுடைய சகலரென்றும் பொருள்கூறியதற்கு வகையேதென்னில், முற்கூறிய ஒருமலத்தையுடைய விஞ்ஞானகலராவார் பக்குவரென்றும் அபக்குவரென்றும் இரண்டுவகைப்பட்டிருப்பார்கள்; இதிற் பக்குவரானவர்கள் மலபரிபாகத்தின் மிகுதியாலே சிவனுடைய அநுக்கிரகத்தைப் பெற்றுச் சாயுச்சியத்தை யடைவர்களென அறிக. மற்ற அபக்குவர்களும் மலபரிபாகத்தின் மந்தத்தாலே சிவனுடைய அநுக்கிரகத்தைப் பெற்றும் அதிகாரமலத்தோடுங் கூடியிருப்பார்கள். அவர்களும் அணுசதாசிவரென்றும் அட்டவித்தேசுரரென்றும் சத்தகோடி மகாமந்திரேசுரரென்றும் மூன்றுவகைப்பட்டிருப்பார்கள். இதில் அணுசதாசிவர் சிவனுடைய அநுக்கிரகத்தைப்பெற்றுச் சாதாக்கிய தத்துவத்திலே இருப்பார்கள். மற்ற அட்டவித்தேசுரர்களுஞ் சுத்தமாயாகிருத்தியத்துக்கு அதிகாரமாய் மயேசுரதத்துவத்திலே இருப்பார்கள். சத்தகோடி மஹாமந்திரேசுரர்களும் அட்டவித்தேசுரராலே பிரேரிக்கப்பட்டுச் சுத்தவித்தியாதத்துவத்திலே யிருப்பார்கள். அவர்களும் இருவகைப்படுவார்கள்; அஃதாவது: மூன்றரைக் கோடிபேர் சிவன் குருமூர்த்தத்தை யதிட்டித்துச் சகலரை இரக்ஷிக்குமிடத்து அதற்குக் காரணமாக இருந்து மகா பிரளயகாலத்திலே மோக்ஷத்தையடைவார்கள் ; மற்றைய மூன்றரைக்கோடிப் பேரும் சிவன் குருமூர்த்தத்தை யதிட்டியாமல் நிராதாரமாய்நின்று விஞ்ஞானகலரையும் பிரளயாகலரையும் அநுக்கிரகிக்குமிடத்து அதற்குக் காரணமாயிருந்து அதிகாரத்திலுள்ள வைராக்கியத்தாலே சிருட்டிக்குப் பின்பாக மோக்ஷத்தையடைவார்களென அறிக. இங்ஙனங் கூறிவந்த வகைகளுக்கு பி - ம் தத்துவவிளக்கத்தில் "அறிந்தவர் தீர்ந்த துகளினர் தீராத் துகளர்முன்னர்ச், செறிந்தவர் விஞ்ஞைக்கு நாயகர் எண்ம ரெனச்சிறந்தோர், பிறந்தவர் மந்திர ராமெழு கோடியர் பேரொலியால்,மறிந்த திரைப்புனல் வெங்குரு வாணர் வகுத்தவரே" (14) எ - து கண்டுகொள்க. இங்ஙனங் கூறப்பட்ட விஞ்ஞானகலரில் முற்கூறிய அபக்குவர் தன்மை எங்ஙனேயென்னில் கேவலத்தில் ஆன்மா நிற்குந்தன்மைபோல ஒருவடிவுமற்று ஆணவமல சொரூபராய்ச் சுத்த மாயையிலே தோற்றமுமொடுக்கமும் ஆகையாற் சுத்த மாயையாலே ஆணவமலபரிபாகம் வருமளவும் பெத்தராயிருப்பார்க

ளென அறிக. இவர்களுக்கு இந்த விஞ்ஞானகலப்பிராப்தி எதனுலுண்டானதென்னில், ஞானமற்ற துறவாலும் யோகத்தாலும் அகம்பிரமமென்கிற ஞானத்தாலுங் கன்மக்ஷயம்வந்துஞ் சிவஞானம் பிரகாசியாதபடியாலே ஆணவமோசனம் பிறவாமல் வந்துகூடின நிலையென அறிக. இந்த விஞ்ஞானகல சத்தத்துக்குப் பொருளாவது அகம்பிரமமென்கிற விசிட்டஞானத்தாலே மாயாகாரியமான கலாபெந்தமற்றவர்களெனக்கொள்க. இங்ஙனங் கூறிவந்தவகையில் அனுசதாசிவர்க்கும் அட்டவித்தேசுரருக்கும் சத்தகோடி மகாமந்திரேசுரருக்கும் வயிந்தவ சரீரமென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "வித்தைகள் வித்தை யீசர் சதாசிவ ரென்றி வர்க்கும், வைத்துறும் பதங்கள் வன்னம் புவனங்கள் மந்திரங்கள், தத்துவஞ் சரீரம் போகங் கரணங்கள் தாமெ லாமும், உய்த்திடும் வைந்த வந்தான் உபாதான மாகி நின்றே" (1. 25) எ - து கண்டுகொள்க.

இனி இரண்டுமலத்தையுடைய பிரளயாகலர் தன்மை எங்ஙனேயென்னில் அவர்களும் பக்குவரென்றும் அபக்குவரென்றும் இரண்டு வகைப்படுவார்கள். அதில் பக்குவரானவர்களை மலபரிபாகத்தின் மிகுதியாலே சிருட்டிகாலத்திலே சிவன் இரட்சித்தருளுவன்; இவர்களும் பரமுத்தி பெற்றவர்களென்றும் அபரமுத்தி பெற்றவர்களென்றும் இரண்டுவகைப்படுவார்கள்; இவர்களில் பரமுத்தி பெற்றவர் மலபரிபாகத்தின் மிகுதியாலே சாயுச்சியத்தைப் பெற்றவர்களென அறிக; மற்ற அபரமுத்திபெற்றவர்கள் சிவனுலே அநுக்கிரகத்தைப்பெற்று மலபரிபாகத்தின் மந்தத்தாலே அதிகார மலத்தோடுங்கூடி அட்டவித்தேசுரராலே பிரேரிக்கப்பட்டுப் பிரகிருதி மாயைக்குக் கீழுண்டான கிருத்தியங்களும் பண்ணிக்கொண்டு கலாமத்தியமத்திலே இருப்பார்களென அறிக. அப்படிப் பிரகிருதி மாயையோடுங் கூடியிருந்தாற் சகலரைப்போலக் கலாதியால் வாதைப்படார்களோவென்னில் அதுவுண்டாகாது; அதுவென்போலவென்னில் பாம்பினிடத்திலுண்டான விடமானது பிறரை வருத்தஞ் செய்தும் அந்தப் பாம்பை வருத்தாதுபோலவென அறிக. இந்தப் பிரளயாகலர்க்கு ஆணவமலமுங் கன்மமலமுமென்று சொல்லியிருக்க மாயாமல சம்பந்தம் வருவானேனென்னில், அவர்களிற் சிலர் முற்

செய்த தபோபலத்தால் ஆணவமலமுங் கன்மமலமும் பரிபாகமாகிற அவதரத்திலே விஞ்ஞானகலரில் மந்திரேசுரர் பதத்தைப் பெற்றுச் சுத்தவித்தையை ஆர்ச்சித்திருந்து சிவனாலே யதிகாரத்தைப் பெற்று அந்த அதிகாரம் நடத்தவேண்டுகையாலே அந்த மாயையோடுங் கூடி நடத்தினாலும் அதில் தோய்வறநிற்பார்களென அறிக. அஃதெங்ஙனே யென்னில் சிவன் பிரபஞ்சத்தை நடத்துகைச்செய்தே அதில் தோய்வற நின்றாற்போலவென அறிக. அவர்களாவது மண்டலரெட்டு குரோதனரெட்டு வீரரொன்று ஸ்ரீகண்டரொன்று உருத்திரர் நூறு ஆக நூற்றொருபத்தெட்டுப் பெயரென அறிக. இதற்கு பி - ம் தத்துவ விளக்கத்தில் "பெற்ற தவப்பய னாற்பிர ளயாகல ரிற்சிலரைக், குற்ற மில் மந்திர நாயக ராக்குமெங் கொச்சையர்கோன், மற்றவர் மண்டலர் குரோதா திபர்வீரர் ஸ்ரீகண்டர்சீ, ருற்ற உருத்திர ரெட்டெட் டொன் றொன் றுநூ றெண்ணிவர்க்கே" (77) எ - து கண்டுகொள்க. இங்ஙனங் கூறப்பட்ட பிரளயாகலரில் பக்குவரானவர்கள் கன்மத் துக்கீடாகச் சிருட்டிகாலத்திலே சூக்குமதேகத்தோடுங்கூடிச் சகலராயும் விடுவர்களென அறிக. இதற்கு பி - ம் தத்துவவிளக்கத்தில் "வகுத்தவ ரிற்புவ னாதிப ரேனையர் மற்றவர்பின், தொகுத்த வரிற் பந்த முற்றினர் தூய்நெறிச் செல்வர்பின்பால், மிகுத்தவர் தாம்புரி யட்டகத் தோடும் வினைவழியிற், பகுத்த பிறப்பிற் சகலர்முப் பாசமும் பற்றினரே" (15) எ - து கண்டுகொள்க.

இனி, சகலருடைய தன்மை எங்ஙனேயென்னில், அவர்களும் ஆணவம் மாயை காமியமென்னும் மூன்று மலத்தோடுங்கூடி யண்டஜஞ் சுவேதஜம் உற்பீஜஞ் சராயுஜமென்கிற நால்வகைத் தோற்றத்திலே சுரர் நரர் மிருகம் பசு பக்ஷி தாவரம் நீருறைவனவாகிய எழுவகைப் பிறப்பினையுமெடுத்து இருநூற்றிருபத்து நாலு புவனங்களினுமுழன்று திரியுமவதரத்திலே இருவினையொப்பு மலபரிபாகமுமுண்டாய்ச் சத்திநிபாதம் விளைந்து பக்குவப்பட்ட ஆன்மாக்களுக்குச் சிவன் அவர்களைப்போலே மானிடச்சட்டை சாத்திக்கொண்டுவந்து உண்மைஞானத்தைக் கடாக்ஷித்துத் தனதுபூரண ஞானத்தோடுங் கூட்டிக்கொள்ளுவனென அறிக. இதற்கு பி - ம் தத்துவவிளக்கத்தில் "எண்ணும் வினைப்பய னாற்புவ னந்தொறும் போக

மென்று, நண்ணி வருஞ்சக லர்க்கொரு கால நயந்தஙநனே, பண்ணிய கன்மந் துலையொத்துச் சத்திநி பாதமுறக், கண்ணிய லுங்குருவாய்க்காழி வேந்தன் கதிதருமே" (18) எ - து கண்டுகொள்க.

இனி, தீவகமாமென வுருவாய்வந்து எ - கு மூவகை யான்மாக்களையுங் கர்த்தா இரக்ஷிக்குமிடத்து விஞ்ஞானகலரையும் பிரளயாகலரையும் நிராதாரமாக நின்று இரக்ஷித்தருளுவனென்றும் சகலரைச் சாதாரமாகவந்து இரக்ஷித்தருளுவனென்றும் பொருள் கூறியதற்கு பி - ம் சித்தியாரில் "உரைதருமிப் பசுவர்க்க முணரின் மூன்றும் உயருமவிஞ் ஞானகலர் பிரளயா கலர்சகலர்,நிரையின்மல மலங்கன்ம மலங்கன்ம மாயை நிற்குமுத லிருவர்க்கு நிராதார மாகிக், கரையிலருட் பரன்துவிதா சத்திநி பாதத்தாற் கழிப்பன்மலஞ் சகலர்க்குக் கன்ம வொப்பில், தரையிலா சான்மூர்த்தி யாதார மாகித் தரித்தொழிப்பன் மலஞ்சதுர்த்தா சத்திநி பாதத்தால்" (8. 2) எ-ம்,சிவார்ச்சனு போதத்தினும் "வைத்தமல மலங்கன்ம மலங்கன்ம மாயை மருவுவிஞ் ஞானகலர் பிரளயா கலர்சகலர், இத்தகைமை யிவர்க்கீச னிவையகல வருளால் இயற்றுவதோர் செய்தியிரண் டாகுந்தீ விரதச், சத்தியினல் முன்னிருவர்க் காசான் மூர்த்தி தரியாதே தான்பண்ணு நிராதாரந் தரித்து, வித்தகமா மந்தத்தீ விரத்தாற் பின்னர் விளம்புவர்க்குச் செய்தியுஞ்சா தார மன்றே" எ - ம் கண்டுகொள்க. அன்றியும் மூவகை யான்மாக்களையும் அவரவர்நின்ற நிலையிலே சிவன் கூடிநின்று இரக்ஷித்தருளுவனென்று பொருள் கூறியதற்கு பி - ம் போற்றிப்பஃறொடையில் "நன்னெறிவிஞ் ஞானகலர் நாடுமலமொன்றினையும், அங்நிலையே யுண்ணின் றறுத்தருளிப் - பின்னன்பு, மேவா விளங்கும் பிரளயா கலருக்குத், தேவாய் மலகன்மந் தீர்த்தருளிப் - பூவலயந், தன்னின்று நீங்காச் சகலர்க் கவர்போல, முன்னின்று மும்மலந்தீர்த் தாட்கொள்கை - யன்னவனுக்,காதிகுணமாதலினு லாடுந் திருத்தொழிலுஞ், சோதி மணிமிடற்றுச் சுந்தரமும்- பாதியாம், பச்சை யிடமும் பவளச் திருச்சடைமேல், வைச்ச நதியும் மதிக்கொழுந்தும் - அச்சமற, ஆடு மரவு மழகார் திருநுதன்மேல், நீடுருவ வன்னி நெடுங்கண்ணும்-கேடிலயங், கூட்டுந் தமருகமுங் கோல வெரியகலும், பூட்டரவக் கச்சும் புலியதளும் - வீட்டின்ப, வெள்ளத்

தழுத்தி விடுந்தா ளினுமடியார், உள்ளத்தி னும்பிரியா னொண்சிலம்புங்-கள்ளவினை, வென்று பிறப்பறுக்கச் சாத்தியவீ ரக்கழலும், ஒன்றா முருத் தோன்றும லுள்ளடக்கி - என்றும், இறவாத வின்பத்தெமை யிருத்த வேண்டிப், பிறவா முதல்வன் பிறந்து " (60 - 69) எ - து கண்டுகொள்க. அன்றியும் அவரவர் நின்றநிலைக்குத் தக்கதாகத் திருமேனி கொண்டு இரக்ஷிப்பன் எ - கு பி - ம் பூசாகரணத்தில் " எவ்வுல கத்து மூர்த்தி யேதுகொண் டிவணியங்கு, மவ்வுல கத்து மேனி யதுகொண்டங் கமரு மீசன் " (13) எ - து கண்டுகொள்க.

இனி 'திருநோக்கால்' என்ற பதந்தொடங்கிப் 'பரவி வருமவுத்திரியால்' என்ற பதமுடிவாகிய எழுவகைத் தீக்கைக்கும் வகையேதென்னில்: திருநோக்காலென்றது மச்சமானது சினையைப் பார்த்துநிற்க அந்தச் சினை அந்த மச்சத்தின் சொரூபம் பெற்றாற்போல ஆசாரியனுண்மையிலே சித்தத்தை வைத்து ஞானதிருட்டியாலே பார்க்குமவதரத்து அத்துவாக்களிற் கட்டுண்ட கன்மங்களைத் தகித்து இராகுவினாலே விழுங்கி விட்டப்பட்ட சந்திரனைப்போல மலத்திரயங்களின் மறைப்புண்டு கிடந்த ஆன்மாவையும் அந்த மலங்களின் நீக்குகையென அறிக. இனி, இரண்டாவது பரிசத்தாலென்ற தீக்கையும் பஞ்சப்பிரம சடங்கங்களின் சொரூபமாயிருக்கிற ஸ்ரீபஞ்சாக்கரத்தை வலக்கையிலே செகித்து இந்தப் பிராரத்தவாதனையை நீக்குவதுபொருட்டாகச் சீடனுடைய தலையிலே சோதிமயமாகவைத்து அந்தச்சோதியையும் அவனுடைய உள்ளும் புறம்பும் பூரணமாகத் தியானித்து அந்த ஸ்ரீஹஸ்தத்தாலே அவனுடையவுடம்பிற் பஞ்சகலாத்தானங்களையும் பரிசித்து வாதனையை யொழிக்குமதுவென அறிக. இனி மூன்றாவது திகழும் வாக்காலென்றது வாசகதீக்கையெனை அறிக; அஃதாவது பதிபசு பாசத்தினுண்மையான ஸ்ரீபஞ்சாக்கரத்தை ஞானவொளியுடனே கூட உபதேசிக்கையென அறிக. இனி நாலாவது பாவனையாலென்றது சீடனைத் தன்னைப்போல நின்மலமாகப் பாவித்துப் பிரபஞ்சப் பற்றற மலத்திரயங்களில் தோய்வற நிறுத்துகையென அறிக. இனி ஐந்தாவது மிகுநூலாலென்றது இந்த முறைமைகளெல்லாம் இவனுக்குச் சந்தேகந்தீரச் சாத்திரங்களிலே யொப்புக்கொடுத்துக் கேட்டல்

சிந்தித்தல் தெளிதலாயுள்ள மூவகையினும் நிறுத்துகையென அறிக. இனி ஆறுவது யோகப்பண்பாலென்றது அட்டாங்கயோகத்தினாலே மனோவிகாரத்தை யடக்குவித்து நிட்டையைப் புரிவிக்கை யென அறிக. இங்ஙனஞ் சொல்லப்பட்ட தீக்கை யறுவகையும் பக்குவர்க்குச் செய்வதென அறிக. இனி யேழாவது அவுத்திரியென்ற தீக்கை குண்டமண்டலமிட்டு அக்கினிகாரியமுஞ் செய்து பாச க்ஷயம் பண்ணுவதென அறிக; இது அபக்குவர்க்குச் செய்யுந் தீக்கையென அறிக. அதுவும் ஞானவதியாகவுங் கிரியாவதியாக வுஞ் செய்யப்படுமென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் " பலவித மாசான்பாச மோசனந்தான் பண்ணும் படிநயனத் தருள்பரிசம் வாசகமா னதமும்" (8. 3) எ - ம், "பாலரொடு வாலீசர் விருத்தர் பனிமொழியார்...நிர்வாணமெனச் சாற்றுங் காலே " (8. 4) எ - ம், சிவார்ச்சனாபோதத்தில் " செய்யும்வகை யிரண்டுபடி யாகுந் தேரில் திகழ்ஞான வதிகிரியா வதியென்று செப்பி, உய்யும்வகை யுவந்து மனோபாவ கத்தான் மலங்கள் ஓட்டுவது ஞானவதி ஒண்கிரியா வதி தான், வையநிகழ் குண்டமண் டலமிட்டு மற்றும் மருவுதிரு மேற் கட்டி கட்டிவளர் தருப்பை, கொய்யுமல ராற்செய்த மாலைகளுந் தூக் கிக் கும்பகல சங்களுங்கொண் டியற்றுவன குறித்தே" எ - ம் கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது ஆன்மவர்க்கம் மூன்றுவகைப்பட்டிருக்கு மென்றும் அவர்களுக்கு இந்தமலம் அநாதியென்றும் இந்த மலங்களைச் சிவன் நீக்குமிடத்து விஞ்ஞானகலருக்கும் பிரளயாகலருக்கும் நிரா தாரமாய் நின்றுபோக்குவனென்றும் சகலருக்கு மானிடச்சட்டை சாத்தி ஆசாரியமூர்த்தியாகிவந்து மலங்களைநீக்கி இரக்ஷிப்பனென் னும் முறைமையும் அறிவித்தது. அ

கர்த்தா இங்ஙனம் ஆசாரியமூர்த்தமாய்வந்து இரக்ஷிக்குமிடத் துண்டான தீக்கை எத்தனைவகைப்பட்டிருக்குமென்று வினயதற்கு உத்தரம் மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

9\. விரும்பியமந் திராதிகாரம் அர்ச்சனாதி காரம்
மேவுமியோ காதிகாரம் எனச்சமய விசேடம்
வரும்பொருளில் நிருவாண மந்திரங்கள் பதங்கள்
வன்னங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைகள்

இரங்கடைவில் தொகைபதினொன் றெண்பத்தொன் றைம்பத்
 திருநூற்றே டிருபத்து நாலாறு றைந்திற் [தொன்
பரந்தநெறி அறுவகையும் ஒருவிநினை வரிதாம்
 பரபதத்துள் உயிர்விரவப் பயிற்று மன்றே. கூ

தக்க சரியை கிரியையோகத் தன்மையும்
மிக்க ஞான விதியையும் விரித்தது.

(உரை) விரும்பிய மந்திராதிகாரம் - சிவபுண்ணியத்துக்குரிய வர்கள் சருவரும் விரும்பி இச்சிக்கப்பட்ட மந்திரங்களையதிகரிக்கை; அர்ச்சனுதிகாரம் - பூசைகளை யதிகரிக்கை ; மேவும் யோகாதிகாரம்- பொருந்தப்பட்ட யோகங்களையதிகரிக்கை ; எனச் சமய விசேடம் வரும் - இங்ஙனஞ் சொல்லப்பட்ட மூன்றுபாதமுஞ் சமயதீக்கை யினும் விசேடதீக்கையினும் உண்டாகாநிற்கும் ; பொருவில் நிரு வாணம் - ஒப்பில்லாத நிருவாணதீக்கையாவது; மந்திரங்கள் பதங்கள் வன்னங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைகள் - மந்திரங்களென்றும் பதங்களென்றும் அக்கரங்களென்றும் புவனங்களென்றும் தத்துவங்க ளென்றும் கலைகளென்றும் இங்ஙனஞ்சொல்லபட்ட வகைகளாறுக் கும்; இரங்கடைவில்தொகை - கூறுமடைவில் தொகையாவது; பதி னொன்று எண்பத்தொன்று ஐம்பத்தொன்று இருநூற்றேடிருபத்து நாலு ஆறு ஐந்தில் - மந்திரங்கள் பதினொன்றென்றும் பதமெண்பத் தொன்றென்றும் அக்கரம் ஐம்பத்தொன்றென்றும் புவனம் இருநூற் றிருபத்துநாலென்றும் தத்துவம் முப்பத்தாறென்றும் கலைகள் ஐந் தென்றும் ஆக இங்ஙனம் ; பரந்தநெறி அறுவகையும் ஒருவி - விரிந்த வழி ஆறு பிரகாரமாகிய அத்துவாக்களையும் விட்டுநீங்கி ; நினைவரி தாம் பரபதத்துள் உயிர்விரவப் பயிற்றுமன்றே - மனத்தினால் நினைத்தற் கரிதாகிய மேலான சிவபதமாகிய சாயுச்சியத்திலே ஆன் மாவைப் பொருந்தும்படிச் செய்விக்கும்.

விரும்பிய மந்திராதிகாரம் எ - கு சருவரும் விரும்பி இச்சிக்கப் பட்ட மந்திரங்களென்றதேதென்னில் ஞானவான்களன்றியே மற் றுள்ளவர்களு மதிகரிக்கையால் அப்படிச் சொன்னதெனஅறிக. இனி அர்ச்சனுதிகாரம் எ-கு பூசைகளையதிகரிக்கை யென்றதேதென்னில் குருபூசை சிவபூசை மஹேசுரபூசை முதலாயுள்ளவையிற்றையென

அறிக. இனி மேவும் யோகாதிகாரம் எ-கு பொருந்தப்பட்ட யோகங் களை யதிகரிக்கையென்றதேதென்னில் இயமம் நியமம் ஆதனம் பிராணயாமம் பிரத்தியாகாரம் தாரணை தியானம் சமாதி என்னப் பட்ட அட்டாங்கயோகங்களும், அன்றியும் ஆதாரயோகம் நிராதார யோகமென்னும் யோகங்களுமென அறிக. இனி சமயவிசேடம் வரும் எ - கு இங்ஙனஞ் சொல்லப்பட்ட தீக்கைகளிரண்டினுள்ளும் மூன்று பாதமும் அடங்குமென்றதேதென்னில் சமயதீக்கையில் சரியை யொன்றுமென அறிக; விசேடதீக்கையிலே கிரியையும் யோகமும் அடங்கிவருகையால் அப்படிச் சொன்னதென அறிக; அப்படிச் சமய தீக்கைக்குச் சரியையொன்றுமாயிருக்க விசேடதீக்கைக்குக் கிரியை யும் யோகமுமாம் ஒரு தீக்கையிலே இரண்டுபாதமும் அடங்கிநின்ற வழி யெங்ஙனேயென்னில், விசேடதீக்கைக்குப் பூசைகளை யதிகரிக் கைவேண்டுகையாற் பூசைகளை யதிகரிக்குமிடத்துப் பிராணயாம மும் அந்தரியாக்முமாகிய உட்பூசையுஞ் செய்யவேண்டுகையால் அவையிரண்டும் யோகத்திலடங்கி வருகையாலே விசேட தீக்கைக் குக் கிரியையும் யோகமுங் கூடிவருமென்றதென அறிக. இதற்கு பி-ம் ஞானவந்திரட்டையில் “மற்றதனில் தர்ப்பணாதி சரியை கிரியை பூசை மருவு பிராணயாம மன்னிவளர் யோகம்” எ - து கண்டுகொள்க. சமயத்துக்குத் தர்ப்பண முதலானதொழிலும் விசே டத்துக்குப் பூசைகளும் பிராணயாமம் முதலான யோகங்களுங் கூடி வருகையாலே யப்படிச் சொல்லப்பட்டதெனஅறிக.இனி பொருவில் நிருவாணம் எ - கு ஒப்பில்லாத நிருவாணதீக்கையென்றதேதென் னில் நிருவாணதீக்கை சாயுச்சியத்துக்கேதுவாக்குகையாற் சாயுச்சி யத்திற்கு வேறொப்பில்லாதபடியாலே அப்படிச் சொல்லப்பட்ட தென அறிக. இனி இரங்கடைவில் தொகை எ - கு இரங்குதலோசை யென்றும் ஓசை சொல்லென்றும் சொன்னதென அறிக. இதற்கு பி - ம் இந்நூலில் “ஆசுறு திரோத மேவா தகலுமா சிவமுன்னுகை வோசைகொள்” (92) எ - து கண்டுகொள்க. இனி மந்திரம் பதி னொன்றென்றதேதென்னில் ஈசானமுதல் அத்திரமுடிவாகிய மந்தி ரங்களை யென அறிக. பதமெண்பத்தொன்றென்றதேதென்னில் பிர ணவமாகிய ஓங்காரமுதல் நமோநம அந்தமென அறிக. அக்கரம் ஐம்

பத்தொன்றென்றதேதென்னில் அகாரமுதல் க்ஷகார முடிவென அறிக. புவனம் இருநூற்றிருபத்து நாலென்றதேதென்னில் அநாசிருத்தைமுதல் காலாக்கினியந்தமென அறிக. தத்துவமுப்பத்தாறென்றதேதென்னில் பிருதிவிமுதல் நாதமுடிவாகிய தத்துவங்களை யென அறிக; அவையாவன: ஆன்மதத்துவம் இருபத்துநாலும் வித்தியாதத்துவமேழும் சிவதத்துவம் ஐந்துமென அறிக. கலைகளைந்தென்றதேதென்னில் நிவிர்த்திகலை பிரதிட்டாகலை வித்தியாகலை சாந்திகலை சாந்தியாதீதகலை யென்னுங் கலைகளென அறிக. இனி பரந்தநெறி யறுவகையுமொருவி நினைவரிதாம் பரபதத்துளுயிர் விரவப்பயிற்றுமன்றே எ-கு ஆறுவழியாக விரியப்பட்ட அத்துவாக்களை விட்டுநீங்கி மேலான சிவபதத்திலே ஆன்மாபொருந்தும்படிச் செய்விக்குமென்று பொருள்படுத்தினதற்கு வழியேதென்னில், ஒருபுற்றிற் கிடக்கும் பாம்பினை யோட்டிவிடவேண்டினவர்கள் அந்தப்புற்றில் நிலைகுலையத் தக்கஉபாயஞ்செய்யவே அந்தப்புற்றைவிட்டுப் பாம்புதானேபோனாற்போல ஆசாரியனுஞ் சீடனைக் கலாசோதனைசெய்து திருநோக்கத்தினாலே பார்க்கவே ஆன்மாக்களும் அத்துவாக்களை விட்டுநீங்கித் திருவருளைப் பொருந்திச் சாயுச்சியத்தை யடையுமென்றதென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "மூன்றுதிறத் தணுக்கள்செயுங் கன்மங் கட்கு முன்னிலையா மூவிரண்டா மத்து வாவின், ஆன்றமுறை யவையருத்தி யறுத்துமல முதிர்வித் தரும்பருவ மடைதலுமே யாசா னாகித், தோன்றி நுக ராதவகை முற்செய் கன்மத் துகளறுத்தங் கத்துவாத் தொடக்கறவே சோதித், தேன்றவுடற் கன்மமனு பவத்தினா லறுத்திங் கினிச்செய் கன்மம் மூலமல் ஞானத்தா லிடிப்பன்" (8. 10) எ - ம், இருபாவிருபஃதினும் "அத்துவா மெத்தி யடங்கா வினைகளுஞ், சுத்திசெய் தனையே" (16. 18-19) எ - ம், "காரார் கிரகக் கலியாழ் வேலைநின் பேராவின்பத் திருத்திய பெரும" (2. 3-4) எ - ம், ஞானமிர்தத்தினும் "என்னை - அன்ன தாய தொன்முது பிறவி - யறைபோக் கொழியக் குலமுழுதும் வளையி - ஞான வொள்வாள் பூமுக மழுங்கக் - கொன்றுசினந் தணியாத் தண்டாச் சீற்றத்து - மறவனை யல்லையோ நீயே யிறைவ" (53. 12-17) எ - ம் வருமேதுக்களைக் கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது சமயதீக்கையினும் விசேடதீக்கையினுஞ் சரியையுங் கிரியையையும் யோகமுமடங்குமென்றும் நிருவாணதீக்கையிலே சாயுச்சியமென்னும் முறைமையும் அறிவித்தது. கூ.

இங்ஙனஞ் சொல்லப்பட்ட தீக்கை மூன்றினுள்ளும் நிருவாண தீக்கையினாலே சாயுச்சிய மென்றருளிச்செய்து மற்றுண்டான சமயதீக்கைக்கும் விசேடதீக்கைக்குஞ் சரியை கிரியா யோகமென்னுந் தொழில்களைக் கற்பித்ததொழிய அந்த ஞானதீக்கைபோல வொருபயன்களை யருளிச்செய்யாததேதென்று வினயதற்கு உத்தரம் மேலருளிச்செய்வான் எடுத்துக் கொண்டருளியது.

10. கிரியையென மருவுமவை யாவும் ஞானம்
கிடைத்தற்கு நிமித்தமெனக் கிளக்கும் உண்மைச்
சரியைகிரி யாயோகத் தன்மை யோர்க்குச்
சாலோக சாமீப சாரூ பங்கள்
மருவியிடும் உயர்ஞான மிரண்டாம் மாறு
மலமகல அகலாத மன்னு போதத்
திருவருளோன் ஒன்றதனைத் தெளிய வோதும்
சிவாகமமென் றுலகறியச் செப்பும் நூலே. க0.

மூவித மான முத்திப் பதமும்
மேவிய வருளுமெய் யாகம மென்றது.

(உரை) கிரியையென மருவும் அவை யாவுஞ் ஞானங்கிடைத்தற்கு நிமித்தமெனக் கிளக்கும் - சிவத்தொழிலாகப் பொருந்தப்பட்டவையனைத்தும் ஞானமுண்டாகைக் கேது என்று சிவாகமங்களிற் சொல்லப்பட்டிருக்கும். அப்படியாகில் அந்த நிருவாணதீக்கையுள்ளவர்களைப்போல இவர்களுக்குச் சாயுச்சியமுண்டோவென்னில். அப்படியாகாது, பின்னை எங்ஙனே யென்னில்; உண்மைச்சரியை கிரியாயோகத் தன்மையோர்க்குச் சாலோக சாமீப சாரூபங்கள் மருவியிடும் - சிவாகமங்களால் நிச்சயித்து அறுதியிடப்பட்ட சரியைத்தொழிலுங் கிரியைத்தொழிலும் யோகத்தொழிலும் வழுவறச் செய்யுமவர்களுக்கு அந்தந்த ஒழுங்கிலே சாலோகபதஞ் சாமீபபதஞ் சாரூபபதமென்னும் பதமுத்திகளுண்டாய் வரும்; அப்படி

யானல் முன்னே சிவத்தொழில்களினலே ஞானமுண்டாமென்று சொல்லி இப்போது பதமுத்திகளுண்டாமென்று சொல்லலாமோ என்னில், அப்படி ஞானத்துக்கேதுவாமென்று சொன்னதும் அந் தந்தத் தொழில்களினலே பதமுத்திகளைப்பெற்று ஞானத்துக் கேதுவாமென்று சொன்னதாயிருக்கும்; அப்படியுண்டாகிய ஞானந் தான் முற்கூறிய சரியை கிரியா யோகங்களைப்போலப் பலவழியா யிருக்குமோ ஒருவழியா யிருக்குமோவென்னில் ; உயர்ஞான மிரண் டாம் - மேலான ஞானமும் இரண்டுவகைப்பட்டிருக்கும் ; அஃதெப் படியென்னில் ; மாறு மலமகல அகலாத மன்னுபோதத் திருவரு ளொன்று - அநாதியே தன்னைவிட்டு நீங்காத ஆணவமல மறைப்பு விட்டு நீங்கும்படி தன்னைவிட்டு நீங்காத திருவருளோடுங்கூடி யிரண்டறநின் றநுபவிக்கிற ஞானமொன்று ; ஒன்றதனைத் தெளிய வோதுஞ் சிவாகமம் - மற்றொரு ஞானமாவது அந்தத் திருவருள் ஞானத்தைத் தெளிய அறிந்தநுபவிக்கத்தக்கதாகச் சிவாகமங்களை யோதியுணர்ந்தது ; என்று உலகறியச் செப்பும் நூலே - என்று இங்ஙனம் உயர்ந்தோர் அறியத்தக்கதாக நூல்கள் சொல்லும்.

கிரியையென்றது தொழில்களுக்கெல்லாம் பொதுப்படச் சொல்லியிருக்கச் சிவத்தொழிலொன்றையுஞ் சொல்லவேண்டு வான் ஏனென்னில் இது சிவனைப்பெறுகைக்குத் தொழில் சொல்லு கையால் சிவத்தொழிலென்று சொன்னதென அறிக. உண்மைச் சரியை கிரியா யோகம் எ - கு சிவாகமஞ்சொன்ன முறைமைக்குத் தவறுவராமலென்றதேதென்னில் திருவலகு திருமெழுக்கு திருநந் தனவனம் முதலாயுள்ள சரியைத் தொழில்களுக்கும் சிவபூசை குருபூசை மஹேசுரபூசை முதலான பூசைத்தொழில்களுக்கும் ஆதாரயோகம் அட்டாங்கயோகம் முதலான யோகத்தொழில்களுக் குந் தவறுவராம லென்றதென அறிக. இவை மூன்றுக்கும் பி - ம் சித்தியாரில் " தாதமார்க்கஞ் சாற்றில்...சரியைசெய்வோர் ஈசனுல கிருப்பர் " (8. 19) எ - து சரியைக்குக் கண்டுகொள்க ; " புத்திர மார்க்கம் புகலில்...கிரியையினை இயற்றுவோர்கள் நின்மலன்றன் அருகிருப்பர் நினையுங் காலே " (8. 20) எ - து கிரியைக்குக் கண்டுகொள்க ; " சகமார்க்கம்...அட்டாங்க யோகமுற்றும் உழத்

தலுழந்தவர் சிவன்ற னுருவத்தைப் பெறுவர்" (8. 21) எ - து யோகத்திற்குக் கண்டுகொள்க. உயர்ஞானம் எ - கு மேலான ஞானமென்ற தேதென்னில், அந்த ஞானத்துக்குரித்தானவர்கள் நூல்களை யோதி யுணர்ந்து சமய பேதங்களையும் அறிந்து மேலான பதிபசு பாசங்களையுந் தரிசித்து சாலோகமாதியான பதமுத்திகளையுங் கடந்து மேற்பட்ட சாயுச்சியத்தைப் பெறுகையாலே யப்படிச்சொன்னதென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "சன்மார்க்கஞ் சகலகலை புராண வேத சாத்திரங்கள் சமயங்கள் தாம்பலவு முணர்ந்து, பன்மார்க்கப் பொருள்பலவுங் கீழாக மேலாம் பதிபசுபா சந்தெரிந்து பரசிவனைக் காட்டும், நன்மார்க்க ஞானத்தால் நாடி ஞான ஞேயமொடு ஞாதிருவும் நாடா வண்ணம், பின்மார்க்கச் சிவனுடனாம் பெற்றி ஞானப் பெருமையுடை யோர்சிவனைப் பெறுவர் காணே" (8. 22) எ - து ஞானத்துக்குக் கண்டுகொள்க. என்றிப்படியிருக்க இந்த ஞானத்தை உயர்ஞானம் இரண்டாம் என்று கூறியதற்குத் திருவருள்ஞானம் ஒருஞானமென்றும் சிவாகமங்களை யோதியறிகிற ஞானம் ஒருஞானமென்றும் பொருள்படுத்திக் கூறினதற்கு வழியேதென்னில், திருவருள் ஞானமாவது மூதலிகள் மூவர் காரைக்காலம்மை முதலாயினோர்க் குண்டாகிய ஞானமென அறிக. சிவாகமங்களை யோதியறிந்து வருகிற ஞானமாவது ஸ்ரீநந்திதேவ நாயனுர் முதலாயுள்ள சமயகுரவர்க்குண்டாகிய ஞானமென அறிக. இவையிரண்டிற்கும் பி-ம் சித்தியாரில் "பண்டைநற் றவத்தாற் றோன்றிப் பரமனைப் பத்திபண்ணுந், தொண்டரைத் தானே தூய கதியினில் தொகுப்பன் மார்க்கர், கண்டநூ லோதி வீடு காதலிப் பவர்கட் கீசன், புண்டரீ கத்தாள் சேரும் பரிசினைப் புகல லுற்றும்" (பாயிரம்- 4) எ - ம், "போதமிகுத் தோர்தொகுத்த பேதைமைக்கே பொருந்தினோ ரிவர்க்கன்றிக் கதிப்பாற் செல்ல, ஏதுநெறி யெனுமவர்கட் கறிய முன்னாள் இறைவனருள் நந்திதனக் கியம்ப நந்தி, கோதிலருட் சநற்குமா ரற்குக் கூறக் குவலயத்தின் அவ்வழியெங் குருநாதன் கொண்டு, தீதகல எமக்களித்த ஞான நூலைத் தேர்ந்துரைப்பன் சிவஞான சித்தியென்றே" (பரபக்கம் - 10) எ - ம் கண்டுகொள்க.

இதனுற் சொல்லியது சரியை கிரியா யோகங்களை முற்றச் செய்பவர்களுக்கு அந்தந்த முறைமையிலே சாலோக சாமீப சாரூப

மென்னும் பதமுத்திகளுண்டாமென்றும், ஞானத்துக்குச் சாயுச்சிய முண்டாமென்றும் அந்த ஞானம் இரண்டுவகைப் பட்டிருக்குமென்றும், இதில் திருவருள் ஞானம் ஒருஞானமென்றும் சிவாகமங்களை யோதியறிகிற ஞானம் ஒருஞானமென்றும் வருமுறைமையை யறிவித்தது. ௧0

அப்படிச் சிவாகமங்கள் உண்டாயிருக்கச்செய்தே, இந்தத் தமிழ் நூல்களை இப்பொழுது செய்யவேண்டுங் காரணமேதென்று வினவ, இந்தத் தமிழ்நூல்களிலுண்டாகிய அத்தங்களும் அந்தச் சிவாகமத்தின் அத்தந்தானுயிருக்குமென்றும் இந்தத் தமிழ்நூல்களும் பாரம்பரியமாக வருகிறதென்றும் அருளிச்செய்வான் எடுத்துக் கொண்டருளியது.

11. தெரித்தகுரு முதல்வர்உயர் சிவஞான போதம்
செப்பினர்பின் பவர்புதல்வர் சிவஞான சித்தி
விரித்தனர்மற் றவர்கள்திரு வடிகள் போற்றி.
விளம்பியநூல் அவையிரண்டும் விரும்பி நோக்கிக்
கருத்திலுறை திருவருளும் இறைவன் நூலும்
கலந்துபொது உண்மையெனக் கருதி யானும்
அருத்திமிக உரைப்பன்வளர் விருத்தம் நூறும்
ஆசில்சிவப் பிரகாசம் ஆகு மன்றே. ௧௧

உன்னரும் பொருளை யுரையா னுணர்த்திய
முன்னவ ரருளால் நூற்பெயர் மொழிந்தது.

(உரை) தெரித்த குருமுதல்வர் உயர் சிவஞானபோதம் செப்பினர் - முற்கூறப்பட்ட ஆசாரியரில் விசேடத்துவத்தையுடைய மெய்கண்டதேவ தம்பிரானுர் மேலான சிவஞானபோதமாகிய மூலக்கிரந்தம் பன்னிரண்டினுமுள்ள அத்தத்தைத் தமிழாக விரித்துப் பன்னிரண்டு சூத்திரமாக வகுத்து அந்த நூலின்பெயராலே சிவஞானபோதமென்று செய்தருளினர்; அன்றியுந் தமிழாகிய சிவஞானபோதம் ஒன்றிலேயு மேற்றிப் பொருளுரைப்பினுமாம்; பின்பு அவர் புதல்வர் சிவஞானசித்தி விரித்தனர் - அதற்குப் பின்பாக அவரது திருவடியைப்பெற்ற சன்ானையர் தலைவனாயனுராகிய அருணந்திதேவ தம்பி

ராஞர் சிவஞானசித்தியென்னும் நூலை விரித்துச் செய்தருளினுர்; மற்றவர்கள் திருவடிகள் போற்றி - அந்த இரண்டு தம்பிராஞர்கள் திருவடியையுந் துதித்து; விளம்பிய நூலவையிரண்டும் விரும்பி நோக்கி-அவர்களால் அருளிச்செய்யப்பட்ட நூல்கள் இரண்டினையும் ஆசையோடும் ஆராய்ந்து பார்த்து அதிலுண்டான அத்தமும்; அதுவு மன்றி; கருத்திலுறை திருவருளும் இறைவன் நூலுங் கலந்து - என்னுடைய இதயத்திலே பொருந்திநின்று நிகழ்த்துகிற திருவருளையுந் தம்பிராஞர் அருளிச்செய்த சிவாகமத்திலுண்டாகிய அத்தத்தையும் இந்நூலிலே விரவி; பொது உண்மை யெனக்கருதி-இந்நூற்செய்யு மிடத்துப் பொதுவென்றும் உண்மையென்றும் இரண்டு பகுதியாக விசாரித்து; யானும் அருத்திமிக உரைப்பன் - ஒன்றுக்கும் பற்ருத நானும் ஆசைமிகுதியாலே ஒரு சாத்திரமாகச் சொல்லுவன்; வளர் விருத்தம் நூறும்-சிறப்பு வளரப்பட்ட விருத்தப்பாவாகிய செய்யுள் நூற்றினையும்; ஆசில் சிவப்பிரகாசம் ஆகுமன்றே - இந்நூலுக்குத் திருநாமங் குற்றமற்ற சிவப்பிரகாசமாம்.

உயர் சிவஞானபோதம் என்றதை மேலான சிவஞானபோதம் என்றதேதென்னில் மற்றுள்ள சமயங்களிற் சொல்லப்பட்ட அத்தங்கள் எல்லாவற்றினும் மேற்பட்ட உண்மைஞானத்தைச் சொல்லுகையா லெனக்கொள்க. சிவஞானசித்தியை விரியச்செய்தாரென்றதேதென்னில் முற்கூறப்பட்ட நூலாகிய சிவஞானபோதம் சொற்சுருங்கி அத்தமாழ்ந்திருக்கையாலே அந்தச்சிவஞானசித்தியிற் சொல்லும் அத்தமும் விரியச்செய்கையிஞலெனக் கொள்க. இதற்கு பி-ம் சித்தியாரில் "குவலயத்தி னவ்வழியெங் குருநாதன் கொண்டு, நீதகல எமக்களித்த ஞானநூலைத் தேர்ந்துரைப்பன் சிவஞான சித்தியென்றே" (பரபக்கம் - 10) எ - து கண்டுகொள்க. கருத்திலுறை திருவருளும் என்றது உயிர்க்குயிராய்நின்று நிகழ்த்துகிற அநுபவ ஞானத்தையென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில், "அந்நிய மிலாமையானும் அறிவினுள் நிற்றலானும், உன்னிய வெல்லா முள்நின் றுணர்த்துவ ஞதலானும்" (6. 8) எ - ம், "மதியருக்க னணையரவம் போற்ருேன்று மான்மாவி லரனே" எ - ம், பூசாகரணத்தில், "ஞானிக் குயிரினிற் குயிரு மன்றே" (22) எ - ம் வரும் ஏதுக்களும் இப்பொருள்பற்றி யென்பதைக் கண்டுகொள்க. இனி

இறைவன் நூலுங் கலந்தென்றது அந்த இரண்டு நூலினும் வாராத அத்தங்களைக் கூட்டி அநுபவமாக அருளிச்செய்கையினாலெனக் கொள்க. பொது என்றது பதி பசு பாசங்களைச் சாமானியமாக அருளிச்செய்கையினா லெனக்கொள்க. உண்மையென்றது ஆன்மதரிசனம் சிவதரிசனம் முதலாயுள்ளவற்றை யநுபவமாக அருளிச்செய்கையினாலெனக்கொள்க. வளர்விருத்தம் நூறுமென்றது இந்நூல் ஆராயுந்தோறும் ஆராயுந்தோறும் அத்தம்மென்மேலும் வளருகையாலெனக்கொள்க. இதற்கு பி - ம் திருவள்ளுவப்பயனில், " நவில்தொறும் நூல் நயம்போலும் " (783) எ - து கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது, இந்நூலிலே முன்னூலாகிய சிவாகமத்தின் அத்தமும் வழிநூலாகிய சிவஞானபோதத்திலுஞ் சிவஞான சித்தியிலுமுண்டான அத்தமுங் கருத்திலே கூடிநின்று காரியப்படுத்துகிற அநுபவஞானத்தினையுங் கூட்டிச் செய்தோமென்னும் முறைமையையும் அறிவித்தது. கக

அப்படியே இங்ஙனம் பழையதாகவருகிற நூலும் இப்பொழுது செய்யப்பட்ட புதுநூலுந் தன்னிலொக்குமோ என்று வினவ அஃதிரண்டும் ஒருவகை யத்தமாறாற் கொள்ளப்படுமென்னும் முறைமையும் இந்நூல்கொள்ளும் பகுதியுடையவர்கள் முறைமையும் அவையடக்கமும் மேலருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

12. தோன்மையவாம் எனும்எவையும் நன்றாகா இன்று
 தோன்றியநூல் எனும்எவையும் தீதாகா துணிந்த
நன்மையினார் நலங்கொள்மணி பொதியுமதன் களங்
 நவையாகா தெனஉண்மை நயந்திடுவர் நடுவாங் [கம்
தன்மையினார் பழமைஅழ காராய்ந்து தரிப்பர்
 தவறுநலம் பொருளின்கட் சார்வாராய்ந் தறிதல்
இன்மையினார் பலர்புகழில் ஏத்துவரே திலருற் [லரே
 றிகழ்ந்தனரேல் இகழ்ந்திடுவர் தமக்கெனவொன் றி

சான்றோர் செய்தியுஞ் சால்பிலார் தன்மையுந்
தோன்று மாறு சொல்லவை யடக்கம்.

(உரை) தொன்மையவாமெனும் எவையும் நன்றாகா - நூல்கள் பழையதேயாயினும் பதி பசு பாசத்தின் உண்மையைத் தெரியச்

சொல்லாதபோது எவராலே சொல்லப்பட்டதாயினும் நன்மை யுண்டாகாது; இன்று தோன்றிய நூலெனு மெவையுந் தீதாகா - இப்பொழுது புதிதாகச்சொல்லப்பட்ட நூலாயினும் பதி பசு பாசங் களைத் தெரியச்சொல்லுமாயின் அந்த நூலுக்குக் குற்றமுண்டா காது; ஆகையால் இவையிரண்டினுள் புதுநூல்கொள்ளுமிடத்து; துணிந்த நன்மையினோர் - சித்தாந்த வழக்கினை யறிந்து உறுதிவந்த நல்லோர்கள் நூலின் புதுமைகொள்ளார்கள்; அதென்போலவென் னில்; நலங்கொள்மணி பொதியுமதன் களங்கம் நவையாகாவென உண்மைநயந்திடுவர்-நல்ல இரத்தினமானது பொல்லாததொன்றிலே பொதிந்திருந்தாலும் இரத்தினம் அறிந்தவர்கள் பொதிந்ததன்குற்றம் பாராமல் இரத்தினத்தினையே கொண்டாற்போலப் பொருளினுண் மையைக் கைக்கொள்ளுவார்கள். அன்றியும்; நடுவாந் தன்மையினோர்- மத்திமராயுள்ளவர்கள் உத்தமரைப்போல நூலைக்கண்ட மாத்திரத் திலே பொருளைக் கொள்ளமாட்டார்களாதலாலே; பழைமை யழ காராய்ந்து தரிப்பர் - பழையதாயுள்ள ஆகமங்களின் அத்தத்தையும் இப்பொழுதுண்டான நூலின் அத்தத்தையும் ஆராய்ந்து பார்த்து, கொள்ளும் பகுதியானுற் கொள்ளுவார்கள். இவையிரண்டு பகுதியு மன்றி; தவறுநலம் பொருளின்கட் சார்வாராய்ந்து அறிதல் இன்மை யினோர் - நூலுக்குண்டாகிய குற்றமிது குணமிது என்று பொருளி னிடத்திலே பொருந்தின முறைமையை ஆராய்ந்து பார்த்தறிய மாட்டாத அறிவீனராயுள்ளவர்கள்; பலர்புகழில் ஏத்துவர்-நூலின் பயனறிந்த உத்தமர் கொண்டாடினுற் கூடியிருந்து கொண்டாடு வார்கள்; ஏதிலர் உற்று இகழ்ந்தனரேல் இகழ்ந்திடுவர்-இந்நூற் செய் தற்குப் பொறுமையாக அந்நியர் இகழ்ந்துரைக்குமிடத்து அதற்குங் கூடி யிகழ்ந்துரையாநிற்பர்கள். அவர்களாரோ என்னில்; தமக் கென வொன்றிலரே - நன்று தீது என்றறியத் தங்களுக்கெனவோர் அறிவில்லாதவர்கள்.

எவையும் நன்றாகா என்றதுகொண்டே பழைய நூல்களிற் குற்றங்குறையுமெனக்கொள்க. எவையுந்தீதாகா என்றதுகொண்டே புதிய நூல்களில் நன்மை குறையுமெனக்கொள்க. களங்கம் நவை என்றிருவகைக் குற்றமாகச் சொன்னதேதென்னில் இரத்தினத்தைப்

பொதியப்பட்டது குற்றமுடையதானாலும் இரத்தினத்தைக் குற்றமாகக் கொள்ளார்களென்றதென அறிக. உண்மைநயந் திடுவரென்றதை நூலின் புதுமை விசாரியாமற் பொருள்கொள்ளுவார்கள் என்றது அத்தத்தின் மான்மியங் கண்டுகொள்வார்கள் என்றதெனக் கொள்க. தமக்கென வொன்றிலரே என்றதை தமக்கென வோரறிவில்லாதவர்கள் என்றதேதென்னில் முன் ஜநநத்தில் தமக்கென்ன ஒரு தவமில்லாதவர்கள் என்ற தென்னவு மாமெனக் கொள்க.

இதனாற் சொல்லியது இந்நூற்கொள்ளுமிடத்து அறிவானுயர்ந்த பெரியோர்கள் கொள்ளுமுறைமையும் மத்திமராயுள்ளவர்கள் கொள்ளுமுறைமையும் அறிவீனராயுள்ளவர்கள் கொள்ளுமுறைமையுஞ் சொல்லி அவையடக்கமும் அறிவித்தது. கஉ

---

# பொது அதிகாரம்

## முதற் சூத்திரம்

### பதியிலக்கணம்

இங்ஙனம் பாயிரம் அருளிச்செய்து, மேல் முதற்சூத்திரமாகிய பதியிலக்கணம் அருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

இந்தப்பதியிலக்கணத்தில் முதற்சூத்திரம் நின்றமுறைமையெங்ஙனே யென்னில், பதியிலக்கணமாக வகுத்த "பலகலை" என்ற விருத்தந்தொடங்கி "ஏற்றவினை" என்னும் விருத்த முடிவாகிய செய்யுளாறும் சிவஞானபோதத்தினுஞ் சிவஞானசித்தியினும் முதற்சூத்திரத்தில் வருங் கருத்தாகையால் அப்படிச் சொன்னதென அறிக. அப்படி யந்தநூல்களில் முதற்சூத்திரத்திலுண்டான கருத்து இந்த விருத்தம் ஆறினும் நின்றதற்கு வழியேதென்னில்:—சிவஞானபோதத்தில் முதற்சூத்திரமாகிய "அவனவ ளதுவெனு மவைமூவினைமையில், தோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதாம், அந்த மாதி யென்மனார் புலவர்" (1) என்னுஞ் சூத்திரத்துக்குக் கருத்து

"சங்காரகாரணனை முதலாக வுடைத்திவ் வுலக'மென்பதனுல் சிவனே கர்த்தாவென்னுங் கருவைப்பற்றி இந்நூலினும் இச்செய்யுட்கள் ஆறி னுள்ளும் "பீடுபெற நிறுவியவை யொடுக்குமேனி" எ - ம், "அவை யெங் கடவுள்தானே யந்தமுற அழித்திடுவன்" எ - ம், "ஏற்றவினை யரனருளின் திருவிளையாட் டாக இயம்புவர்கள்" எ - ம் சிவனே கர்த்தா என்று வருகையாலும், சித்தியாரில் முதற்சூத்திரத்தின் விருத்தங்களில் "சிவனரு உருவுமல்லன்" (1. 70) என்னும் விருத் தத்தின் கருவைப்பற்றி இந்நூலினும் "பலகலை" என்ற விருத்தத் தில் "பதிபரமே யதுதா னிலவுமரு வுருவின்றி" என்று வருகை யாலும், "பொன்மை நீலாதிவன்னம்" (சித்தி. 1. 68) என்னும் விருத்தத்தின் கருவைப்பற்றி இந்நூலினும் "நீடுபராசத்தி" என் னும் விருத்தம் வருகையாலும், "குறித்ததொன் முகமாட்டாக் குறைவில துதலானும்" (சித்தி. 1. 45) என்னும் விருத்தத்தின் கரு வைப்பற்றி இந்நூலினும் "ஈங்கிது என்றது கடந்த இயல்பிஞ னும்" என்னும் விருத்தம் வருகையாலும், "ஒருவனே டொருத்தி" (சித்தி. 1. 1) என்னும் விருத்தத்தின் கருவைப்பற்றி இந்நூலினும் "உலகமெலா மொருவனே டொருத்தி" என்னும் விருத்தம் வரு கையாலும், "தோற்றுவித் தளித்துப் பின்னுந் துடைத்தருள் தொழில்கள் மூன்றும் போற்றவே யுடையன் ஈசன்" (சித்தி. 1. 33) எ - ம் "உரைத்தவித் தொழில்கள் மூன்றும் மூவருக் குலக மோத, வரைத்தொரு வனுக்கே யாக்கி வைத்ததிங் கென்னை" (ஷை 1. 34) எ - ம் வரும் விருத்தங்களின் கருவைப்பற்றி இந்நூலி னும் "கந்தமல ரயன்படைக்கும்" என்னும் விருத்தம் வருகையா லும், "சொன்னவித் தொழில்களென்ன காரணந்தோற்றவென்னின் முன்னவன் விளையாட்டென்று மொழிதலுமாம்" எ - ம், "அழிப் பிளைப் பாற்றல்" (ஷை 1. 36, 37) எ - ம் வரும் விருத்தங்களின் கருவைப்பற்றி இந்நூலினும் "ஏற்றவினை யரனருளின் திருவிளை யாட்டாக இயம்புவர்கள்" என்னும் விருத்தம் வருகையாலும், இந் தப் பதியிலக்கணமாக அருளிச்செய்த விருத்தமாறும் அந்நூல்களிற் கருத்து ஒத்துவருகையால் முதற்சூத்திரமாக நின்றதென அறிக. இங்ஙனம் சித்தியாரில் முதற்சூத்திரத்தில் விருத்தங்களா யேதுகாட்

டின செய்யுட்களை விருத்தங்கள்தோறும் முடியவொட்டிக் கண்டு கொள்க.

மேல் முதற்சூத்திரமாக வகுத்த பதியிலக்கணமாகிய செய்யுள் ஆறினுள்ளும் முற்கூறிய 'பலகலை'யென்ற விருத்தத்துக்குத் தொகுத்தனை வருமாறு:—முன்னே பாயிரத்திற் கூறிய "தெரித்தகுரு முதல்வர்உயர் சிவஞான போதஞ் செப்பினர்பின் பவர்புதல்வர் சிவஞான சித்தி விரித்தனர்" என்றும் "இறைவன் நூலுங் கலந்து" என்றும் வரப்பட்ட முன்னூல் வழிநூல்களினும் இப்பொழுது கூறப்பட்ட இந்தச் சார்புநூலாலும் அருளிச்செய்கிற அத்தமேதென்று வினவ மேலருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

13. பலகலைஆ கமவேதம் யாவையினுங் கருத்துப்
பதிபசுபா சந்தெரித்தல் பதிபரமே அதுதான்
நிலவும்அரு உருவின்றிக் குணங்குறிக ளின்றி
நின்மலமாய் ஏகமாய் நித்த மாகி
அலகிலுயிர்க் குணர்வாகி அசல மாகி
அகண்டிதமாய் ஆநந்த உருவா யன்றிச்
செலவரிதாய்ச் செல்கதியாய்ச் சிறிதாகிப் பெரிதாய்த்
திகழ்வதுதற் சிவமென்பர் தெளிந்து ளோரே. கூ

விதிப்படி முதனூல் விளம்புமுப் பொருளின்
பதித்திறந் தெரிந்து பாரித் துரைத்தது.

(உரை) பலகலை ஆகமவேதம் யாவையினுங் கருத்து - பலகலை ஞானங்களாகச் சொல்லப்பட்ட ஆகமங்களுக்கும் வேதங்களுக்கும் இவையிற்றின் விரிந்த நூல்களுக்கும் துணிவாவது; பதி பசு பாசந் தெரித்தல் - பதியையும் பசுவையும் பாசத்தையுங் கூறுசெய்தல். இவையிற்றின் முதற்கூறப்பட்ட பதியின்தன்மை யெங்ஙனேயென்னில்; பதிபரமே - அந்தப் பதியாவது எல்லாவற்றிற்கும் மேலாயிருப்பதொன்று; அதுதான் - அந்தப் பரமேயென்று சொல்லப்பட்ட பதியானதன் இயல்பு எங்ஙனேயென்னில்; நிலவும் அருவுருவின்றி - விளங்கக்காணப்படுவதுங் காணப்படாததுமல்லவாய்; நிலவுமென்றது பொருந்தவெனவுமாமென அறிக; குணங்குறிகளின்றி - ஒரு குணங்களும் ஓரடையாளங்களு மில்லையாய்; நின்மலமாய் -

மலரகிதமாய்; ஏகமாய் - ஒன்றாயிருப்பதாய்; நித்தமாகி - அழியாத தாய்; அலகிலுயிர்க் குணர்வாகி - எண்ணிறந்த ஆன்மாக்களுக்கும் அறிவாய்; அசலமாகி - சலிப்பற்றதாய்; அகண்டிதமாய் - கண்டிக் கப்படாததாய்; ஆநந்த உருவாய் - இன்ப சொரூபமாய்; அன்றிச் செலவரிதாய் - மாறுபட்டவர்களுக்குச் சென்று கூடுதற் கரிதாய்; செல்கதியாய் - வழிபட்டவர்களுக்குச் சென்று பொருந்துகைக்கு இடமாகிய முத்திநெறியாய்; சிறிதாகிப் பெரிதாய் - அணுவுக்கணு வாய் மகத்துக்கு மகத்தாய்; திகழ்வது தற்சிவமென்பர் - இப்படி விளங்காநின்றது உண்மையான சிவமென்று சொல்லுவார்கள்; தெளிந்துளோரே - சித்தாந்தத் தெளிவுவந்த பெரியோர்கள்.

பலகலை எ - கு வேதாகமங்களைச் சொல்லாமல் அவையிற் றைத்தவிர வேறே சில நூல்களென்று சொல்லுவாருமுளர்; அப் படியாறனும் இந்தச் செய்யுளில் பலகலையை முந்தக்கூறி ஆகமமும் வேதமும் பிற்படக்கூறுகையாலே அதுபொருளல்லவென அறிக. அல்லது பின்னை யெங்ஙனேயென்னில் வேதாகமங்களும் அவை யிற்றினின்றும் விரியப்பட்ட நூல்களுமென்பதொழிந்து வேறாகச் சொல்லவொண்ணுதென அறிக. அதற்கு வழியேதென்னில் கலை ஞானமென்பது சர்வநூலுக்கும் பொதுப்பெயராகையால் அப்படிச் சொன்னதென அறிக. அதற்கு பி - ம் சித்தியாரில் "வேதசாத் திரமிருதி புராணகலை ஞானம்" (9. 2) எ - ம், சங்கற்ப நிராகரணத் தில் "பெருங்கட லுதவுங் கருங்கடு வாங்கிக் - கந்தரத் தமைத்த அந்த மில் கடவுள் - பாலரை யுணர்த்து மேலவர் போலக் - கேட்போ ரள வைக் கோட்படு பொருளால்-அருளிய கலைக ளலகில அதனுல்" (2.1-5) எ - ம், திருவருட்பயனில் "நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானங் கற்குஞ் சரக்கன்று காண்" (காப்பு) எ - ம், இந்நூலினும் "அருங்கலை கள் முதிர்ந்துளோரே" (21) எ - ம் வருமேதுக்களைக் கண்டுகொள்க.

யாவையினும் எ - கு வேதத்தினும் ஆகமத்தினும் விரியப்பட்டது மற்றுள்ள நூல்களெல்லாமென்று பொருள்படுத்தினதற்கு பி - ம் சித்தியாரில் "வேதநூல் சைவநூலென் றிரண்டே நூல்கள் வேறுரை க்கு நூலிவற்றின் விரிந்த நூல்கள்" (8. 15) எ - து கண்டுகொள்க.

பதிபரமே எ - கு எல்லாவற்றிற்கும் மேற்பட்ட பொருளென்ற

தேதென்னில் அண்டாண்ட பகிரண்டங்களுக்கும் அப்பாற்பட்ட பொருளென்றதென அறிக. இதற்கு பி - ம் திருப்பல்லாண்டில் "அண்டங்கடந்த பொருளள வில்லதோ ரானந்த வெள்ளப்பொருள்" (2) எ - து கண்டுகொள்க. நிலவும் அருவுருவின்றி எ - கு காணப் பட்ட பொருளுமல்ல காணப்படாத பொருளுமல்ல என்றதேதென் னில், காணப்படும் பொருளென்றால் தோன்றி நின்று அழியப்படும் பொருளாம்; காணப்படாத பொருளென்றால் முயற்கோடுபோலவும் ஆகாயப்பூப் போலவும் இல்லாததொரு பொருளா மென்றதென அறிக. இவையிரண்டுக்கும் பி - ம் சித்தியாரில் "அறிதரும் பொரு ளோவீச னறிவுறா தவனே வென்னில், அறிபொருள் சித்தசத்தா மறியாத தின்றா மெங்குஞ், செறிசிவ மிரண்டு மின்றிச் சித்தொடு சத்தாய் நிற்கும்" (6. 1) எ - து கண்டுகொள்க. இதில் ஆகாயப் பூப்போலக் காணுதபொருளாம் எ - கு பி - ம் சித்தியாரில் "வானத் திணரார் பூந்தொடையு மாமைக் கெழுமயிர்க் கயிறும் போலும்" (6. 4) எ - து கண்டுகொள்க. அன்றிச் செலவரிதாய்ச் செல்கதி யாய் எ - கு வழிபடாதவர்கள் சென்று கூடுதற்கரிதாயென்றும் வழிபட்டவர்கள் சென்று கூடுதற்கெளிதாயென்றும் பொருள்படுத் தினதற்கு வழியேதென்னில் சிவாகமஞ் சொன்னவொழுங்கிலே நின்று அநுட்டியாதவர்களுக்குக் கூடலரிதென்றும் அநுட்டித்தவர் களுக்குக் கூடலெளிதென்றுஞ் சொன்னதென அறிக. இவையிரண் டுக்கும் பி - ம் சித்தியாரில் "இறைவனுவான்" (8. 17) என்ற செய்யுளில், "மறையாக மங்களினு லறிவெல்லாந் தோற்றும், வரை வின்வழி வருவோர்க்கும் வாரா தோர்க்கும், முறைமையினு லின்ப துன்பங் கொடுத்தலால்" எ - து கண்டுகொள்க. சிறிதாகிப் பெரி தாய் எ - கு அணுவுக்கணுவாய் மஹத்துக்கு மஹத்தாயென்ற தேதென்னில் சர்வான்மாக்களுக்கும் எடுக்கப்பட்டஅச்சுக்களுக்கெல் லாம்அதற்கதற்குத் தக்கதாகக்கூடிநின்று சேட்டிக்கையால் அப்படிச் சொன்னதென அறிக. இதற்கு பி - ம் இருபாவிருபஃதில் "யாவர் யாவையும் யாங்கணுஞ் சென்று - புக்குழிப் புக்கு" (18. 8 - 9) எ - து கண்டுகொள்க. தற்சிவம் எ - கு உண்மையான சிவமென்ற தேதென்னில் ஒருவிகற்பங்களுமின்றித் தற்சுபாவமாய் நின்ற சொரூ

பத்தைச் சொன்னதென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "நிறுத்துவதோர் குணமில்லான் தன்னையொருவர்க்கு நினைப் பரியா னொன்றுமிலான்" (9. 6) எ - து கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது பல கலை ஞானமாகச் சொல்லப்பட்ட வேதாகமபுராண சாத்திரங்களெல்லாம் பதிபசுபாசத்தின் உண்மையைச் சொல்லுமென்றும் இதிற் பதியானது நிஷ்களசொரூபியாய் நிற்குமென்னும் முறைமையும் அறிவித்தது. க

இங்ஙனம் நிஷ்கள சுபாவமாயிருக்கப்பட்ட சிவன் பிரபஞ்ச சிருஷ்டியை நடத்துமுறைமை யெங்ஙனேயென்று வினவத் தனது சத்திகளிடமாகத் திருமேனிகொண்டு நடத்துவனென்னும் முறைமையை மேலருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

14. நீடுபரா சத்திநிகழ் இச்சா ஞானம்
நிறைகிரியை தரஅதனை நிமலன் மேவி
நாடரிய கருணைதிரு உருவ மாகி
நவின்றுபல கலைநாத விந்து வாதி
கூடுமொளி வளர்குடிலை மாயை மேவிக்
கொடுவினைகொள் தனுகரண புவன போகம்
பீடுபெற நிறுவிஅவை ஒடுக்கு மேனி
பிறங்கியநிட் களசகளப் பெற்றி யாமே. உ

முன்னருட் சத்தி மூவித மான
தன்மையில் நிட்கள சகள முரைத்தது.

(உரை) நீடு பராசத்தி - அந்த நிஷ்கள சுபாவமாயுள்ள சிவத்துடனே நிலைபெற்றுள்ள மேலான சத்தியானது அந்தச் சிவனுக்குத் திருமேனியாக; நிகழிச்சா ஞான நிறை கிரியைதர - விரிந்து தோன்றப்பட்ட இச்சாசத்தியென்றும் ஞானசத்தியென்றும் நிறைந்த கிரியாசத்தியென்றும் ஒன்றிலேயொன்றாக வுண்டாக்க; அதனை நிமலன் மேவி - அந்தச் சத்திகளை நிமலனாகிய சிவன்பொருந்தி; நாடரிய கருணைதிரு உருவமாகி - குறித்தற்கரிய காருண்ணியத்தினாலே யப்படி இச்சா ஞானக் கிரியா சொரூபனுமாய்; ஒளிவளர் குடிலை கூடு நாத விந்துவாதி பலகலை நவின்று - பிரகாசம் வளராநிற்கிற குடிலையாகிய சுத்தமாயையைப் பொருந்தி நாதவிந்து முதலான தத்துவங்

களையுந் தோற்றுவித்துப் பலகலையாகிய வேதாகமங்களையும் அருளிச்செய்து; மாயைமேவிக் கொடுவினைகொள் தனுகரணபுவனபோகம் பீடுபெறநிறுவி - அசுத்தமாயா காரணத்தையும் பொருந்திக் கொடிய வினைக்குக் கொள்கலமாக இருக்கிற சகலராயுள்ள ஆன்மாக்களுக்குத் தனுகரணபுவன போகங்களையும் பெருமைபெற நிறுத்தி; அவை யொடுக்கும் - இங்ஙனஞ் சொல்லப்பட்டவற்றையெல்லாந் தோற்றின முறைமையிலே யொடுக்குவிக்கும்; மேனி - திருமேனியானது; பிறங்கிய நிட்கள சகளப் பெற்றியாமே - விளங்கப்பட்ட நிஷ்களமென்றுஞ் சகளமென்றுஞ் சொல்லுமுறைமையினை யுடைத்து.

நீடு பராசத்தி எ - கு அந்தச் சிவத்துடனே நிலைபெற்றுள்ள சத்தியென்று பொருள்படுத்தினதற்கு வழியேதென்னில் அந்தப் பராசத்தியானது அந்தப் பரமசிவனைப்போலே தனக்கொரு போக்கு வரவின்றியே எப்பொழுதும் ஒரு தன்மையாய் நிற்கையாலே யப்படிச் சொன்னதென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "எத்திற நின்றா னீச னத்திற மவளு நிற்பள்" (2. 75) எ - து கண்டுகொள்க. ஒளிவளர் குடிலை என்றதைப் பிரகாசத்தினையுடைய மாமாயையென்றது ஏதென்னில் சிவன்கொள்ளப்பட்ட திருமேனியெல்லாம் அதனிடமாகக் கொள்ளுகையாலென அறிக. நிட்கள சகளப் பெற்றியாமே என்றதை இங்ஙனஞ் சொல்லப்பட்ட திருமேனி நிஷ்களமுமாஞ் சகளமுமா மென்றதேதென்னில் தோற்றுகிற திருமேனி சகளமா மென்றும் ஒடுக்குகிற திருமேனி நிஷ்களமாமென்றுஞ் சொன்னதென அறிக.

இதனாற் சொல்லியது சிவன் பிரபஞ்ச சிருஷ்டியாகச் சகளீகரிக்குமிடத்துத் தனது சத்தியே வடிவாகத் திருமேனி கொண்டு சுத்தமாயையைப் பொருந்தி யதிலுண்டான நாதவிந்து முதலான தத்துவங்களையுந் தோற்றுவித்துப் பல கலைஞானமாகிய வேதாகமங்களையும் அருளிச்செய்து அசுத்தமாயையிலுண்டான தனுகரணபுவன போகங்களையும் நடத்தி மீளவுமொடுக்குவனென்றும் இங்ஙனம் நடத்துகிற திருமேனி சகளமென்றும் ஒடுக்குகிற திருமேனி நிஷ்களமென்றும் வருமுறைமையும் அறிவித்தது. உ

அப்படி உம்முடைய சிவன் சகளீகரிக்குமிடத்து அவனைப் பிரமா சிருஷ்டிக்கிற தொழியத் தானே சகளீகரிப்பானென்ன

லாமோ என்ற பாஞ்சராத்திரியை நோக்கி யருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

15\. ஈங்கிதுஎன் றதுகடந்த இயல்பி னாலும்
ஈறுமுதல் நடுவொன்று மிலாமை யானும்
ஓங்கிவளர் ஞானமயன் ஆத லானும்
உண்மைபிறர்க் கறிவரிய ஒருமை யானும்
தாங்கரிய வெறுப்பினொடு விருப்பு மெல்லாம்
சார்வரிய தனிமுதல்வன் ஆத லானும்
நீங்கலரும் உயிர்க்குயிராய் நிற்ற லானும்
நிறுத்திடுவன் நினைந்தஉரு நிமலன் தானே. ௩

துடைப்பவன் உருவாய்த் தோன்றுவ தன்றிப்
படைக்க வரிதாம் பரிசினை யுரைத்தது.

(உரை) ஈங்கிது என்றது கடந்த இயல்பினானும் - இவ்விடத்திது என்று ஆன்மபோதத்தாற் குறிக்கப்பட்டதற்கு அப்பாற்பட்டிருக்கிற முறைமையினை யுடையவனாகையாலும்; முதல் நடு ஈறு ஒன்று மிலாமையானும் - தோன்றிநின்று அழியப்பட்ட முதலும் நடுவும் முடிவுமில்லாதவனாகையாலும்; ஓங்கிவளர் ஞானமய னதலானும் - மிக்கு வளராநின்ற அறிவே வடிவாக வுடையவனாகையாலும்; உண்மை பிறர்க்கு அறிவரிய வொருமையானும் - தன்னுண்மையைப் பிறரால் அறிதற்கரிய நிலைமையினை யுடையவனாகையாலும்; தாங்கரிய வெறுப்பினொடு விருப்புமெல்லாஞ் சார்வரிய தனிமுதல்வனுதலானும் - ஆன்மாக்களைப்போலப் பொறுத்தற்கரிய பிரியாப்பிரியங்களெல்லாம் பொருந்துதற்கரிய வொப்பில்லாத முதலியாதலானும்; நீங்கலரும் உயிர்க்குயிராய் நிற்றலானும் - தன்னைவிட்டுப் பிரிந்து தனித்தொருமுதலாய் நில்லாத சர்வான்மாக்களுக்கும் பிராணனாய் நிற்கையாலும்; நிறுத்திடுவன் நினைந்தஉரு நிமலன்தானே - இங்ஙனஞ் சொல்லிவந்த முறைமைகளை யுடையவனுதலாலே அவனுக்கு ஒருவர் ஒருவடிவு கொடுக்கவேண்டுவதில்லை, தனக்குத்தானே பொருந்தின வடிவை எடுத்துக்கொள்ளுவன்.

இந்தச் செய்யுளுக்கிட்ட தொந்தனையிலே, சிவனையும் பிரமா சிருஷ்டிப்பானென்று பாஞ்சராத்திரி சொன்னுனென்பதற்கு

பி - ம் சித்தியாரில் "உந்தியில் அயனை யீன்றங் கவனைக்கொண் டுலகுண் டாக்கி, அந்தநல் லுலகழிக்க அரனையு மாக்கு வித்துத், தந்திடுஞ் சகத்தினுக்குத் திதிகர்த்தா தானே யாகி, வந்திடுந் தோற்ற மீறு நிலைமையும் பண்ணு மாயன்" (பரபக்கம் 265) எ - து கண்டு கொள்க. அவனப்படிச் சொன்னதனை மறுத்ததற்கு பி - ம் சித்தி யாரில் "அயன்தனைப் பயந்தானென்றாய் அரியயன் சிரஞ்சேதிப்பப், பயந்திடான் தலைமால் தானும் படைத்திடான் சிரத்தைக் கிள்ளுஞ், சயந்தரு மரனைத் தந்தா னயனென்கை தப்பே யன்றோ, தியங்கிடா துணரா யெல்லாஞ் சிவன்செய லென்று தேர்ந்தே" (ஷை 275) எ - து கண்டுகொள்க. இனி ஈங்கிது என்றது கடந்த இயல் பினன் எ - கு ஆன்மபோதத்தாற் சுட்டி யறிதற்கரியவனென்று பொருள் கூறியதற்கு பி - ம் சித்தியாரில் "குறித்ததொன் றாக மாட்டாக் குறைவில னாத லானும்" (1. 45) எ - ம், "தன்னறி வதனாற் காணுந் தகைமைய னல்ல னீசன்" (6. 8) எ - ம் கண்டு கொள்க. ஈறுமுதல் நடுவொன்று மிலாமையான் எ - கு தோன்றி நின்று அழிதலில்லாதவனென்ற தேதென்னில் ஆன்மாக்களைப்போல யோனிசம்பந்தம் உள்ளவனல்ல என்றதென அறிக. ஓங்கிவளர் ஞானமயன் எ - கு மிக்கு வளராநின்ற அறிவென்றதேதென்னில் அண்டாண்ட பகிரண்டங்களுக்கெல்லாம் அப்பாலுமிப்பாலு முண் டாகிய இயல்புகளையெல்லாம் அறியப்பட்ட பேரறிவனுகையா லென அறிக. உண்மை பிறர்க்கறிவரிய வொருமையான் எ - கு தன்னுண்மை பிறருக்கறிய அரியவனென்றதேதென்னில் பிரமவிஷ் ணுக்கள் முதலாயுள்ளவர்களுக்குந் தன்னை யறிதற்கரியவ னென்ற தென அறிக. இதற்கு பி - ம் கோவைத்திருவாசகத்தில் "நடனும் வணங்குந் தொல்லோ னெல்லை நான்முகன் மாலறியாக், கடனு முருவத்தரன்" (77) எ - து கண்டுகொள்க. நிறுத்திடுவன் நினைந்த உரு நிமலன் தானே எ - கு தனக்குப் பொருந்தின வடிவு தானே யெடுத்துக்கொள்ளுவனென்ற தேதென்னில் பத்தியினால் வழிபடு வோர்க்கு அதற்கதற்குத்தக்க திருமேனிகொண்டு இரட்சிக்கையா லென அறிக. இதற்கு பி - ம் பூசாகரணத்தில் "எவ்வுல கத்து மூர்த்தி யேதுகொண் டவனியங்கும், அவ்வுல கத்துமேனி யதுகொண் டங் கமரு மீசன்" (13) எ - து கண்டுகொள்க. அதுவன்றியும் மந்தி

ரங்கள் இரத்தமாகவும் பதங்கள் தசையும் நரம்புமாகவும் வன்னங்கள் துவக்காகவும் புவனங்கள் உரோமமாகவும் தத்துவங்கள் அத்தி மச்சை சுக்கில முதலான தாதுக்களாகவும் கலைகள் ஐந்தாகிய சாந்தியாதீதகலைமுதல் திருமுடியாகவுந் திருமேனியாகக்கொண்ட அத்துவாமூர்த்தியென்னவு மாமென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "அத்துவா மூர்த்தி யாக அறைகுவ தென்னை யென்னில்... சேட்டித னுதலானும், வைத்ததா மத்துவாவும் வடிவென மறைகளெல்லாம்" (1. 56) எ - து கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது நின்மல சொரூபனாகிய சிவன் வாக்கு மனாதீத னாகையாலுந் தோன்றிநின் றழியாதவனாகையாலும் ஞான சொரூபனாகையாலுந் தனக்குப் பொருந்தின திருமேனி தானே யெடுத்துக்கொள்ளுவனென்னும் முறைமையை அறிவித்தது. ௩.

இங்ஙனங் கூறிவந்த செய்யுட்களில் 'பலகலை'யென்ற விருத்த முதலாகிய செய்யுள் மூன்றினுள்ளும் ஒரு கர்த்தாவை யுண்டென்று நாட்டி அவன் நிஷ்கள சொரூபியா யிருப்பனென்றும், அவன் பிரபஞ்சத்தை நடத்துவது பொருட்டாகத் தனது சத்தியிடமாகச் சகளீகரித்து நடத்துவனென்றும், அப்படியவன் சகளீகரிக்குமிடத்துத் தனக்குப் பொருந்தின திருமேனி தானேயெடுத்துக்கொள்ளுவனென்றுஞ் சொல்லுகிறதென்ன, அப்படி யொருகர்த்தா இல்லையென்றும் இந்தப் பிரபஞ்சமும் ஒரு காலத்தினும் அழியாமல் நித்தமாயிருக்குமென்றுஞ் சொல்லுகிற உலோகாயதனை நோக்கி இந்தப் பிரபஞ்சம் அநித்தியமென்றும் இந்தப் பிரபஞ்சத்தைத் தோற்றுவித்து நடத்தி யொடுக்குகைக்கொரு கர்த்தாவுண்டென்றும் மேல் மறுத்தருளிச் செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

16. உலகமெலாம் ஒருவனோ டொருத்தி ஒன்றென்(று)
    உளதாகி நின்றளவில் ஒடுங்கும் பின்னும்
மலமதனால் உளதாகும் உருவ மாறி
    வருவதுபோ வதுசெல்வ தாத லானும்
அலைவில்அசே தனமாயை ஆத லானும்
    அணுக்களொரு அடையும்அறி விலாமை யானும்
நிலவுதொழில் மருவிஉரு நிற்ற லானும்
    நின்றவையும் அளித்திடுவன் நிமலன் தானே. ௧

ஒருவ னொருத்தி யொன்றென் றுணர்வரும்
உருவம் அவனால் வந்த தென்றது.

(உரை) உலகமெலாம் ஒருவனோ டொருத்தி யொன்றென் றுளதாகி நின்றளவி லொடுங்கும் - நீ நித்தியமென்ற பிரபஞ்ச மனைத்தும் அவனென்றும் அவளென்றும் அதுவென்றுந் தோன்றி நின்று எல்லையிலே யழியாநிற்குமாகையாலே இந்தப் பிரபஞ்சத் தைச் சிருஷ்டிக்கவுந் திதிக்கவுஞ் சங்கரிக்கவுமொரு கர்த்தா வேண்டு மென்றறிவாயாக; அப்படி யும்முடைய கர்த்தாவாலே சங்காரப்பட் டொடுங்கின பிரபஞ்சம் மீளவுந் தோன்றுவா னேனென்னில்; பின்னும் மலமதனா லுளதாகும் - ஆன்மாக்களுக்கு ஆணவமலபாகம் வருகைப் பொருட்டாக மீளவுந் தோன்றுகிற்கும்; அஃதாவது இந்தப் பிரபஞ்சமென்றது ஆன்மாக்களும் பாசங்களுங்கூடியே பிர பஞ்சமாகையால், அவையிற்றுள் ஆன்மாக்கள் அநாதியே மலசகச ராகையாலே யந்த மலபாகம் வந்தே முத்தியைப் பெறவேண்டுகை யால் அந்த மலபாகம் வருமிடத்து மாயாசரீரங்களை யெடுத்துக் கன்மங்களைப் புசித்தே மலபாகம் வரவேண்டுகையால், அந்த முத்தி யைப் பெறுமளவுஞ் சங்காரகாலம் மாயாகாரணத்திலே யொடுங்கி யும் சிருஷ்டிகாலம் அந்தக் காரணமாயையினின்றுந் தோன்றப் பட்ட காரிய மாயையாகிய கலையாதி தத்துவங்களோடும் ஒக்கத் தோன்றி சீவித்து வருகையாலே யப்படிச் சொன்னதென அறிக; அப்படி யான்மாவென்பதும் ஒன்றுண்டாய் அதனை மறைக்கப்பட்ட ஆணவமலமென்பதும் ஒன்றுண்டாய் அந்த மலபாகம் வருகைப் பொருட்டாக ஒடுங்கின பிரபஞ்சம் மீளவுந் தோன்றுமேயாகில், அதுதானே யொடுங்கியுந் தோன்றியும் வாராதோ அதற்குக் கர்த்தா என்றொருவன் வேண்டுமென்றதேதென்னில்; உருவமாறி வரு வதுபோவது செல்வதாதலானும் - ஆன்மாக்கள் கன்மத்துக்கீடாக அச்சுமாறித் தேகத்தை வந்தெடுத்தும் பிராரத்தந் தொலைந்தவாறே அந்தத் தேகத்தை விட்டுப்போயும் புண்ணிய பாவங்களுக்கீடாகச் சுவர்க்க நரகங்களிலே சென்றநுபவிக்கையினாலும்; அன்றியும்; அலைவிலசேதன மாயையாதலானும் - இந்த மாயாரூபங்கள் சடமான படியாலே இவையிற்றுக் கியக்கமுமறிவு மில்லாதபடியாலும்; அன்

றியும்; அணுக்கள் உருவடையும் அறிவிலாமையானும் - ஆன்மாக்கள் கன்மத்துக்கீடாக ஒவ்வொரு சரீரங்களையெடுக்குமிடத்து அந்தச் சரீரங்களிலேசென்று பொருந்துகைக்குத் தங்களுக்கென்ன வோரறிவில்லாதபடியாலும்; அன்றியும்; நிலவுதொழில் மருவி உரு நிற்றலானும் - ஆன்மாக்கள் கன்மத்துக்கீடாக அப்படி யெடுக்கப்பட்ட சரீரங்களோடுங் கூடிநின்று பொருந்தப்பட்ட தொழில்களிலே யாதாமொரு தொழில்களைச் செய்துநிற்கையாலும், இவையெல்லாந் தாமாகக் காரியப்படமாட்டாததுகொண்டே; நின்று எவையும் அளித்திடுவன் நிமலன் தானே - தனக்கொரு போக்குவரவின்றியே நின்று எல்லாவற்றையுஞ் செய்வித்து இரக்ஷித்தருளுவன் நின்மலனாகிய சிவன் தானே.

இந்தச் செய்யுளுக்கிட்ட தொந்தனையிலே, உலகாயதன் கர்த்தாவில்லையென்றானென்றும் இந்தப் பிரபஞ்சம் ஒருகாலத்தினும் அழியாமல் நித்தியமாய் நிற்குமென்றானென்றுஞ் சொன்னதனை மறுத்து உலகமெலா மொருவனோ டொருத்தி யொன்றென் றுளதாகி நின்றளவி லொடுங்கும் எ - கு பொருள்கூறிய விடத்து இந்தப் பிரபஞ்சம் அவன் அவள் அதுவாய் நின்று காரியப்படுமிடத்துத் தோன்றி நின்றழிகையாலே இவையிற்றைக் காரியப்படுத்திச் சிருஷ்டித்துந் திதித்துஞ் சங்கரித்தும் வருகைக்கொரு கர்த்தாவேணுமென்றவனை மறுத்ததற்கு பி - ம் சித்தியாரில் உலகாயதன் மறுப்பாகிய செய்யுளில் "பூதமானவை நித்த மென்று புகன்ற தென்னை......மாருதச் செய்கையே" (பரபக்கம் - 37) எ - ம், "பூதமானவை காரியங்கள் ...குலால னல்வரு செய்கை யென்று குறிப்பரே" (ஷை 56) எ - ம் வருமது கண்டுகொள்க. அன்றியும், சுபக்ஷத்திலும் உலகாயதன் கருத்தை மறுத்த விருத்தத்தில் "ஒருவனோ டொருத்தி யொன்றென் றுரைத்திடும் உலகமெல்லாம், வருமுறை வந்துநின்று போவது மாதலாலே, தருபவ னொருவன் வேண்டுந் தான்முத லீறுமாகி, மருவிடுமநாதி முத்தச் சித்துரு மன்னிநின்றே" (1. 1) எ - து கர்த்தா பிரபஞ்சத்தை நடத்துவனென்பதற்குக் கண்டுகொள்க. இனி பிரபஞ்சந் தோன்றியும் அழிந்தும் வருமென்றவனை மறுத்ததற்கு பி - ம் சித்தியாரில் "உதிப்பது மீறுமுண்டென் றுரைப்பதிங் கென்னை

முன்னோர்,மதித்துல கநாதியாக மன்னிய தென்பரென்னில், இதற்கு யான் அநுமானுதி யெடேனிப் பூதாதியெல்லாம், விதிப்படி தோன்றி மாயக் காணலான் மேதினிக்கே" (1. 2) எ - து கண்டுகொள்க. இனி இந்தப் பிரபஞ்சமாவது ஆன்மாக்களும் பாசங்களுங் கூடியே பிரபஞ்சமென்று பேர் பெற்று நின்றதென்று விதப்பாகப் பொருள் கூறியதற்கு பி - ம் தத்துவ விளக்கத்தில் "கருமலி பாச மசேத னங் கட்டுண்பர் சேதனரென், றிருமையில் வைய மடங்குமென் றெண்ணுக" (9) எ - து கண்டுகொள்க. இனி யப்படி யொடுங்கின பிரபஞ்சம் மீளத்தோன்றுவானேன் என்று உலகாயதன் வினுயதற் குத்தரமாகப் பின்னும் மலமதனுலுளதாகும் எ-கு ஆன்மாக்கள் அநா தியே மலசகசராகையாலே யந்த மலபாகம் வருகைப்பொருட்டா கப் பிரபஞ்சம் மீளவுந்தோன்றுமென்று விதப்பாகப் பொருள் கூறிய தற்கு பி - ம் சிவஞானபோதத்தில் "அவனவ ளதுவெனு மவைமூ வினைமைற், றோற்றிய திதியே யொடுங்கி மலத்துளதாம்" (சூ. 1) எ - ம், "இலயித்த தன்னிலி லயித்ததா மலத்தால்" (சூ. 1. வெ. 2) எ - ம் வருமது கண்டுகொள்க. அன்றியும், ஆணவமலபாகம் வாராத ஆன்மாக்கள் மாயாரூபங்க ளொடுங்குங்காலங் காரணமாயை யிலே யொக்கவொடுங்கியும், தோன்றுங்காலம் அந்த மலபாகம் வரு கைப் பொருட்டாக மீளவும் அந்தக் காரணமாயையினின்றுங் காரிய மாயையோடே யொக்கத் தோன்றுவார்களென்றும் விதப்பாகப் பொருள்படுத்தினதற்கு பி - ம் சித்தியாரில் "உயிரவையொடுங் கிப்பின்னு முதிப்பதெ னரன்பா லென்னிற், செயிருறு மலத்தினுகுஞ் சிதைந்ததே தென்னிற் சித்தத், தயர்வொழி காரியங்க ளழியுங்கா ரணங்கிடக்கும், பயில்தரு காரியம்பின் பண்டுபோற் பண்ணுமீசன்" (1. 32) எ - து கண்டுகொள்க.இந்நூலினும் "மற்றத்தோற்றமலபாகம் வர"என்பதும் இப்பொருள்பற்றியென அறிக. இங்ஙனம் ஆன்மாவுக் குத் தோற்றஞ் சொல்லவே யுடம்போடுங்கூடித் தோன்றுகையால் பிரபஞ்சத்தோற்றஞ் சொல்லுகை கருத்தென அறிக. இனியந்த ஆணவமலபாகம் வருமிடத்து மாயாரூபங்களை யெடுத்தே மலபாகம் வரவேணுமென்பதற்கு பி - ம் சித்தியாரில் "எழுமுடல் கரணமாதி யிவைமல மலமலத்தாற், கழுவுவ னென்றுசொன்ன காரண மென்னை யென்னிற், செழுநவை யறுவை சாணி யுவர்செறி வித்தழுக்கை,

முழுவதும் கழிப்பன் மாயை கொடுமல மொழிப்பன் முன்னோன் " (2. 52) எ - து கண்டுகொள்க. இனி யப்படிப் பிரபஞ்சந் தோன்று மிடத்துத் தானே தோன்றுதோ கர்த்தாவும் வேணுமோ என்று உலகாயதன் வினயதற்குத்தரமாக உருவமாறி யென்றபதந்தொட்ங்கி மற்றுள்ள பதங்களுக்கெல்லாம் பொருள் கூறுமிடத்து மாயாகன்மங் கள் சடமானபடியாலும் ஆன்மாக்கள் தங்களுக்கென்னவோ ரறிவில் லாதபடியாலும் அவையிற்றைக்கூட்டிக் காரியப்படுத்துவது சிவனே யென்றும், நின்றெவையுமளித்திடுவன் நிமலன் தானே எ - கு சர்வ முஞ் சிவனேசெய்வித்து இரக்ஷித்தருளுவனென்றும் பொருள்கூறிய தற்கு பி - ம் சித்தியாரில் " உலகுடல் கரணங்கால முறுபல நியதி செய்தி, பலவினை கொண்டுகன்மம் பண்ணுவ தண்பதானல், நில விடா வினைதாம்சென்று நினைந்துயிர் நிறுத்திக்கொள்ளா, அல கிலா வறிவனுணை யணைத்திடு மருளினலே " (2. 22) எ - து கண்டு கொள்க.

ஆக இங்ஙனங் கூறிவந்த பதங்களில் உருவமாறி வருவது போவது செல்வது எ - கு பொருள்கூறுமிடத்து வருவது சிருஷ்டி யென்றும் போவது சங்காரமென்றுஞ் செல்வது திதியென்றும் பொருளுரைப்பாருமுளர். அது பொருளல்லவென அறிக. அதுவே னென்னில், இச்செய்யுளின் முதற்பதத்தில் உளதாகி நின்றளவி லொடுங்கும் எ - கு தோன்றிநின்றழியுமென்று சிருஷ்டியுந் திதி யுஞ் சங்காரமுமாகப் பொருள்கூறி இதற்குமப்படிப் பொருளுரைக் கில் ஒரு செய்யுளிலே இரட்டித்த பொருள்கூறுகை வழக்கல்லாத படியால் அப்படிச் சொன்னதென அறிக. ஆகையால் செல்வதென் றது ஆன்மாக்கள் கன்மத்துக்கீடாகச் சுவர்க்கநரகங்களிலே செல் வார்களென்பதே பொருளென அறிக. அன்றியும், அணுக்களுரு வடையும் அறிவிலாமையானும் எ - கு பூத அணுக்கள் நாலும் ஆன்ம அணுவொன்றும் ஆக ஐந்தணுவுந் தம்மிற்கூடி யுருப்படுமென்று பொருளுரைப்பாருமுளர். அப்படியானலும் அணுக்கள் உருவடையு மென்ற சொல்லுக்கு அந்த அணுக்களென்றது வேறே யோருடம் பிலே சென்று பொருந்துமென்று பொருளாமொழிய அவைதம் மிற்கூடி யுடம்பாமென்று பொருளாகாதபடியால், ஆன்மாக்களாகிய

அணுக்கள் வேறே யோருடம்பிலே சென்று பொருந்துமென்ப தொழிய ஆன்ம அணுவும் பூத அணு நாலுந் தம்மிற்பொருந்திக் காரி யப்படுமென்பது இந்தப்பதத்துக் காகாதென்றதென அறிக. அணுக்க ளென்பது ஆன்மாக்களென்பதே இந்தப் பதத்துக்குச் சொல்லப்படு மென்பதற்கு இந்நூலிற் பின்சென்ற நூலாகிய திருநெறிவிளக்கத்தி னும் இந்த விருத்தத்துக் கெதிரடை விருத்தமாகிய "வையமெலாம் ஆண்பெணலி யென்னத் தோன்றி வல்வினையா லுழன்றொருங்கி மலத்தாற் பின்னும், மெய்யணையும் வெகுவிதரூ பங்கள் மாறி விடுவதுபற் றுவதாகி விரித லானும், பொய்யனைய மாயைசட மாத லானும் போதமுரு வறிந்துபொருந் தாமை யானுஞ், செய்வினை செய் துயிருருவி னிற்றலானுஞ் சகமுழுது நின்றுசிவன் செய்வன் காணே" என்னுமிதில் போதமுருவறிந்து பொருந்தாமையானும் என்ற பதத்தை அணுக்களுருவடையும் அறிவிலாமையானும் என்ற பதத்துக்குக் கண்டுகொள்க. இந்தத் திருநெறிவிளக்கம் பின்னூலா யிருக்க இதனை எதுக்காட்டியதேதென்னில் இந்தச் சிவப்பிரகாசத் துக்குப் பின்சென்ற நூலாகையால் சத்தம் வேறுபட்டும் அத்த மொன்றுபட்டும் வருகையாலே அதுகாட்டவேண்டியதென அறிக. இந்த நூலில் இவை வந்தவிடமெல்லாம் இதுவே கருத்தென்பது கண்டுகொள்க. அன்றியும், அணுக்களென்பதை ஆன்மாக்களென்று தனித்துஞ் சொல்லப்படுமென்றற்கு பி - ம் தத்துவ விளக்கத்தில் "அமையா நிலைமை யணுக்களோர் மூன்றுவகை யவைதாங், கமையா நிறைந்த விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர்" (12) எ-ம், "மூவகை யணுக்களுக்கு முறைமையால் விந்து ஞானமேவின" (1. 26) என்று சித்தியாரினுங் கண்டுகொள்க. ஆகையால் இந்தப் பதத்துக்கு அணுக்கள் உருவடையுமென்றது ஆன்மாக்களென்பதே துணிவென அறிக. அன்றியும், நிலவுதொழில் மருவியுரு நிற்றலானும் எ - கு அறுவகைத் தொழிலிலே பொருந்தப்பட்டதொரு தொழிலைச் செய்து நிற்றலானுமென்று பொருளுரைப்பாருமுளர். அப்படி அறுவகைத்தொழில் மானுடர்க்கொழிய மற்றுள்ள ஆன்மாக்களுக் குப்படாதாகையால் இவ்விடத்துச் சர்வான்மாக்களையும் நோக்கிப் பொதுப்படக் கூறுகையாலே நிலவுதொழிலென்பது பொருந்தப்

பட்ட தொழிலென்று பொருள்படுத்துகையே வழக்கென அறிக. அறுவகைத் தொழிலென்றால், மானுடர்க்கென்றதேதென்னில், அறு வகையாவது : உழவு தொழில் வரைவு வாணிபம் வித்தை சிற்பம் ஆகையால் அப்படிச் சொன்னதென அறிக.

என்றிங்ஙனங் கூறப்பட்ட செய்யுளில் உலகமெலாம் ஒரு வனோ டொருத்தி யொன்றென் றுளதாகி நின்றளவில் ஒடுங்கு மென்ற பதமொன்றையும் உலகாயதனை மறுத்ததாக்கி மற்றப் பதம் ஐந்தும் மற்றுள்ள புறச்சமயிகளை மறுத்ததாகப் பொருளுரைப் பாருமுளர். அது பொருளல்லவென அறிக. அது ஏனென் னில், இச்செய்யுள் பதந்தோறும் ஒருவன் கருத்தைப்பற்றித் தொடர்ந்து சொல்லுகையாலும் இச்செய்யுளுக்குக் கருத்தாகச் சேர்த்த குறட்பாவும் உலகாயதனொருத்தன் கருத்தைப்பற்றி நிற்கை யாலும் அப்படிச் சொன்னதென அறிக. அப்படி மற்றுள்ள சமயிகளை மறுத்துக் கூறப்பட்டதானால் உலகாயதன் ஒருவனை யும் நோக்கிச் சிவனையும் ஆன்மாவையும் ஆணவ மலத்தையுங் கன்மமலத்தையும் கூறவேண்டுங் காரணமேதென்னில் அவை யிற்றை அவன் இல்லையென்று சொல்லுகையால் அப்படிச் சொன்னதென அறிக. அவையிற்றை யவனில்லையென்று சொன்ன தற்கு பி - ம் சித்தியாரில் "இப்படி யன்றிக் கன்ம முயிரிறை வேறுண் டென்று, செப்பிடு மவர்க்கு மண்ணோர் செய்திடுங் குற்ற மென்னோ, ஒப்பிலா மலடி பெற்ற மகனொரு முயற்கொம் பேறி, தப்பிலா காயப்பூவைப் பறித்தமை சாற்றி னோரே" (பரபக்கம், 17) எ - து அவன் மதத்திலே கண்டுகொள்க. இனி அவையெல்லா முண்டென்றுநாட்டி யவனை மறுத்துக்கூறினதற்கு பி - ம் சித்தியா ரில் "அநாதியேலமை யின்றெனின்மல மாயைகன்ம மணுச்சிவன், அநாதிகன்ம மணுக்கள்செய்ய அறிந்துகன்ம முடற்செயா, அநாதி காரிய மாமுடற்க ளசேதனம் அணையாவறிந், தநாதியாதி யமைக்க வேண்டும் அமைப்பினோடும் அநாதியே" (ஷை 50) எ - து அவன் மறுப்பிலே கண்டுகொள்க. ஆகையால் இச்செய்யுள் இங்ஙனங் கூறிவந்த உவமானங்களினாலும் பிரமாணங்களினாலும் உலகாயதனை நோக்கி மறுத்ததென்பதை அநுபவத்தாற் கண்டுகொள்க.

இதனுற் சொல்லியது இதற்கு முன்னர்ச் செய்யுட்களிலே யுண்டென்று நாட்டப்பட்ட கர்த்தாவை இல்லையென்றும் இந்தப் பிரபஞ்சம் நித்தியமென்றுங் கூறிய உலகாயதனை நோக்கி மறுத்து இந்தப் பிரபஞ்சம் அவன் அவள் அதுவாகத் தோன்றிநின்றழிகை யாலே இவையிற்றைக் காரியப்படுத்துகைக்கு ஒரு கர்த்தா உண் டென்னும் முறைமையை யறிவித்தது. ௪

அப்படி யிங்ஙனங் கூறப்பட்ட முன்னர்ச்செய்யுள் முடிவிலே 'நின்றெவையு மளித்திடுவன் நிமலன்ருனே' என்றதற்குச் சர்வமுஞ் சிவனே செய்விப்பனென்று நீர் சிவனொருவன்மேலேயும் வைத்துச் சொல்லுகிறதென்ன, இந்தப் பிரபஞ்சத்தைப் பிரமா சிருஷ்டிப்ப னென்றும் விஷ்ணு இரக்ஷிப்பனென்றும் உருத்திரன் சங்கரிப்பனென் றும் மூன்று தொழிலுக்கு மூவரையு மென்றல்லோ சொல்லுவது என்கிற பாஞ்சராத்திரியை நோக்கி மூன்று தொழிலுக்குஞ் சிவனே கர்த்தாவென்னும் முறைமையை மேலருளிச்செய்வான் எடுத்துக் கொண்டருளியது.

17. கந்தமலர் அயன்படைக்கும் உலக மெல்லாம்
 கண்ணன்அளித் திடும்அவைஎம் கடவுள் தானே
அந்தமுற அழித்திடுவன் ஆத லாலே
 அயன்அரியும் அவனதுயர் அதிகா ரத்து
வந்தமுறை தன்தொழிலே மன்னுவிப்பன் எல்லாம்
 வருவிப்பன் விகாரங்கள் மருவான் வானின்
முந்திரவி எதிர்முளரி அலர்வுறமொன் றலர்வான்
 முகையாமொன் றென்றலரு முறையி ஞமே. ரு

படைப்பு நிலையவன் படைப்பா தலினல்
துடைப்பவன் முதலெனத் தோன்ற வுரைத்தது.

(உரை) கந்தமலர் அயன்படைக்கும் உலகமெல்லாங் கண்ண னளித்திடும் - மணம் பொருந்தின தாமரை மலரிலே யிருக்கப்பட்ட பிரமா உலகங்க ளனைத்தையுஞ் சிருஷ்டிப்பன், அந்த உலகங்களை விஷ்ணு இரக்ஷியா நிற்பன்; அவை எம் கடவுள் தானே யந்தமுற அழித்திடுவன்-அவர்களால் படைத்தளிக்கப்பட்ட உலகங்களைச் சேர

னம்முடைய கர்த்தாவாகிய உருத்திரன் முடிந்துபோம்படி சங்கரிப்பன்; ஆதலாலே - அந்தத் தொழில்களைச் சிவனப்படிச் சங்கரிக்கையாலே; அயனரியு மவனதுய ரதிகாரத்து வந்தமுறை - அந்தப் பிரம விஷ்ணுக்களும் அந்தச் சிவனுடைய மிக்க ஆக்கினை வழியிலே வருகிற முறைமையினையுடைய அதிகார கர்த்தாக்களாயிருக்கும்; அப்படியானல் அந்தத் தொழில்களும் பிரமவிஷ்ணுக்களுக்கும் அநாதியேயுடையதோ உம்முடைய கர்த்தாவாகிய சிவன்கொடுத்ததோ என்னில்; தன்தொழிலே மன்னுவிப்பன் - எம்முடைய சிவன் தனக்குண்டான தொழில்களிலே யந்தப் பிரமவிஷ்ணுக்களையும் நிறுத்துவன்; அவை யப்படி உம்முடைய சிவனுடைய தொழிலேயானல் அவையிற்றை யவனழிப்பானேனென்னில்; எல்லாம் வருவிப்பன் - அப்படி யவனழித்தாலுந் தன்னுடைய கிருத்தியங்களை நடத்தவேண்டுங் காலத்துக் கெல்லாவற்றையும் மீளவுமுண்டாக்கியுங் கொள்ளுவன்; அப்படியானல், ஒருத்தன் ஒரு தொழில் செய்ய மாட்டுகிறுனில்லை, பலதொழிலு மொருவன் செய்வனுகில் உம்முடைய சிவன் விகாரப்படாரேவென்னில்; விகாரங்கள் மருவான் - அப்படி யெம்முடைய சிவன் பல தொழிலும் நடத்திறுலும் அவனுக்கு விகாரங்களுண்டாகாது; அது என்போலவென்னில்; வானின் முந்திரவி யெதிர்முளரி யலர்வுறுமொன் றலர்வான் முகையாமொன் ருென்றலரு முறையினுமே-ஆகாசத்திலே தோன்றிச்செல்லும் ஆதித்தன் சந்நிதியில் தாமரையானது முதிர்ச்சிக் குறையொப்புக் கீடாகக் காரியப்படுமிடத்து, ஒன்றலராநின்றது ஒன்றலருகைக்குப் பக்குவமாகாநின்றது ஒன்றுலராநின்றது;இப்படித் தாமரை மூன்று தொழிற்பட்டு நிற்கச்செய்தே ஆதித்தனுக்கு விகாரமில்லாதாற்போல.

இந்தச் செய்யுளுக்கிட்ட தொந்தனையிலே, சிருஷ்டிக்குந் திதிக்குஞ் சங்காரத்துக்கும் பிரமா விஷ்ணு உருத்திரனையுஞ் சொல்லியிருக்க உம்முடைய சிவனொருவனையுங் கர்த்தா என்பானேனென்று பாஞ்சராத்திரி வினவினன் என்பதற்கு பி - ம் சித்தியாரில் "உரைத்தவித் தொழில்கள் மூன்று மூவருக் குலக மோத, வரைத்தொருவனுக்கே யாக்கி வைத்ததிங் கென்னை யென்னில், விரைக்கமலத் தோன் மாலும் ஏவலான் மேவி னோர்கள், புரைத்தகி கார சத்தி

*புண்ணிய நண்ணை லாலே" (1. 34) என்று அவன் வினையதற் குத் தரமாகக்கூறியது கண்டுகொள்க. இனி, கந்தமலரயன் எ - கு பூவுக்குப் பெயர் கூறாமல் மலரென்று பொதுவாகச் சொல்லியிருக்கத் தாமரைமலரென்று பொருள்கூறியதேதென்னில் பிரமாவுக்கிருப்பிடந் தாமரைமலரென்று நூல்களிற் சொல்லிவருகையாலே ஆசரணைபற்றி யழைத்துப் பொருள்கூறியதென அறிக. அப்படி வருமதற்கு பி - ம் "அலரோன் நெடுமால் அமரர்கோன்" எ - ம், "பூவார் திசைமுகன்" எ - ம் முளரியன் எ - ம் தாமரையோன் எ - ம் வருமேதுக்களைக் கண்டுகொள்க. இனி யவையெங் கடவுள் தானே அந்தமுற அழித்திடுவன் எ - கு அவையென்ற சுட்டுகொண்டே அந்தத் தொழில்களன்றியே அந்தத் தொழில்களுக்குக் கர்த்தாவாயுள்ள பிரம விஷ்ணுக்களையும் அழிப்பனென்னவு மாமென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "இறுதியாங் காலந் தன்னி லொருவனே யிருவ ருந்தம் உறுதியாய் நின்ற ரென்னி லிறுதிதா னுண்டா காதாம், அறுதியி லரனே யெல்லா மழித்தலா லவனே லின்னும், பெறுதுநா மாக்க நோக்கம் பேரதி காரணத் தாலே" (1. 35) எ - ம், "அழிப்பரி யேவ லென்ற யரிதனை யழிக்கு மன்றங், கழிப்பது தவிர்க்க மாட்டா னங்கமு மழித்தே பூண்டான், அழிப்பரி யேவ லென்றங் கறைந்தது மழிந்த தன்றே, அழித்திடு மரனே யாக்க நோக்கமு மாக்கு வானே" (பரபக்கம்-278) எ - ம் வருமேதுக்களைக் கண்டுகொள்க. இனி அயனரியு மவனதுய ரதிகாரத்துவந்த முறை எ - ம் எல்லாம் வருவிப்பன் எ - ம் வருகையாலே அந்தந்தத் தொழில்களையன்றியே யந்தந்தத் தொழில்களுக்குக் கர்த்தாவாயுள்ள பிரம விஷ்ணுக்களையுஞ் சிவனே யுண்டாக்குவனென்னவுமாமென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "சீவன்கள் சனனம்போலச் சிலர்வயிற் றுதித்த மாலைத், தேவென்றே வையங் காக்கச் சுவேச்சையாற் சனித்தா னென்பீர், பூவன்பின் படைக்க மாட்டா தரனடி போற்ற வேதக், கோவந்து முகத்திற் றேன்றிச் சிருட்டியைக் கொடுத்தல் கூறும்" (ஷை 276) எ - து கண்டுகொள்க. இனி யெங்கடவுள் தானென்றதுகொண்டே சிவனே கர்த்தா என்றதென அறிக. இதற்கு பி-ம் சித்தியாரில் "நாரணன் அயனை யீன்றும் அயனும் நார*

ணனை யீன்றும், காரண மொருவ ருக்கங் கொருவர்தா மிருவ ருக்கும், வாரண முரித்த வள்ளல் காரண மென்று மன்ற, ஆரண முறைக்கும் பக்கத் தவர்களு மடைந்தா ரன்றே" (செ. 277) எ - து கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது பிரம விஷ்ணுக்களுடைய சிருஷ்டியை யுந் திதியையுஞ் சிவனே யழித்துப்போடுவனென்றும் மீளவு முண்டாமிடத்துச் சிவனே யுண்டாக்குவனென்றும் வருமுறை மையை யறிவித்தது. ரு

அப்படி இந்தத் தொழில்களை உம்முடைய கர்த்தா என்ன பய னைக் கருதிச் செய்கின்றனென்ற புத்தனை நோக்கி மேலருளிச் செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

18. ஏற்றஇவை அரனருளின் திருவிளையாட் டாக [த்தே
இயம்புவர்கள் அணுக்கள்இடர்க் கடல்நின்றும் எடு
ஊற்றமிக அருள்புரிதல் ஏது வாக
உரைசெய்வர் ஒடுக்கம்இளைப் பொழித்தல் மற்றைத்
தோற்றமல பாகம்வரக் காத்தல் போகம்
துய்ப்பித்தல் திரோதாயி நிறுத்த லாகும்
போற்றலரும் அருள்அருளே யன்றி மற்றுப்
புகன்றவையும் அருளொழியப் புகலொ ணாதே. சு

மன்னுயிர்க் கிரங்கி வருத்தவைந் தொழிலும்
முன்னவ னருளெனு முறைமை மொழிந்தது.

(உரை) ஏற்றவிவை யரனருளின் திருவிளையாட்டாக இயம்பு வர்கள் - இங்ஙனம் பொருந்தப்பட்ட தொழில்கள் தம்பிரானார் அநுக் கிரகத்தாலே செய்யுந் திருவிளையாட் டென்று பெரியோர்கள் சொல்லுவார்கள்; அப்படியானால் உம்முடைய கர்த்தாவானவன் பாலரைப்போலப் பயனற்ற காரியஞ் செய்வானோ என்னில், அப்படியல்ல, எம்முடைய கர்த்தாவானவன் அந்தத் தொழில் களைப் பாராமலெளிதாகச் செய்கையினாலே விளையாட்டென்ற தாம்; அவன் அவையிற்றை ஏது காரியமாகச் செய்கிறானென் னில்; அணுக்களிடர்க் கடல்நின்றும் எடுத்தே ஊற்ற மிக

அருள் புரித லேதுவாக உரைசெய்வர் - ஆன்மாக்களைத் துக்கசாகர மாகிய ஜநநக் கடலிலே நின்றுங் கரையேற்றித் தனது நிலைபேறு யுள்ள திருவடியிலே கூட்டிக்கொள்ளுகை காரணமாக என்று சொல்லுவார்கள், அறிவாலுயர்ந்த பெரியோர்கள்; அப்படி உம் முடைய கர்த்தா அனுக்கிரகஞ் செய்கிறவனேயானால் சங்கரிப்பா னென்பான் ஏனென்னில்; ஒடுக்க மிளைப்பொழித்தல் - அப்படிச் சங்கரிக்கிறது கன்மத்தினால் அலைப்புண்ணும் ஆன்மாக்களை யிளைப் பாற்றுகை; அப்படி யிளைப்பாற்றிக்கிடவாமல் மீளவுந் தோற்றுவிப் பான் ஏனென்னில்; மற்றைத் தோற்றம் மலபாகம்வர - மீளவுஞ் சிருஷ்டிக்கிறது மலநீங்காதபடியாலே அந்த மலநீங்குகைப் பொருட் டாகத் தனுகரண புவனபோகங்களோடுங் கூட்டுகிறதாயிருக்கும்; அப்படிச் சிருஷ்டித்தபோதே அந்தமலத்தைப் பாகம் வருத்தித் தன் னிடத்திலே கூட்டிக்கொள்ளாமல் நெடுங்காலந் திதியென்கிற தொழிலிலே நிறுத்துவானேனென்னில்; காத்தல் போகந் துய்ப்பித் தல் - அப்படி நெடுங்காலந் திதியென்கிற தொழிலிலே நிறுத்தினது ஆன்மாக்களுக்குக் கன்மங்கள் மிகுதியாயிருக்கையினாலே அந்தக் கன்மங்களைப் புசிப்பித்து இயல்பிலே மலபாகம் வருத்துகிறதா யிருக் கும்; அப்படிச் செய்கிற கர்த்தா மறைப்பானேனென்னில்; திரோ தாயி நிறுத்தலாகும் - திரோதமாகிய மறைப்பாவது அந்தப் போகங் களைப் புசிப்பித்துக் கன்மங்களைத் தொலைப்பிக்கத்தக்கதாக அளவு களிலே நிறுத்தினதாயிருக்கும்; அப்படியானால் அநுக்கிரகமேதென் னில்; போற்றலரும் அருளருளே - சொல்லுதற்கரிய அநுக்கிரகமா வது ஆன்மாக்களைத் தனது திருவடியிலே கூட்டிக்கொள்ளுவது தான் அநுக்கிரகமாயிருக்கும்; இதுவொழிந்து முன்சொல்லப்பட்ட நாலுதொழிலுமேதென்னில்; அன்றி மற்றுப் புகன்றவையும் அரு ளொழியப் புகலொணாதே-இவ்வநுக்கிரகமன்றி முன்சொல்லப்பட்ட சிருஷ்டி திதி சங்காரந் திரோபாவமென்னப்பட்ட நாலுந் தனது திருவடியிலே கூட்டிக்கொள்ளுகை நிமித்தமாக மலபாகம் வருத்து கிற அநுக்கிரகமொழிய மற்றொன்றாகச் சொல்லவொண்ணாது.

அரனருளின் திருவிளையாட்டு என்றதை உம்முடைய கர்த்தா பாலரைப்போலப் பயனற்ற காரியஞ்செய்வானோ என்று புத்தன்

சொன்னுனென்றதற்கு பி - ம் சித்தியாரில் "பெறுவதிங் கென்ப டைத்துப் பெற்றது விளையாட் டென்னிற், சிறுமழ விறைய தாகுஞ் செய்திடுங் கன்மத் தென்னி, னுறுபெருங் கன்மஞ் செய்வோர் முன் புளராவ ருண்மை, யறிவுறின் ஞால மெல்லா மநாதியென் றறிந்தி டாயே" (பரபக்கம், 87) எ - து அவன் மதத்திலே கண்டுகொள்க. இனி இந்தத் தொழில்களைப் பாராமற்செய்ததுகொண்டே யவனுக்கு இதுவிளையாட்டாமென்று உத்தரமாகக் கூறினதற்கு பி - ம் திரு வாசகத்தில் "ஆர்த்த பிறவித் துயர்கெடநா மார்த்தாடுந், தீர்த்த னற் றில்லைச்சிற் றம்பலத்தே தீயாடுங், கூத்தனிவ் வானுங் குவல யமு மெல்லோமுங், காத்தும் படைத்துங் கரந்தும் விளையாடி, வார்த்தையும் பேசி" (7. 12) எ - ம், "ஐயா நீயாட்கொண் டரு ளும் விளையாட்டில்" (7. 11) எ - ம் வருமேதுக்களைக் கண்டு கொள்க. அன்றியும் சிவனே பஞ்சகிருத்தியஞ் செய்வனென்ப தற்கு பி - ம் திருவாசகத்தில் "போற்றியெல் லாவுயிர்க்குந் தோற்ற மாம் பொற்பாதம், போற்றியெல் லாவுயிர்க்கும் போகமாம் பூங் கழல்கள், போற்றியெல் லாவுயிர்க்கு மீறு மிணையடிகள், போற்றி மால் நான்முகனுங் காணுத புண்டரிகம், போற்றியா முய்யவாட் கொண்டருளும் பொன்மலர்கள்" (7. 20) எ - து கண்டுகொள்க. இதனுள் தோற்றமாம் பொற்பாதம் எ - து சிருஷ்டியென அறிக; போகமாம் பூங்கழல்கள் எ - து திதியென அறிக; ஈறு மிணையடி கள் எ - து சங்காரமென அறிக; மால் நான்முகனுங் காணுத புண்ட ரிகம் எ - து திரோபாவமென அறிக; யாமுய்ய ஆட்கொண்டரு ளும் பொன்மலர்கள் எ - து அநுக்கிரகமென அறிக. ஆக ஐந்து கிருத்தியத்துக்கும் இங்ஙனங் கண்டுகொள்க. அன்றியுங் கர்த்தா இந்தத் தொழில்களிலே ஆன்மாக்களைக் கூட்டிப் பஞ்சகிருத்தியப் படுத்துமிடத்துப் பாராமலெளிதாக விளையாட்டாய்ச் செய்வனென் றும் அப்படிச் செய்யவே ஆன்மாக்களுக்குண்டான மலபாகமும் வந்து திருவடிக்கு முரித்தாவார்கள் என்பதற்கு பி - ம் சித்தியாரில் "சொன்னவித் தொழில்க ளென்ன காரணந் தோற்ற வென்னின், முன்னவன் விளையாட் டென்று மொழிதலு மாமுயிர்க்கு, மன்னிய புத்தி முத்தி வழங்கவு மருளான் முன்னே, துன்னிய மலங்க ளெல்

லாந் துடைப்பதுஞ் சொல்ல லாமே" (1. 36) எ-து கண்டு கொள்க. "அணுக்களிடர்க் கடல் நின்று மெடுத்தே யூற்றமிக அருள்புரித லேதுவாக வுரைசெய்வர்" எ-ரு ஆன்மாக்களை ஜனனக்கடலிலே நின்றுங் கரையேற்றித் தனது திருவடியிலே கூட்டிக் கொள்ளுகை நிமித்தமாகக் கர்த்தா இந்தத் தொழில்களைச் செய்வனென்று புத்தனை நோக்கிச் சொன்னதற்கு பி-ம் சித்தியாரில் "அநாதிமுத்த னுய்ப்பரனு யசலனுயெல்லா வறிவுதொழி லனுக்கிரக முடையவரன் கன்ம, நுனுதிகமற் ருெத்தவிடத் தேசத்தி நிபாதம் நுழைவித்து மலங்களெலா நுங்க நோக்கி, மனுதிகர ணங்களெலா மடக்கித் தன்னை வழிபடுநல் லறிவருளி மாக்கருணைக் கையால், இனுதபிறப் பிணியின்று மெடுத்து மாரு வின்பமுத்திக் கேவைப்பனெங்கள் முத்தியிதுவே" (பரபக்கம், 134) எ-து அவன் மறுப்பிலே கண்டுகொள்க.

இதனுற் சொல்லியது உம்முடைய கர்த்தா இந்தத் தொழில்கள் என்ன பயனைக் கருதிச் செய்கிருனென்ற புத்தனை நோக்கி ஆன்மாக்களை மலபாகம் வருத்தித் தனது திருவடியிலே கூட்டிக் கொள்ளுகைப் பொருட்டாக என்றும் அப்படிச் செய்யுமிடத்துப் பாராமலெளிதாக விளையாட்டாய்ச் செய்வனென்றும் வருமுறைமையை யறிவித்தது. கூ

## இரண்டாஞ் சூத்திரம்

### பசு இலக்கணம்

இங்ஙனம் முதற்சூத்திரமாகிய பதியிலக்கணம் அருளிச்செய்து மேல் இரண்டாஞ் சூத்திரமாகிய பசு இலக்கணமும் பாச இலக்கணமும் அருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

இதற்கு வழியேதென்னில், முதற்சூத்திரமாகிய பதியிலக்கணத்தில் முதல் விருத்தமாகிய "பலகலை" (13) என்ற செய்யுளில் "பசு பாசந்தெரித்தல்" என்ற பதத்துக்குப் பொருள் பதியையும் பசுவையும் பாசத்தையும் பிரித்துச் சொல்லியறிகிறதே பயனென்றமையால், பதியிலக்கணமாகிய "ஏற்றவிவை" என்ற செய்யுள் முடி

வாகிய விருத்தமாறுக்கு மேலாகப் பசு இலக்கணமும் பாச இலக்கணமுங் கூறுமதே வழியாகையால், சிவன் ஆன்மாக்களை மாயா கன்மங்களோடுங் கூட்டிக் காரியப்படுத்தி மலபாகம் வருத்தி முத்திக் கேதுவாக்குவன் என்னப்பட்ட பசு இலக்கணமும் பாச இலக்கணமு மாகிய "எண்ணரிதாய்" (19) என்ற விருத்தந்தொடங்கி "அரிவைய ரின்புறு முத்தி" (50) என்னும் விருத்த முடிவாகிய செய்யுள் முப்பத்திரண்டும் இரண்டாஞ் சூத்திரமாக வகுத்ததெனை அறிக. இந்தச் செய்யுட்கள் முப்பத்திரண்டும் இரண்டாஞ் சூத்திரமாக நின்றதற்கு வழியேதென்னில் சிவஞானபோதத்தினுஞ் சிவஞானசித்தியாரினும் இரண்டாஞ் சூத்திரத்துக்குண்டான கருத்து இந்தச் செய்யுட்களினும் வருகையால் இவையிற்றையும் இரண்டாஞ் சூத்திரமாக வகுத்ததென அறிக. அது எங்ஙனேயென்னில் சிவஞான போதத்தில் இரண்டாஞ் சூத்திரமாகிய "அவையே தானே யாயிரு வினையிற், போக்கு வரவு புரிய வாணையி, னீக்கமின்றி நிற்குமன்றே" எ - ம் சிவஞானசித்தியாரில் இரண்டாஞ் சூத்திரமாகிய "உலகெலா மாகி வேறா யுடனுமா யொளியா யோங்கி, யலகிலா வுயிர்கள் கன்மத் தாணையி னமர்ந்து செல்லத், தலைவனா யிவற்றின் றன்மை தனக்கெய்த லின்றித் தானே, நிலவுசீ ரமல னாகி நின்றனன் நீங்கா தெங்கும்" (2. 1) எ - ம் இரண்டு செய்யுட்களினும் வருங் கருத்து இந்நூலினும் "எண்ணரிதாய்" என்னும் விருத்தம் வருகையாலும், சித்தியாரில் இரண்டாஞ் சூத்திரத்தில் மலமாயை கன்மங் களின் காரண காரியத்துக்கு வரும் விருத்தங்களில் "ஒன்றதா யனேக சத்தி யுடையதாய்" (2. 80) எ - ம் ஆணவ மலத்திற்குச் சொல்லும் விருத்தத்தின் கருவைப்பற்றி இந்நூலினும் "ஏகமாய்த் தங்கால வெல்லைகளின் மீளு மெண்ணரிய சத்தியதாய்" (20) எ - ம், இந்த ஆணவமலத்தைத் திரோதாயி பாகம் வருத்துகைக்கு "ஏயுமும் மலங்கள் தத்தந் தொழிலினை யியற்ற ஏவுந், தூயவன் தனதோர் சத்தி திரோதான கரிய தென்றும்" (சித்தி 2. 87) வரும் விருத்தத்தின் கருவைப்பற்றி இந்நூலினும் "பாகமாம் வகைநின்று திரோதான சத்தி பண்ணுதலான் மலமெனவும் பகர்வர்" எ - ம் வருகையாலும், இனி யசுத்தமாயாகாரணத்துக்குச் சொல்லப்பட்ட

"நித்தமா யருவாய்" (சித்தி 2. 53) என்னும் விருத்தத்தின் கருவைப்பற்றி இந்நூலினும் "உருவாதி சதுவிதமாய்" (22) என்னும் விருத்தம் வருகையாலும், இங்ஙனஞ் சொல்லப்பட்ட மாயை யென்றொரு முதலில்லையென்றும் சிவன்வேண்டுவதில்லை கன்மங்கள் தானே யான்மாக்களைக் காரியப்படுத்துமென்றுஞ் சொல்லுகிற சமயிகளை மறுத்து மாயையுண்டென்றும் இந்த மாயையுங் கன்மமும் சடமாகையால் தானே காரியப்படமாட்டாது இவையிற்றைக் கூட்டிக் காரியப்படுத்துகைக்கு ஒரு கர்த்தா வுண்டென்றும் வருங்கருத்தாகிய "உலகுடல் கரணங் கால முறுபல நியதி செய்தி, பலவிவை கொண்டு கன்மம் பண்ணுவ துண்ப தாஞல், நிலவிடா திவைதாஞ் சென்று நினைந்துயிர் நிறுத்திக் கொள்ளா, தலகிலா அறிவ ஞணை யணைத்திடும் அருளி ஞலே" (சித்தி. 2. 22) என்னும் விருத்தத்தின் கருவைப்பற்றி இந்நூலினும் "என்னையிதுவெனில்" எ - ம், "படைத்த தொருபடி" எ - ம், "அல்லன்மிக வுயிர்க்கிவைதான்" (23, 24, 25) எ - ம் வரும் விருத்தங்கள் மூன்றும் வருகையாலும், அன்றியும் ஆன்மாக்களுக்கு மூன்று மலமும் அநாதி யென்பதற்குச் சிவஞானபோதத்தில் இரண்டாஞ் சூத்திரத்து வெண்பாவில் "நெல்லிற்குமியு நிகழ்செம்பினிற்களிம்புஞ், சொல்லிற் புதிதன்று தொன்மையே" (2. 7) எ - ம், சித்தியாரினும் "மும்மல நெல்லினுக்கு முளையொடு தவிடுமிப்போல், மம்மர்செய் தணுவி னுண்மை வடிவினை மறைத்து நின்று" (2. 86) என்னும் இவ்விரண்டினுள்ளுமுள்ள கருவைப்பற்றி இந்நூலின் முற்கூறிய "அல்லன்மிக" (25) என்னுஞ் செய்யுள் முடிவிலே "நெல்லின்முளை தவிடுமிப்போ லநாதி யாக" எ - ம் வருகையாலும், முற்கூறிய அசுத்தமாயையின் காரியமாயுள்ள கலையாதி தத்துவங்களின் தோற்றங்களையுங் காரியப்படுகையுஞ் சொல்லப்பட்ட "மாயையிற் காலமோடு" (சித்தி. 2. 54) என்னும் விருத்தந் தொடங்கி "குறிகள்வச் சிரத்திளேடு" (ஷை 2. 68) என்னும் விருத்த முடிவாகிய செய்யுள் பதினைந்தினும் உண்டாகிய தோற்றத்தின் கருவைப்பற்றி இந்நூலினும் "அருத்திமிகுங் கலைகாலம்"; "மன்னியகன் மேந்திரியம்" (26, 27) என்னும் விருத்தமிரண்டும் வருகையாலும், கன்மத்தின் காரண காரியத்துக்கு "தன்மமோ

டதன்ம மாகி " எ - ம், " இருவினை யநாதி " எ - ம் " உடற்செயல் கன்மம் " எ - ம், " மேலைக்கு வித்து மாகி " எ - ம், " முற்செயல் விதியை " (சித்தி. 2. 39, 40, 10, 12, 11) எ - ம் வரும் விருத்தங் களின் கருவைப்பற்றி இந்நூலினும் " நண்ணியிடும் " எ - ம், "கன்ம நெறி " எ - ம், " மேலைக்கு வருவினை " எ - ம், " உற்றதொழில் " (28–31) எ - ம் வரும் விருத்தம் நாலும் வருகையாலும், இங்ஙனஞ் சொல்லப்பட்ட மலங்களின் தொகையாகிய " மலமாயை கன்ம மாயேயந் திரோதாயி மன்னிச், சலமாரும் பிறப்பிறப்பிற் றங்கி " (சித்தி. 2. 88) என்னும் விருத்தத்தின் கருவைப்பற்றி இந்நூலி னும் " மோகமிக வுயிர்கள்தொறு முடனாய் நிற்கும் "( 32) என் னும் விருத்தம் வருகையாலும்,இங்ஙனஞ் சொல்லப்பட்ட மலம் ஐந்தி னுள்ளும் ஆணவமலம் ஆன்மபோதத்தை மறைக்குமென்றும் அப் படி யாணவமலம் என்பதொன்றில்லை மாயாசரீரங்களே யான்ம போதத்தை மறைக்குமென்றும் மாயாகாரியமான கலையாதி தத்து வங்களினாலே சிவன் ஆணவமலத்தைப் பாகமாக்குவனென்றும் வருங் கருத்தாகிய " போதகா ரியமறைத்து நின்றது புகல்ம லங் காண் " எ - ம், "மலமென வேறொன் றில்லை மாயாகா ரியம தென் னில் " எ - ம், " மாயையே யான்ம ஞானக் கிரியையை மறைத்து நிற்கும் " எ - ம், " பரிதியை முகின்ம றைப்பப் பாயொளி பதுங்கி னாற்போல்" எ - ம், " எல்லாமாய்த் தத்து வங்க ளிசைந்ததெ னனு வுக்கு" (சித்தி.2.84,81,82,83, 79) எ - ம், "எழுமுடல் கரணமாதி" (ஷை 2. 52) என்னும் விருத்தத்தில் " மாயைகொடு மலமொழிப் பன் முன்னேன் " எ - ம் வரும் விருத்தங்களின் கருவைப்பற்றி இந் நூலினும் " ஓங்கிவரும் பலவுயிர்கள் " (33) என்னும் விருத்தந் தொடங்கி"புகலுமல மொழித்தற்குக் கலாதி முதன்மாயை பொருந்தி யிடு மரனருளால் " (37) என்னும் விருத்தமுடிவாகிய செய்யுள் ஐந் தும் வருகையாலும், அந்தக் கலையாதி தத்துவங்களோடும் ஆன்மாக் கள்கூடிப் பிரபஞ்ச காரியப்படுகைக்கு முற்கூறிய " மாயையிற் காலமோடு " (சித்தி. 2. 54) என்னும் விருத்தந் தொடங்கி " இரந் தரமாகி வான்முன் " (ஷை 2. 66) என்னும் விருத்த முடிவாகிய செய்யுள் பதின்மூன்றினுள் தத்துவங்கள் காரியப்படுங் கருத்தைப்

பற்றி இந்நூலினும் "இத்தகைமை யிறையருளால்" (39) என்னும் விருத்தத்தில் "அசுத்த மாயை வைத்தகலைதான் மூலமலஞ் சிறிதே நீக்கி" என்னும் பதந்தொடங்கி "மூந்திய ஐம்பூதங்கள் வாஞதி யாக" (45) என்னும் விருத்தமுடிவாகிய செய்யுளேழும் வருகை யாலும், அன்றியும் தத்துவம் முப்பத்தாறின் தொகைக்கு மூவகைத் தத்துவங்களுக்கும் ஆன்மாக்கள் யோனிவிட்டு யோனிபற்றி ஜநந மரணப்படுகிறதற்கும் நால்வகைத் தோற்றத்துக்கும் எண்பத்து நான்கு நூறுயிர யோனிபேதத் தொகைக்கும் சித்தியாரில் வரும் விருத்தங்களாகிய "சுத்ததத் துவங்க ளென்று முன்னமே சொன்ன ஐந்தும், இத்தகை மையி னியம்பு மிவைமுப்பத் தொன்றுமாகத், தத் துவ முப்பத் தாறும்" எ-ம், "ஐந்துசுத் தத்தின் கீழேழ்சுத்தா சுத்த மசுத்தந், தந்திடும் புமான்கீ ழெண்மூன் றுயதத் துவஞ்சீ வர்க்கும்" (சித்தி. 2. 69, 70) எ - ம், சிவஞானபோதத்தில் இரண்டாஞ் சூத்தி ரத்து வெண்பாவில் "அரவுதன் றோலுரிவு மக்கனவும் வேறு, பர காயம் போய்வருமப் பண்பும்" (2. 9) எ-ம், சித்தியாரில் "பன்னகம் அண்டசங்கள் பரகாயந் தன்னிற் பாய்வோர்,துன்னுதோல் முட்டை யாக்கை துறந்துசெல் வதுவே போலே" (2. 38) எ - ம், "அண்ட சஞ் சுவேத சங்க ளுற்பீசஞ் சராயு சத்தோ, டெண்தரு நாலெண் பத்து நான்குநூ றுயிரத்தால், உண்டுபல் யோனி" (2. 89) எ - ம் வரும் விருத்தங்களின் கருவைப்பற்றி இந்நூலினும் "இந்நிரையி லைந்து சுத்தம்" எ - ம், "தோற்றியிடு மண்டசங்கள்" (46, 47) எ - ம் விருத்தமிரண்டும் வருகையாலும், அன்றியும் இங்ஙனம் ஆன்மாக்கள் பிரபஞ்ச காரியப்பட்டு மலபாகம் வந்து முத்திக்கேதுவாவார்களென் பதற்குச் சித்தியாரில் "அரன்விதி யருள தென்றே யறைந்தன மதுவு முன்னே, தரைநர கருந்துறக்கந் தனுகர ணாதி யெல்லாம், வருவதுஞ் செய்த நாதி மலங்களிம் மருந்தாற் றீர்த்துப், பரகதி யதுவுந் தந்து பாதபங் கயமுஞ் சூட்டும்" (2. 51) எ - ம் வரும் விருத்தத்தின் கரு வைப்பற்றி இந்நூலினும் "இனையபல பிறவிகளின்" எ - ம், "நாடிய சத்திநிபாதம்" எ - ம், "அரிவைய ரின்புறு முத்தி" (48, 49, 50) எ - ம் விருத்த மூன்றும் வருகையாலும், "எண்ணரிதாய்" (19) என்ற விருத்தந்தொடங்கி "அரிவைய ரின்புறு முத்தி" (50)

என்னும் விருத்த முடிவாகிய செய்யுட்கள் இத்தனைக்கும் முன்னுள்ள நூல்களில் இரண்டாஞ் சூத்திரத்திற் செய்யுட்கள் ஏதுக்காட்டி வருகையால் இவையும் இரண்டாஞ் சூத்திரமாக நின்றதென அறிக.

அப்படியானால் இந்நூலில் இரண்டாஞ் சூத்திரமாக வகுத்த செய்யுள் முப்பத்திரண்டினுள்ளுஞ் சுத்தமாயா காரண காரியத்துக்கு வகுத்த "உன்னலரும் பரசிவன்ற னருளாலே நாத முதிக்கு மிகுங் குடிலைதனில்" (21) எ - ம், வாக்குக்கள் நாலுக்கும் "வந் தடைந்து பின்னமாய்" (38) எ-ம் வரும் விருத்தங்கள் இரண்டுக்கும் ஏதுக்காட்டாத தேதென்னில் அந்தச் சுத்தமாயையின் பிரசங்கஞ் சித்தியாரில் முதற் சூத்திரத்திலே வருகையாலே அதற்கு யேதுக் காட்டினதில்லையென அறிக. அப்படிச் சுத்தமாயையைச் சித்தி யாரில் முதற் சூத்திரத்திலே சொல்லியிருக்க இந்நூல் இரண் டாஞ் சூத்திரத்திலே கூட்டுகைக்கு வழியேதென்னில் அந்தச் சுத்த மாயையானது சிவன் கொள்ளப்பட்ட திருமேனிக்குடம் பாய் நிற்கையாலும் மலங்களொடுங் கூடி வருகையாலும் சித்தி யார் செய்தருளினவர் அந்நூலின் முதற் சூத்திரம் பதியிலக்கண மாகையால் அந்தப் பதியாகிய சிவனுக்குச் சுத்தமாயை திரு மேனியென்னுங் கருத்தைப்பற்றி "வித்தையோ டீசர் சாதாக் கியஞ்சத்தி சிவங்கள் ஐந்துஞ், சுத்ததத் துவஞ்சிவன்றன் சுதந் திர வடிவ மாகும்" (1. 66) எ - ம் சுத்த மாயையை முதற் சூத் திரத்திலே கூட்டியருளிச்செய்தாரென அறிக. இந்தச் சிவப்பிர காசஞ் செய்தருளினவர் சுத்த மாயையை மலமாயைகன்மங்களை வகுத்தருளிச்செய்து சொல்லுகிற வொழுங்கிலே கூட்டியருளிச் செய்கையினாலும், அன்றியும் மலத்தொகைக் கருளிச்செய்த விருத்த மாகிய "மோகமிக வுயிர்கள்தொறும்" (32) என்னும் விருத்தத்தின் முடிவிலே "தேகமுறு கரணமொடு புவனபோகச் செயலாரு மாமா யைத் திரட்சி யொன்றென், முகமல மைந்தென்பர்" எ - ம் வருகை யாலும், இரண்டாஞ் சூத்திரத்தின் கருவைப்பற்றிச் சிவன் ஆன் மாக்களை மாயா கன்மங்களோடுங் கூட்டிக் காரியப்படுத்தி மலபாகம் வருத்து முறைமையைச் சொல்லுகையாலும் இந்தச் சுத்த மாயை மலத்தோடுங் கூடி வருகையால் இதனை இரண்டாஞ் சூத்திரத்திலே

கூட்டப்பட்டதென அறிக. அப்படிச் சுத்தமாயையை மலத்தோடுங் கூட்டுகைக்கு அநுபோகமேதென்னில் முத்தியைப்பெறும் ஆன்மாக் களுக்குத் தத்துவ முப்பத்தாறும்நீங்கியே முத்தியென்னும் விதியைப் பற்றித் தத்துவம் முப்பத்தாறினுள் சுத்த தத்துவங்களுங் கூடி வருகையால் அவையும் நீங்கியே முத்தியைப் பெறவேண்டுமென்ப தைப்பற்றி அப்படி வைக்கப்பட்டதென அறிக. அப்படியானுல் இந்நூல் சித்தியாரைப் பின்சென்ற நூலாயிருக்கச் சுத்தமாயை யைச் சிவனுக்குத் திருமேனியென்று அந்நூல் முதற்சூத்திரத்திலே சொல்லியிருக்க அதனை இந்நூலின் மலத்தோடுங்கூட்டி வேற்றுமை கூறுதற்கு விதியேதென்னில் சித்தியார் வழிநூலாகையாலும் இந் நூல் சார்புநூலாகையாலும் "இருவர் நூற்கு மொருசிறை தொடங் கித் திரிபுவே றுடையது புடைநூ லாகும்" (நன்னூல், 8) என்ப தைப்பற்றி அப்படி வேற்றுமை கூறினதென அறிக.

ஆக இங்ஙனங் கூறிவந்த வகைகளால் "எண்ணரிதாய்" என்னும் விருத்தந் தொடங்கி "அரிவைய ரின்புறு முத்தி" என்னும் விருத்த முடிவாகிய செய்யுள் முப்பத்திரண்டும் இரண்டாஞ் சூத்திரமாக நிற்குமென்பதை அநுபவத்தாற்கண்டுகொள்க. இங்ஙனம் இரண்டாஞ் சூத்திரமாக வகுத்த செய்யுள் முப்பத்திரண்டினுள்ளும் முதல் விருத்தமாகிய "எண்ணரிதாய் நித்தமாய்" என்னும் விருத்தஞ் சிவ ஞானபோதத்தில் இரண்டாஞ் சூத்திரமாகிய "அவையேதானே" என்ற முதற்செய்யுளின் கருத்தைப்பற்றி நிற்குமேயானுல், அந்நூலில் இந்தச் சூத்திரத்தில் வருஞ் செய்யுட்களின் கருத்து அந்தச் சூத்திரத் துக்கு அதிகாரமாகிய முதற்செய்யுளிலே நின்முற்போல் இந்நூலி னும் இங்ஙனம் இரண்டாஞ் சூத்திரமாக வகுத்த செய்யுட்களில் வருங் கருத்து "எண்ணரிதாய்" என்னும் விருத்தமாகிய முதற் செய்யுளிலே வருமுறைமை யெங்ஙனேயென்னில், அஃதாவது: "எண்ணரிதாய் நித்தமாய்" என்றதற்கு மேலாக "இருண்மலத்து ளழுந்தி" என்றது ஆன்மாக்களுக்கு ஆணவமல மறைப்புக்குச் சொன்ன "ஏகமாய்" என்னும் விருத்தம் வகுத்த செய்யுள் முப்பத் திரண்டினுள்ளும் முதல் விருத்தமாகிய "எண்ணரிதாய் நித்தமாய்" என்னும் விருத்தம் சிவஞானபோதத்தில் இரண்டாஞ் சூத்திரமாகி

அதின் கருவைப்பற்றி நிற்கையாலும், "இருவினையின் தன்மைகளுக் கீடான யாக்கை யண்ணலருளால் நண்ணி" எ - து சிவனருளாலே யான்மாக்கள் மாயா கன்மங்களோடுங் கூடுவார்க ளென்பதற்குச் சொன்ன "உன்னலரும் பரசிவன்ற னருளாலே" என்னும் விருத தந் தொடங்கி "மோகமிக" என்னும் விருத்தமுடிவாகிய செய்யுட் களின் கருவைப்பற்றி நிற்கையாலும், "அவையவரா யதனு லலகி னிகழ் போகங்க ளருந்து மாற்றுற் புண்ணியபா வம்புரிந்து போக்கு வர வுடைத்தாய்" எ - து ஆன்மாக்கள் கேவல சகலப்பட்டும் யோனிவிட்டு யோனிபற்றி ஜனனமரணப்பட்டும் வருவர்களென்ப தற்குச் சொன்ன "ஓங்கிவரும் பலவுயிர்கள்" என்னும் விருத்தந் தொடங்கி "இனையபல பிறவிகள்" என்னும் விருத்தமுடிவாகிய செய்யுட்களின் கருவைப் பற்றி நிற்கையாலும், "புணருமிருள் மலபாகம் பொருந்தியக்கா லருளால், உண்ணிலவு மொளியதனு லிருளகற்றிப் பாத முற்றிடுநற் பசுவர்க்கம்" எ - து ஆன்மாக்கள் மலபாகம் வந்து திருவருளுண்டாய் முத்திக் கேதுவாவார்களென்ப தற்குச் சொன்ன "நாடிய சத்திநிபாதம்", "அரிவைய ரின்புறு முத்தி" என்னும் விருத்தங்களின் கருவைப்பற்றி நிற்கையாலும், "எண்ணரிதாய்" என்னும் விருத்தம் இங்ஙனம் இரண்டாஞ் சூத் திரமாக வகுத்த செய்யுட்களுக்கு அதிகாரமாக நின்றதென அறிக.

இங்ஙனங் கூறப்பட்ட "எண்ணரிதா"யென்ற செய்யுள் முதற் சூத்திரமாகிய பதியிலக்கணத்துக்கு மேலாகப் பசு இலக்கணமாக நிற்கையால் அந்தப் பசுவினிலக்கண மேலருளிச் செய்வான் எடுத் துக்கொண்டருளியது.

19. எண்ணரிதாய் நித்தமாய் இருள்மலத்தின் அழுந்தி
இருவினையின் தன்மைகளுக் கீடான யாக்கை
அண்ணலரு ளால்நண்ணி அவைஅவரா யதனுல்
அலகில்நிகழ் போகங்கள் அருந்தும் ஆற்றுல்
புண்ணியபா வம்புரிந்து போக்குவர வுடைத்தாய்ப்
புணரும்இருள் மலபாகம் பொருந்தியக்கால் அருளால்
உள்நிலவும் ஒளியதனுல் இருளகற்றிப் பாதம்
உற்றிடும்நற் பசுவருக்கம் எனஉரைப்பர் உணர்ந்தோர்.

எண்ணிலா வுயிர்க ளிறந்துபிறந் தொருகால்
நண்ணிடு மரனடி யருளா லென்றது.

(உரை) எண்ணரிதாய் - ஆன்மாக்கள் இலக்கத்திஞல் அளவு படுத்துதற்கரிதாய்; நித்தமாய் - ஒருகாலத்தினும் அழியாததாய்; இருள் மலத்தின் அழுந்தி - அஞ்ஞானமாகிய ஆணவமலத்திஞலே மறைப்புண்டு கிடந்து; இருவினையின் தன்மைகளுக் கீடான யாக்கை அண்ணல் அருளால் நண்ணி - அவரவர்களுக்குண்டான புண்ணிய பாவங்களுக்கீடானதோர் உடல்களைத் தம்பிராஞர் காருண்ணியத்திஞலே பொருந்தி; அவையவராய் - அவன் அவள் அதுவாகிய அந்த வுடம்பென்னத் தானென்னத் தோன்றுமற் பிரிவற்று நின்று; அதஞல் அலகினிகழ் போகங்களருந்துமாற்ருற் புண்ணியபாவம்புரிந்து- அந்த உடம்புகளோடுங் கூடுகையாலே யெண்ணிறந்த போகங்களைப் புசித்து அந்தப் புசிப்பாலுண்டாகிய ஹிதாஹிதங்களிஞலே மீளவும் புண்ணிய பாவங்களை யார்ச்சித்துக்கொண்டு அதஞலே; போக்கு வரவுடைத்தாய் - இறந்து பிறந்து வருவதாய்; புணரும் - இங்ஙனம் பொருந்திவாரா நிற்கும். இப்படி வரச்செய்தே; இருள் மலபாகம் பொருந்தியக்கால் அருளா லுண்ணிலவு மொளி - அநாதியே யான் மாவை மறைக்கப்பட்ட ஆணவமலமானது க்ஷயம் வந்த அவதரத்துச் சிவனுடைய அருளாலே யந்த ஆன்மாவினிடத்திலே ஞானம் பிரகாசியா நிற்கும்; அன்றியும், புணருமிருள் மலபாகமென்று பதங்கூட்டி யான்மாக்களோடுங் கூடிநிற்கிற ஆணவமலமென்று பொருளுரைப்பினுமாம்; அதஞல் இருளகற்றிப் பாத முற்றிடு நற் பசுவர்க்கம் - அங்ஙனம் பிரகாசிக்கப்பட்ட ஞானத்திஞலே யந்த ஆணவமல மறைப்பை நீங்கிச் சிவனுடைய திருவடியிலே பொருந்திடும் பக்குவப்பட்ட சுத்தான்மாக்கள்; எனவுரைப்ப ருணர்ந்தே - என்றிங்ஙனஞ் சொல்லுவார்கள் அறிவாலுயர்ந்த பெரியோர்கள்.

எண்ணரிதாய் எ - கு ஆன்மாக்களை யிலக்கத்திஞல் அளவு படுத்தற் கரிதென்றதேதென்னில், ஒவ்வொரு யோனி வர்க்கங்கள் தோறுமுண்டான ஆன்மாக்களை யளவுபடுத்தப்படாதது கொண்டே எண்பத்துநான்கு நூருயிரயோனி பேதத்திலுண்டான ஆன்மாக்களையும் அளவுபடுத்தப்படாத படியாலும், அன்றியும் அவதரந்

தோறுந் திருவடியிலே கூடின ஆன்மாக்கள் மீளவும் ஜநநங்களில் வாராதிருக்கவும் பிரபஞ்ச காரியப்பட்டு வருகிற ஆன்ம வர்க்கந் தொலையாதது கொண்டும் அப்படிச் சொன்னதென அறிக. இதற்கு பி - ம் கோயிற்புராணத்தில் "எத்தகைய போகங்க ளெவற்றினுக் குங் காரணமாய், வைத்தபடி யிடம்போதா வகைநெருங்கு மன் னுயிர்கள்" எ - ம், "கற்பங்கள் தொறுநடஞ்செய் கழலணைந்தோர் கணிப்பில்லார்" (22) எ - ம் வருமது கண்டுகொள்க. இனி நித்த மாய் எ - கு ஒரு காலத்தினும் அழியாததென்றதேதென்னில் பதி பசுபாசமென்னப்பட்ட முதல் மூன்றும் நித்தியமென்று நூல்கள் சொல்லுகையாலும் முத்தியிலும் ஆன்மாக்களுக்கு அழிவில்லாதபடி யாலும் அப்படிச் சொன்னதென அறிக. இங்ஙனம் பதிபசுபாச மூன் றும் அநாதியென்பதற்கு பி - ம் திருமந்திரத்தில் "பதிபசு பாச மெனப் பகர்மூன்றும், பதியினைப் போற்பசு பாச மநாதி" (115) எ - து கண்டுகொள்க. அன்றியும் முத்தியிலும் ஆன்மாக்கள் அழியாதென்றதற்கும் பி - ம் உண்மை விளக்கத்தில் "முத்தித னின் மூன்று முதலும் மொழியக்கேள், சுத்தவநு போகத்தைத் துய்த்தலணு - மெத்தவே, யின்பங் கொடுத்தலிறை யித்தை விளை வித்தல்மலம், அன்புடனே கண்டுகொ ளப்பா" (50) எ - து கண்டுகொள்க. அன்றியும் சித்தியாரிலும் "கரும்பைத்தே னைப்பா லைக் கனியமுதைக் கண்டைக் கட்டியையொத் திருப்பனந்த முத்தி யினிற் கலந்தே" (11. 12) என்றமையால் ஆன்மாவில்லாத பொழுது அநுபவிப்பானில்லா தாகையால் அநுபவமுண்டானது கொண்டே யான்மாவும் உண்டென்பதை யநுபவத்தாற் கண்டு கொள்க. இனி யிருண்மலத்தினழுந்தி எ - கு ஆன்மா ஆணவமலத் தான் மறைப்புண்டு கிடக்குமென்றதேதென்னில் கேவலப்பட்டு மாயை தாரகமாக ஒடுங்கிக்கிடக்கும் அவதரத்துக் கலையாதி தத்து வங்களாயுள்ள காரிய மாயையும் நீங்கி யாணவமல மறைப்பாகக் கிடக்கையாலே யப்படிச்சொன்னதென அறிக. இதற்கு பி - ம் சித் தியாரில் "அறிவில னமூர்த்த னித்த னராகாதி குணங்க ளோடுஞ், செறிவிலன் கலாதி யோடுஞ் சேர்விலன் செயல்க ளில்லான், குறியிலன் கர்த்தா வல்லன் போகத்துக் கொள்கை யில்லான், பிறி

விலன் மலத்தி னோடும் வியாபிகே வலத்தி லான்மா" (4. 38) எ - ம், "மும்மல நெல்லி னுக்கு முளையொடு தவிடு மிப்போல், மம்மர்செய் தணுவி னுண்மை வடிவினை மறைத்து நின்று" (2. 86) எ - ம் கண்டுகொள்க. இனி அவை யவராய் எ - கு அவன் அவள் அதுவாயென்றது ஏதென்னில் உயர்திணை யஃறிணையாகிய யோனி பேதங்களினுள் அவனென்றது ஆண்பாலென அறிக; அவளென்றது பெண்பாலென அறிக; அதுவென்றது ஆணும் பெண்ணுமல்லாத அலியென அறிக. உயர்திணை யஃறிணை யென்றதேதென்னில் உயர்திணையாவது தெய்வயோனி மானுடயோனியென அறிக; அஃறிணையென்றது மற்றுள்ள யோனிகளையென அறிக. இனி யிருள்மலபாகம் பொருந்தியக்கா லருளா லுண்ணிலவு மொளி எ - கு மலபாகம் வந்த ஆன்மாக்களிடத்திலே சிவனருளாகிய ஞானம் பிரகாசிக்குமென்றது ஏதென்னில் பக்குவப்பட்ட சுத்தான்மாக்களுக்கு இருளாகிய அஞ்ஞானம் நீங்கி ஒளியாகிய ஞானம் பிரகாசிக்கையாலே யப்படிச் சொன்னதென அறிக. இதற்கு பி - ம் கோவைத்திருவாசகத்தில் "உருகுதலைச் சென்ற உள்ளத்து மம்பலத்தும் மொளியே, பெருகுதலைச் சென்று நின்றேன்" (104) எ - து கண்டுகொள்க. இனி அதனாலிருளகற்றிப் பாதமுற்றிடு நற்பசுவர்க்கம் எ-கு அந்த ஞானத்தினாலே சிவனுடைய ஸ்ரீபாதத்தை யடையும் பக்குவப்பட்ட சுத்தான்ம வர்க்கமென்றது ஏதென்னில் அங்ஙனம் பக்குவப்பட்ட ஆன்மாக்களிடத்தில் பிரகாசிக்கப்பட்ட சிவனருளாகிய ஞானமே பற்றாக அந்தச் சிவத்தோடுங் கூடுகையால் அப்படிச் சொன்னதென அறிக. இதற்கு பி - ம் தத்துவ விளக்கத்தில் "பவமே வியநெறி பந்திக்கு மீசன் பசுக்கள் தம்மை, யவமே வியநெறிப் போகங்க ளால்முற்ற வந்திலையே, தவமே வியநெறி சத்திகண் ணுற்சென்று சார்ந்துபின்னைச், சிவமே வுவரென்று காண்கொச்சை காவலன் சித்திரிப்பே" எ - து கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது ஆன்மவர்க்கம் எண்ணிறந்திருக்குமென்றும் நித்தமாயிருக்குமென்றும் ஆணவமலத்தான் மறைப்புண்டு கேவலப்பட்டுக் கிடக்குமென்றும் புண்ணிய பாவங்களுக்கீடான சரீரங்களை யெடுத்து மலபாகம் வந்தவாறே சிவனருளாகிய ஞானத்தினாலே சிவனைப்பெறுமென்றும் வருமுறைமையை யறிவித்தது.

## பாச இலக்கணம்

இங்ஙனம் பசு இலக்கணம் அருளிச்செய்து, 'பதி பசு பாசந் தெரித்த'லென்னும் விதியைப்பற்றி மேற் பாச இலக்கணங் கூறுமதே முறைமையாகலான் முற்கூறிய ஆன்மாக்களோடும் அநாதியே கூடியிருக்கப்பட்ட மலமாயா கன்மங்களின் இயல்பைக் கூறுமிடத்து ஆணவம் மாயை காமியமென்னும் ஒழுங்கைப்பற்றி முந்த ஆன்மாக்களை மறைக்கப்பட்ட ஆணவ மலத்தினியல்பும் அந்த மலத்தின் மறைப்பை நீக்குகிற திரோதாயியின் இயல்பும் அருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

20. ஏகமாய்த் தம்கால எல்லைகளின் மீளும்
எண்ணரிய சத்தியதாய் இருளொளிர இருண்ட
மோகமாய்ச் செம்பினுறு களிம்பேய்ந்து நித்த
மூலமல மாய்அறிவு முழுதினையும் மறைக்கும்
பாகமாம் வகைநின்று திரோதாயி சத்தி
பண்ணுதலான் மலமெனவும் பகர்வர்அது பரிந்து
நாகம்மா நதிமதியம் பொதிசடையான் அடிகள்
நணுகும்வகை கருணைமிக நயக்கும் தானே. உ

மோகமா மூல மலத்தின் முறைமையும்
பாகமாந் திரோதப் பகுதியும் பகர்ந்தது.

(உரை) ஏகமாய் - ஆணவமலமானது எண்ணிறந்த ஆன்மாக்களோடுங் கூடிநின்று மறைத்தும் தான் ஒன்றாயிருப்பதாய்; தம்கால எல்லைகளின் மீளும் எண்ணரிய சத்தியதாய் - ஆன்மாக்களுடைய பக்குவா பக்குவங்களுக்குத் தக்கதாக அவரவரிடங்களிலே மறைத்து நின்று அந்தந்த ஆன்மபோதங்களின் மீட்சியிலே நீங்குவதாயிருக்கிற தன் காரியமான எண்ணிறந்த சத்திகளையுடையதாய்; இருளொளிர இருண்ட மோகமாய் - செறிந்த இருளும் வெளியென்னும்படி நின்று ஆன்மாக்களுக்கு மிக்க மறைப்புகள் செய்யுமதாய்; செம்பினுறு களிம்பேய்ந்து நித்த மூலமலமாய் - செம்பினுடன் கூடியிருக்கப்பட்ட காளிதமானது அந்தச் செம்புள்ளவன்றே அதனை மறைத்து உள்ளும் புறம்புங் கலந்து வெட்டுவாய்தோறும் நின்றாற்போல ஆன்மபோதத்தோடுங் கலந்து மறைந்து நிற்கிற அழியாத

அநாதி மலமாய்; அறிவு முழுதினையும் மறைக்கும் - இங்ஙனம் ஆன்மாவில் இச்சா ஞானக் கிரியைகள் சற்றும் சீவியாதபடி மறைத்து நிற்கும். இங்ஙனம் ஆணவமலத்தின் இயல்பை அருளிச்செய்து இந்த மலத்தைப் பாகம் வருத்துகிற திரோதாயி சத்தியின் இயல்பு மேலருளிச் செய்கின்றது; பாகமாம் வகை - அந்த ஆணவ மலமானது க்ஷயமாம்படி; நின்று திரோதானசத்தி பண்ணுதலான் - சிவனுடைய அருட்சத்தியானது அந்த ஆணவமலத்தோடுங் கூடித் திரோபவித்து நின்று காரியப்படுத்துகையால்; மலமெனவும் பகர்வர் - இந்தத் திரோதாயி சத்தியை அந்த மலத்தோடுங் கூட்டி மலமென்றும் பெரியோர்கள் சொல்லுவார்கள். இங்ஙனம் மலமெனவும் என்ற உம்மை கொண்டே அந்தத் திரோதாயி சத்தியே அருளென்பது துணிவு. இங்ஙனந் திரோதமாய் நின்று காரியப்படுத்தி மலபாகம் வருத்தின அருளானது இங்ஙனம் மலபாகம் வந்த ஆன்மாக்களுக்கு உண்டாக்கும் பயனேதென்னில்; அது பரிந்து - அந்த அருள் அவர்களிடத்திலே கிருபை ஜநித்து நின்று; நாகம்மா நதி மதியம் பொதி சடையான் அடிகள் நணுகும்வகை கருணை மிக நயக்குந்தானே - பாம்பினையும் மகத்தாயிருக்கிற கங்காபரமேஸ்வரியையும் சந்திரனையும் சூழ்ந்திருக்கப்பட்ட திருச்சடாபாரத்தையுடைய தம்பிரானார் திருவடிகளிலே பொருந்து முறைமையை யுண்டாக்குந் தனது காருண்ணியத்தினாலே.

ஏகமாய் எ - கு ஆணவமலம் ஒன்றாயிருக்கவும் எண்ணிறந்த ஆன்மாக்களையுங் கூடிநின்று மறைக்கு மென்றதற்கு வழியேதென்னில், இருளானது தான் ஒன்றாயிருந்தும் பல கண்களையும் மறைத்தாற்போலவென அறிக. அப்படி மலம் ஒன்றாயிருந்தும் பல ஆன்மாக்களையும் மறைக்குமென்பதற்கு பி - ம் திருவருட்பயனில் "பலரைப் புணர்ந்துமிருட் பாவைக்குண் டென்றுங் - கணவற்குந் தோன்றாத கற்பு" (25) எ - ம், இந்நூலினும் "மோகமிக வுயிர்கள் தொறும் உடனாய்நிற்கும் மூலவா ணவமொன்று" (32) எ - ம் வரும் ஏதுக்களைக் கண்டுகொள்க. இனி, தங்கால எல்லைகளின் மீளும் எ - கு ஆன்மபோதங்களின் மீட்சியிலே நீங்குகிற சத்திகளென்றதேதென்னில், போதத்தின் மீட்சியாவது பிரபஞ்சத்தைப் பொய்

யென்று கண்டு நீங்குகையென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "ஆசைதரு முலகமெலாம் அலகைத்தே ராமென் றறிந்தகல வந் நிலையே யாகும்" (9. 1) எ - து கண்டுகொள்க. அப்படி மலமொன்று யிருக்கவும் அந்த மலத்தின் சத்திகள் எண்ணிறந்திருக்குமென்றது ஏதென்னில், அந்த மலத்தோடுங் கூடியிருக்கப்பட்ட ஆன்மாக்கள் எண்ணிறந்திருக்கையாலும் அந்த ஆன்மாக்கள்தோறும் வெகுவித மான சத்திகள் பதிந்து நிற்கையாலும் அப்படிச் சொன்னதென அறிக. அப்படி ஆன்மாக்கள்தோறும் அந்த மலத்தின் சத்தி வெகு விதமாகப் பதிந்து நிற்குமென்றதற்கு பி - ம் தத்துவ விளக்கத்தில் "கதிதருங் காழிமன் காட்டுமப் பாசங்கள் மூன்றவைதாம், பொதிதரு மாணவம் போகஞ்செய் கன்மமு மாயையுமாம், முதியது தானென்று முன்பினி லாதது சேதனன்கண், ணதிக மறைப்பன ஆயிரகோடி விருத்திகளே" (19) எ - து கண்டுகொள்க. இனி இருளொளிர இருண்ட மோகமாய் எ - கு செறிந்த இருளும் வெளியென்னும்படி யிருளாயிருக்கும் அந்தமலமென்றதேதென்னில் இருளானது பண்ட பதார்த்தங்களை மறைத்துந் தான் தோன்றி நிற்கையாலும் இந்த மலமானது தன்னையுங்காட்டாமல் பொருளையுங் காட்டாமல் நிற்கை யாலும் அப்படிச் சொல்லப்பட்டதென அறிக. இதற்கு பி - ம் திருவருட்பயனில் "ஒரு பொருளுங் காட்டா திருளுருவங் காட் டும் - இருபொருளுங் காட்டா திது" (23) எ-ம் கண்டுகொள்க. இனி செம்பினுறு களிம்பேய்ந்து நித்த மூலமலமாய் எ - கு செம்பிற் காளிதம்போல ஒரு காலத்திலும் அழியாத அநாதிமல மென்ற தேதென்னில் செம்பென்கிற பொருளுள்ளளவுங் காளிதம் நின்றாற் போல ஆன்மபோதமுள்ளமட்டும் அந்தமலத்தின் மறைப்புப்போகா தென்றதென அறிக. இதற்கு பி - ம் தத்துவ விளக்கத்தில் "விருத்தி களான் மறைக்கின்றவவ் வாணவம் வெங்குருமன், கருத்திய நூன் முறை தேரிற் கலந்துட னுயனுவை, யருத்திய நஞ்சென்ன மோகஞ் செய் தாசை யநுபவத்திற், பெருத்திடச் செம்பினிற் காளிதம் போலப் பிணைந்துளவே" (20) எ - து கண்டுகொள்க. நித்த மூலமல மென்றது முத்தியினும் மலமழியாதென்றதென அறிக. இதற்கு பி - ம் உண்மைவிளக்கத்தில் "முத்திதனின் மூன்று முதலும்"

(50) என்ற செய்யுளின் முடிவிலே "இத்தைவிளை வித்தல் மலம்" எ - று கண்டுகொள்க. இனி அறிவு முழுதினையும் மறைக்கும் எ - கு ஆன்மாவின் இச்சாஞானக்கிரியைகளைச் சற்றும் சீவிக்கவொட்டாத படி மலம் மறைக்குமென்று பொருள்படுத்தினதற்கு பி - ம் சித்தி யாரில் "சீவனு மிச்சாஞானக் கிரியையாற் சிவனை யொப்ப, ளுவ னென் றிடிலாதி மலமிவற் றினைமறைக்கும்" (1. 64) எ - று கண்டுகொள்க. இனி, பாகமாம் வகைநின்று திரோதானசத்தி பண்ணுதலால் எ - கு சிவனுடைய அருட்சத்தியானது திரோதாயி யாய் நின்று மலங்களைக் காரியப்படுத்துமென்று பொருள் படுத்தின தற்கு பி - ம் சித்தியாரில் "ஏயுமும் மலங்கள் தத்தந் தொழிலினை யியற்ற வேவுந், தூயவன் தனதோர் சத்தி திரோதான கரிய தென் றும்" (2. 87) எ - ம் வருமது கண்டுகொள்க. இனி, அதுபரிந்து நாகமா நதிமதியம் பொதிசடையா னடிகள் நணுகும்வகை கருணை மிக நயக்குந் தானே எ - கு அந்த அருளானது திரோதமாய் நின்று ஆன்மாக்களுக்கு மலபாகம் வருத்தி மீளவும் பழைய அருளாய்க் கிருபை ஜநிக்குமென்ற தெங்ஙனேயென்னில் மாதாவானவள் பிள்ளைகளிடத்திற் குற்றங்கண்டு கோபித்து மீளவுங் குணங்கண்ட வாறே பிரியப்பட்டாற்போலவென அறிக. இதற்கு பி - ம் திரு வாசகத்தில் "பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்-பாதத் திறம்பாடி யாடேலோ" (7. 14) எ - ம், இந்நூலினும் "முற்சின மருவு திரோதாயி கருணை யாகி" எ - ம் வருமேதுக்களைக் கண்டு கொள்க.

இதனுற் சொல்லியது ஆணவமலமானது ஆன்மாவை மறைக்கு முறைமையும் அந்த மலத்தை யருட்சத்தியானது திரோதாயியாய் நின்று பாகம்வருத்தி மீளவும் பழைய அருளாய்க் கிருபை ஜநித்து அப்படி மலபாகம் வந்த ஆன்மாக்களைச் சிவனுடைய திருவடியிலே கூட்டுவிக்கும் முறைமையும் அறிவித்தது. உ

இங்ஙனஞ் சொல்லப்பட்ட அருளாகிய திரோதாயிசத்தி அந்த ஆணவமலத்தைப் பாகம்வருத்து முறைமை எங்ஙனேயென்று வினவ அந்தத் திரோதாயி சத்தியானது இச்சா ஞானக் கிரியாசத்திகளைத் தோற்றுவித்து அவையிற்றைக்கொண்டே சுத்தமாயையிலும் அசுத்த

மாயையிலுமுண்டான தனுகரண புவனபோகங்களைத் தோற்றுவிக்கு மிடத்து அவையிற்றோடும் ஆன்மாக்களைக் கூட்டிக் கன்மத்தைப் புசிப்பித்து மலபாகம் வருத்தவேண்டுகையால் அதில் சுத்தமாயையின் தோற்ற முந்த அருளிச்செய்வான் எடுத்துக்கொண் டருளியது.

21. உன்னலரும் பரசிவன்தன் அருளாலே நாதம்
உதிக்கும்மிகுங் குடிலைதனில் விந்துவரும் நாதந்
தன்னில்அதி ஞெளிவளரும் சதாசிவராம் அவரில்
தயங்கவரும் ஈசர்வித்தை தனைஅளிப்பர் அதனுல்
மன்னுவர்இவ் வகைஐவர் வாய்மையினுல் முன்னே
வந்திடுமென் றுரைசெய்த விந்துவழா வகையே
முன்னுதவும் சூக்குமாதி ஒருநான்கும் என்று
மொழிந்திடுவர் அருங்கலைகள் முதிர்ந்து ளோரே. ௩

வைத்தமா மாயையின் வாக்கு நான்குஞ்
சுத்ததத்துவ மைந்துந் தோன்று மென்றது.

(உரை) உன்னலரும் பரசிவன்தன் அருளாலே மிகுங் குடிலைதனில் நாதம் உதிக்கும்-மனத்தினுல் நினைதற்கரிய பரமசிவனுடைய பராசத்தியாலே குடிலையாகிய மாமாயையிலே நாததத்துவந் தோன்றும்; நாதந்தன்னில் விந்துவரும் - முற்கூறிய நாதத்திலே விந்துதத்துவந்தோன்றும் ; அதிஞெளிவளருஞ் சதாசிவராம் - அந்த விந்துவிலே பிரகாசமிக்க சாதாக்கியதத்துவந் தோன்றும் ; அவரில் தயங்கவருமீசர் - அந்தச் சாதாக்கியத்திலே விளக்கமாக வரும் ஈசுர த்த்துவந் தோன்றும் ; வித்தைதனை யளிப்பர் - அந்த ஈசுரருஞ் சுத்த வித்தையைத் தோற்றுவிப்பர் ; அதனுல் இவ்வகை ஐவர் மன்னுவர் - முற்கூறிய வகைகளாற் குடிலையுபாதானமாக இந்தத் தத்துவங்கள் ஐந்துந் தோன்றின வொழுங்கிலே தத்துவ கர்த்தாக்கள் ஐவருந் தோன்றி இந்தத் தத்துவங்களோடும் பொருந்தி நிற்பர்கள்; வாய்மையினுல் முன்னே வந்திடுமென்றுரைசெய்த விந்து - உண்மையாக முன்பே நாதத்திலே தோன்றுமென்று சொல்லப்பட்ட விந்துவிலே ; வழாவகையே சூக்குமாதி ஒருநான்கும் முன்னுதவும் - தப்பாத முறைமையினுலே சூக்கும முதலாகிய வாக்குக்கள் நாலையும்

முற்கூறிய சிவசத்திகள் தோற்றுவிக்கும்; என்று மொழிந்திடுவர் அருங்கலைகள் முதிர்ந்துளோரே - என்றிங்ஙனஞ் சொல்லுவர்கள் அரிய நூல்களையுணர்ந்த பெரியோர்கள்.

உன்னலரும் பரசிவன் எ - கு மனத்தினால் நினைத்தற்கரிய பரம சிவனென்று பொருள்கூறியது ஏதென்னில் அந்த நிஷ்களசொரூபியாயிருக்கின்ற பரமசிவனை ஆன்மபோதத்தாற் சுட்டியறிய வொண்ணாதபடியாலே அப்படிச் சொன்னதென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "தன்னறிவதனாற் காணுந்தகைமைய னல்ல னீசன்" (6. 8) எ - ம், கோயிற்புராணத்தில் "காரணங் கற்பனை கடந்த கருணை" (3) எ - ம், இந்நூலினும் "நாடரிய கருணை" (14) எ - ம் வரும் ஏதுக்களைக் கண்டுகொள்க. பரசிவன் அருளாலே எ - கு பரம சிவனுடைய பராசத்தியாலே குடிலையிலே நாதந் தோன்றுமென்று பராசத்தியின் மேல்வைத்துப் பொருள்படுத்தினதற்கு வழியே தென்னில் அந்தப் பரமசிவமானது பிரபஞ்சத்தைக் காரியப்படுத்து மிடத்துத் தனது சத்தியை விரித்து அதுவே யுடம்பாகநின்று காரியப்படுத்துகையால் அப்படிச் சொன்னதென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "முன்னருட் சத்திதன்பால் முகிழ்க்குந்தான் முனையானன்றே" (1. 68) எ - ம், இந்நூலினும் "நீடுபரா சத்தி நிகழிச்சா ஞான நிறைகிரியை தரவதனை நிமலன் மேவி, நாடரிய கருணைதிருவுருவ மாகி" (14) எ - ம், ஞானபூசைத் திருவிருத்தத்தில் "இன்புருவச் சிவன் படைத்தற் கிச்சை காலத் திசைவுழிவித் தியாதேகியாகியெழிற் கிரியை, முன்பெருகக் குடிலையினை யடைந்து நாத முந்துவிந்தக் கரமனுநன் மொழிமுறையே வகுத்துத், தன்பொருவில் மந்திரத்தாற் சதாசிவாதி யுதவி" (12) எ - ம் வருமது கண்டுகொள்க.

இங்ஙனஞ் சொல்லப்பட்ட சிவசத்திகளாலே குடிலையிலே தோன்றுமென்ற நாதவிந்து முதலாகிய தத்துவங்களுக்கு வகுப்பே தென்னில் நாதமென்றது சர்வான்மாக்களுக்கும் அறிவை யெழுப்புவித்து நிற்கிற ஞானமென அறிக; விந்து என்றது சர்வான்மாக்களுக்கு முண்டாகிய தொழிலை யெழுப்புவித்து நிற்கிற கிரியையென அறிக. சாதாக்கியமென்றது அந்த ஞானமுங் கிரியையுமாகிய நாத

விந்துக்கள் இரண்டுங் கூடின அவதரமென அறிக ; ஈசுரமென்றது கிரியையேறி ஞானங் குறைந்துநின்ற அவதரமென அறிக; சுத்த வித்தையென்றது ஞானமேறிக் கிரியை குறைந்துநின்ற அவதர மென அறிக. இவையிற்றுக்கு பி - ம் தத்துவவிளக்கத்தில் "ஆய்ந் தவத் தத்துவம் ஐந்தா வனசிவ தத்துவத்தோ, டேய்ந்தவச் சத்தி சதாசிவ மீசனும் வித்தையுமென், ரோர்ந்தறி வித்தினுக் குண் ணெகிழ்ப் பானது சத்தியத்திற், போங்தெழு மங்குர மைமுகத் தோனென்று போற்றுவரே" என்றதை இந்தத் தத்துவங்கள் ஐந்துஞ் சிவசத்தியாலே குடிலையிலே தோன்றுமென்பதற்குக் கண்டுகொள்க. இந்தத் தத்துவங்கள் ஏறியுங் குறைந்தும் ஒத்துநின்றதற்கு பி - ம் தத்துவ விளக்கத்தில், "போற்றும் பரத்திற் பொதிகின்ற ஞானங் கிரியைபெற்றுத், தோற்றுஞ் சதாசிவ முன்னதை ஞானங் கிரியை குன்றில், தேற்றிய வித்தை யிவற்றின் திரிவு மகேசன்மயல்,மாற்றுஞ் சிரபுரத் தெங்கோ னெறியில் வகுத்தனவே" எ - ம் சித்தியாரிலும் "ஞானமே யானபோது சிவன்ஞெழில் ஞானமொக்கில், ஈனமில் சதா சிவன்பே ரீசனுந் தொழில தேறில், ஊனமேற் கிரியை வித்தை யுருத் திர னிலய போக, மானபே ரதிகா ரத்தோ டதிகர ணத்த னுமே" (1. 65) எ - து கண்டுகொள்க. இவையிற்றின் முற்கூறிய விந்துவும் நாதமுஞ் சர்வான்மாக்களுக்கும் அறிவையுந் தொழிலையும் உண் டாக்குமென்று முன்சொன்னதற்கு பி - ம் சித்தியாரில் "மூவகை யணுக்க ளுக்கு முறைமையால் விந்து ஞான, மேவின தில்லை யாகில் விளங்கிய ஞான மின்றும்" (1. 26) எ - து கண்டுகொள்க. அதனல் மன்னுவர் இவ்வகை ஐவர் எ - கு முற்கூறியவகையாற் குடிலை யுபாதானமாகத் தத்துவங்கள் ஐந்துந் தோன்றின ஒழுங்கிலே தத்துவ கர்த்தாக்கள் ஐவருந் தோன்றி இந்தத் தத்துவங்களோடும் பொருந்தி நிற்பார்களென்று பொருள்படுத்தினதற்கு வழியேதென்னில், முற் கூறிய வகையாவது அந்தச் சிவமுஞ் சத்தியுங் குடிலையிலே பொருந் தின அவதரத்து அந்தக் குடிலை யுபாதானமாகச் சிவதத்துவங்கள் தோன்றுகையால் அந்தச் சிவமுஞ் சத்தியும் அந்தத் தத்துவங்கள் உடம்பாகவும் அதிஷ்டித்துத் தத்துவ கர்த்தாக்கள் ஐவராக நிற்கை யாலே யப்படிச் சொன்னதென அறிக; அதற்கு வழியேதென்னில்,

நாததத்துவ முடம்பாகச் சிவமதிஷ்டித்து நிற்கையாலும், விந்து தத்துவம் உடம்பாகச் சத்தி யதிஷ்டித்து நிற்கையாலும், அந்த நாத மும் விந்துவுங்கூடின சாதாக்கியம் உடம்பாக அந்தச் சத்தியுஞ் சிவ முங்கூடி சதாசிவமாக அதிஷ்டித்து நிற்கையாலும், கிரியையேறி ஞானங்குறைந்து ஈசுரம் உடம்பாக மஹேசுரம் அதிஷ்டித்து நிற்கை யாலும், ஞானமேறிக் கிரியை குறைந்து சுத்தவித்தையுடம்பாக உருத் திரன் அதிஷ்டித்து நிற்கையாலும், தத்துவங்கள் உடம்பாகத் தத்துவ கர்த்தாக்கள் பொருந்தி நிற்பர்களென அறிக. என்றிங்ஙனந் தத்துவம் உடம்பாகத் தத்துவ கர்த்தாக்கள் பொருந்தி நிற்பார்களென்பதற்கு பி - ம் சித்தியாரில் "வித்தையோ டீசர் சாதாக் கியஞ்சத்தி சிவங்கள் ஐந்துஞ், சுத்ததத் துவஞ்சி வன்றன் சுதந்தர வடிவ மாகும், நித்த மென் றுரைப்பர் கால நீங்கிய நிலைமை யாலே, வைத்திலர் முற்பிற் பாடு வருவித்தார் கருமத் தாலே" (1. 66) எ - து கண்டுகொள்க. என்றிங்ஙனஞ் சிவன்றன் சுதந்தர வடிவமாகுமென்று சிவமொன்றை யுஞ் சொல்லியிருக்கச் சத்தியையுங் கூட்டித் தத்துவ கர்த்தாவாகச் சொன்னதேதென்னில் அந்தச் சிவமுஞ்சத்தியும் பின்னமற்றிருக்கை யால் சிவத்தைச் சொல்லவே சத்திக்குமாமென்பது கருத்து. அப்ப டிச் சத்தி சிவமிரண்டும் பின்னமற்றிருக்கும் என்பதற்கு பி - ம் சித் தியாரில் "சத்திதா னாத மாதி தானாகுஞ் சிவமு மந்தச், சத்திதா னாதி யாகுந் தருவடி வான வெல்லாஞ், சத்தியாஞ் சத்தன் வேண்டிற் றெல்லாமாஞ் சத்தி தானே" (2. 76) எ-து கண்டுகொள்க. என்று இங்ஙனம் முற்கூறிய வகைகளால் நாதவிந்து இரண்டு தத்துவமும் ஐந்தாக விரிகையால் சத்திசிவமிரண்டுந் தத்துவ கர்த்தாக்கள் ஐவ ராக நிற்பதை யநுபவத்தாற் கண்டுகொள்க. என்றிப்படித் தத்துவ மென்றுந் தத்துவ கர்த்தாக்களென்றும் இருவகையாயிருக்கத் தத்து வங்களின்பேர் தத்துவ கர்த்தாக்களுக்குச் சொல்லியும் தத்துவ கர்த் தாக்களின் பெயர் தத்துவங்களுக்குச் சொல்லியும் வருகைக்கு வழியேதென்னில் தத்துவங்கள் உடம்புந் தத்துவ கர்த்தாக்கள் உயிரு மாய் நிற்கையாலே உடம்புக்கிட்ட பேர் உயிருக்கு நின்முற்போலத் தத்துவங்களின் பேர் தத்துவ கர்த்தாக்களுக்கு நிற்கையாலும், விளக் குச் சுடரெரியுந் தகளி விளக்கென்று பேர்பெற்முற்போலத் தத்

துவ கர்த்தாக்களின்பேர் தத்துவங்களுக்கு நிற்கையாலும் அப்படிச் சொன்னதென அறிக.

இனி, விந்து வழாவகையே முன்னுதவு சூக்குமாதி யொரு நான்கும் எ - கு விந்துவிலே நின்றுந் தோன்றப்பட்ட வாக்கு கள் நாலையுஞ் சிவசத்திகள் தோற்றுவிக்குமென்று பொருள்படுத் தினதற்கு வழியேதென்னில் அந்த விந்துவானது சடமானபடி யால் அது தானுகத் தோற்றுவிக்க மாட்டாதாகையால் அப்படிச் சொன்னதென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "விந்து வின் மாயை யாகி" (1. 19) என்ற விருத்தத்தில் "விந்துத்தன் பால் வைகரியாதி" எ-ம், "சிவனவன்றன் சந்நிதி தன்னினின்றே" எ - ம் வருகையால் அப்படிச் சொன்னதென அறிக. சந்நிதி யென்றது அந்தச் சிவனுடைய சத்தியையென அறிக. அன்றியும் முன்னுதவு சூக்குமாதி யொருநான்கு மென்ற வும்மைகொண்டே வேறேயுஞ் சிலதோன்று மென்பது கருத்தென அறிக. அஃதாவது, முன்சொன்ன விந்துவில் தோற்றமாகிய வாக்குக்கள் நாலுமன்றியே ஐம்பத்தோரக்கரமும் எண்பத்தொரு பதமுஞ் சத்தகோடி மஹா மந் திரங்களும் வேதாகம புராண சாத்திரங்களும் விஞ்ஞானகலர் பிர ளயாகலருக்குத் தனுகரண புவன போகங்களுந் தோன்றுமென்பது கருத்தாகையால் அப்படிச் சொன்னதென அறிக. இவையிற்றுக்கு பி-ம் கோயிற்புராணத்தில் "சத்திகளிற் கருத்திருத்தித் தாவிலரு மா மாயை, உய்த்ததனி நாதாதி யைவகையு முதிப்பித்து, வைத்தெழுத்து மொழிமறைநூன் மந்திரமே முதலான, சுத்தவழி விரித்த சுத்த தத் துவங்கள் தொகுமுதலில்" (231) எ - ம், சித்தியாரில் "வித்தைகள் வித்தை யீசர் சதாசிவ ரென்றி வர்க்கு, வைத்துறும் பதங்கள் வன்னம் புவனங்கள் மந்திரங்கள், தத்துவஞ் சரீரம் போகங் கரணங் கள் தாமெலாமும், உய்த்திடும் வயிந்த வந்தான் உபாதான மாகி நின்றே" (1. 25) எ - து கண்டுகொள்க. வயிந்தவமென்றது குடிலை யாகிய சுத்த மாயையையென அறிக. சுத்த மாயை படங்குடிலானுற் போலக் காரணமுங் காரியமுமாக நிற்கையால் சுத்த மாயையைச் சொல்லவே அதன் காரியமாகிய விந்துவுக்குமாமென்பது கருத்தென அறிக. இனி, அருங்கலைகள் முதிர்ந்து ளோரே எ - கு அரிய நூல்

களை யுணர்ந்த பெரியோர்களென்று பொருள்படுத்தினது ஏதென்னில் அரிய நூல்களை யுணர்ந்தவர்கள் இங்ஙனங் கூறிய பொருளுக்கு மாறுபாடு சொல்லுவர்கள் என்பதனுல் அப்படிச் சொன்னதென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "சுத்தவடி வியல்பாக வுடைய சோதி" (பரபக்கம், 9) என்னும் விருத்தத்தில் "பித்தர்குண மது போல வொருகா லுண்டாய்ப் பின்னொருகா லறிவின்றிப் பேதை யோராய்க், கத்திடுமோன் மாக்களுரைக் கட்டிற் பட்டோர் கனக வரை குறித்துப்போய்க் கடற்கே வீழ்வார்" எ - து கண்டுகொள்க.

இதனுற் சொல்லியது மேலான சிவசத்திகளாலே சுத்தமாயையிலே நின்று நாத விந்து முதலான தத்துவங்கள் தோன்றுமென்றும், அந்தத் தத்துவங்கள் உடம்பாக முற்கூறிய சிவசத்திகள் இரண்டுந் தத்துவ கர்த்தாக்களாக அதிஷ்டித்து நிற்பர்களென்றும், அதிலே விந்து சத்தியிடமாகச் சூக்குமை பைசந்தி மத்திமை வைகரி யென்னும் வாக்குகள் முதலானவைகள் எல்லாந் தோன்றுமென்னும் முறைமையும் அறிவித்தது. ௯

இங்ஙனஞ் சுத்த மாயா காரண காரியத்தின் இயல்பருளிச் செய்து மேல் அசுத்த மாயா காரணத்தின் இயல்பை அருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

22\. உருவாதி சதுவிதமாய் ஒன்றொன் றுவ்வா
உண்மையதாய் நித்தமாய் ஒன்று யென்றும்
அருவாகிக் கன்மமார் அணுக்கள் யார்க்கும்
ஆவார மாய்அசித்தாய் அசல மாகி
விரிவாய தன்செயலின் வியாபியாய் எல்லாம்
விரிந்தவகை புரிந்தடைவின் மேவியவை ஒடுங்க
வருகாலம் உயிர்களெல்லாம் மருவிடமாய் மலமாய்
மன்னியிடும் அரனருளால் மாயை தானே. ௨௨

உன்னிய சகலர்க் குடம்பு முதலாய்
மன்னிய வசுத்த மாயையை வகுத்தது.

**(உரை)** உருவாதி சதுவிதமாய் - தேக முதலானவை நாலு பிரகாரமாவதேதென்னில் தனுவென்றுங் கரணமென்றும் புவனமென்

றும் போகமென்றும் வரும். அவையாவன : தனுவென்றது பஞ்ச பூதங்களும் அவையிற்றின் காரியங்கள் இருபத்தஞ்சுங்கூடின பூததேகத்தையென அறிக ; கரணமென்றது உட்கரணங்கள் புறக்கரணங்களென அறிக ; புவனமென்றது கன்மம் புசிக்கைக்குண்டான இருப்பிடத்தையென அறிக; போகமென்றது இவனுக்குப் புசிப்பாயுள்ள சத்தாதி விடயங்களையென அறிக ; ஒன்றொன் றொவ்வா வுண்மையதாய் - அவை நாலினு மொன்றையொன் றொவ்வா முறைமையினையுடைத்தாய் ; ஒன்றையொன் றொவ்வா முறைமையாவது தனுப்போலல்ல கரணம், கரணம்போலல்ல புவனம், புவனம்போலல்ல போகம் என அறிக ; நித்தமாய்-ஒரு காலத்தினும் அழியாததாய் ; ஒரு காலத்தினும் அழியாததாவது தன் காரியமாயுள்ளவை சங்கார காலத்தழியினும் அப்பொழுதும் அழியாமல் நிலைபேறாய் நிற்பதாயென்றதென அறிக ; ஒன்றாய் - அப்படித் தனுகரண புவனபோகங்களாய் நின்றுங் காரியப்பட்டும் மூலகாரணமொன்றா யிருப்பதாய் ; என்றும் அருவாகி - எக்காலமும் அரூபமாயிருப்பதாய் ; எக்காலமுமாவது அந்தத் தனுகரண புவனபோகங்களாகப் பிரபஞ்ச காரியப்படுங் காலத்தும் அவையொழிந்த காலத்துந் தான் கட்புலனுக்குத் தெரியாதாகையாலேயென அறிக; கன்ம மார் அணுக்கள் யார்க்கும் ஆவாரமாய் - கன்மமானது பொருந்த நின்று புசித்து முடிந்துபோம்படிக்கு ஏதுவாயுள்ள ஆன்மாக்களுக்கெல்லாந் தாரகமாய் ; அஃதாவது ஆன்மாக்கள் கன்மந் தொலைந்தே முத்திபெறவேண்டுகையால் அந்த கன்மமானது முடிந்துபோம்படி புசிக்குமிடத்து மாயாசரீரமெடுத்து அதனோடுங் கூடிநின்று புசித்துத் தொலையவேண்டுகையால் இந்த மாயையந்தக் கன்மங்களுக்கேற்ற சரீரங்களைக்கொடுத்து நிற்கையால் அப்படிச் சொன்னதென அறிக ; அசித்தாய் - சித்தல்லவாய் ; சித்தல்லவாவது இந்த மாயை அப்படி யான்மாக்களுக்குத் தாரகமாயிருந்துந் தனக்கென்னவோர் அறிவுமில்லையாய்ச் சுத்த சடமுமா யிருக்கையாலென அறிக ; அசலமாகி - சலனமில்லாததாய் ; சலனமில்லாததாவது எண்ணிறந்த ஆன்மாக்களுக்கும் எடுக்குமெடுக்கும் ஜநநங்கள் தோறும் அதற்கதற்கேற்ற வெகுவிதமான சரீரங்களைக் கொடுத்துந் தான் சலிப்பற்று நிற்கையாலென அறிக ; விரிவாய தன் செய,

வின் வியாபியாய் - பரப்பாயுள்ள தன் செயலாலே சுத்தமாயைக் கப்பாலளவும் வியாபகத்தையுடையதாய்; சுத்த மாயைக் கப்பா லென்றது அதனைப்போல வியாத்தமன்றியே தன் காரியமாயுள்ள முப்பத் தொன்றுக்குமுள்ள வியாத்தந் தனக்கும் உடையதென்ற தென அறிக; எல்லாம் விரிந்தவகை புரிந்தடைவின் மேவி - தன் காரியமாயுள்ளவையெல்லாந் தோன்றின அடைவிலே தானும் ஒக் கக் கூடிநின்று; தன் காரியமாவது கலையாதி மண்ணுந்தம் அளவாக வுள்ள முப்பத்தொரு தத்துவமும் அவையிற்றில் அடங்கிவரப்பட்ட நால்வகைத் தோற்றமும் எழுவகைப் பிறப்புமென அறிக; அவை ஒடுங்கவரு காலமும் உயிர்க ளெல்லாம் மருவிடமாய் - அந்தக் காரி யங்களெல்லாந் தன்னிடத்திலே யொடுங்கத்தக்கதாக வருகிற சங்காரகாலம் அந்தக் காரிய ரூபத்தைப்பற்றி நின்ற ஆன்மாக்களுக் குந் தன்னிடத்திலே பொருந்துகைக்கிடமுமாய்; அன்றியும் இதனை எல்லாம் விரிந்தவகை புரிந்தடைவின் மேவி யவையொடுங்க வரு கால முயிர்களெல்லா மருவிடமாய் என்றொரு பதமாக்கி, இதற்குத் தன்னிடத்திலே தோன்றப்பட்டவெல்லாம் ஒடுங்குங்காலந் தோன் றின அடைவிலே யொன்றிலே யொன்றாகப் பொருந்தி யவையெல் லாந் தன்னிடத்திலே யொடுங்கத்தக்கதாக வருகிற சங்கார காலம் அந்தப் பிரபஞ்ச ரூபத்தைப்பற்றி நின்ற ஆன்மாக்களுந் தன்னிடத் திலே பொருந்துகைக்கும் இடமுமாய் என்று பொருளுரைப்பி னும் அமையும். ஆன்மாக்கள் பொருந்துகைக் கிடமென்றது எதா லென்னில், ஆன்மாக்கள் அநாதியே மலசகசராகையாலே யந்த ஆணவமலபாகம் வந்தே சிவனுடைய திருவடியைக் கூடவேண்டு மாகையால் அவ்வளவும் "ஒடுக்கமிளைப் பொழித்தல் மற்றைத் தோற்ற மலபாகம் வர" (சிவப்பிரகாசம், 18) என்றும், "மாயை கொடு மலமொழிப்பன் முன்னோன்" (சித்தி. 2. 52) என்றும் நூல்களிலே சொல்லி வருகையால் ஒடுங்குங்காலங் காரண மாயை யிலே யொடுங்கியும் தோன்றுங்காலங் காரிய மாயையோடுந் தோன்றியும் வருகையால் அப்படிச் சொன்னதென அறிக; மல மாய் - எண்ணப்பட்ட மலங்களிலே தானுமொரு மலமாய்; எண்ணப்பட்ட மலமாவது ஆணவம் மாயை காமியம் என்றும்,

அன்றியும் மல மாயை கன்மம் மாயேயந் திரோதாயி என்றும் எண்ணப்பட்ட மலங்களிலே தானுமொரு மலமாயென்றதென அறிக; மன்னியிடும் - இங்ஙனம் நிலைபெற்றுவரும்; நிலைபெறுவது இந்த மாயையானது சிருஷ்டி காலத்துக்குஞ் சங்கார காலத்துக்குந் தனக்கொரு போக்குவரவின்றியே தன்னுடைய வியாத்தி நிலைகுலையாமல் அசைவற்று நிற்கையாலே யப்படிச் சொன்னதென அறிக; அரனருளால் மாயை தானே - இங்ஙனம் நிலைபெற்று வருகிறதுதான் யாராலேயென்னில் தம்பிரானார் காருண்ணியத்தினாலே நிலைபெற்று வரும் அசுத்த மாயைதான். அரனருளால் என்பதற்குத் தம்பிரானார் சத்தியாலே யென்று பொருளுரைப்பினுமாமென அறிக.

இங்ஙனஞ் சங்கார காலம் ஆன்மாக்கள் காரண மாயையிலே யொடுங்குவார்களென்று சொல்லியிருக்கக் கேவலக்குறி சொல்லுமிடத்து "மலத்தினோடும் வியாபி கேவலத்தி லான்மா" (சித்தி. 4. 38) என்றும், "மலமின்றி யொன்று மில்லை" (சிவப். 33) எ - ம், "இயல்பால்" எ-ம், "கேவலத்தி லாணவ மலமொழிய மற்றொன்று மில்லை" எ - ம் நூல்களிற் சொல்லுவான் ஏனென்னில், அஃதாவது: ஆணவ மலத்துக்குச் சுபாவஞ் செம்பைக் காளிதம் மறைத்தாற்போலவும் அக்கினியைக் காட்டம் மறைத்தாற்போலவும் ஆன்ம போதத்தை மறைத்து அறியாமையைப் பண்ணி நிற்பதாதலாற் கேவலத்தில் அறிகருவியாயுள்ள தத்துவங்களும் நீங்கி அறியாமையே வடிவாய்க் கிடக்கையால் அப்படிச் சொன்னதென அறிக. அப்படியானால் அந்த ஆணவமல மறைப்புத்தான் ஒடுக்கமாகாதோ, சங்காரகாலத்துக்கு ஆன்மாக்கள் மாயை ஆதாரமாக ஒடுங்குவார்களென்பான் ஏனென்னில், அப்படி யாணவத்தால் மறைப்புண்டு கிடந்தாலும் அந்த மறைப்புத் தாரகமாகா தென்றபடியால் மாயை தாரகமாக ஒடுங்க வேண்டுகையாலே யப்படிச் சொன்னதென அறிக. அப்படி யாணவமலம் மறைத்தாலும் மாயை தாரகமாக ஒடுங்குகைக்கு வழியேதென்னில், முற்கூறிய உபமானத்தில் காளிதத்தால் மறைப்புண்ட செம்பு உருக்கும் பொழுது பூமி முதலான தாரகங்களைப் பற்றி யிருந்தாற்போலவும் மற்றக் காட்டமும் அப்படிக்குப் பூமி முதலான தாரகங்களைப்பற்றி யிருந்தாற் போலவும்

ஆன்மா நித்திரையிற் கேவலப்பட்டுக் கிடக்கும் அவதரத்து சீவிக்குங் கருவிகளெல்லாம் நீங்கி ஆணவ மலத்தான் மறைப்புண்டு உடல் தாரகமாக மூலாதாரத்திலே ஒடுங்கிக் கிடக்கையாலுஞ் சங்கார கேவலத்துக்கும் அப்படி மாயையிலே ஒடுங்குமென்று சொன்னதென அறிக. அப்படி நித்திரையிற் கேவலத்துக்கு ஆன்மா உடல் தாரகமாக ஒடுங்குமென்பதற்கு பி - ம் சிவஞானபோதத்தில் "அவ்வுடலி னின்றுயிர்ப்ப ஐம்பொறிகள் தாங்கிடப்பச், செவ்விதி னவ்வுடலிற் சென்றடங்கி" (3. 4) எ - ம், சித்தியாரில் "உடலினி லஞ்ச வத்தை யுறுமுயிர் காவலாக" (4. 32) எ - ம், இருபாவிருபஃதில் "உடல கத்து மூலத் தொடுங்க" (9) எ - ம் வருமேதுக்களைக் கண்டுகொள்க. அன்றியும் கேவலத்தில் ஆணவ மலமன்றியே மாயாகாரணம் உண்டென்பதற்கு அநுபவம் ஏதென்னில், அந்த ஆணவமல மறைப்பாக மூலாதாரத்திலே ஒடுங்கிக் கிடக்கும் அவதரத்து அவ்விடத்திலே காரிய மாயையாயுள்ள கலையாதி தத்துவங்கள் தோன்றி அந்த ஆணவமல மறைப்பை நீக்குகையாலே முளையுள்ள இடத்திலே கிழங்குண்டென்று கண்டாற்போலக் கலையாதி தத்துவங்கள் தோன்றுகைக்குக் காரணமாயுள்ள மாயையும் அவ்விடத்திலே யுண்டென்பது கண்டுகொள்க. அப்படிக் கேவலத்தில் மாயையிலே நின்றுங் கலையாதி தத்துவங்கள் தோன்றும் என்பதற்கு பி - ம் திருமந்திரத்தில் "மாயை யெழுப்புங் கலாதியை மற்றதில், ஏய வராகாதி யெய்துந் துரியத்துத், தோயுஞ் சுழுனை கனவொடுந் துன்னியே, ஆயின னந்தச் சகலத்து ளானே" (2168) எ - து கண்டுகொள்க. என்னவே துரியத்தில் அராகாதி யென்பது கொண்டே அதீதத்திற் கலாதிகளென்பது கண்டுகொள்க. அன்றியும் சித்தியாரிலும் "மாயையிற் கால மோடு நியதி பின் கலாதி தோன்றும்" (2. 54) எ - ம், "மாயையின் வயிற்றுண் மன்னி வருஞ்செயல் ஞான மிச்சை, ஏயுமக் கலாதி மூன்றால் ஏகதே சத்தி னேய்ந்து" (4. 21) எ - ம் வருவதும் இப்பொருள் பற்றியென அறிக.

அப்படிக் கேவலத்தில் மலமும் மாயையுங் கூடி நிற்குமேயானல் மலத்தை இருளென்றும் மாயையை ஒளியென்றும்

நூல்களிற் சொல்லியிருக்க இருளாகிய கேவலத்திலே ஒளியாகிய மாயையுங் கூடிநிற்கும் என்னலாமோவென்னில், அப்படி ஒளியென்று சொல்லப்பட்டது அந்தக் காரண மாயையிலே நின்றுந் தோன்றி ஆணவமல மறைப்பை நீக்கப்பட்ட கலையாதி தத்துவங்களாகிய காரிய மாயையையென அறிக. அப்படி ஆணவமல மறைப்பை நீக்குகிற கலையாதி தத்துவங்களை ஒளியென்பதற்கு பி - ம் சித்தியாரில் "போதகா ரியமறைத்து நின்றது புகல்மலங்காண், ஓதலாங் குணமு மாக வுயிரினுள் விரவ லாலே, காதலா லவித்தை சிந்தத் தருங்கலை யாதி மாயை, ஆதலா லிரண்டுஞ் சோதி யிருளென வேறு மன்றே" (2. 84) எ - ம், இந்நூலினும் "புகலுமல மொழித்தற்குக் கலாதிமுதல் மாயை பொருந்தியிடும்" (37) என்ற செய்யுளில் "இகலிவரு மிவையுணரி லிருள்வெளியாந் தன்மை யெய்தும்" எ - ம் கண்டுகொள்க. அன்றியும் இச்செய்யுளின் கருத்தாகிய "மலநிலை யொதுங்க மாயா காரியங் - குலவிடு மிருளொளி குறியிதற் கென்றது" எ - ம், கலையாதி தத்துவங்களை ஒளியென்பதற்குச் சிவஞானபோதத்தினும் "கலையாதி மண்ணுந்தங் காணிலவை மாயை - நிலையாவாந் தீபமே போல" (3. 7) எ - ம், "மாயா தனுவிளக்காய்" (4. 5) எ-ம், திருவருட்பயனிலும் "விடிவா மளவும் விளக்கனைய மாயை-வடிவாதி" (30) எ-ம் வரும் ஏதுக்களையுங் கண்டுகொள்க. ஆக இங்ஙனங் கலையாதி தத்துவங்களாகிய காரிய மாயையை ஒளியென்றது கொண்டே ஆன்மாக்கள் கேவலத்தில் மாயா காரணந் தாரகமாக ஒடுங்குவார்களென்பதை அநுபவத்தாற் கண்டுகொள்க. அப்படி நித்திரையிற் கேவலத்துக்கு ஆன்மாக்கள் மாயையிலே ஒடுங்குவார்க ளென்பதுகொண்டே சங்கார கேவலத்துக்கும் மாயையிலே ஒடுங்குவார்களென்று சொல்லலாமோவென்னில், முன்னே நித்திரையிற் கேவலத்துக்கு "மலமன்றி யொன்றுமில்லையெனு மியல்பாய்" (33) என்று ஆணவ மறைப்புக்குச் சொன்னதைச் சங்கார கேவலத்துக்கு உபமானமாகக் கேட்கையால் இதற்கும் அப்படிச் சொல்லப்படுமென அறிக. அன்றியும், நித்திரையிற் கேவலம்போல இருக்குஞ் சங்கார கேவலமும் என்பதற்கு பி-ம் தத்துவ விளக்கத்தில் "எல்லியி னித்திரைப் போலிளைப் பாற்றுஞ்

அணுக்களையே " எ - ம், இந்நூலினும் " நீக்கமி லதீத மாசு நிறைந் தகே வலமா நீர்மை " (62) எ - ம் கண்டுகொள்க. ஆகையால் ஆன் மாக்களுக்கு ஆணவமலம்போல மாயையும் அநாதிகாரணமாகையால் மலம் மறைக்க மாயை தாரகமாக ஒடுங்குவார்களென்பதை அநு பவத்தாற் கண்டுகொள்க. அப்படியானால் ஒரு மலத்தையுடைய விஞ் ஞானகலர் அந்த ஆணவமலமொன்றோடு நின்றாற்போலச் சகலருந் கேவலத்துக்கு ஆணவமலமொன்றோடுங் கூடி நில்லார்களோ என் னில், அந்த ஒரு மலத்தையுடைய விஞ்ஞானகலரும் அந்த ஆணவ மலபாகம் வருமிடத்து சீவிக்குங்காலஞ் சுத்த மாயா காரியத்தோடுங் கூடிச் சீவித்தும் ஒடுங்குங்காலம் அந்தச் சுத்தமாயா காரணத்திலே ஒடுங்கியும் நிற்கையால் அவர்களுக்கு ஆணவமல மொன்றென்று சொல்ல வேண்டுவதில்லையென அறிக. அவர்களுஞ் சுத்த மாயை யோடுங்கூடி வருவார்களென்பதற்கு பி - ம் சித்தியாரில் " வித்தை கள் வித்தை யீசர் சதாசிவ ரென்றிவர்க்கு, வைத்துறும் பதங்கள் வன்னம் புவனங்கள் மந்திரங்கள், தத்துவஞ் சரீரம் போகங் கர ணங்கள் தாமெலாமும், உய்த்திடும் வயிந்த வந்தா னுபாதான மாகி நின்றே " (1. 25) எ - ம், தத்துவப் பிரகாசத்தினும் விஞ்ஞானகல ருக்கு ஆணவமலமன்றியே திரோதமுஞ் சுத்தமாயையும் உண்டென் பதற்கு பி - ம் " இவ்வுயிர்கள் மூவகையாம் விஞ்ஞானகலர்க ளெழிற் பிரள யாகலர்கள் சகலர்க ளென்றிவரி, னவ்வகையே யாணவமு மாணவமும் வினையும் ஆணவமும் வினையுமா யையுமூன் றுகுஞ், செவ்வையிலே திரோதமுடன் சுத்தமாயை சேர்மூ வகைக்குமுள " எ - ம் நூல்களிற் சொல்லிவருகையால் அவர்களும் ஆணவமல மொன்றோடுங் கூடிநின்றாலுஞ் சுத்த மாயையாலே காரியப்பட் டுப் பாகம் வரவேண்டுகையால் சகலரும் மாயையிலே ஒடுங்கியுந் தோன்றியும் வருவார்களென்பதே துணிபென அறிக.

இனி இந்தச் செய்யுளுக்குப் பதந்தோறும் பொருள் படுத்தி வந்த அவதரத்து அவையொடுங்க வருகாலம் உயிர்களெல்லா மரு விடமாய் எ - கு அந்தக் காரிய ரூபங்கள் காரணத்திலே ஒடுங்குவ தான சங்கார காலம் அந்தக் காரியவுருவத்தைப் பற்றிநின்ற ஆன் மாக்களும் அந்தக் காரணத்திலே ஒடுங்குவார்களென்று பொருள்

படுத்தினதற்கு பி - ம் தத்துவ விளக்கத்தில் "புல்லிய பாசங்க ளுய்த் திடப் போகம் புமானுகர்ந்து,செல்லிய காயத் துறுஞ்செல்ல வீங்கிச் சிரபுரக்கோன், சொல்லிய மண்முத லாயின மாயையி லேதொகுத் தங், கெல்லியி னித்திரைப் போலிளைப் பாற்று மணுக்களையே" எ - து கண்டுகொள்க. அன்றியும் அந்தப் பதத்துக்கு ஆணவமல பாகம் வாராத ஆன்மாக்கள் ஒடுங்குங்காலங் காரண மாயையிலே ஒடுங்கியுந் தோன்றுங்காலம் அந்த ஆணவமல பாகம் வரக் காரிய மாயையோடுந் தோன்றியும் வருமென்று பொருள்படுத்தினதற்கு பி - ம் சித்தியாரில் "உயிரவை ஒடுங்கிப் பின்னு முதிப்பதென் அரன்பா லென்னிற், செயிருறு மலத்தி னுகுஞ் சிதைந்ததே தென் னிற் சித்தத், தயர்வொழி காரியங்க ளழியுங்கா ரணங்கி டக்கும், பயில்தரு காரியம்பின் பண்டுபோற் பண்ணு மீசன்" (1. 32) எ-து கண்டுகொள்க.

என்றிங்ஙனம் உதாரணமாகக் காட்டின இந்தச் சித்தியாரின் செய்யுளிலே ஆன்மாக்கள் ஆணவமலபாகம் வருமளவுஞ் சங்கார கால மாயா காரணத்திலே ஒடுங்கியும் சிருஷ்டிகால மாயாகாரி யத்தோடு தோன்றியும் வருவார்களென்பதற்குப் பொருளாவது:— உயிரவை ஒடுங்கிப் பின்னும் உதிப்பதென் அரன்பா லென்னில் - உம்முடைய கர்த்தாவின் ஆக்கினையின் பகுதியாலே சங்காரகாலம் பிரபஞ்சமு மழிந்து ஆன்மாக்களும் ஒடுங்குமேயாமாகில் மீளவுந் தோன்றுவா னேனென்று நீ கேட்கில்; செயிருறு மலத்தினுகும் - அப்படித் தோன்றுகிறது குற்றம் பொருந்தின ஆணவமலபாகம் வாராத ஆன்மாக்கள் அந்த மலபாகம் வருகைப்பொருட்டாக மீளவும் மாயையிலே தோன்றுகிற்பார்கள்; சிதைந்த தேதென்னில் - அப்படி ஆன்மாக்கள் மாயையிலே தோன்றுவார்களாகில் உம்முடைய கர்த் தாவாலே சங்கார காலத்தில் அழிக்கப்பட்ட தேதென்று நீ கேட் கில்; சித்தத்து அயர்வொழி காரியங்கள் அழியும் - சித்தமாகிய ஆன் மாவை அயர்வாக மறைக்கப்பட்ட ஆணவமலத்தைப் பாகம் வருத்து கைக்குத் தத்துவமாயுள்ள காரிய மாயை அழியும். அப்படி அழிந்து போன காரிய மாயை மீளவுஞ் சிருஷ்டியில் தோன்றுகைக்கு வழி யேதென்று நீ கேட்கில்; காரணங் கிடக்கும் - அப்படிக் காரியங்கள்

தோன்றியும் அழிந்தும் வருகைக்கு உபாதானமாயுள்ள காரண மாயை சங்கார காலத்திலும் அழியாமற் கிடக்குமாகையாலே ; பயில் தரு காரியம்பின் பண்டுபோற் பண்ணுமீசன் - ஆன்மாக்கள் போகம் புசித்தற்கு உடம்பாகப் பொருந்தப்பட்ட காரிய மாயையை முன்பு போல அந்தக் காரண மாயையிலே நின்றுஞ் சிருஷ்டிப்பன் சிவன் தான் என்று பொருளுரைத்துக்கொள்க. அன்றியும் சிவாகமத்தில் "மாயா தத்வம் ஜகத்பீஜ மவிநாஸ்சிய சிவாத்மகம் - விஸ்வேகம் அமலம் ஸூக்ஷமம் அநாஸ்தவ்வியயம் ஈஸ்வரம்", "ததேகம் சிவம் பீஜம் ஜகத்சித்ர சத்திமது - சத்காரியாதி காராந்த சம்ரோதி வியாபி மீஸ்வரம்" எ - து கண்டுகொள்க.

எல்லாம் விரிந்தவகை புரிந்தடைவின் மேவியவை ஒடுங்க வருகால முயிர்களெல்லா மருவிடமாய் எ - கு ஆன்மாக்கள் சங்கார காலங் காரண மாயையிலே ஒடுங்குவார்க ளென்பது வழக்கல்ல என்று எல்லாம் விரிந்தவகை புரிந்தடைவின் மேவியவை ஒடுங்க என்று பதமுறித்து அதனைச் சங்கார காலமாக்கி வருகாலம் உயிர்களெல்லா மருவிடமாயென்ற பதத்தைச் சிருஷ்டி காலமாக்கிப் பொருளுரைப்பாருமுளர். அது வழக்கல்லவென அறிக. அதுவேனென்னில் இந்தச் செய்யுளுக்குப் பதந்தோறும் யகரவொற்று முடிவாகப் பதமுதித்து வருகையாலும், ஒடுங்க என்று பதமுதியாதபடியாலும், அன்றியும் முன்னர்ப் பதங்களெல்லாஞ் சிருஷ்டியைச் சொல்லி வந்து மேற்சங்காரத்தைச் சொல்லி முடித்துவிடுகிறதொழிய மீளவுஞ் சிருஷ்டியைச் சொல்ல வழக்கல்லாதபடியாலும், அன்றியும் இச்செய்யுள் காரண மாயையைச் சொல்லுகையால் அதனுடைய செய்தியைக் கூறுகிறதொழியக் காரிய மாயையின் பிரசங்கம் இவ்விடத்துக் கூறப்படாதாகையாலும், ஒடுங்க என்று பதமுறித்து வருகாலமென்பதைச் சிருஷ்டிகாலமென்று பொருள்படுத்துகை வழக்கல்லவென அறிக. ஆகையால், அவை ஒடுங்க வருகாலம் உயிர்களெல்லா மருவிடமாய் என்றொரு பதமாக்கிச் சங்காரகாலம் ஆன்மாக்கள் மாயையிலே ஒடுங்குவார்களென்பதே சித்தாந்த வழக்கென அறிக. அன்றியும், இந்தப் பதத்துக்கிதுவே வழக்கென்பதற்கு முற்கூறிய உபமானங்களன்றியே இந்நூலைப் பின்சென்ற

நூலாகிய திருநெறிவிளக்கத்தினும் இந்தச் செய்யுளுக் கெதிரடை விருத்தமாகிய "மெய்யாதி நால்வகையா யொன்றுக் கொன் றுரவ்வா வெகுவிதமா யேகமாய் வீதலகன் றருவாய், எய்யாமல் வினையிலுழ லாருயிர்க ளெவைக்கு மிருப்பாகி யசேதன மாய்ச் சலிப்பிலதாய்த் தனது, பொய்யாய நிலையளவும் பூரணமா யாவும் பொருந்தவடை வேபுரிந்து பொருந்திவினை யொன்றுஞ், செய்யாத விறுகாலஞ் சேதனங்கட் கெல்லாஞ் சேர்விடமா மாயை யெனச் செப்பு நூலே" என்பதனுள் "வினையொன்றுஞ் செய்யாத விறுகாலஞ் சேதனங்கட் கெல்லாஞ் சேர்விடமா மாயை" என்ற பதத்தை அவையொடுங்க வருகால முயிர்களெல்லா மருவிடமாய் என்ற பதத்துக்குக் கண்டுகொள்க. அதற்கு வழியேதென்னில் வினை யொன்றுஞ் செய்யாத விறுகாலம் - சங்காரகால மாகையாலும்; சேதனங்கள் - ஆன்மாக்களாகையாலும்; சேர்விடம் - ஒடுங்குமிட மாகையாலும்; மாயை - அசுத்த மாயா காரணமாகையாலும் சங்கார காலம் ஆன்மாக்கள் மாயையிலே ஒடுங்குவார்களென்னும் பொருள் பெற்று நிற்கையால் அந்தப் பதத்துக்கு உவமிக்கப்பட்டதென அறிக. இந்தத் திருநெறிவிளக்கம் பின்னூலாயிருக்கவும் இதனை யேதுக் காட்டிய தேதென்னில் அந்நூல் சிவப்பிரகாசத்தைப் பின்சென்ற நூலா யிருக்கையினாலும், அன்றியும், விருத்தந்தோறும் விருத்தந் தோறுஞ் சத்தம் பேதித்து வருகையேயன்றி யத்தமொன்றுபட்டு வருகையாலும் அது காட்டவேண்டி, உருவாதி சதுவிதம் எ - கு மெய்யாதி நால்வகையா யென்ற சத்தம்போல அவை ஒடுங்க வருகாலம் உயிர்களெல்லா மருவிடமாய் எ - கு வினையொன்றுஞ் செய்யாத விறுகாலஞ் சேதனங்கட்கெல்லாஞ் சேர்விடமாம் என்பது காட்டவேண்டி ஏதுவாகவிட்டதென அறிக. ஆகையால் முற் கூறிய உபமானங்களினாலும் ஏதுக்களினாலும் ஆன்மாக்கள் சங்கார காலம் ஆணவ மலத்தால் மறைப்புண்டு மாயையிலே ஒடுங்குவார்க ளென்பதே சித்தாந்த வழக்கென்பதை யநுபவத்தாற் கண்டு கொள்க. இதுவே பொருளென்பதற்குக் கற்பகாலத்துப் பிரமாவுக்கு மாயையிலே ஒடுக்கமென்பதற்குச் சூதசங்கிதை என்னுங் கிரந்தத்திற் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது அசுத்த மாயையானது சிருஷ்டி காலந் தன்னிடத்திலே நின்றுந் தோன்றப்பட்ட காரியங்களோடேகூடி நிற்குமென்றும் அந்தக் காரியங்க ளெல்லாந் தன்னிடத்திலே ஒடுங்கத்தக்கதாக வருகிற சங்காரகாலம் அந்தக் காரிய ரூபத்தைப் பற்றி நின்ற ஆன்மாக்களுந் தன்னிடத்திலே பொருந்துகைக்குத் தாரகமா யிருக்குமென்றும் வருமுறைமையை அறிவித்தது.

இங்ஙனஞ் சொல்லப்பட்ட தேகாதி பிரபஞ்சந்தோன்று மிடத்தும் பரப்பிரமத்திலே நின்றுந் தோன்றி அதிலே ஒடுங்குமதொழிந்து அப்படி யசுத்த மாயா காரணமென்று ஒருமுதல் நாட்டிக் கொள்ள வேண்டுவதில்லை என்கிற மாயாவாதியை நோக்கிச் சித்தாயுள்ள பிரமத்தினிடத்துச் சடமாயுள்ள பிரபஞ்சந் தோன்றாதென்று மறுத்தருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

23. என்னையிது எனில்உலகுக் குபாதான மில்லை
இறைவனல தெனின்அசித்துச் சித்தினிடத் துதியா
மன்னியுள தேல்முதல்வன் என்கொல் என்னின்
மாயைதான் அசித்துருவாய் மருவ மாட்டா(து)
அன்னவனும் இதுவொழிய ஆக்க மாட்டான்
அசத்தனும் எனின்அதுவும் அவன்போல் நித்தம்
முன்னவன்அவ் வசித்தைவிரித் தெவையும் ஆக்கும்
முதன்மைஅது கொடுத்ததெ தென மொழிந்தி டாரே. ரு

உலகு பிரமத் துதித்தொடுங் கிடுமெனுங்
கலதிதன் மொழியைக் காட்டி மறுத்தது.

(உரை) என்னையிது எனில் - பிரபஞ்சந் தோன்றுகைக்கு இங்ஙனஞ் சொல்லப்பட்ட மாயாகாரணமென்று ஒருமுதலை நாட்டிக் கொள்ள வேண்டுவதில்லையென்று நீ சொல்லில்; உலகுக்கு உபாதானமில்லை - பிரபஞ்சந் தோன்றுகைக்கு இந்த மாயையன்றி வேறொரு காரணமுமில்லையாம்; இறைவனலதெனின் - கர்த்தா வல்லவோ பிரபஞ்சந் தோன்றுகைக்குக் காரணமென்று நீ சொல்வில்; அசித்துச் சித்தினிடத் துதியா - அசேதனமாயுள்ள பிரபஞ்சஞ் சேதனமாயுள்ள கர்த்தாவினிடத்துத் தோன்றாது. ஆகையால் மாயை வேண்டுமென அறிக; மன்னியுளதேல் முதல்வனென்

கொலென்னின் - அப்படி மாயை யென்பதொன்று நிலைபெற் றுடையதாகில் தலைவனுயுள்ள கர்த்தா என்ன காரணத்துக்கென்று நீ கேட்கிருயாமாகில்; மாயைதான் அசித்துருவாய் மருவமாட் டாது - அந்த மாயையானது சடமாயிருந்தபடியாலே தானே யுருக் களாகப் பொருந்தமாட்டாது. ஆகையாலே கர்த்தாவேண்டுமென அறிக; அன்னவனும் இதுவொழிய ஆக்கமாட்டான் அசத்தனும் எனின் - அந்தக் கர்த்தாவும் இந்த மாயையைக் கொண்டல்லது பிரபஞ்சம் நடத்தமாட்டான். ஆனபடியாலே அவனுஞ் சத்தி ஹீனனுவனென்று நீசொல்லில்; அதுவும் அவன்போல் நித்தம் - அந்த மாயையும் அவனைப்போலே நித்தியமா யிருப்பதொன்று. ஆகையாலே; முன்னவன் அவ்வசித்தை விரித்தெவையு மாக்கும் - அநாதியாயிருக்கப்பட்ட கர்த்தாவுந் தன்னைப்போலே அநாதியா யிருக்கப்பட்ட காரண மாயையிலே நின்றுங் காரியமாயையா யிருக் கிற பிரபஞ்சத்தை விரிவிலே தோற்றுவித்துச் சர்வத்தையும் உண் டாக்குவன். அதுகொண்டே; முதன்மையது கொடுத்ததென மொழிந்திடாரே - அப்படி யந்த மாயையைக்கொண்டு கர்த்தா பிர பஞ்சத்தை உண்டாக்குகிற சாமர்த்தியமும் அந்த மாயைதான் உண்டாக்கினதென்று பெரியோர்கள் சொல்லார்கள்; என்னவே, முதன்மையது கொடுத்ததென மொழிந்திடாரே என்பது அதனுல் அரூபமாயிருக்கப்பட்ட மாயையிலேநின்று முழு ரூபமாயிருக்கிற பிரபஞ்சத்தை யுண்டாக்குகிற கர்த்தா அந்த மாயை யில்லாதபொழு தும் உண்டாக்கிக்கொள்ள வல்லனென அறிக.

உதாரணம்: கர்த்தாவினிடத்திலே பிரபஞ்சந் தோன்றி ஒடுங் குமதொழிந்து மாயா காரணமென ஒன்றுண்டென்ன வேண்டுவ தில்லையென்று மாயாவாதி சொன்னதற்கு பி - ம் சித்தியாரில் "தாங்கு மூலகுக் குபாதானஞ் சத்தாஞ் சிலம்பி நூல்தன்பால், வாங்கி வைத்துக் காப்பதுபோல் வையமெல்லாந் தன்பக்கல், ஓங்க வுதிப்பித் துளதாக்கி நிறுத்தி யொடுக்கத் திலதாக்கு, மாங்கு வந்த வாறதனுற் சத்தாஞ் சகத்தி னமைவெல்லாம்" (பரபக்கம், 225) எ - து கண்டுகொள்க. அசித்தாயுள்ள பிரபஞ்சஞ் சித்தாயுள்ள கர்த்தாவினிடத்துத் தோன்ருதென்று அவனை மறுத்ததற்கு பி - ம்

சித்தியாரில் "மாயநூ லதுசிலம்பி வாயினிடை வந்தவா றதனை மானவே, யாயவே யுலக மானதும் பிரம மதனிலேயெனி லடங்கின், றேயு மாகுமொரு சித்து மத்துட னிலாத தென்றுபி னியம்பில்நீ, பேயனேகட மிருத்தில் வந்தது பிறப்ப தாவதிலை பேசிலே" (செ 243) எ - து கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது அப்படி மாயாகாரண மென்றொரு முதலில்லை கர்த்தாவினிடத்திலே பிரபஞ்சந் தோன்றுமென்ற மாயாவாதியை மறுத்துச் சித்தாயுள்ள சிவனிடத்திலே சடமாயுள்ள பிரபஞ்சந் தோன்றுதாகையால் மாயையுண்டென்னும் முறைமையை அறிவித்தது.

அப்படியே பிரபஞ்சத்தை உம்முடைய கர்த்தாவே காரியப்படுத்துவனுமாகிற் சர்வான்மாக்களையும் ஒரு தன்மையாகச் செய்வியாதிருப்பானேனென்ற பட்டாசாரியனை நோக்கி மேலருளிச் செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

24. படைத்தடொரு படியின்றிப் பறவைபசு நராய்ப்
பண்ணியதென் முன்னைவினைப் பான்மை யென்பர்
அடுத்தவினை உளதாயின் இறையேன் என்னில்
அசேதனம்மற் றவைஆவிக் கமைத்த தாகும்
எடுத்தவினை உருவுறுவ துயிரேல் தானே
இருவினைக்குத் தக்கஉடல் எய்து மென்னில்
சடத்திரளும் அகர்த்தாவாய் அறிவொன் றில்லாத்
தன்மையனுங் கூடவொரு சங்கை யின்றே. ௬

பல்லுரு வாகப் படைப்பதற் கேது
தொல்லை வினையின் தொடர்ச்சியைச் சொன்னது.

(உரை) படைத்தடொரு படியின்றிப் பறவை பசு நராய்ப் பண்ணியதென் - உம்முடைய கர்த்தா படைக்குமிடத்துச் சர்வான்மாக்களையும் ஒரு தன்மையாகப் படையாமல் நரர் மிருக பசு பக்ஷி தாபராதிகளாயுள்ள நால்வகைத் தோற்றமும் எழுவகைப் பிறப்புமாகச் சிருஷ்டிப்பானேனென்று நீ கேட்கிறாயாமாகில்; முன்னைவினைப் பான்மையென்பர் - ஆன்மாக்கள் முன்ஜநநத்திற் செய்த வினையின்

பகுதிக் கீடாகவென்று சொல்லுவர்கள் பெரியோர்கள்; அடுத்தவினை யுளதாயின் இறையேன் என்னில் - ஆன்மாக்கள் செய்த புண்ணிய பாவங்களுக்கீடாகச் சரீரங்களுண்டாமாகில் அந்தக் கன்மமே யமை யாதோ கர்த்தா வொருவன் வேணுமோ என்னில்; அசேதன மற்றவை யாவிக் கமைத்ததாகும் - அந்தக் கன்மங்களுக்கு அறிவில் லாதபடியாலே தானாக உடம்புகளை யுண்டாக்கமாட்டா தாகையால் கர்த்தா ஆன்மாக்கள் செய்த வினைக்கீடான உடம்புகளை யுண்டாக் கினதாம்; எடுத்த வினை யுருவுறுவ துயிரேல் தானே யிருவினைக்குத் தக்கவுட லெய்துமென்னில்-அந்தக் கன்மத்துக்கீடாக எடுக்கப்பட்ட சரீரத்திலே நின்று அநுபவிக்கிறது ஆன்மாவேயாகில் தான்செய்த புண்ணிய பாவங்களுக்கீடான சரீரத்தைத் தானே எடுத்துக்கொள்ளு மென்னில்; சடத்திரளும் அகர்த்தாவா யறிவொன்றில்லாத் தன்மை யனுங் கூடவொரு சங்கையின்றே - சடமாயுள்ள உடலினது கூட் டங்களுங் கர்த்தாவல்லனுமாய்த் தானே யறிகைக்கோர் அறிவில் லாத ஆன்மாவுந் தம்மிற்கூடி யறிகைக்கோர் காரணமுமில்லை; என்னவே, சிவனே சர்வமுமறிந்து நின்று ஆன்மாக்கள் செய்த கன்மத்துக்கீடான சரீரங்களைக் கொடுப்பனென்பது கருத்து.

'படைத்தொரு படியின்றிப் பறவை பசு நரராய்ப் பண்ணிய தென்' என்று பட்டாசாரியன் கேட்டது பிரபஞ்சம் ஒருவழிப்பட் டிராததுகொண்டே கர்த்தா படைக்கிற படைப்பால் பக்ஷபாதியாவ னென்பது அவனுக்குக் கருத்து. என்னவே, பிரபஞ்சம் அநாதியே யுடையதென்பதும் அது ஒருவர் படைக்க வேண்டுவதில்லை யென் பது மவனுக்குப் பக்ஷம். இதற்கு பி - ம் சித்தியாரில் "போக்கொடு வரவுகால மொன்றினிற் புணர்வ தின்றி, யாக்கவே ரொருவ ரின்றி யநாதியா யணுக்க ளாகி, நீக்கிடா வினையிற் கூடி நிலமுத லாக நீடி, யூக்கமா ருலக மென்று முள்ளதென் றுரைக்க லாமே" (பரபக்கம், 187) எ - து கண்டுகொள்க. அதனை முன்னை வினைப் பான்மை யென்ப ரென்று மறுத்ததற்கு அடுத்தவினை யுளதாயின் இறையே னென்று மீளவுமவன் சொன்னதற்கு பி - ம் சித்தியாரில் "செயல் களே பலத்தைச் செய்யுந் தெய்வம்வேண் டாவிங் கென்னின், முயலுமிச் செயல்க ளிங்கே முழுவது மழியு மெங்கே, பயனளிப் பவ

னழிந்தே பலன்களைப் பண்ணுங் கெட்டே, வயலிடுந் தழையுந் தின்னு மருந்தும்பின் பலிக்கு மாபோல்" (2. 17) எ - து கண்டுகொள்க. இனி, அசேதனமற் றவையாவிக் கமைத்த தாகும் என்று மறுத்ததற்கு எடுத்தவினை யுருவுறுவ துயிரேற் றுனே யிரு வினைக்குத் தக்கவுடல் எய்துமென்று மீளவும் அவன் சொன்னுன் என்பதற்கு பி - ம் சித்தியாரில் "நித்தமா யெங்கு முண்டாய் நீடுயி ரறிவு தானுய்ப், புத்திதா னுதி யாய கருவியின் புறத்த தாகிச், சுத்தமா யருவ மாகித் தொல்லைவல் வினையின் தன்மைக், கொத் ததோ ருருவம் பற்றிப் புலன்வழி யுணர்ந்து நிற்கும்" (பரபக் கம், 188) எ - து கண்டுகொள்க. என்றிங்ஙனம் பட்டாசாரியன் சொன்னதைச்சடத்திரளும் அகர்த்தாவாய் அறிவொன்றில்லாத் தன் மையனுங்கூட ஒரு சங்கையின்றே என்றவனை மறுத்ததற்கு பி - ம் சித்தியாரில் "உலகுடல் கரணங் கால முறும்பல நியதி செய்தி, பலவினை கொண்டு கன்மம் பண்ணுவ துண்ப தானுல், நிலவிடா வினைதாஞ் சென்று நினைந்துயிர் நிறுத்திக்கொள்ளா, அலகிலா அறிவ னுணை யணைத்திடு மருளி னுலே" (2. 22) எ - து கண்டு கொள்க. ஆனபடியினுலே சிவன் ஆன்மாக்கள் செய்த கன்மங்களை யறிந்து அதற்கதற்கேற்ற சரீரங்களைக் கூட்டிப் புசிப்பிக்கையாலே பக்ஷபாதியல்ல நடுவன் என்பதற்கு பி - ம் இருபாவிருபஃதில் "வாக்கும் மனமும் போக்குள தனுவுஞ் - சொல்லும் நினைவுஞ் செய் யுஞ் செயலும் - நல்லவுந் தீயவும் எல்லா மறிந்து - முறை பிறழாமற் குறைவுநிறை வின்றுய்க் - காலமுந் தேசமு மாலற வகுத்து - நடுவு நின் றருத்தலின் நடுவனு குதியே" (16. 10-15) எ - து கண்டு கொள்க.

இதனுற் சொல்லியது, பிரபஞ்சம் நித்தியமா யிருப்பதொன் றென்றும் அதுதானே காரியப்படுமதொழிந்து கர்த்தாவேண்டுவ தில்லையென்றும் ஆன்மாதானே செய்த கன்மத்துக்கீடான சரீரத் தைத் தானே யெடுத்துக்கொள்ளுமென்றுஞ் சொன்ன பட்டாசாரி யனை மறுத்துக் கன்மமுஞ் சரீரமும் சடமானபடியாலும் ஆன்மா தனக்கென்னவோர் அறிவில்லாதபடியாலும் இவையிற்றைக் கூட் டிக் காரியப்படுத்துகிறது சிவனேயென்னும் முறைமையை அறி வித்தது.

அப்படியே கன்மத்துக்கீடாக ஆன்மாக்களுக்குக் கர்த்தா மாயா சரீரங்களைக் கூட்டிப் புசிப்பிக்கும் அவதரத்துக் கன்மமுண்டாயே மாயா சரீரம் உண்டானதோ மாயாசரீரமுண்டாயே கன்மமுண்டானதோ என்று வினவ மேலருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

25. அல்லல்மிக உயிர்க்கிவைதான் அணைத்த தீசன்
அருவினைகள் அருந்துதற்கோ வினையோ அன்றிச்
சொல்லிவரு மாயையோ அணுவை முந்தச்
சூழ்ந்ததெனும் உரைமுதலோர் தொடக்கி லார்பால்
ஒல்லைவரு மெனின்உளதாம் உயிருண் டாவே
உளதுமலம் மலமுளதாய் ஒழிந்த வெல்லாம்
நெல்லின்முளை தவிடுமிபோல் அநாதி யாக
நிறுத்திடுவர் இதுசைவம் நிகழ்த்து மாறே. ௭

சாலியின் முளையுந் தவிடும் உமியும்
போலமும் மலமும் புராதன மென்றது.

(உரை) அல்லல் மிக உயிர்க்கிவைதான் அணைத்த தீசன் அருவினைகள் அருந்துதற்கோ - துக்கமிக வுண்டாக ஆன்மாக்களுக்கு இந்த உடம்புகளைத் தம்பிரானுர் கூட்டினது அரூபமாயிருக்கிற கன்மங்களைப் புசித்தற்கோ, அப்படியாமாளுல்; வினையோ வன்றிச் சொல்லிவருமாயையோ அணுவைமுந்தச் சூழ்ந்தது-கன்மமோ அது ஒழிந்து சொல்லப்பட்டு வருகிற மாயையோ ஆன்மாவை முந்த வந்து பொருந்தினது; எனும்உரை-என்று சொல்லுகிறது; முதலோர் தொடக்கிலார்பால் ஒல்லைவருமெனி னுளதாம் - அநாதியே யொரு தொந்தனையு மில்லாதாரிடத்திலே மாயா கன்மங்கள் உண்டாளு லல்லவோ அதற்கு உத்தர முளதாவது. இந்த மாயையுங் கன்மமு மொழிய வேறுள தேதென்னில்; உயிருண்டாவே யுளது மலம் - ஆன்மா என்றுண்டு அன்றேயுள்ளது ஆணவ மலமும்; அப்படியாளுல் மாயையுங் கன்மமும் பின்புண்டானதோ என்னில்; மலமுளதா யொழிந்த எல்லாம் - அந்த ஆணவமல முண்டாகவே மற்றுள்ள மாயா மலமுங் கன்ம மலமும்; நெல்லின்முளை தவிடுமிபோல் அநாதி

யாக நிறுத்திடுவர் - நெல்லிலே யுண்டாக்கப்பட்ட முளையுந் தவிடும் உமியு மொக்க உண்டானாற்போல இவையும் அநாதியென்று பெரியோர்கள் நிச்சயிப்பார்கள்; இது சைவம் நிகழ்த்துமாறே - இப்படிச் சிவாகமஞ் சொல்லும்.

அல்லல்மிக வுயிர்க்கிவைதான் அணைத்ததீச னருவினைக ளருந்துதற்கோ என்று நிகண்டவாதி சொன்னானென்னவுமாம்; அது எங்ஙனேயென்னில், கர்த்தா கிருபாமூர்த்தியாகையாலே அவன் ஆன்மாக்கள் துக்கங்களை அநுபவிக்கத் தக்கதாக உடம்புகளைக் கூட்டான்; ஆன்மா தானே சரீரத்தோடுங்கூடி அநுபவிக்குமென்பது கருத்தாகையாலும் அன்றியுங் கர்த்தா பொன்னெயில் வட்டத்திலே பிரபஞ்சந் தோய்வற்றிருப்பா னென்கையாலுமென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "அந்த வாய்மொழியி னுலவன் சரண மாதியோகமுத லானநூல், இந்த மாநில மயங்கி டாதவகை யிங்கியம்பினனிதன்பொருள், வந்த காலமுயிர் தன்ம தன்மியற மற்றும் விண்மருவு புற்கலம், பந்தம் வீட்டிடுனோ டாதி யாயிவை படைப்ப தின்றியுள பத்துமே" எ - ம், "கருவி கண்படு துடக்கொ ழிந்துவரு காலமூன்றுநிகழ் காரியம், பெருக நின்றெரு கணத்திலேயுணர் பெருந்தவக் கடவுள் பீடினன், மருவ நின்றுவழி பட்டவர்க்குமலை வுற்றவர்க்கு மனமொத்திடுங், குரிசி லெங்களிறை யென்று பின்னுநிகழ் குற்ற மின்மையது கூறுவான்" (பரபக்கம், 147, 145). இது கர்த்தா விகாரமற்றிருப்பானென்று அவன் சொன்னானென்பதற்குக் கண்டு கொள்க.

இனி உயிர் உண்டாவே உளது மலம் எ - து ஈஸ்வர ஐக்கியவாதியை நோக்கிச் சொன்னதெனவு மாமென அறிக. அதற்கு வழியேதென்னில், ஆணவமலமென்ப தொன்றில்லை மாயையுங் கன்மமுமேயுள்ளது என்பது அவன் கருத்தாகையால் அப்படிச் சொன்னதென அறிக. இதற்கு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில் "மாயை - யுருவிரு வினையால் வருமிரு வினையு - முருவாலன்றி மருவா திவற்றின் - முந்திய தேதோ வந்தணை வதற்கோ - ரேது வேண்டும்" (6. 2-6) என்றவன் வினவியதற்கு உத்தரமாக ஆணவ மலமுண்டென்று நாட்டுதற்கு "மூல மலத்தாற் சாலு மாயை - கரு

மத் தளவிற் றருமுரு விறைவன்" (6. 32-33) என்றும் அவனை நோக்கிக் கூறியது கண்டுகொள்க. இனி, நெல்லின்முளை தவிடுமி போல் என்று உபமானங் கூறிய வகையேதென்னில் முளை கன்மத் துக்கு உவமையென அறிக; தவிடு ஆணவ மலத்துக்கு உவமையென அறிக; உமி மாயைக்கு உவமையென அறிக; அரிசி ஆன்மாவுக்கு உவமையென அறிக. என்றிங்ஙனங் கூறப்பட்ட உபமானத்துக்கு பி - ம் திருமந்திரத்தில் "ஆணவ மாயையுங் கன்மமு மாமலங், காண முளையுந் தவிடுமி யான்மாவுந், தாணுவொவ் வாமலே தண்டுல மாய்நிற்கும், பேணுவாய் மற்றுநின் பாசம் பிரித்தே" (2192) எ - ம் வீட்டுநெறிப் பாவினும் "ஆணவம் பிண்டி யருமாயை தான் உமி, காமியம் மூக்கென்று காண்" எ - ம் கண்டுகொள்க. அன்றியும் நெல்லின்வரு தவிடுமிபோலென்று பாடமோதுவாருமுளர். அப் பாடமாறல் நெல்லிலே வருகிற முளையென்று பொருளுரைத்துக் கொள்க.

இதனாற் சொல்லியது கர்த்தா ஆன்மாக்கள் கன்மந்தொலைய வேண்டிச் சரீரங்களைக்கூட்டிப் புசிப்பிப்பனென்று; அப்படிப் புசிப் பிக்குமிடத்து மாயையோ கன்மமோ முந்தக்கூடினதென்று கேட்க, ஆன்மாவுள்ளவன்றே ஆணவமல முண்டென்றும் ஆணவமல முள்ள அன்றே மாயா கன்மங்களும் அநாதியென்றும் வரும் முறைமையை நெல்லிலே முளையுந் தவிடும் உமியும் அநாதியானாற்போல இருக்கு மென்று அறிவித்தது.

இங்ஙனஞ் சொல்லிவந்த அசுத்த மாயா காரணத்தினின்றும் உண்டாக்கப்பட்ட காரியமாயுள்ள தத்துவங்களின் தோற்றம் அருளிச் செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

26. அருத்திமிகும் கலைகாலம் நியதியுடன் வித்தை
அராகம்இவை அனந்தரால் மாயைதனி லாகும்
உருத்திரராற் கலையதனில் பிரகிருதி குணங்கள்
உளவாகும் ஆங்காரம் புந்திதனில் உதிக்கும்
தெரித்தவிது திரிவிதமாந் தைசதவை காரி
திகழ்தருபூ தாதியெனத் திருந்தியசாத் துவிதம்
விரித்தகுண மனம்புத்தி இந்திரிய மென்று
விளம்பியசோத் திராதிமுதல் விளங்கியிடும் விரிந்தே.

*கன்றிய மாயையிற் கலைமுத லாக*
*ஒன்றுதத் துவம்பதி னைந்துற் பவித்தது.*

(உரை) *மாயைதனி லனந்தரா லருத்திமிகுங் கலை கால நியதி யுடன் வித்தை யராகமிவையாகும் - அதோ மாயையிலே நின்றும் அனந்ததேவ நாயனார் அருளினாலே புசிப்பை மிக உண்டாக்குங் கலை யுங் காலமும் நியதியோடே வித்தையும் அராகமுந் தோன்றும்; அருத்திமிகும் என்பதற்கு ஆசைமிக உண்டாக்குமென்னவு மாமென அறிக; உருத்திரராற் கலையதனிற் பிரகிருதி குணங்க ளுளவாகும் - உருத்திரதேவ நாயனார் அருளினாலே முற்கூறிய கலையிலே மூலப்பிர கிருதி குணசொரூபங்களாகத் தோன்றும். குணசொரூபங்களாவன:- சாத்துவித குணமென்றும் இராசத குணமென்றுந் தாமத குண மென்றும் பெயராய், அந்தக் குணங்கள் ஏற்றக்குறைவின்றித் தம்மி லொத்து நின்றவிடஞ் சித்தமென்றும் ஒரு குணமேறினவிடம் புத்தி யென்றும் வருமென அறிக. ஆகையால் பிரகிருதி தத்துவந்தானே சித்தமும் புத்தியுமாய் நிற்குமென அறிக. இதனை மேல் நுட்பத் தில் காட்டுகிற உதாரணத்திலே கண்டுகொள்க; ஆங்காரம் புந்தி தனிலுதிக்கும் - அகங்கார தத்துவமும் முற்கூறிய புத்தி தத்துவத் திலே தோன்றும். என்றிங்ஙனங் கூறப்பட்ட முன்னர்ப் பதத்திலே புத்திக்குத் தோற்றம் சொல்லாமலிருக்கவும் இந்தப் பதத்திலே யாங் காரம் புத்தியிலே தோன்றுமென்பது கொண்டே பிரகிருதி தானே குணசொரூபங்களாய் சித்தமும் புத்தியுமாய் நிற்குமென்பதை யநு பவத்தாற் கண்டுகொள்க; தெரித்த இது திரிவிதம் - இங்ஙனஞ் சொல் லப்பட்ட ஆங்கார மூன்று வகையாயிருக்கும். அஃதெங்ஙனே யென் னில்; திகழ்தரு தைசத வைகாரி பூதாதி-விளக்கத்தையுடைய தைசத ஆங்காரமென்றும் வைகாரி ஆங்காரமென்றும் பூதாதி ஆங்காரமென் றும் பொருளுடைத்தாம். இவையிற்றுள் தைசதம் அறிவென்று அறிக; வைகாரி தொழிலென அறிக; பூதாதி உருவமென அறிக; திருந்திய சாத்துவிதம் விரித்த குணமுதல் விளங்கியிடு மனம் புத்தி இந்திரியமென்று விளம்பிய சோத்திராதி விரிந்தே-நன்மை பொருந் தின அறிவாகிய சாத்துவித குணம் விரிந்து பொருந்தின முந்தக் கூறிய தைசத ஆங்காரத்திலே மனதும் ஞானேந்திரியமாகிய சோத்*

திராதிகள் ஐந்தும் பிரகாசித்து விரிந்து தோன்றும். முதல் விளங்கி யிடும் என்றதை முந்தக் கூறின தைசத ஆங்காரமென்றதென அறிக. அஃதாவது ஆங்காரந் தோன்றின ஒழுங்கு தைசத வைகரி பூதாதி யென்றமையால் தைசத ஆங்காரம் முந்தக் கூறுகையால் அப்படிச் சொன்னதென அறிக.

அருத்திமிகுங் கலைகாலம் எ - கு புசிப்பு மிக உண்டாக்குங் கலாதிகளென்று பொருள்கூறியது ஏதென்னில் ஆன்மாக்கள் புசிப் புக்கீடாகக் கலாதிகள் தோன்றுகையால் அப்படிச் சொன்னதென அறிக. அன்றியும் அருத்திமிகுமென்றது ஆசை மிக உண்டாக்கு மென்றதேதென்னில், இங்ஙனஞ் சொல்லப்பட்ட தத்துவங்களில் அராகதத்துவங் கூடத்தோன்றுகையால் அராகம் இச்சையை எழுப்பு கையால் ஆசையை மிகவும் உண்டாக்குமாமென அறிக. இனி உருத்திரராற் கலையதனிற் பிரகிருதி குணங்களுளவாகும் எ - கு கலையிலே பிரகிருதி குணங்கள் தோன்றுமென்று சொல்லியிருக்க அந்தக் குணங்கள் தம்மிலொத்தவிடஞ் சித்தமென்றும் ஒரு குண மேறினவிடம் புத்தியென்றும் விதப்பாகப் பொருட்படுத்துகைக்கு வழி ஏதென்னில், பிரகிருதி தத்துவம் உபாதானமாக ஆன்ம தத்து வம் இருபத்துநாலுந் தோன்றுமென்று முன்னூல்களிற் சொல்லி யிருக்கையால் அதிலே சித்தமும் புத்தியும் ஒழிய மற்றுள்ள தத்து வங்களின் தோற்றம் மேற்சொல்லுகையாலே அந்தச் சித்தமும் புத்தி யும் இந்தக் குணபேதத்தில் அடங்கிவருகையாலே இந்நூற் செய்தரு ளினவர் அதனை யடக்குவாய் செய்து அருளிச்செய்ததை விரித்துப் பொருள்படுத்தினதென அறிக. அப்படிப் பிரகிருதி தத்துவங் குண சொரூபங்களாகத் தோன்ற அந்தக் குணங்கள் தம்மிலொத்தவிடஞ் சித்தமென்றும் அதிலே ஒருகுண மேறினவிடம் புத்தியென்றும் பொருட்கூறியதற்கு பி - ம் தத்துவ விளக்கத்தில் "கூறிய மூலப் பகுதியிற் றோன்றுங் குணமவைதான், தேறிய சாத்திக ராசத தாமத மென்றுசெப்பு, மூறிய முக்குண மொத்தவை மூன்று முயர் விழிவற், றேறியக் காற்புத்தி தத்துவ மாகுமென் றெண்ணுவரே" எ - ம் சித்தியாரிலும் "சித்தமா மவ்வியத்தஞ் சிந்தனை யதுவுஞ் செய்யும்" (2. 58) எ - ம் வரும் ஏதுக்களைக் கண்டுகொள்க. இனி,

சர்வமுஞ் சிவசத்திகளாலே தோன்றுமென்று நூல்களிற் சொல்லி யிருக்க இந்தத் தத்துவங்கள் அனந்ததேவ நாயனுராலும் உருத்திர தேவ நாயனுராலுந் தோன்றுமென்றதற்கு வழியேதென்னில், அஃதாவது: விஞ்ஞானகலரில் அபக்குவரான அஷ்டவித்தேசுரராகிய அனந்தன் சூக்குமன் சிவோத்தமன் ஏகநேத்திரன் ஏகவுருத்திரன் திரிமூர்த்தி சிகண்டன் சிகண்டி என்னப்பட்ட எண்மருககுஞ் சிவன் ஆசாரிய கிருத்தியமும் உண்டாக்கி அவர்களுக்குப் பிரபஞ்சம் நடத்தும் அதிகாரமுங் கொடுத்தருளுகையில் அவர்களில் அனந்ததேவ நாயனுருக்கும் உருத்திரதேவ நாயனுருக்கும் அந்த அதிகாரங் கொடுத்ததென அறிக. என்றிங்ஙனஞ் சொல்லபபட்ட எட்டுப் பேரும் விஞ்ஞானகலரில் அபக்குவரென்பதற்கும் அவர்கள் சிவனுடைய ஆக்கினை வழியே நடத்தும் அதிகாரமும் உடையவர்கள் என்பதற்கும் பி-ம் தத்துவவிளக்கத்தில் "அறிந்தவர் நீரந்த துகளினர் தீராத் துகளர்முன்னர், செறிந்தவர் விஞ்ஞைக்கு நாயக ரெண்ம ரெனச்சிறந்தோா, பிறிந்தவா மந்திர ராமெழு கோடியர் பேரொலி யால், மறிந்த திரைப்புனல் வெஙகுரு வாணர் வகுத்தனரே" (14) என்பதனுள் விஞ்ஞைக்குநாயகர் எணமரென்பதனை யிதற்குக் கணடு கொள்க.

இனி ஆங்காரம் புந்திதனி லுதிக்குந்தெரித்த இது திரிவிதமாம் எ - கு புந்தியிலே ஆஙகார மொன்றாய்த் தோன்றி மூவகை ஆங்காரமாக விரிந்ததறகு வழியேதென்னில், இந்த ஆஙகாரங் காரியப்படுத்தும் அவதரதது முற்கூறிய குணஙகளோடுங் கூடிக் காரியப்பட வேண்டுகையால் அந்தக் குணஙகளும் மூவகையாகையாலே இதனையும் அப்படி மூவகையாகச் சொன்னதென அறிக. அதற்கு வழியே தென்னில் சாத்துவிதகுணம் அறிவும் இராசத குணம் விகாரமும் தாமதகுணம் மயக்கமுமாகையாலும், தைசத ஆஙகாரம் விளக்கமும வைகாரி ஆங்காரந் தொழிலும் பூதாதி ஆங்காரம் உருவமு மாகையாலும் அந்தந்த வகைகளிலே கூடிநின்று காரியபபட்டதென அறிக. இவை தம்மிற்கூடிக் காரியப்படுந் தோற்றஙகளினுங கண்டு கொள்க. அஃதாவது : அறிவாகிய சாத்துவித குணமும விளக்கமா யுள்ள தைசத ஆங்காரமுங்கூடி அறிவாயுள்ள மனத்தையும் ஞானேந்

திரியமாகிய சோத்திராதிகள் ஐந்தையுந் தோற்றுவிக்கையாலும், மேல்வருகிற செய்யுளிலே விகாரமாயுள்ள ராசத குணமுந் தொழிலாயுள்ள வைகரி ஆங்காரமுங் கூடித் தொழிலாயுள்ள கன்மேந்திரியமாகிய வாக்காதிகள் ஐந்துந் தோன்றுகையாலும், மயக்கமாகிய தாமதகுணமும் உருவமாகிய பூதாதி ஆங்காரமுங்கூடிப் பூதங்களுக்குக் காரணமாகிய சத்தாதிகள் தோன்றுகையாலும் அப்படிச் சொன்னதெனஅறிக. என்றிங்ஙனம் அறிவுந் தொழிலும் மயக்கமும் உண்டாகையால் சாத்துவித குணமுந் தைசத ஆங்காரமும் அறிவைபற்றி நின்றதென அறிக; இராசத குணமும் வைகரி ஆங்காரமுந் தொழிலைப்பறறி நின்றதென அறிக; தாமதகுணமும் பூதாதி ஆஙகாரமும் மயக்கமாகிய உருவத்தைப்பற்றி நின்றதென அறிக. ஞானேந்திரியமாகிய சோத்திராதிகள் அறிவைப்பற்றி நிற்கையாவது, சோத்திராதிகளாயுள்ள செவி மெய் கண் நா நாசி என்னப்பட்ட இந்திரியம் ஐந்துஞ் சத்த பரிச ரூப ரச கந்தங்களைக் கொள்ளுமிடத்துச் சரீரந்தொழிற்பட்டுச் சேவியாமல் அறிவாய் நிகழுகையால் அப்படிச் சொன்னதென அறிக. இனி, கன்மேந்திரியமான வாக்காதிகள் தொழிற்படுகையாவது, அவை காரியப்படுமிடத்துச் சரீரந்தொழிற்பட்டு நின்று காரியப்படுகையால் அபபடிச் சொன்னதென அறிக.

இனி, இங்ஙனஞ் சொல்லப்பட்ட தத்துவங்கள் மாயையிலே தோன்றுமிடததுச் சித்தியாரில் காலமுதலாகத் தோன்றுமென்று சொல்லியிருக்க இநநூலிற் கலைமுதலாகத் தோற்றஞ் சொன்னதேதென்னில், சிததியார் செய்தருளினவர் பிரபஞ்சத் தோற்றஞ் சொல்லுகையால் காலமுணடாகவே பிரபஞ்சந் தோற்றுகையாலே காலமுதலாகச் சொன்னதென அறிக. இந்நூல் செயதருளினவர் ஆன்மாக்களுக்கு உணர்த்து முறைமையைச் சொல்லுகையாலே உணர்த்துகைக்குக் கலை முந்தி யெழுப்ப வேண்டுகையால் கலையை முந்திக கூறியதென அறிக. அபபடி வேற்றுமை கூறியதேதென்னில் இது சார்பு நூலாகையால் "திரிபுவே றுடையது புடைநூ லாகும்" (நன்னூல், 8) என்னும் விதியைப்பற்றியென அறிக. அன்றியும் இந்தத தததுவத் தோற்றம் அனந்ததேவ நாயனுரொருவர் நடத்துகையால் அப்படி முன்பின் கூறியதெனவுமாமென அறிக.

இதனாற் சொல்லியது இந்த அசுத்த மாயையில் நின்று தோன்றப்பட்ட தத்துவங்களில் இந்தச் செய்யுளில் காலமும் நியதியுங் கலையும் வித்தையும் அராகமும் ஆக ஐந்தும், பிரகிருதி குணங்களாகிய அவ்வியத்தமுஞ் சித்தமும் புத்தியும் ஆக மூன்றும், புத்தியிலே ஆங்காரமும் ஆங்காரத்திலே மனதும் ஞானேந்திரியமாகிய சோத்திராதிகள் ஐந்தும் ஆக ஏழுங்கூடி, ஆகத் தத்துவம் பதினைந்துந் தோன்றுமுறைமையை அறிவித்தது.

இங்ஙனம் பதினைந்து தத்துவத்திற்குத் தோற்றமருளிச்செய்து மேற்பதினைந்து தத்துவத்திற்குத் தோற்றமருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

27. மன்னியகன் மேந்திரிய மானஇரா சதஞ்சேர்
வாக்காதி வைகாரி மருவிவரும் சத்தம்
தன்னைமுத லாகியதா மதமிகுமாத் திரைபின்
தருமிதனில் வான்அநிலம் அனல்புனல்மண் சத்தம்
முன்னதனில் வெளியாதி ஒன்றொன் றாகும்
முறையினுறும் இருமைஅயன் முடிவா முன்னே
உன்னுசதா சிவராதி அதிபதிகள் ஒடுக்கம்
உதித்தஅடை வெனஉரைப்பர் உணர்ந்து ளோரே.

பின்னுமூ வைந்து பிறக்கும் நெறியுஞ்
சொன்னவா றொடுக்கமுந் தோற்றமுஞ் சொன்னது.

(உரை) மன்னிய கன்மேந்திரியமான வாக்காதி இராசதஞ்சேர் வைகாரி மருவி வரும் - நிலைபெற்று வருகிற கன்மேந்திரியமாகிய வாக்காதிகளாயுள்ளவை ஐந்தும் இராசத குணத்தைப் பொருந்தியிருக்கிற வைகரி ஆங்காரத்திலே பொருந்தித் தோன்றும். பொருந்தித் தோன்றுமென்றது வைகரி தொழிலாகையாலும் கன்மேந்திரியந் தொழிற்பட்டு வருகையாலும் இந்தக் கன்மேந்திரியம வைகரி ஆங்காரததில் தோற்றமாகையாலும் அப்படிச் சொன்னதென அறிக; சத்தந் தன்னை முதலாகிய மாத்திரை தாமத மிகுபின் தரும - சதத மென்கின்ற விடயத்தை முதலாகவுடைய தன்மாத்திரைகள் ஐந்துந் தாமத குணத்தை மிகுத்திருக்கிற பிற்பட்ட பூதாதி ஆங்காரத்திலே

தோன்றும். பின்தரு மென்றதைப் பிற்பட்ட ஆங்காரமென அறிக. அஃதாவது, முன்னர்ச்செய்யு ளாங்காரத்தினது தோற்றஞ் சொல்லு மிடத்துத் 'தைசத வைகரி திகழ்தரு பூதாதி'யென்று பூதாதி ஆங்கா ரத்தைப பிற்படக் கூறுகையால் அப்படிச் சொன்னதென அறிக. அன்றியும், பூதாதி ஆங்காரத்திலே தன்மாத்திரைகளாகிய சத்தாதி கள் ஐந்துந்தோன்றுமென்றதும் பூதாதி ஆங்காரம் உருவத்தைப்பற்றி நிற்கையாலும் சத்தாதிகள் பூதரூபங்கள் தோன்றுகைக்குக் காரண மாகையாலுமென அறிக; இதனில் - இங்ஙனம் முற்பதத்திலே சொல்லப்பட்ட தன்மாத்திரைகளாகிய சத்தாதிகள் ஐந்தினும்; வான் அநிலம் அனல் புனல் மண்-ஆகாயம் வாயு தேயு அப்பு பிருதிவி என்னப்பட்ட பூதங்கள் ஐந்துந் தோன்றுமிடத்து; சத்தம் முன்ன தனில் - சத்தமுதலா யிருக்கப்பட்ட முதற்கூறிய தன்மாத்திரைகள் ஐந்தினும்; வெளியாதி - ஆகாய மாதியாக; ஒன்றொன்றுகும் - ஒன் றிலே யொன்றாக வுண்டாம். அஃதாவது, சத்தத்திலே ஆகாயந் தோன்றும், பரிசத்திலே வாயுதோன்றும், உருபத்திலே தேயுதோன் றும், இரசத்திலே அப்புதோன்றும், கந்தத்திலே பிருதிவிதோன்றும் என்றதென அறிக; முன்னே உன்னு சதாசிவராதி யிருமையயன முடிவாய் அதிபதிகள் முறையிலுறும் - அநாதியே யெண்ணபபட்ட சதாசிவமுதல் பெரிய பிரமா ஈருக அதிதேவதைகள் ஐவரும் அந்தந்த ஒழுங்கிலே பொருந்துவார்கள். அந்தந்த ஒழுஙகாவது ஆகாசத் துககுச் சதாசிவமும் வாயுவுக்கு மயேசுரனும் தேயுவுக்கு உருத்திர னும் அப்புவுக்கு விஷ்ணுவும் பிருதிவிக்கு பிரமாவுமென அறிக; ஒடுக்கம் உதித்த அடைவென வுரைப்ப ருணர்ந்துளோரே - இங்ஙனந் தோறறமாகச் சொல்லிவந்த தத்துவஙகளுக்குந் தத்துவ கர்த்தாக் களுக்கும் ஒடுக்கமும் தோன்றின ஒழுஙகிலேயென்று சொல்லு வார்கள் அறிவாலுயர்ந்த பெரியோர்கள்.

மன்னிய கன்மேந்திரிய மென்றதை நிலைபெற்ற கன்மேந்திரிய மென்று பொருள்கூறியதேதென்னில், ஆன்மா ஒரு சரீர சம்பந்தி யாய நிற்குநாளெல்லாம் இந்திரியங்கள் விடப்படாமல் நிற்கையாலே யபபடிச் சொன்னதென அறிக. இநத வாக்காதிகளைக் கன்மேந் திரியமெனற தேதெனனில் கன்மந் தொழிலென்னும் பொருளைப்

பற்றித் தொழிற்பட்டுச் சீவிக்கையாலே யப்படிச் சொன்னதென அறிக. தொழிற்படுகையாவது வாயுங் காலுங் கையும் மலம்பிரிக்கிற துவாரமுஞ் சலம்பிரிக்கிற துவாரமும் வசன கமன தான விசர்க்கா நந்தமென்னும் விடயங்களோடுங்கூடிச் சீவிக்குமிடத்துச் சரீரந் தொழிற்பட்டுச் சீவிக்கையாலே யப்படிச் சொன்னதென அறிக. வாக்காதி ஐந்தினும் வாக்கென்ற இந்திரியத்தை வாயென்றதற்கு பி - ம் " கைகாலவை தருவாயொடு பாயுருபததமென் றுங்கவையே" எ - ம், சித்தியாரில் " வாயாதி சோத்தி ராதி புறத்துவாழ் கருவியாகும் " (2. 63) எ - ம் வருமது கண்டுகொள்க. இனி, இராசதஞ் சேர் வாக்காதி வைகாரி மருவிவரும் என்பதற்கும் சத்தந்தன்னை முதலாகிய தாமதமிகு மாத்திரை பின்தருமென்பதற்கும் நுட்பம் முன்னர்ச் செய்யுளில் வந்த விதப்பிலே கண்டுகொள்க. அந்தத் தாமத குணத்தில் தோன்றபபட்ட சத்தாதிகள் ஐந்தையுந் தன்மாத்திரைகளென்று பெயர்கூறியதேதென்னில், அந்தந்த இந்திரியங்களுக்குத் தக்கதாக நின்று காரியப்படுகையாலும் அப்படிக் காரியப் படுமிடத்துத் தத்தம குணங்களுக்கு ஏற்றக்குறைவின்றி நிற்கையாலும் அப்படிச் சொன்னதென அறிக. இனி, சத்த முன்னதனில் வெளியாதி யொன்றொன்றாகும் எ - கு சத்தாதிகள் ஐந்தினும் பூதாதிகள் ஐந்துந் தோன்றுமென்ப தன்றியே, சத்தத்திலே பரிசமும் பரிசத்திலே உருவமும் உருவததிலே இரதமும் இரதத்திலே கந்தமுமாக ஒன்றிலே ஒன்றாகத தோன்றுமென்றும், அன்றியும் ஆகாயத்திலே வாயுவும் வாயுவிலே தேயுவும் தேயுவிலே அப்புவும் அப்புவிலே பிருதிவியுமாக ஒன்றிலே ஒன்றாகத் தோன்றுமென்றும் பொருளுரைப்பாருமுளர். அன்றியும் பூதஙகள் ஐந்துக்கும் ஒவ்வொரு குணங்கள் ஏறியிருக்கும் என்பாருமுளர். ஒவ்வொரு குணம் ஏற்றமாவது ஆகாசத்துக்குச் சத்தமும், வாயுவுகருச் சத்தமும் பரிசமும், தேயுவுக்குச் சத்தமும் பரிசமும் ரூபமும், அபபுவுக்குச் சத்தமும் பரிசமும் ரூபமும் இரதமும், பிருதிவிக்குச் சத்தமும் பரிசமும் ரூபமும் இரதமுங் கந்தமுமென அறிக.

ஆக இங்ஙனங் கூறப்பட்ட மூவகையாயுள்ள பொருளும் அப்படியுண்டானாலும், சததமுன்னதனில் வெளியாதி யொன்றொன்றாகும்

ள-கு சத்தாதிகள் ஐந்தினும் வெளியாதி ஐந்து பூதங்களுந் தோன்று மென்பதொழிய அந்தப் பொருள்கள் இந்தச் சத்தத்துக்கு அகப்படா தென அறிக. அப்படிச் சத்தாதிகள் ஐந்தினும் பூதங்கள் ஐந்துந் தோன்றுமென்பதொழிய மற்றுப் பொருள்கள் இந்தச் செய்யுளுக்கு அகப்படாதென்பதற்கு, இந்நூலைப் பின்சென்ற நூலாகிய திருநெறி விளக்கத்தில் இதற்கெதிரடை விருத்தமாகிய "எண்ணிய கன் மேந்திரிய மென்றுசொல்லப் பட்ட இராசதமார் வாக்காதி யெய்திடும் வைகாரி, நண்ணியிடும் பூதாதி தாமதன்மாத் திரையால் நவிலுறு சத்தாதியினை நல்கியிடுஞ் சததக், கண்ணதனில் வெளிபரிச நு காலுருவந் தன்னிற் கனலிரதத் தேபுனனற் கந்ததே தரையா, மண்ணிறுதி கலைமுதலா வந்தவகை மடங்கு மாலயனு திகள்வடிவும் வந்தமைபோ லொடுங்கும்" [என்பது காண்க]. இந்தச் செய்யுளில் சத்தாதிகள் ஐந்தினும் வெளியாதியாகிய பூதம் ஐந்துந் தோன்று மெனறபடியா லதற்கும் இப்படிக் கண்டுகொள்க. அன்றியுந் தத்துவ விளககத்தினும் "கொள்ளுமத தத்துவம்" என்ற செய்யுளின் பிற்பதத்தில் "பின், தெள்ளிய தன்மாத்திரை யின்வருஞ் சேர்ந்ததன் மாத்திரையின், ஒள்ளிய பூதங்க ளைந்துககு மாமென்ப ருற்பவமே" என்பதனுலுஞ் சத்தாதிகள் ஐந்தினும் வெளியாதியாயுள்ள பூதங்கள் ஐந்துந் தோன்றுமென்பதே யந்தப் பதத்துக்குப் பொருளென அறிக. இந்த மாயா காரியமான தத்துவம் முப்பத்தொன்றென்று நூல்களிற் சொல்லியிருக்க முன்னர்ச செய்யுளில் தோன்றுந் தத்துவம் பதினாறும் இநதச் செய்யுளில் தோன்றுந் தத்துவம் பதினைந்தும் ஆகத் தததுவம் முப்பதொழியப் புருட தத்துவம் ஒன்றுககுந் தோற்றஞ் சொல்லாத தேதென்னில், அது தததுவ சமுகத்தில் தோற்றமாகையால் "ஐவகையா லுறுபயன்கள் நுகரவருங காலமதுபுருட தததுவமென் றறைந்திடுவ ரறிந்தோர்" (சிவப்பிரகாசம், 41) என்று காரியப்படும் அவதரததுத் தோற்றமாகையால் இவ்விடத்துச் சொன்னதில்லையென அறிக. அன்றியும் ஒடுக்கஞ் சொல்லும் அவதரத்தும் "தததுவ மெண்மூன் றுஞ்சென் றுன்மததுஅவதொ டுஙகும் - வித்தையி லொடுஙகு மாறும்" (சித்தி, 2. 72) என்றமையால் வித்தியா தத்துவம் ஏழாயிருக்கவும் வித்தையில்

ஒடுங்குமாறுமென்றது கொண்டே புருடதத்துவத்துக்கு ஒடுக்கஞ் சொன்னதில்லையென அறிக.

இதனாற் சொல்லியது இராசத குணத்தைப் பொருந்தின வைகரி ஆங்காரத்திலே கன்மேந்திரியங்களாகிய வாக்காதிகள் ஐந் துந் தோன்றுமென்றும் தாமதகுணத்தைப் பொருந்தின பூதாதி ஆங்காரத்திலே தன்மாத்திரைகளாகிய சத்தாதிகள் ஐந்துந் தோன்று மென்றும் அந்தச் சத்தாதிகள் ஐந்தினும் பூதங்கள் ஐந்துந் தோன்று மென்றும் அந்தப் பூதங்களுக்கு அதிதேவதைகள் சதாசிவமுதல் பிரமா ஈறுகிய தெய்வங்களென்றும் இவையிற்றுக்கு ஒடுக்கமுந் தோன்றின அடைவிலே யென்றும் வருமுறைமையை அறிவித்தது.

'உருவாதி' (22) யென்ற விருத்தமுதல் இந்த விருதத முடி வாகிய செய்யுளாறும் அசுத்தமாயா இலக்கணம். சு

இங்ஙனஞ் சொல்லிவந்த மாயையாலுண்டான சரீரத்தை ஆன் மாக்கள் பொருந்திக் கன்மத்தைப் புசிக்கையினாலே யந்தக் கன்மத்தி னியல்பு மேற்செய்யுள் நான்கினால் அருளிச்செய்வான் எடுத்துக் கொண்டருளியது.

28. நண்ணியிடும் உருவதனுக் கேது வாகி
  நானுபோ கங்களாய் நாசோற் பத்தி
பண்ணிவரும் ஆதலால் அனாதி யாகிப்
  பலவாகி அணுக்கள்தொறும் படர்வ தாகி
எண்ணிவரு மனவாச கன்மத்தா லியற்றும்
  இயல்பினதாய் மதிகதமாய் இருபயனும் பாவ
புண்ணியமாய்ப் புலர்காலை மாயை மேவிப்
  பொருந்துமிது கன்மமலம் புகலு மாறே. கஅ

தீங்கும் நலனுஞ் செய்தவா றடையும்
பாங்குறு வினையைப் பார்ரித் துரைததது.

(உரை) நண்ணியிடு முருவதனுக் கேதுவாகி - ஆன்மாக்கள் எடுக்கப்பட்ட உடம்புகளுக்கு முன்னிலைக்காரணமாய்; அஃதாவது, ஆன்மாக்கள் யாதாமொரு சரீரங்களை எடுக்குமிடத்து முற்செய்த கன்மங்களுக்கேதுவாக எடுக்கையினாலே யப்படிச் சொன்னதென

அறிக; நானுபோகங்களாய் - பலவிதமான புசிப்புக்களை யுண்டாக்கு வதாய்; பலவிதமாவது ஆன்மா இந்திரியங்களைக்கொண்டு விடயங் களைக் கொள்ளுமிடத்து ஒவ்வொரு விடயங்களிலே வெகுவிதமான கன்மங்களைப புசிக்கையினுலே யப்படிச் சொன்னதென அறிக; நாசோற்பத்தி பண்ணிவரும் - ஜநநத்தையும் மரணத்தையும் உண் டாக்கிவரும்; அஃதாவது, ஆன்மாக்கள் கன்மத்துக்கீடாக எடுத்த வுடலுக்கு நாசமும் மேலெடுக்கும் உடலுக்கு உற்பத்தியும் உண் டாக்கி வருமென்றதென அறிக. அன்றியும் புசித்த கன்மத்துக்கு நாசமும் மேற்புசிக்குங் கன்மத்துக்கு உற்பத்தியுமாமென அறிக; ஆதலால் அநாதியாகி - ஆக இங்ஙனம் வருகிறது அநாதியேயுள்ள தாய்; அநாதியென்றது ஆன்மா உள்ளவன்றே யிந்தக் கன்மமுள்ள தென்றதென அறிக; பலவாகி - பலபேதங்களாயிருப்பதாய்; பல பேதங்களாவன: ஆன்மாக்கள் கன்மத்துக்கீடாக எடுக்கும் உடல் களுக்கு அந்தந்த உடல்தோறும் வடிவு நிறம் சாதி ஒழுக்கம் நெறி உணவு சுகம் துக்கம் ஆயுள் என்றிங்ஙனம் பலவகையாகையாலே யப்படிச் சொன்னதென அறிக; அணுக்கள்தொறும் படர்வதாகி - ஆன்மாக்கள்தோறுஞ் சென்று பொருந்துவதாய்; அஃதாவது, ஆன் மாக்கள் எடுக்கும்எடுக்கும் அச்சுக்கள்தோறும் அதற்கதற்கேற்ற புசிப் புக்களைக் கொடுத்து நிற்கையாலே யப்படிச்சொன்னதென அறிக; எண்ணிவரு மனவாசு கன்மத்தா லியற்று மியல்பினதாய் - நினைக்கப் பட்டு வருகிற மனதினுலும் வாக்கினுலுங் காயத்தினுலுஞ் செய்யப் பட்ட இயல்பினையுடையதாய்; அவையாவன, மனதினல் நினைக்கை வாக்கினுற சொல்லுகை காயத்தினுற் செய்கை என அறிக; மதிகதமாய் - நிற்குங்காலம் புத்தியிலே நிற்பதாய்; புத்தியிலே நிற்ப தாவது யாதொன்றிலே புத்தி நிச்சயிக்குமிடத்துக் கன்மத்துக் கீடாக நிச்சயிக்கையால் அப்படிச் சொன்னதென அறிக; இரு பயனும் பாவ புண்ணியமாய் - இருவகைப் பயனுகச் சொல்லப்பட்ட புண்ணிய பாவங்களாய்; இருவகைபபட்ட பயனுவது ஹிதாஹிதங் களிலே விருப்பு வெறுப்புண்டாய் அதனுலே புண்ணிய பாவஙகள் கட்டுபபட்டு அதனுலே இன்பதுன்பங்களாகிய சுவர்க்க நரகங்களை அநுபவிககையாலே யப்படிச் சொன்னதென அறிக. இங்ஙனஞ்

சிருஷ்டி காலம் பிரபஞ்சங் காரியப்படுமென அறிக; புலர்காலை மாயை மேவிப் பொருந்தும் - சங்காரகால மாயாகாரணத்திலே சென்றுபொருந்தும்; அஃதாவது, முற்கூறிய பிரபஞ்சமும் அத னோடுங் கூடிநிற்கும் ஆன்மாக்களும் மாயா காரணத்திலே ஒடுங்கு கிற சங்கார காலம் இந்தக் கன்மமும் அந்தக் காரண மாயையிலே சென்று கூடுகையால் அப்படிச் சொன்னதென அறிக. அன்றியும் பொருந்துமென்ற பதத்துக்கு வேறு பொருள்கூற வேண்டுகில், அந்த மாயா காரணத்திலே ஒடுங்கின ஆன்மாக்களையுங் கூடு மென்று பொருளுரைப்பினுமாம். அஃதெங்ஙனேயென்னில், இந்தக் கன்மங் காரியப்படுங் காலத்து அணுக்கள்தோறும் படாவதாகி என் றமையால் எடுக்குங் காலததும் ஒக்க ஒடுங்குமென்னுங் கருத் தையும்பற்றி யப்படிச் சொன்னதென அறிக ; இது கன்மமலம புகலு மாறே - இங்ஙனஞ் சொல்லபபட்டது கன்ம மலத்தின் முறைமை யாம்; இந்தப் பதத்துக்குப் புகலுமென்று முன்னே வைத்துப் பொரு ளுரைத்ததென அறிக. அல்லதூஉம், இது கன்ம மலத்தைச் சொல் லும் வழியாமென்று பொருளுரைப்பினும் அமையும்.

புலர்காலமென்ற சொல் சிருஷ்டி காலத்துக்கும்படுமென்று இச் செய்யுளைச் சிருஷ்டி யொன்றையும் நோக்கிச் சொன்னதென்பாரு முளர். அது பொருளல்லவென அறிக. அதுவேனென்னில் புலர் கால் என்ற சொல் அழிதலாகையால் சங்காரமென்பதே பொரு ளென அறிக. அன்றியும், யாதாமொன்றைச் சொல்லுமிடத்துத் தோற்றமும் ஒடுக்கமுஞ் சொல்லவேண்டுகையால் மற்றுள்ள பத மெல்லாஞ் சிருஷ்டியைச் சொல்லிப புலர்காலை மாயைமேவி என்ற பதத்தைச் சங்காரகால மாயாகாரணத்திலே கன்மங் கூடு மென்பதே பொருளென[ச் சொல்லவேண்டுமென] அறிக. அப்ப டிப் புலர்காலமென்பது சிருஷ்டிக்கும் படுமென்று பொருளுரைத் தது எதைப்பற்றி என்னில், திருவாசகத்தில் "ஒணணித திலங கையா யின்னம் புலர்ந்தின்றோ" (7. 4) எ - ம், "போன திசை பகரா யின்னம் புலர்ந்தின்றோ" (7. 6) எ - ம் வரும் ஏதுக் களைப்பற்றிப புலர்காலஞ் சிருஷ்டிகாலமென்றதென அறிக. அது வும் புலர்தல் உலர்தலாகையால் சங்காரகாலத்துக்குச் சொல்லப்படு

மென்பதே பொருளென அறிக. புலர்தல் சங்காரமென்பதற்கு பி - ம் காளத்தியந்தாதியில் "அலரோன் நெடுமால் அமரர்கோன் மற்றும், பலராய்ப் படைத்துங்காத் தாண்டும் - புலர்காலத், தொன் ருகி மீண்டும் பலவாகி நிற்கின்ருன், குன்ருத சீர்க்கயிலைக் கோ" (திருமுறை 11. 9. 67) என்றது கண்டுகொள்க. இதனுள் புலர் காலத்தொன்ருகி எ - து சங்கார காலம் என்பதற்குக் கண்டுகொள்க. ஆகையால் இங்ஙனம் புலர்காலமென்பது சங்காரகாலத்துக்குச் சொல்லுமதே பொருளென அறிக. இச்செய்யுளில் புலர்கால மாயை மேவி என்பதைச் சங்காரகாலத்துக் காரணமாயையிலே கன்மங்கூடு மென்பதற்குச் சொல்லுமதே வழக்கென அறிக. அது வழக்கென் பதற்கு இந்நூலைப் பின்சென்ற நூலாகிய திருநெறிவிளக்கத்தினும் இச்செய்யுளுக் கெதிரடை விருத்தமாகிய "தொல்குரம்பை காரண மாய்த் தொகையளவு படாத துன்பமுட னின்பமாய்த் தோற்றமுட னீறு, மல்கியிடும் வழியதனுல் நித்த மாகி மன்னுயிர்கள் தொறுமரு விப் பினனு மறறுப, பல்விதமா யுரைநினைவு தொழிலாற் செய்யும் பண்பினதாயப் புத்தியினில் வந்தமையும் பான்மை, நல்வினைதீ வினை யாகிக் கடைநாள் மாயை நண்ணியிடும் இதுகன்ம நாட்டி லன்றே" என்பதனுள் கடைநாளென்றது சங்கார காலமாகையால் இந்நூலில் நண்ணியிடு முருவதனுக் கேதுவாகி என்ற செய்யுளுக்கு இநதத திரு நெறி விளககத்தின செய்யுளைப் பதந்தோறும் அந்தந்தப பதத்தை உவமிதுக்கொணடு புலர்காலை மாயைமேவி என்றதற்குக் கடைநாள் மாயை நணணியிடுமென்ற பததைதைக்கண்டுகொள்க. ஆகையால் இச் செய்யுளில் புலர்காலமெனறது சஙகாரகாலமே பொருளென்பதை அநுபவததாற கணடுகொள்க.

அப்படியானுல் மாயையுங கன்மமுங கூடினுல் ஆனமா வுக்குச் சீவிபபுண்டாமென்று நூல்களிலே சொல்லியிருக்க ஒரு சீவிப்புமற்று ஒடுஙகிக் கிடக்கிற சஙகார காலம் மாயையிலே கன்மமுங கூடுமென்னலாமோ என்னில், அப்படிச் சீவிககு மென்றதுஞ் சிருஷ்டிகாலங காரியமாயையாகிய கலையாதி ததது வஙகளோடுங கூடினவிடத்துச் சீவிப்புண்டாமென்கிற தொழியக் காரண மாயையோடுங கூடினவிடததுச் சீவிப்பில்லையென அறிக.

அதற்கநுபவம் ஏதென்னில் ஒரு விதையிலே முளையுண்டானாலும் அந்த விதையை விட்டு முளை தோன்றும் அவதரத்துச் சீவிப்புண்டாகுமதொழிந்து அவ்வளவும் அந்த விதைக்குள் முளையடங்கிக் கிடந்து சீவியாமற் கிடக்குமதுபோலவென அறிக. அப்படியானால் இந்தக் கன்மமும் மாயையைப்போல தனித்தொரு முதலாயிருக்கச் சிருஷ்டி காலமுஞ் சங்கார காலமும் மாயையோடுங்கூடிநிற்குமென் பான் ஏனென்னில், அப்படியே கன்மந் தனியேயொரு முதலாயிருந்தாலும் மற்றுள்ள மலஙகளைச் சார்ந்து நிற்பதொழியத் தனித்து நில்லாதாகையால் அப்படிச் சொன்னதென அறிக. அப்படிக் கன்ம மலமானது மற்றுள்ள மலங்களையுஞ் சார்ந்துநிற்கும் என்பதற்கு பி - ம் சித்தியாரில் "இருவினை யநாதி யாதி யியற்றலால் நுகர்வாலந்தம், வருமலஞ் சார்ந்து மாயா வுருவுகள் மருவி யார்த்துத், தருசெயன் முறைமை யாலே தான்பல பேதங் காட்டி, அருவதாய் நின்ற றன்ற ணைணயி னமர்ந்து செல்லும்" (2. 40) எ - து கண்டுகொள்க. இதில் மாயாவுருவுகள் மருவியார்த்து என்றமையால் சிருஷ்டி காலங் காரிய மாயையோடுங் கன்மங்கூடிநின்று காரியப்படுமென்பதொழியக் காரணத்திலுங் கூடிநிற்கும் என்பதற்கு வழியேதென்னில், ஆன்மாக்களுக்கு மும்மலங்களுங் கூடிநிற்குமது "மும்மலம் நெல்லினுக்கு முளையொடு தவிடுமிப்போல்" (சித்தி. 2. 86) என்றமையால் கன்மத்துக்கு உவமை முளையும் மாயைக்கு உவமை உமியுமாதலால் அந்த நெல்லில் உமிபோனால் முளை சீவியாதாற்போலக் கன்மமும் மாயை ஆதாரமாக ஒடுங்கி மீளவும் மாயை ஆதாரமாகச் சீவிக்குமென்பதை அநுபவத்தாற் கண்டுகொள்க. அன்றியும் அந்த நெல்லும் அக்கினியினாலே வெதுப்புண்ட அவதரத்து உமி கிடந்தாலும் முளை யெழாதாகையாற் கன்மமில்லாத பொழுது மாயையும் சீவிப்பற்றுப்போம் என்பதை அநுபவத்தாற் கண்டுகொள்க. ஆகையால் கன்மத்துக்கீடாக மாயையுண்டாமென்றும் மாயைக்கீடாகக் கன்மமுண்டாமென்றும் இரண்டும் ஒன்றைவிட்டொன்று நில்லாதென்று நூல்களிற் சொன்னதும் இப்பொருள் பற்றியென அறிக. இனி இங்ஙனஞ் சொல்லப்பட்ட கன்மமானது அருபமுமாய் சடமுமாயிருக்க அணுக்கள்தொறும் படர்வதாகி

என்று அறிவாயுள்ள ஆன்மாவைச் சடமாயுள்ள கன்மம் பொருந்து மென்பதற்கு வழியேதென்னில், அந்தக் கன்மமானது சடமாயிருந்தாலும் ஆன்மாவை முதநியிலே விட்டு நீங்குவதொழிந்து மற்றவிடமெல்லாம் ஆன்மாவை விடப்படாததாகையால் அப்படிச் சொன்னதென அறிக. இப்படிக் கன்மம் சடமாயிருந்தும் ஆன்மாவை விடப்படாததென்பதற்கு பி - ம் திருக்களிற்றுப்படியாரில் “ இன்றிங் கசேதனமா மிவ்விணைக ளோரிரண்டுஞ் - சென்று தொடருமவன் சென்றிடத்தே ” (42) எ - து கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது கன்ம மலமானது சிருஷ்டிகாலம் ஆன்மாக்கள் எடுக்கப்பட்ட தேகங்களுக்கெல்லாம் முன்னிலையுமாய்ப் புசிக்கப்பட்ட போகங்களுக்கெல்லாங் காரணமுமாய்த் திரிவித கரணங்களினாலே புண்ணிய பாவங்களை இயற்றுவித்து அதனாலே ஜநநமரணங்களை யுண்டாக்குவித்து நின்று சங்காரகாலம் மாயா காரணத்தோடுங்கூடி நிற்குமென்னும் முறைமையை அறிவித்தது.

இங்ஙனம் அநாதியாகச் சொல்லப்பட்ட கன்மமானது ஒவ்வோர் உடம்புகளோடுங்கூடிக் காரியப்படுமிடத்து மூவகைக் கன்மமாக நின்று காரியப்படும் முறைமையை மேலருளிச் செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

29. கன்மநெறி திரிவிதம்நற் சாதிஆயுப் போகக்
கடனதென வருமூன்றும் உயிரொன்றிற் கலத்தல்
தொன்மையது மூலதுணை வாகா தானும்
தொடங்கடைவின் அடையாதே தோன்று மாறித்
தன்மைதரு தெய்விகமுற் பௌதிகம்ஆன் மிகமாம்
தகையிலுறும் அசேதனசே தனத்தாலும் சாரும்
நன்மையொடு தீமைதரு சேதனனுக் கிவண்ஊண்
நாடில்அதன் ஊழ்விணையாய் நணுகுந் தானே. கக

ஆயுவும் போகமுஞ் சாதியு மாய்விணை
மாயை யுருவில் மருவு மென்றது.

(உரை) கன்மநெறி திரிவிதம் - ஆன்மாக்களுக்கு வந்து கூடுங் கன்மத்தின்வழி மூன்று பிரகாரமாயிருக்கும். அவையாவன : நற்

சாதியாயுப்போகக் கடனதெனவரும் - நல்லசாதி பொல்லாச்சாதி யென்றும் ஏறின ஆயுள் குறைந்த ஆயுள் என்றும் நல்ல போகம் பொல்லாப் போகம் என்றும் வாராநிற்கும். இவை எப்பொழு துண்டானதென்னில்; மூன்றுமுயி ரொன்றிற் கலத்தல் தொன்மை- இந்தக் கன்மங்கள் மூன்றும் ஓரான்மாவிலே கூடுகிறது அநாதியே யுள்ளதாம். சாதியு மாயுளும் முன்னேயுள்ள ஊழாலும் போகம் இபபொழுதுண்டான முயற்சியல்லவோ என்னில்; அது ஊழல்ல துணவாகா - அந்தப் புசிப்பும் ஊழ்வினையாலல்லது உண்டாகாது. அதுதான் முன்பே யார்ச்சித்த முறையிலே வருமோ முற்பிற்பாடாக மாறிவருமோ என்னில்; தானும் - அப்படி யார்ச்சிதத ஒழுங்கிலே வருகிறதுமுண்டு. அன்றியும்; தொடங்கடையின் அடையாதே தோன்றும் மாறி - அப்படி வாராமல் வன்மை மென்மைகளுக் கீடாக மாறிவருகிறது முணடு. அப்படி வருகிற கன்மத்தின விதி எஙஙனே என்னில்; தன்மைதரு தெயவிக முற்பௌதிக மான்மிகமாந் தகையி லுறும் - இயல்பிலே வரபபட்ட கன்மஙகள் தெய்வத்தாலும் பஞ்ச பூதஙகளினுலும ஆன்மாக்களாலும் வரும்; அவை வருமிடத்து; அசேதன சேதனத்தாலுஞ் சாரும் - அறிவில்லாதவையாலும அறி வுள்ளவையாலும் வருமு. ஆகையால்; நன்மையொடு தீமைதரு சேதனனுக்கு இவண் ஊண நாடில் - இங்ஙனம் நன்மை தீமைகளைப் பொருந்தி வருகிற ஆன்மாவுக்கு இவ்விடததிற் புசிப்பை விசாரிக் கில்; அதன் ஊழ்வினையாய் நணுகுந்தானே - முன் ஜநநத்திற் புசிக் கச் செய்தே யேறின ஆகாமியந் தானே இந்த ஜநநத்துககுப் புசிப் பாக வந்து பொருந்தும்.

மூன்றும் உயிரொன்றிற் கலததல் எ - கு ஓரான்மாவினிடத் திலே மூன்று காரியம் நிறகுமென்று பொருள்கூறியதேதெனனில், ஆன்மாக்கள் யாதாமொரு சரீரங்களைக் கன்மத்துக்கீடாக எடுக்கு மிடதது யாதாமொரு சரீரவர்க்கஙகளும் வயதுகளும் புசிப்புக்களு மல்லாமல் எடாதாகையாலே யபபடிச் சொன்னதென அறிக. இனி அது ஊழல்லது உணவாகா எ - கு இபபொழுதுணடான புசிப்புக்களும் ஊழாலொழிய வுண்டாகாதென்று பொருள்கூறிய தற்கு வழியேதென்னில், ஆன்மாக்கள் யாதாமொரு கன்மஙகளைப்

புசிக்குமிடத்து வந்து கூடினதற்குந் தவறு வருகையாலும் நினை யாதது வந்து கூடுகையாலும் ஊழாலல்லது புசிப்புண்டாகாதென்ற தென அறிக. இதற்கு பி - ம் திருவள்ளுவப்பயனில் "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று - சூழினுந் தான்முந் துறும்" (380) எ - து கண்டுகொள்க. இனி தொடங்கடைவி னடையாதே தோன்றும் மாறி எ - கு கன்மத்தின்வழி வன்மை மென்மைகளுக் கீடாக மாறி வருகிறதும் உண்டென்று பொருள்கூறியதேதென் னில் முந்தச்செய்த கன்மம் பிற்பட்டும் பின்பு செய்த கன்மம் முற் பட்டும வருகையாலே யப்படிச் சொன்னதென அறிக. அது எங் ஙனேயென்னில் ஒருவன் பயிர செய்யுமிடத்து முந்த வல்விதையை விதைத்துப் பின்பு இளவிதையை விதைத்தாலும் அந்த இளவிதை முந்தப் பயன்படுத்துமாறுபோலக் கன்மத்தின் மிகுதி முந்தப் பயன் படுமென அறிக. இனி, தன்மைதரு தெய்விக முற்பௌதிக மான்மிக மாம் எ - கு தெய்வத்தாலும் பஞ்ச பூதத்தாலும் ஆன்மாக்களாலும வருமென்றதற்கு வழியேதென்னில் தெய்விக கன்மமாவது மாதா வின கருப்பகோளகையிலே இவனிருக்குமிடத் துண்டான விதனம் ஜநநமரணத்தில் உண்டான விதனம் யமதண்டம் நரகவேதனை இவை முதலாக உள்ளவையிற்றிலே துக்கப்படுதலென அறிக. இனி பஞ்சபூதங்களால் வருகிற பௌதிக கன்மமாவது குளிர் வெப்பம் மழை காற்று மின் இடி சுவர்விழுதல் கல்விழுதல் இவை முதலாக உள்ளவையிற்றிலே துக்கப்படுதலென அறிக. இனி ஆன்மிக கன்மம் ஆன்மாக்களால் வருகையாவது சரீரத்திலும் மனத்திலுந்துக்கப் படுகை. இதற்கு வழியேதென்னில் தத்தஞ் சரீரத்திலுண்டான வியா திகளினாலும் மிருகங்களினாலும் பறவைகளினாலும் இராக்ஷதரா லும் பசாசுகளாலும் கள்வராலும் மற்றுள்ள மனிதராலும் இவை முதலாயுள்ள சரீர துக்கங்களென அறிக. இனி மற்ற மனோ துக்க மாவது பிறருடைய கல்வியுஞ் சௌந்தரியமுஞ் செல்வமுங் கண்டு பொறாமை அபிமானங்கெடுதல் எழுந்தது புத்தியாகச்செய்தல் கோபி யாய்த் திரிதல் என்னும் இவை முதலாயுள்ளவையென அறிக. மற்றச் சுக கன்மங்களும் இங்ஙனஞ் சொல்லிவந்த ஒழுங்கிலே கண்டு கொள்க.

ஆக இங்ஙனஞ் சொல்லப்பட்ட மூவகைத் துக்கமாகிய கன்மங்களுக்கு பி - ம் ஞானமிர்தத்தில் " ஆதி தெய்விக மாதி பௌதிக - மாதி யத்தி யான்மிக மென்ன - ஓதிய துக்க மூன் றினத் தியான்மிக - மெய்யில் மனத்தி லேயமி லிரண்டே - வளியிற் பித்தில் விளையா ஈளையி - னானுரு தொழுனையி லுதகக் கொட் டில் - வெப்பிற் சூலையின் மக்களின் விலங்கின் - அலைகையிற் கள்வ ரிற் பறவையின் நிருதரில் - மைந்தரின் மகளிர் மணத்திடை தணப் பிற் - பேரறம் வளர்ப்பிற் பெருந்திரு நுகர்விற் - சீரிய யாக்கை மாதுயர் மாசு - மனத்துறு துயரம் நினைப்பருஞ் சோகம் - அறிவுரு வாக்க மடையுநற் பொறுமை - மான மாக்கலம் பூணுது மறுத்த - லிச்சையை நினைத விருஞ்சின மிகுத்தல் - இனையவை முதலா நினை வருந் திறத்த - ஆதி பௌதிகஞ் சீத மாமழை - யுருப்பவிர வேனில் உட்குவரு கடுங்கா - லிருள்கீ ழிடுமின் பெருவிற லசனி - மன்னு யிர்க் குறுகண் துன்னியா றருந்தல் - ஆதி யாய வீவருந் திறத்த - ஆதி தெய்விகம் பேதையர் வையின்அக் - கருக்குழி யழுங்கல் பிறப்பு றும் போது - திரைவருந் தீமை வரைவில் பேதைமை - மடங்க லாருயிர் தொடங்கின வவ்வலின் - யாவரும் விழையாக் கோள்வாய் நிரயத்து - வீழ்ந்தன ரெழாஅ வான்கழி துன்ப - மினைய மாலைய துயரிடை வினைநகர் - கருங்கைக் கைமைக் களிறுகைத் திரும்புலப்- பெரும்படை விரிந்து சூழத் திருந்தா - நாற்கதிப் பவனி யுலாஅய் - ஆர்த்தவிழ் திறம்பிற போற்றுமதி புரிந்தே" (26) எ - து கண்டு கொள்க. அன்றியும் இங்ஙனங் கூறிவந்த மூவகைத் துக்கஞ் சிவாக மத்தில் கிரந்தத்திலே யெடுத்து சதிர்த்தின சங்கிரகத்திலே சேர்ந்த கிரந்தத்தினுங் கண்டுகொள்க. அந்தக் கிரந்தத்தின் அத்தமும் முற் கூறிய ஞானமிர்தத்தின் அத்தமும் ஒப்புநோக்கிக் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, கன்மமானது காரியப்படுமிடத்து ஆயு ளும் போகமும் சாதியுமாகநின்று காரியப்படுமென்றும் அது ஊழ் வினையாலொழிய வாராதென்றும் அது வருமிடத்து ஆர்ச்சித்த ஒழுங்கிலே வருமென்றும், அன்றியும் வன்மை மென்மைகளுக் கீடாக மாறியும் வருமென்றும் அதுதெய்விக கன்மமாகவும் பௌதிக கன்மமாகவும் ஆன்மிக கன்மமாகவும் வருமென்றும் புண்ணிய பாவங

களுக்குடனாய் நிற்கிற ஆன்மாக்களுக் கிவையெல்லாம் ஊழ்வினை யால் வருமென்றும் வருமுறைமையை அறிவித்தது.

இஙஙனம் எடுத்த உடலிலே புசிக்கிறதெல்லாம் ஊழேயானால் மேலைக்கு ஜநநத்துக்கேதுவாகிய ஆகாமியம் உண்டாகிற வகையெப் படியென்று வினவ மேலருளிச் செய்வான் எடுத்துக் கொண்டரு ளியது.

30. மேலைக்கு வருவினைஏ தென்னில் அங்கண்
விருப்புவெறுப் பெனஅறிஅவ் வினையும் எல்லாம்
மூலத்த வினைப்பயில்வாம் என்னின் நாம்ஏன்
முற்றிஅதன் பயன்உனக்கு முளைக்கு மென்பர்
ஞாலத்து வினைகள்இரு திறனுகும் புந்தி
நண்ணாத வினைநணுகும்வினையெனவொன் றிரண்டாம்
ஏலத்தான் இதம்அகித மாம்இதனல் வழுவா(து)
எய்தியிடும் புண்ணியபா வங்க ளென்றே. கஉ

மன்னிய விருப்பு வெறுப்பால் வல்வினை
பின்னும் வினையும் பெற்றியை யுரைத்தது.

(உரை) மேலைக்கு வருவினை யேதென்னில் - இந்த உடலிலுண் டாகிய புசிப்பெல்லாம் ஊழேயாகில் மேலைக்கு ஜநநமுண்டாகத்தக்க கன்மத்துக்கேது எப்படியென்னில்; அங்கண் விருப்பு வெறுப்பென அறிக - அந்த ஊழாகிய சுகதுக்கம் புசிக்கிற அவதரத்திலே யுண் டாகிய பிரியாப்பிரியங்கள் வித்தாக மேலைக்கு ஜநநமுண்டாமென அறிவாயாக; அவ்வினையுமெல்லாம் மூலத்த வினைப் பயில்வாமென் னில் - அப்படிப பிரியாபபிரியப்பட்டுப் புசிக்கிறது முன்னை வினை யின் பகுதியல்லவோ என்னில், அப்படியானலும்; நாமேன் முறறி அதன் பயனுனக்கு முளைக்கு மென்பர் - நாம் முன்பு பண்ணின கன்ம மல்லவோ இப்பொழுது புசிககிறேமென்று விசாரியாமல் நாம் செய் தோம் பிறர் செய்தாரென்று நீ சுட்டுகையாலே யந்தச் சுட்டா லுளள பயன் மேலைககு உற்பவிக்குமென்று பெரியோர்களை சொல்லு வாாகள். ஆகையால்; ஞாலத்து வினைகள் இருதிறனுகும் - பிரபஞ் சததிற் புணணிய பாவங்கள் இரண்டு வகைப்பட்டிருக்கும். அஃதெங

நனே என்னில்; புந்தி நண்ணாத வினை நணுகும் வினையென ஒன்றிரண்டாம் - புத்தி பூர்வமாகச் செய்ததென்றும் அபுத்தி பூர்வமாகச் செய்ததென்றும் இரண்டு வகைப்பட்டிருக்கும். அன்றியும் புத்திக்குப் பொருந்திய காரியமென்றும் பொருந்தாத காரியமென்றுஞ் சொல்லவுமாம். அதனை விசாரிக்குமிடத்து; ஏலத்தான் இதமகிதமாம் - அநாதியே ஹிதமென்றும் அஹிதமென்றும் இரண்டு வகையாம்; இதனால் வழுவா தெய்தியிடும் புண்ணிய பாவங்களென்றே - இந்த ஹிதத்தாலும் அஹிதத்தாலுந் தப்பாமற் பொருந்தியிடும் புண்ணிய கன்மமும் பாவ கன்மமும்.

இப்பொழுது புசிக்கிறதெல்லாம் ஊழேயானால் மேலைக்கு ஆகாமிய முண்டாகிற தெப்படியென்று கேட்டதற்கு இந்தப் பிராரத்தம் புசிக்கச்செய்தே யுண்டான விருப்பு வெறுப்பாகிய ஹிதாஹிதங்களாலே ஆகாமியங் கட்டுபபடுமென்று ஆசாரியர் விடைகொடுத்ததற்கு பி - ம் சித்தியாரில "முற்செயல் விதியை யிந்த முயற்சியோடநுப வித்தா, விச்செயல் பலிக்கு மாறென் னிதமகி தங்கள் முன்னர், அச்செய லாலு லிங்கு மவைசெயின் மேலைக் காகும், பிற்செயா தநுப விப்ப தின்றுபின் தொடருஞ் செய்தி" (2. 11) எ - ம், அந்த விருப்பு வெறுப்பும் அநாதியே தொன்றுதொட்டு வருமென்பதற்கு பி - ம் சித்தியாரில் "மேலைக்கு வித்து மாகி விளைந்தவை யுணவுமாகி, ஞாலத்து வருமா போல நாஞ்செயும் வினைக ளெல்லாம், ஏலத்தான் பலமாச் செய்யு மிதமகி தஙக ளெல்லாம், மூலத்த தாகி யென்றும் வந்திடு முறைமை யோடே" (2. 12) எ - ம் கண்டுகொள்க. அப்படி முன்புசெய்த கன்மத்துக்கீடாகவல்லவோ இப்பொழுது புசிக்கிறோமென்று விசாரியாமல் நான்செய்தேன் பிறர் செய்தாரென்று சுட்டுகையால் அந்தச் சுட்டாலுள்ள பயன் மேலைக்கு வினைவாமென்பதற்கு பி - ம் சித்தியாரில் "யான்செய்தேன் பிறர்செய்தா ரென்னதியா னென்னு மிக்கோணை ஞானஎரியால்வெதுப்பி நிமிர்த்துத், தான்செவ்வே நின்றிடவத் தத்துவன்தான் நேரே தனையளித்து முன்னிற்கும் வினையொளித்திட்டோடும், நான் செய்தே னெனுமவாக்குத் தானங் கின்றி நண்ணுவிக்கும் போகத்தைப் பணணுவிக்குங் கன்மம், ஊன்செய்யா ஞானந்தா

னுதிப்பி னல்லால் ஒருவருக்கும் யானெனதிங் கொழியா தன்றே" (10. 2) எ - து கண்டுகொள்க. ஞாலத்து வினைகளாகிய இருவகைப் பயனுகிற புண்ணிய பாவங்கள் புத்தி பூர்வத்தாலும் அபுத்தி பூர்வத் தாலும் உண்டாமென்ற தேதென்னில், அபுத்தி பூர்வமாவது ஒரு பொல்லாங்குகளிலாவது நன்மைகளிலாவது மனதும்வாக்குந் தன்னை யறியாமல் ஓடினுற் பின்பு நம்மை அறியாமல் இப்படி வந்ததா யிருந்ததெனக் கொள்கை; புத்தி பூர்வமாவது ஒருவருக்கு ஒரு நன்மை தீமைகளைச் செய்யுமிடத்து இவர்களுக்கென்ன பொல் லாங்கு செய்வோமென்றும் என்ன நன்மை செய்வோமென்றும் மனதும் வாக்குங் காயமுங்கூடி நினைத்துஞ் சொல்லியுஞ் செய்தும் வருகையென அறிக.

இதனுற் சொல்லியது, இந்த உடலிலே புசிக்கிறதெல்லாம் பிராரத்தமானுல் மேலைக்கு ஆகாமியம் உண்டாம்வழி எப்படியென்று வினவ இபபொழுது புசிக்கிறது முன்புள்ள ஊழ்வினையின் பயனல் லவோ என்று விசாரியாமல் நான் செய்தேன் பிறர் செய்தாரென்ற விருப்பு வெறுப்பாகிய சுட்டால் மேலைக்கு ஜநநமுண்டாமென்றும் அவை வருமிடத்துப் புத்தி பூவத்தாலும் அபுத்தி பூர்வத்தாலும் வருமென்னும் முறைமையையும் அறிவித்தது. கஉ

இங்ஙனம் உண்டாக்கப்பட்ட ஆகாமியத்தாற் புண்ணிய பாவங் கள் உண்டாம்வழி எப்படியென்றும் அதுபோம்வழி எப்படி என் றும வினவ மேலருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

31. உற்றதொழில் நினைவுரையின் இருவினையும் உளவாம்
ஒன்றென்றால் அழியாதூண் ஒழியா துன்னில்
மற்றவற்றின் ஒருவினைக்கோர் வினையால் வீடு
வைதிகசை வம்பகரும் மரபில் ஆற்றப்
பற்றியது கழியும்இது விலையால் ஏற்கும்
பான்மையுமாம் பண்ணுது பலிக்கும் முன்னம்
சொற்றருநூல் வழியின்வரின் மிகுதி சோரும்
சோராதங் கதுமேலைத் தொடர்ச்சி யாமே. கந

ஒழியா விருவினை யொன்றினு லொன்றிங்
கழியா தநுபவ மாகு மென்றது.

(உரை) உற்றதொழில் நினைவுரையி னிருவினையு முளவாம் - பொருந்தப்பட்ட உடம்பின் தொழிலாலும் மனதின் நினைவாலும் வாக்கின் சொல்லாலும் புண்ணிய பாவங்கள் இரண்டுமுண்டாம். அப்படி உண்டாமிடத்து ஒரு கன்மங்கொண்டு ஒரு கன்மத்தைப் போக்கிக் கொள்ளலாமோ இரண்டும் இரண்டாக அநுபவிக்க வேணுமோ என்னில்; ஒன்றொன்றால் அழியாதூண் ஒழியா துன்னில் - புண்ணியத்தாற் பாவமும் போகாது, பாவத்தாற் புண்ணியமும் போகாது, ஆகையாலே விசாரிக்குமிடத்துப் புசிப்புந் தவிராது. அப்படியானல் ஒருவர் செய்த பாவ கன்மங்களைப் போக்கிக் கொள்ளுகைக்கு வழியில்லையோ என்னில்; மற்றவற்றின் ஒருவினைக்கோர் வினையால் வீடு வைதிக சைவம் பகரும் - அபபடிச் செய்யப்பட்ட வினைகளில் ஒரு வினையைக்கொணடு ஒரு வினையைப் போக்குதற்கு உபாயம் வேதாகமங்கள் சொல்லாநிற்கும்; மரபிலாற்றப் பற்றியது கழியும் - அந்த வேதாகமங்கள் சொன்ன முறைமையிலே செய்தாற் கூடின கன்மங்கள் நீஙகும். அப்படிச் செய்யமாட்டாதவர்களுக்கு இந்தத் தோஷங்கள் நீங்கும் வழி எங்ஙனே யென்னில்; இது விலையாலேற்கும் பான்மையுமாம் பண்ணுது பலிக்கும் - இந்தத் தோஷங்கள் நீஙகுகைக்குத் தான்செய்து கொள்ளமாட்டா னில்லையாகிலும், சில திரவியங்களைக கொடுத்துச் செய்ய வல்லவர்களைக் கொண்டு செய்வித்துக் கொள்ளுகையாலே தான் செய்யாதிருக்கிலுந் தனக்குப் பயனுகப பலிக்கும். இங்ஙனம் உண்டான தோஷங்களைப் போக்கிக்கொள்ளலாமென் றிருக்கச்செய்தே ஒன்றொன்றால் அழியா தென்றதேதென்னில், அஃதாவது; முன்னம் சொற்றருநூல் வழியின்வரின் மிகுதிசோரும்-முன்னே சொல்லப்பட்ட வேதாகமங்களின் முறைமையிலே ஒருவன் தான் செய்த தோஷத்துக்குத் தகக பிராயச்சித்தஞ் செய்தாலும் அந்தத் தோஷத்தின் கௌரவங் கெட்டுத் தோஷமாததிர நிற்கும். அதேதென்னில், ஒருவன் பிரமஹ‌தத்தி கோவதை முதலாயுள்ள தோஷங்கள் செய்து அதற்குத்தக்க பிராயச்சித்தஞ் செயதாலும் நரகவேதனைக்குள்ள கௌரவங்கெட்டுக் கொலைத்தோஷமாத்திரம் நிற்குமென அறிக. அப்படிக் கொலைமாத

திரமாக நின்றது ஏதுசெய்யு மென்னில்; சோராதம் கது மேலைத் தொடர்ச்சி யாமே - நீங்கிப்போகாத கன்மம் மேலுடல் எடுக்கைக்குத் தொந்தனையாம். ஆகையினாலே ஒன்றொன்றால் அழியாதெனக் கொள்க.

உற்ற தொழில் நினைவு உரையாகிய மனவாக்குக் காயங்களால் உண்டாகிய கன்மங்களாவன : அருள்நினைவு பொறை பிறர்பொருள் விரும்பாமை செய்ந்நன்றி மறவாமை அபிமானம்பேணல் அழுக்கா றின்மை அவாவறுக்கை பிறர்விதனங்கண் டிரங்குதல் பிறருக்கு அறிவுஞ் செல்வமும் அழகும் மோக்ஷமுமாகிய இவை நான்கும் தம் மினும் மிகுதியாக வேணுமென்று விரும்பி நினைக்கை ஆக இவையித்த னையும் மனதிலுண்டாகிய நல்வழி நினைவென அறிக; இவையித்தனைக் கும் மாறுபட நினைக்கை தீவழிநினைவென அறிக. இனி, வாக்கினால் உண்டாகிய கன்மமாவது தன்மம் ஞானங்கூறுதல் புறங்கூறாமை உண்மையே சொல்லுதல் நூலுரைகூறல் இனியன சொல்லுதல் கடுஞ்சொல் விடுதல் வேதாகமங்களை ஓதல் ஆக இவையித்தனையும் வாக்கினாலுண்டாகிய நல்லுரையென அறிக; இவையிற்றுக்கு மாறு படக் கூறுகை தீய வசனங்களென அறிக. இனி, காயத்தினாற் செய் யுங் கன்மமாவது அரிதாய தவங்களைச் செய்தல் பூசைகள ஓமங்கள் செயகை பகுத்துண்ணல் பூமரங்கள் தோப்புகள் வைக்கை பிறர்மனை விழையாமை குளம்வெட்டுகை கூவல்தோண்டல் தன்மசாலை பள்ளிகக்கூடம் திருக்கோயிலெடுக்கை மடங்கட்டுகை ஆக இவை யித்தனையுங் காயததினாற்செய்யும் நற்றொழில்களென அறிக; இவை யிறறுக்கு மாறுபாடாகச் செய்கையெல்லாந் தீவழித்தொழிலென அறிக. இங்ஙனம் மனததினால் நினைததும் வாக்கினாற் சொல்லியுங் காயத்தினாற் செயதும் வருமென்பதற்கு பி - ம் ஞானாமிர்தத்தில் "பொய்ப்பொறி புணர்க்கும் முப்பொறி யுள்ளும் - உள்ளச் செய்தி தெள்ளிதிற் கிளப்பின் - இருள்தீர் காட்சி அருளொடு புணர்தல் - பெரும்பொறை தாஙகல் பிறன்பொருள் விழையாமை - செய்தநன் றறிதல் கைதவங் கடிதல் - பால்கோ டாது பகலிற் றென்றல் - மான மதாணி யாணிற் றாஙகல் - அழுக்கா றின்மை'யவாவிற் றீர்தல் - அருந்துய ருயிர்கட் கிருந்த காலை-யழல்தோய் வன்ன ராதி யானைக் - கழலு நெஞ்சிற் கையற் றிரேதல் - பன்னருஞ் சிறபபின் மன்னுயிர்த்

துடக்கிற் - கறிவும் பொறியுங் கழிபெருங் கவினும் - தெறற்கருந் துறக்கமும் மறப்ப ஆங்குத் - தம்மினும் வேண்டும் எண்ணரும் பெருங்குணம் - வாக்கொடு சிவணிய நோக்கின் மீக்கொள - அறம் பெரி துரைத்தல் புறங்கூ றுமை - வாய்மை கல்வி தீமையிற் றிறம்பல்-இன்மொழி யிசைத்தல் வன்மொழி மறுத்தல்-அறிவுநூல் விரித்த லருமறை கழறல்-அடங்கிய அறைதல் கடுஞ்சொல் விடுதல்-பயனீன்ற படிககல் படிற்றுரை கெடுதல் - காயத் தியைந்த வீயா வினையுள்-அருந்தவந் தொடங்கல் திருந்திய தானங் - கொடையுடம் படுதல் படையுடம் படாமை - யமரர்ப் பேண லாகுதி யருத்தல் - ஒழுக்க மோம்பும் விழுப்பெருங் கிழமை - யுடம்பிடி யேந்தி யுடல் தணிந் திடுமா - றடைந்த காலை யவணியல் துயரந் - தேரா ரல்லா தெரிந்து மாருயிர் - பெரும்பிறி தாகலி னிரும்பிண மிசைஞரி - ஞெராறகு படாஅ மாசில் காட்சி-ஐம்பெரும் பாதகத் தாழி நீந்தல் - இந்தியப் பெரும்படை யிரிய நூறும் - வன்தறு கண்மை வானினிட் டாங்கு - நோவன செயினு மேவன விழைதல் - தவச்சிறி தானு மிகப்பல விருந்து - பாத்தூண் செல்வம் பூக்கம ழிரும்பொழில்-தன் மனைக் கிழத்தி யல்லதைப் பிறர்மனை - யன்னையிற நீரா நன்ன ராண்மை - கார்கோ ளன்ன கயம்பல கிளைத்தல்-கூவல் தொட்டல் ஆதுலர் சாலை - யறங்கரை நாவி ஞன்ரோர் பள்ளிக் - கடவுட் கண் ணிய தடவுநிலை கோட்டம் - இனையவை முதலா நினைவருந் திறத்த-புறத்தன மாதோ அறத்துறை மறத்துறை - யிவற்று வழிப்படா தெதிர்வன கெழீஇ - யுருற்றென மொழிப வுணர்ந்திசி னோரே" (24) எ - து கண்டுகொள்க. ஒருவினைக்கோர் வினையால் வீடு என்றது சமயாசார முதலாயுள்ளதற்குத் தவறுவந்தால் அதற்குப் பிராயச்சித்தஞ் செய்துகொள்ளவுமா மென்றதென அறிக.

இதனாற் சொல்லியது மனவாக்குக் காயங்களினாலே கன்மமேறு மென்றும் அப்படி ஏறின கன்மங்களை நீக்கிக்கொள்ளுகைக்குப் பிராயச்சித்தமும் அந்தப் பிராயச்சித்தத்தாற் போகாத கன்மத்துக்கு மேலும் ஜனனதொந்தனை உண்டாமென்னு முறைமையையும் அறிவித்தது. கரு

இங்ஙனம் பஞ்ச மலங்களின் காரண காரியஙகளை 'ஏகமாய்' என்னும் விருத்தந்தொடங்கி இவ்வளவும் அருளிச்செய்து, மேலிந்தப்

பஞ்ச மலங்களின் தொகையும் இவையிற்றுடன் கூடிநிற்கும் ஆன்மாக்களுக்கு இவை நீங்கியே அருளைப் பெறவேணுமென்னும் முறைமையையும் அருளிச் செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

## பஞ்ச மலங்கள்

32. மோகமிக உயிர்கள்தொறும் உடனாய் நிற்கும்
மூலஆ ணவம்ஒன்று முயங்கி நின்று
பாகமிக உதவுதிரோ தாயி ஒன்று
பகர்மாயை ஒன்றுபடர் கன்ம மொன்று
தேகமுறு கரணமொடு புவன போகச்
செயலாரும் மாமாயைத் திரட்சி ஒன்றென்(று)
ஆகமலம் ஐந்தென்பர் ஐந்தும் மாற(து)
அருளென்ப தரிதென்பர் அறிந்து ளோரே. கஉ

அலக்கண் படுமுயிர்க் கைந்து வகையா
மலதநின் பகுதியை வனப்புற வகுத்தது.

(உரை) மோகமிக உயிர்கள்தொறும் உடனாய் நிற்கு மூல ஆணவமொன்று-அறியாமை மிகவுண்டாம்படி ஆன்மாக்கள் தோறுஞ் சகசமுமாய் அநாதியுமாய் இருக்கப்பட்ட ஆணவமலமொன்று; முயங்கி நின்று பாகமிக உதவு திரோதாயி ஒன்று - அந்த ஆணவ மலத்தோடுங்கூடி நின்று அது பக்குவமாமளவும் ஆன்மாவை மறைத்து அந்த மலததைப் பாகம் வருத்துகிற திரோதமலமொன்று; பகர் மாயையொன்று - ஆன்மாககளுக்குத் தனுவாதிகளைக் கொடுக்குமென்று சொல்லபபட்டு வருகிற மயக்கத்தைச் செய்யும் அசுத்த மாயாகாரண மலமொன்று; படர் கன்மமொன்று - ஆன்மாக்கள் தோறும் விரிந்து அநுபவமாய் நிற்குங் கன்ம மலமொன்று; தேகமுறு கரணமொடு புவனபோகச் செயலாரும் மாமாயைத் திரட்சியொன்று - ஆன்மாக்கள் எடுககப்பட்ட பூததேகமாகிய தனுவும் அதனோடுற் றிருக்கப்பட்ட கரணமும் அதனோடுங் கூடிவரும் புவனமும் போகமும் ஆன்மாக்களோடுங்கூடிக் காரியப்படும் அவதரத்து அவையிற்றை முற்கூறிய அசுத்த மாயா காரணத்திலே நின்று சிவசத்திகள் தோற்றுவிக்கும் அவதரத்து அவையிற்றோடும் பொருந்தி நடத்

தப்பட்ட சுத்தமாயையின் திரட்சியாகிய சுத்த தத்துவங்களென்னும் மலமொன்று. அன்றியும் இந்தப் பதத்துக்குப் பொருள்சொல்லு மிடத்து வித்தைகள் வித்தை யீசர் சதாசிவரென்ற விஞ்ஞான கலர்க்குத் தனுகரண புவன போகங்களைக் கொடுத்து நிற்கிற சுத்த மாயையென்பாருமுளர். அஃதிவ்விடத்துச் சொல்லவேண்டுவதில்லை யென அறிக. அதற்குக் குற்றமேதென்னில் இச்செய்யுள் சகலரை நோக்கிப் பஞ்ச மலங்களின் தொகை சொல்லுகையாலும் இந்தச் செய்யுளில் விஞ்ஞானகலர் பிரசங்கமில்லாதபடியாலும் பஞ்ச மலங்கள் விஞ்ஞானகலர்க்கு இல்லாதபடியாலும் அப்படிச் சொல் லப்படாதென அறிக; என்றாக மலம் ஐந்தென்பர் - ஆகக் கூட்டி இங்ஙனஞ் சொல்லப்பட்ட மலம் ஐந்தென்று பெரியோர்கள் சொல் லுவார்கள். ஆகையால்; ஐந்தும் மாறா தருளென்ப தறிதென்ப ரறிந் துளோரே - இங்ஙனஞ் சொல்லப்பட்ட மலம் ஐந்தையும் விட்டு நீங் காமல் ஆன்மாக்களுக்குத் திருவருளுண்டாகாதென்று பெரியோர் கள் சொல்லுவார்கள்.

மோகமிக உயிர்கள்தொறும் உடனாய் நிற்கும் மூல ஆணவ மொன்று எ - கு ஆணவமல மொன்றாயிருக்க ஆன்மாக்கள்தோறுங் கூடிநின்று மறைக்குமென்று பொருள்படுத்துகைக்கு வழியேதென் னில், இருளானது ஒன்றாயிருந்தும் பல கண்களையும் மறைத்தாற் போல ஆணவ மலமும் அப்படியொன்றாயிருந்தாலும் பல ஆன்மாக் களையும் மறைக்குமென்றதென அறிக. இதற்கு பி - ம் திருவருட் பயனில் "பலரைப் புணர்ந்துமிருட் பாவைக்குண் டென்றுங் - கணவற்குந் தோன்றாத கற்பு" (25) எ - து கண்டுகொள்க. இனி முயங்கிநின்று பாகமிக வுதவு திரோதாயி யொன்று எ - கு அருளா கிய திரோதசத்தி ஆன்மாக்களை மறைக்கப்பட்ட இருளாகிய ஆணவ மலத்தோடுங் கூடிநின்று பாகம் வருத்துமென்று பொருள்கூறிய தேதென்னில், காணுங் கண்ணனைத மறைக்கப்பட்ட படலத்தை நீக்கப்பட்ட ஔஷதமானது கண்ணோடுங்கூடி நின்று விதனமாக்கி அந்தக் கண்ணைத் தெரிவித்தாற்போல சிவனுடைய அருளானது திரோதமாய்நின்று ஆன்மாக்களை மறைக்கப்பட்ட ஆணவமலத்தைப் பாகம் வருத்தி அந்த மலபாகம் வந்தவாறே ஆன்மாக்களுக்கு

ஞானம் பிரகாசிக்கையால் அப்படிச் சொன்னதென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "ஏயுமும் மலங்கள் தத்தந் தொழிலினை யியற்ற ஏவுந், தூயவன் றனதோர் சத்தி திரோதான கரிய தென்றும்" (2. 87) எ - ம், இந்நூலினும் "மூற் சினமருவு திரோதாயி கருணை யாகி" (48) எ - ம் வரும் ஏதுக்களைக் கண்டுகொள்க. இனி பகர் மாயையொன்று எ - கு அசுத்த மாயா காரண மலமொன்றென்று பொருள் கூறியதேதென்னில், ஆன்மாக்கள் சங்காரப்பட்டு ஒடுங் கும் அவதரத்துத் தாரகமாய் நின்றும் சிருட்டிகாலம் ஆன்மாக்களுக் குத தனு கரண புவன போகங்களாகிய கலையாதி தத்துவங்கள் தன் னிடததிலே தோன்றுகைக்கு உபாதானமுமாயிருக்கிற காரண மாயை என்றதென அறிக. இதற்கு பி - ம் தத்துவ விளக்கத்தில் "ஓதிய வல்வினை யூட்டக் கருவி யுடம்புலக, மாதிய போகமு மாய் நின்ற மாயை மயக்குவித்தே, போதந் தரும்பொரு ளாகிநிற் கும்புவ ஞதிகளுக், காதியு மாய்விரிந் தந்தமு மாகி ஒடுங்கியதே" (22) எ - ம, சித்தியாரில் "நித்தமா யருவா யேக நிலையதா யகிலத் துக் கோர், வித்துமாய்ச் சித்தா யெங்கும் வியாபியாய் விமல னுக்கோர், சத்தியாய்ப் புவன போகந் தனுகர ணமுமுயிர்க்காய், வைத்ததோர் மலமாய் மாயை மயக்கமுஞ் செய்யு மன்றே" (2. 53) எ - ம், இந் நூலினும் "உருவாதி சதுவிதமாய" (22) என்னும் விருததமும் ஆக இங்ஙனம் வரும் ஏதுக்களைக் கண்டுகொள்க. இனி, படர்கன்மம் ஒன்று எ - கு எஙகும் விரிந்திருக்கப்பட்ட கன்ம மலமொன்றென்று பொருள் கூறியதேதென்னில், ஆன்மாக்கள் எடுக்கப்பட்ட அச்சுக் கள் தோறுங கூடிநின்று அவரவர்க்குண்டான புண்ணிய பாவங் களுக் கீடான புசிப்புககளைக் கொடுத்து நிற்கையால் அப்படிச் சொன்னதென அறிக. இதற்கு பி - ம் தத்துவ விளககததில் "பிணைந்தவக் கன்மம் பெருகிய வாசை யணுநுகர்தற், கணைந் தன கன்மம் இருவகைத் தாமறம் பாவமென்ப, தணைந்து மணந் துந்தன் சார்பினிற் றேன்றுமன் சந்நிதியால, உணர்நதவர் வித்தும் விளைவு மொப்பாமென ஓதுவரே" (21) எ - ம், சித்தியாரில் "இரு வினை அநாதி யாதி இயற்றலால் நுகர்வால் அந்தம், வருமலஞ் சார்ந்து மாயா உருவுகள் மருவி யார்த்து" (2. 40) எ - ம், இந்நூலினும்

" அணுக்கள் தொறும் படர்வ தாகி " (28) எ - ம் வரும் ஏதுக்களைக் கண்டுகொள்க. இனி, தேகமுறு கரணமொடு புவனபோகச் செய லாரு மாமாயைத் திரட்சியொன்று எ - கு ஆன்மாக்களுக்கு உண் டான தனு கரண புவன போகங்களை நடத்துகிற சுத்த மாயையின் திரட்சியாகிய சுத்த தத்துவமல மொன்றென்று பொருள் கூறியதே தென்னில் அசுத்த மாயா காரியமாகிய கலையாதி தத்துவங்களைப் பிரேரிக்கப்பட்ட சுத்த மாயா காரியமாகிய சுத்த வித்தை யீசுரம் சாதாக்கியம் சத்தி சிவமென்னபபட்ட சுத்த தத்துவங்கள் ஐந்தும் ஒருமல மென்றதென அறிக. அவையிற்றைப் பிரேரிப்பித்தது கொண்டே சுத்த தத்துவங்களை மலமென்னலாமோ என்னில் அப்படிச் சொல்லப்படுமென அறிக. அதற்கு வழியேதென்னில், சிவனுடைய அருட்சத்தியானது திரோதமாய் நின்று மலத்தைக் காரியப்படுத்த அது மலமென்று பெயர் பெற்றாற்போல இதற்கும் அப்படிச் சொல்லப்படுமென அறிக. இனி, ஐந்தும் மாறு அருளென்ப தரிதென்பர் அறிந்துளோரே எ - கு இங்ஙனஞ் சொல்லப்பட்ட மலங்கள் ஐந்தும் நீங்கினலொழிய ஆன்மாக்களுக்கு அருளுண்டாகா தென்று பொருள்கூறியதேதென்னில் இந்த மலங்கள் ஐந்தோடுங் கூடி நிற்குமளவும் ஆன்மாக்களுக்கு ஜநநந் தொலையாதது கொண்டே அப்படிச் சொன்னதென அறிக. இதற்கு பி - ம் திருவாசகத்தில் " மலங்களைந் தாற்சுழல் வன்தயி ரிற்பொரு மத்துறவே " (6. 29) எ - து கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, ஆன்மாக்களோடும் அநாதியாய் மறைக்கப்பட்ட ஆணவமலம் ஒரு மலமென்றும், அதனோடுங்கூடி அந்த மலததைப் பாகம் வருததுவதான திரோதாயி ஒருமலமென் றும், அதனோடுங்கூடி வருகிற அசுத்த மாயா காரண மலமொன் றென்றும், அதனோடுங்கூடி விரிந்து வரப்பட்ட கன்ம மலமொன் றென்றும், அதனோடுஙகூடி வரபபட்ட அசுத்த மாயா காரியமாகிய தனு கரண புவன போகங்களை நடத்துகிற சுத்த மாயா காரியமாகிய சுத்த தத்துவங்கள் ஒரு மலமென்றும், ஆக இங்ஙனஞ் சொல்லப் பட்ட மலஙகள் ஐந்தும் நீங்காமல் ஆன்மாக்கள் முத்தியைப் பெறு கைக்கு வழியுண்டாகாதென்றும் பெரியோர்கள் சொல்லுவார்கள் என்னும் முறைமையையும் அறிவித்தது. கச

இங்ஙனஞ் சொல்லப்பட்ட பஞ்ச மலங்களோடுங் கூடிநிற்கிற ஆன்மாக்கள் அவையிற்றை நீங்கி அருளைப்பெறுகைக்கு வழி எங்ஙனே என்று வினவ அந்த மலங்கள் காரியப்பட்டுப் பாகம்வந்தே அருளைப் பெறவேண்டுகையால் அவை காரியப்படுகைக்கு வழியாகக் கேவல சகல சுத்தமென்று மூன்றவத்தையை வைத்துக்கொண்டு, இதிற் கேவலாவத்தையை முந்த அருளிச்செய்வான் எடுத்துக்கொண் டருளியது.

## அவத்தை இலக்கணம்

### கேவலாவத்தை

33. ஓங்கிவரும் பலஉயிர்கள் மூன்றவத்தை பற்றி
உற்றிடுங்கே வலசகல சுத்தமென உணர்க
ஈங்குவரும் கலாதியொடு குறிஉருவம் ஒன்றும்
இன்றிமல மன்றியொன்று மில்லையெனும் இயல்பாய்
ஆங்கறிவை அறிவரியன் அறிகருவி அணையா
ஆதலினால் இருள்மருவும் அலர்விழிபோல் அதுவாய்
நீங்கும்வகை யின்றிநித்த வியாபகமாய் அங்கண்
நிற்பதுகே வலமென்று நிகழ்த்தும் நூலே. கரு

ஆருயிர் மூவகை யவத்தை யுறுமதிற்
கூறிரு ளவத்தைக் குறியிது என்றது.

(உரை) ஓங்கிவரும் பல உயிர்கள் மூன்றவத்தை பற்றி உற்றி டும் - அநாதியே நிலைபெருகி எண்ணிறந்து மிக்கு வருகிற ஆன்மாக் கள் மூன்று வகைப்பட்டிருப்பதாகிய அவத்தைகளோடுங்கூடி அநு பவியா நிற்பார்கள். அது ஏதென்னில்; கேவல சகல சுத்தமென உணர்க - கேவலாவத்தை என்றுஞ் சகலாவத்தை என்றுஞ் சுத்தா வத்தை என்றும் அறிக. இவையிற்றின் முற்கூறிய கேவலாவத்தை யாவது ; ஈங்கு வருங் கலாதியொடு குறியுருவமொன்று மின்றி மல மன்றி யொன்று மில்லையெனும் இயல்பாய் - இவ்விடத்து விளங்கா நின்ற கலையாதி தத்துவங்களோடுங் கூடியறியப்பட்ட ஒரு நினைவு களும் ஒரு காட்சிகளும் இல்லாமல் அறியாமையாயுள்ள ஆணவமல மொழிய வேறொன்று மில்லையென்றாற்போலும் இயல்பாயிருப்ப

தாய்; ஆங்கறிவை யறிவரியன் - அவ்விடத்தில் ஆன்மா சிற்றறிவா யறியப்படும் பொருளாகிய தன்னையும் அறியமாட்டானாய்; அறி கருவி யணையா - அறிகருவிகளாகிய சுத்த தத்துவங்களும் அவ் விடத்துப் பொருந்தாது; ஆதலினால் இருள் மருவும் அலர்விழி போலதுவாய் - அப்படி நிற்கையாலே இருளைப் பொருந்தி நின்று விழித்துச் சீவிக்கிற கண்ணானது அந்த இருளின் வடிவு தானாய் நின் றாற்போல; நீங்கும் வகையின்றி - அந்த மலத்தைவிட்டு நீங்கு கைக்கோர் உபாயமுமில்லையாய்; நித்த வியாபகமாய் - அவ்விடத் தழியாமல் அந்த மலத்தோடும் வியாபித்திருப்பதாய்; அங்கண் நிற்பது கேவலமென்று நிகழ்த்தும் நூலே - அப்படிக் கேவலத்துக்குத் தலமாயுள்ள அவ்விடத்திலே முற்கூறி வந்தபடியே நிற்கிற அத னையே கேவலாவத்தையென்று சொல்லும் திவ்வியாகமம்.

ஓங்கிவரும் பலவுயிர் எ - கு அநாதியே நிலைபெறறு மிக்கு வரு கிற ஆன்மாக்களென்று பொருள் கூறியதேதென்னில் அநாதியென் றது சிவனுள்ளவன்றே ஆன்மாக்களும் உண்டாகையால் அநாதி யென்றதென அறிக. நிலைபேறென்றதுஞ் சிவனைப்போல ஒருகாலத் தினும் அழியாமல் நிற்கையாலென அறிக. மிக்க உயிரென்றது பிரம விஷ்ணுக்கள் முதலாயுள்ள ஆன்மாக்களைப்பற்றியென அறிக. இனி, மூன்றவத்தை என்பதற்குக் கேவலமென்றுஞ் சகலமென்றுஞ் சுதத மென்றும் பொருள்கூறியதேதென்னில் கேவலமென்றது மாயா கருவிகளாயுள்ள காரிய மாயையும் நீங்கி ஆணவ மலத்தான் மறைப் புண்டு காரண மாயை தாரகமாக ஒடுங்கின அவதரத்தையென அறிக; இனி சகலமென்றது அப்படி நீங்கப்பட்ட தத்துவ முப்பத்தா றோடுங்கூடிச் சீவிதது நின்ற அவதரத்தையென அறிக; இனி சுத்த மென்றது முற்கூறிய கேவல சகலமிரண்டும் நீங்கிச் சிவனுடைய அருள்காட்டாகச் சென்று அந்தச் சிவத்தோடுங் கூடிநின்ற அவதர மென அறிக. இங்ஙனஞ் சொல்லப்பட்ட அவத்தை மூன்றுக்கும் பி - ம் சித்தியாரில் "கேவல சகல சுதத மென்றுமூன் றவத்தை ஆன்மா, மேவுவன் கேவ லந்தன் னுண்மைமெய்ப் பொறிக ளெல் லாங், காவலன் கொடுத்த போது சகலனு மலங்க ளெல்லாம், ஓவின போது சுத்த முடையனுற் பவந்து டைத்தே" (4. 37) எ-து கண்டு

கொள்க. இனி, ஈங்கு வருங்கலாதி எ - கு இவ்விடத்து விளங்கப் பட்ட கலாதிகளென்று சுட்டிப் பொருள்கூறியதேதென்னில் ஆசாரியன் அருளிச்செய்யச் சீடன் கேட்டிருக்குமவதரங் கருவிகளோடுங் கூடியிருந்துகேட்டறிந்து வருகையால் இவ்விடமென்ற சுட்டுக்கருவிகளோடுங் கூடியிருந்து சீவித்து வருகிற சகலாவத்தையென அறிக. இனி குறியுருவமொன்றுமின்றி எ - கு ஒரு நினைவுகளும் ஒரு காட்சிகளும் இல்லையென்று பொருள் கூறியதேதென்னில் இவன் சகலனாகி நின்று சீவிக்கும் அவதரத்து உட்கரணங்களினாலே நினைத்தும் புறக்கரணங்களினாற் கண்டுங் கேட்டும் வருகையால் அந்தக் கேவலத்துக்கு அவையில்லாதபடியாலே அப்படிச் சொன்னதென அறிக. என்றிங்ஙனங் கேவலப்பட்டுக் கிடக்குமிடத்துக் காரிய மாயையாயுள்ள கலையாதி தத்துவங்களோடுங்கூடிச் சீவிக்கிற குணங் குறிகளுமில்லையென்பதற்கு பி - ம் சித்தியாரில் "அறிவிலன் அமூர்த்தன் நித்தன் அராகாதி குணங்க ளோடுஞ், செறிவிலன் கலாதி யோடுஞ் சேர்விலன் செயல்க ளில்லான், குறியிலன் கர்த்தா வல்லன் போகதிற் கொள்கை யில்லான்,பிறிவிலன் மலத்தி னோடும் வியாபிகே வலத்தில் ஆன்மா" (4 - 38) எ-து கண்டுகொள்க. இனி மலமின்றி யொன்றுமில்லையெனும் இயல்பாய் எ-கு கேவலத்துக்கு ஆணவமல மொன்றுமொழிந்து மற்றொன்று மில்லை யென்ற போலும் இல்லையா யிருப்பதாய என்று சந்தேகமாய்ப் பொருள் படுத்தினதற்கு வழியேதென்னில், மலமன்றி ஒன்று மில்லை யெனும் என்ற உம்மைகொண்டும இயல்பாயென்ற ஐயச்சொற்கொண்டும் செத்த மனிதரைபோலக் கிடக்கின்றார்கள் பட்டமரம்போலே நிற்கிறது என்ற சொல் அவையிற்றுக்கு உயிருண்டென்பதை விளைத்து நின்றாற் போல அதுவும் ஆணவ மலமன்றியே மற்றுள்ள மலஙகளும் உண்டென்பதை விளைதது நிற்கையால் அப்படிச் சொன்னதென அறிக. அஃதெங்ஙனேயெனனில் கேவலத்தில் ஆன்மா ஆணவ மல மறைப்பாக ஒடுங்குமிடத்து மாயை தாரகமாக ஒடுங்குகையால் அப்படிச் சொன்னதென அறிக. அவ்விடத்து மாயை உணடென்பதற்கு அநுபோகமேதென்னில், நித்திரையிற் கேவலப்பட்டுக் கிடக்குமிடதது உடல் தாரகமாகக கிடக்கச்செய்தே கூப்பிட்டெழுப்பவும்

எழுந்திராமற் கிடந்து அந்த உடலைத் தட்டியெழுப்பு மிடத்துக் கலாதிகள் எழுந்திருக்கையால் அந்தக் கலாதிகள் மாயையில் தோற்ற மாகையால் காரியமுள்ள இடத்திலே காரணமுண்டான தாகை யாலே கேவலத்தில் ஆணவமல மறைக்க மாயை தாரகமாக ஆன்மா ஒடுங்குமென்பதை அநுபவத்தாற் கண்டுகொள்க. அப்படி நித்திரை யிற் கேவலப்பட்டுக் கிடக்குமிடத்து உடம்பு தாரகமாக ஒடுங்குமென் பதற்கு பி - ம் சிவஞானபோதத்தில் " அவ்வுடலி னின்றுயிர்ப்ப ஐம் பொறிகள் தாங்கிடப்ப, செவ்விதி னவ்வுடலிற் சென்றடங்கி" (3. 4) என்பதனுள் "செவ்விதி னவ்வுடலிற் சென்றடங்கி" எ-ம், போற்றிப் பஃறொடையினும் "மூலவருங் கட்டி லுயிர் மூடமா யுட்கிடப்ப"(27) எ - ம் கண்டுகொள்க. என்றிங்ஙனம் நித்திரையிற் கேவலத்துக்கு மல மறைக்க உடல் தாரகமாக மூலாதாரத்திலே ஒடுங்கினாற்போலச் சங்கார கேவலத்துக்கு மாயா காரணந் தாரகமாக ஒடுங்குமென்பது கண்டுகொள்க. ஆகையால், ஆணவத்துக்கு மறைக்கையே தொழில், மாயைக்குத தாரகமாக நிற்கையே தொழில் என அறிக. அப்படி ஆண வத்துக்கு மறைபபே தொழில் என்பதற்கு பி-ம் தத்துவ விளக்கத்தில் "சேதனன் கண்ணதிக மறைப்பன ஆயிர கோடி விருத்திகளே " (19) எ - ம், சித்தியாரில் " போதகா ரியம்மறைத்து நின்றது புகல்ம லங் காண்" (2. 84) எ-ம், "முன்னை மலத்தினிருள் மூடாவகை " (போற் றிப் பஃறொடை, 34) எ-ம், இந்நூலினும் "செம்பினுறு களிம்பேயந்து நித்த மூலமல மாயறிவு முழுதினையும் மறைக்கும்"(20) எ-ம்,"ஞானத் தின்-கண்ணை மறைத்த கடியதொழில் ஆணவத்தால்" (போற்றிப் பஃ றொடை, 9-10) எ-ம் வரும் ஏதுககளைக் கண்டுகொள்க. இனி, மாயை தாரகமாய் நிற்கும் என்பதற்கு பி-ம் தத்துவ விளக்கத்தில் " புல்லிய பாசங்க ளுய்த்திடப் போகம்பு மானுகர்ந்து, செல்லிய காலத் துறுஞ்செல்ல னீஙகச சிரபுரக்கோன், சொல்லிய மணமுத லாயின மாயையி லேதொகுத்தங், கெல்லியி னிதநிரைப் போலிளைப் பாற்று மணுக்களையே " எ - ம் இந்நூலினும் " உருவாதி சதுவிதமாய் " என்ற இருபத்திரண்டாஞ் செய்யுளிலே " ஒடுங்க வருகால முயிர்க ளெல்லா மருவிடமாய் மலமாய் மன்னியிடு மரனருளான் மாயை தானே " எ - து கண்டுகொள்க. இனி ஆங்கறிவை யறிவரியன்

எ - கு கேவலப்பட்டுக் கிடக்கும் அவ்விடத்து ஆன்மா அறியப்படும் பொருளாயிருக்கிற தன்னையும் அறியமாட்டானென்று பொருள் கூறியதேதென்னில், அப்படிக் கேவலத்தில் ஆன்மாவுக்கு அறிவா யுள்ள நாமிப்படி அறிவற்றுக் கிடக்கிறோமேயென்கிற நினைவு மில் லாததுகொண்டே அப்படிச்சொன்னதென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில்''அறிவிலன் அமூர்த்தன் நித்தன் அராகாதி குணங்களோ டுஞ், செறிவிலன் கலாதி யோடுஞ் சேர்விலன் செயல்க ளில்லான்'' (4. 38) எ - ம், " அறிந்திடுந் தன்னையுந் தானறியாமை யானும்'' (5. 3) எ - ம் கண்டுகொள்க. இனி யறிகருவி யணையா எ - கு கேவலமாகிய அவ்விடத்துச் சுத்ததத்துவங்களும் பொருந்தாதென்று பொருள் கூறியதேதென்னில் அப்படிச் சுத்த தத்துவங்களைக் கூடின இடம் சகலமாகையால் அப்படிச் சொன்னதென அறிக. அது எங் ஙனே என்னில்,அப்படிக் கேவலப்பட்டுக் கிடக்குமிடத்துச் சிவசத்தி கள் அந்தச் சுதத தத்துவங்களைக்கொண்டு அசுத்தமாயா காரணத் திலே நின்றுங் கலையாதி தத்துவஙகளைத் தோற்றுவித்து ஆன்மாக்க ளோடுங் கூடிக் காரியப்படுத்துகையால் அது சகலமாகையாலே அந் தக் கேவலததிற் சுத்த தத்துவங்களும் பொருந்தா தென்றதென அறிக. இதற்கு பி-ம் இந்நூலில் " இததகைமை இறையருளால்'' (39) என்னும் விருத்தத்தையொட்டிக் கண்டுகொள்க. இனி இருள்மருவு மலர்விழிபோ லதுவாய் எ - கு இருளைப் பொருந்தின விழி அந்த இருளின் வடிவு தானாய் நின்றாற்போல என்று பொருள் கூறியதே தென்னில், குறறமறக் காணுங் கண்ணானது இருளோடுங் கூடின அவதரத்து வேறொன்றுங் காணமல் அந்த இருளின் வடிவுதானாய் நின்றறபோல அறிவாயுள்ள ஆன்மாவுங் கேவலப்பட்டு மலத்தினால் மறைப்புணடு கிடக்குமிடதது அந்த மலந தன்னைப்போல அறியா மையே வடிவாய்க் கிடக்கையால் அபபடிச் சொன்னதென அறிக. அப்படிக் கண்ணை இருள் மறைத்தாற்போல ஆன்மாவையுங் கேவ லத்தில் ஆணவ மலமொன்று மறைக்குமென்று திருஷ்டாந்தமா யிருககக் கேவலத்தில் ஆணவமல மறைப்பதன்றியே மாயை தாரக மாக ஒடுஙகுமென்றதேதென்னில், அப்படி இருளினால் மறைப் புண்டு அந்த இருளின் வடிவு தானாய்நின்ற கண்ணிற் சோதியா

யுள்ள பிரபையுந் தனக்குடம்பா யிருக்கப்பட்ட குவளை தாரகமாக நின்றாற்போல ஆணவமலத்தான் மறைப்புண்டு கேவலப்பட்டுக் கிடக்கும் ஆன்மாவும் மாயை தாரகமாகக் கிடக்குமென்பதை முற்கூறிய வகைகளினாலும் அநுபவத்தினாலுங் கண்டுகொள்க. அப்படிக் கேவலத்தில் ஆணவ மலமன்றியே மற்றுள்ள மலங்களும் உண்டென்பதற்கு பி-ம் சித்தியாரில் "மும்மலம் நெல்லினுக்கு முளையொடு தவிடுமிப்போல், மம்மர்செய் தணுவி னுண்மை வடிவினை மறைத்து நின்று" (2. 86) எ - து கண்டுகொள்க. இனி, நித்த வியாபகமாய் எ - கு அழியாத வியாபகத்தையுடையதாயென்று பொருள் கூறியதேதென்னில் அப்படி ஆணவ மலத்தினாலே மறைப்புண்டு மாயை தாரகமாகக் கிடந்தாலும் அவ்விடத்தில் ஆன்மா அழிவதுஞ் செய்யாமல் அந்த மலந் தன்னைப்போல அறியாமையாய் வியாபித்திருக்குமென்றதென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "மலததி னேடும் வியாபி கேவலத்தி லான்மா" (4. 38) எ-து கண்டுகொள்க. இனி, அங்கண் நிறபது கேவலம் எ - கு கேவலத்துக்குத் தலமாயுள்ள அவ்விடமென்று பொதுபபடப் பொருள் கூறியதேதென்னில், நித்திரையிற் கேவலத்துக்கு உடல் தாரகமாகவும் மூலாதாரம் இடமாகவும் சங்கார கேவலத்துக்குக் காரண மாயை தாரகமாகவும நிற்கையால் அப்படிச் சொன்னதென அறிக. என்னுமிவை யிரண்டுக்கும் பி - ம் இருபா விருபஃதில் "கடலமுதே வெண்ணெய்க் கரும்பேயென் கண்ணே - உடலகத்து மூலத தொடுங்க" (9) எ - து நித்திரையிற் கேவலத்துக்குக் கண்டுகொள்க. ஆன்மாக்கள் இந்நூலில் "ஒடுங்க, வருகால முயிர்க ளெல்லா மருவிடமாய் மலமாய் மன்னியிடும் அரனருளான் மாயை தானே" (22) எ - ம், தத்துவ விளக்கத்தில் "சொல்லிய மண் முதலாயின மாயையி லேதொகுத்தங், கெல்லியி னித்திரைப் போலிளைப் பாற்று மணுக்களையே" எ - ம் சஙகார கேவலத்துக்குக் கண்டு கொள்க.

இதனாற் சொல்லியது, ஆன்மாக்கள் கேவல சகல சுத்தமென்று மூன்றவததைப்படும்; அதில் கேவலாவத்தையாவது மாயா கருவிகளெல்லாங் கழன்று ஆணவ மலத்தான் மறைப்புண்டு மாயை தாரகமாக ஒடுங்குவார்களென்னும் முறைமையை அறிவித்தது. கரு

அப்படி ஆணவ மலமென்பது ஒன்றில்லை மாயா மலமுங் கன்ம மலமுமேயுள்ளது ஆன்மாவும் அநாதியே சுத்தனென்கிற ஐக்கியவாதி மதம் மேலருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

34. இன்மைமலம் மாயைகன்மம் என்றிரண்டே இறைதான்
இலங்குபல உயிர்களும்முன் புரிந்தஇரு வினையின்
தன்மைகளால் எவர்களுக்குந் தனுகரண புவனம்
தந்திடும்இங் கதனாலே இருபயனும் சார்ந்து
கன்மமெலாம் நேராக நேராதல் மருவக்
கடவுள்அரு ளால்எவையுங் கழித்திடுவன் அதனாற்
பின்மலமா னவைஅணுகா பெருகொளிமுன் புளதே
பெற்றிடுமென் றித்திறமென் பேசு மாறே. கசு

மலமென வேறிலை மாயையுங் கன்மமும்
நிலவிடு முயிர்க்கெனு மவர்நெறி யுரைத்தது.

(உரை) இன்மை மலம் - அப்படி ஆணவ மலமென்பதொன் றில்லை. பின்னையுள்ளதேதென்னில்; மாயை கன்மமென் றிரண்டே- மாயா மலமென்றுங் கன்ம மலமென்றும் இரண்டுமேயுள்ளன. ஆனவிவை ஆன்மாவினிடத்திலே வந்து பொருந்தின முறைமை எங்ஙனே என்னில்; இறைதா னிலங்கு பல வுயிர்களும் முன் புரிந்த இருவினையின் தன்மைகளால் எவர்களுக்குந் தனு கரண புவனந் தந்திடும் - கர்த்தாவானவன் சுத்தராயிருக்கப்பட்ட ஆன்மாக்கள் முன்னே செயயப்பட்ட புண்ணிய பாவங்களுக்கீடாகச் சர்வர்க்கும் உடம்புகளையுந் தத்துவங்களையும் இருப்பிடங்களையும் புசிப்புக்களையும் உண்டாக்குவன். புசிபபென்றது கூட்டுப பொருளென அறிக. அது ஒழிபுகொண் டறியப்பட்டது; இங்கு அதனாலே இருபயனுஞ் சார்ந்து - இவ்விடததந்த உடம்பு முதலானவையாலே புணணிய பாவங்களைப் பொருந்தி அநுபவித்து மேலார்ச்சித்தும் இப்படிப பிறந்திறந்து வருகிற அவதரத்திலே; கன்மமெலாம் நேராக நேராதல் மருவ - கன்மங்களெல்லாம் வெட்டனவில்லையாம்படித் துலையொத்த அவதரதது; கடவுளருளால் எவையுங் கழித்திடுவன் - கர்த்தா வுந் தனது காருணணியததினாலே அந்தக் கன்மங்களையும் மாயையை

யும் போக்குவன் ; அதனுற் பின் மலமானவை அணுகா - ஆகையாலே ஆன்மாவுக்குப் பின்பு மாயா கன்மங்கள் பொருந்தாது ; பெருகொளி முன்புளதே பெற்றிடும் - ஆன்மாவும் பழைய பிரகாசத்தை யுடைத் தாம் ; என்று இத்திறமென் பேசு மாறே - என்றிப்படி நீ சொல்லு கிற முறைமை எப்படியிருந்தது.

ஈசுர ஐக்கியவாதி அப்படி ஆணவமல மென்பதொன்றில்லை சுத்தனுயிருக்கிற ஆன்மாவை மாயையுங் கன்மமும் பின்பு வந்து மறைக்குமென்முன் என்பதற்கு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில் "கருமுகி லடர இரிதரு கதிர்போன் - றறிவா முயிரிற் பிறியா தேயும்" (5. 7 - 8) எ - ம், சித்தியாரில் "மலமென வேறொன் றில்லை மாயாகா ரியம தென்னில்,இலகுயிர்க் கிச்சா ஞானக கிரியைக ளெழுப்பும் மாயை, அலகிடு மலமிவற்றை வேறுமன் றதுவே ருகி, உலகுடல் கரண மாகி யுதித்திடு முணர்ந்து கொள்ளே" (2. 81) எ - ம் ; இது மறுப்பென்பது கண்டுகொள்க.

இதனுற் சொல்லியது ஈசுர ஐக்கியவாதி ஆணவமலம் இல்லை யென்றும் மாயா கன்மங்களே யுள்ளதென்றும் சுத்தராயுள்ள ஆன் மாக்கள் செய்த புண்ணிய பாவங்களுக்கீடாகக் கர்த்தா உடம்பு முத லாயினவற்றைக் கொடுக்க அதனுலே ஜநந மரணபபட்டுக் கன்ம வொப்புவந்து ஆன்மாப் பண்டுபோலே சுத்தனுமென்றுஞ் சொன்ன முறைமையும் இது சித்தாந்த வழக்கல்லவென்று அவனை மறுத்த முறைமையும் அறிவித்தது. கசு

அப்படி நான் சொன்ன அத்தத்தை 'இத்திறமென் பேசுமாறே" என்று உதாசினமாகச் சொல்லவேண்டுவான் ஏனென்று ஈசுர ஐக்கிய வாதி கேட்க, அப்படி ஆணவமலமில்லை மாயையுங் கன்மமுமே யுள்ளதென்று நீ சொல்லுகிறது கொட்டை முந்தினதோ பனை முந்தினதோ என்கிற அருவழக்கிலே வருமென்று மறுத்து, மேல் ஆணவமலம் உண்டென்னும் முறைமையை அருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

35. மாயைமுத லெனவினையின் பான்மைமுத லெனவே
மன்னுபனை விதைமரபின் மயங்கும்மலம் சுத்தற்(கு)
ஏயுநெறி யென்கொல்அதன் இயல்பாயின் முத்தி
என்பதென்மற் றிவைநிற்க இருங்கலாதி உணர்வாய்

மேயபின்நற் றன்னுருவம் விளங்காமை விளக்கும் [வுள்
  மிரும்உலகந் தனில்என்னில் இவைவிடுங்கால் உணர்
தோயுநெறி இலதாதல் அறியாமை யெனநீ
  சொல்லியது மலமென்பர் துணிந்து ளோரே. கஎ

அறிவுறுங் கலாதியா லறியா நிலையைச்
செறிவுறு மதுமலச் செய்தியா மென்றது.

(உரை) மாயை முதலென வினையின் பான்மை முதலெனவே - அநாதியிற் சுத்தனென ஆன்மாவினிடத்திலே இந்த மாயா கன்மங்கள் கூடுமிடத்து மாயாதேகம் உண்டாகக் கன்மம் உண்டானதோ கன்மம் உண்டாக மாயா தேகம் உண்டானதோ இதில் எதுதான் முந்தின தென்னுமிடத்து ; மன்னு பனைவிதை மரபின் மயங்கும் - நிலைபெறுகப் பொருந்தப்பட்ட பனை முந்தவுண்டாக விதையுணடானதோ விதை முந்தவுண்டாகப் பனை யுண்டானதோ என்று மயங்குந் தன்மைகொக்கும். இந்தக் குற்றம் அன்றியும் ; மலம் சுத்தற் கேயு நெறியென்கொல் - நீ சொன்ன மாயா மலமுங் கன்ம மலமுஞ் சுத்தனென ஆன்மாவினிடத்திலே பொருந்துகைக்குக் காரணமே தாம் ; அதன் இயல்பாயின் - அதற்கு வேறொரு காரணமுமில்லை, அது இயல்பாக வந்து கூடுமாயின் ; முத்தி யென்பதென் - அப்படி யியல்பேயாகில் வீடுபேறுண்டென்று சொல்லவேண்டுவ தில்லை. அது ஏனென்னிற் சுத்தனாயிருக்கப்பட்ட ஆன்மாவை மாயா கன்மங்கள் இயல்பாகச் சென்று பொருந்துமாகிற் சாயுச்சியம்பெற்ற இடத்தினும் மாயா கன்மங்கள் சென்று பொருந்துகைக்கு வழக்குண்டாம். அது கொண்டே முத்தியுண்டென்று சொல்ல வேண்டுவ தில்லை யென்றதென அறிக. ஆகையால் ; மற்றிவை நிற்க - (மற்று வினைமாற்று.) நீ சொல்லுகிற இவையிற்றை விடுவாயாக. அன்றியும் ; இருங்கலாதியுணர்வாய் மேயபின் நற்றன்னுருவம் விளங்காமை - பெரிய கலையாதியாயுள்ள தத்துவங்கள் முப்பத்தொன்றும் உனக்கறியும் பகுதிக்கு உதவியாகப்பொருந்திச் சீவிக்கும் அவதரத்து ஆன்ம ரூபத்தை அறியாமல் இருப்பானேனென்னில் ; விளக்குமிரும் உலகந் தனில - ஆன்மரூபந் தெரியாதபடி மாயா கருவிகள் மறைத்தது தனை

வடிவை மிகுதியாக விளக்கிக்கொண்டு நிற்கும் பிரபஞ்சத்திலே; என்னிலிவை விடுங்கால் உணர்வுள் தோயு நெறியிலது - அப்படியானல் அந்தத் தத்துவங்களை நீங்கின இடத்திலும் அறிவினேடுங் கூடிப் பற்றும் நெறியில்லாமல் இருப்பானேன்; ஆதலறியாமை - அப்படியானது அறியாமையாலென்று நீ சொல்லில்; என நீ சொல்லியது மலமென்பர் துணிந்துளோரே - என்று நீ சொல்லப்பட்ட இதனையே ஆணவமலமென்று சொல்லுவார்கள் நூலினை யுணர்ந்து அறுதிப்பட்ட பெரியோர்கள்.

உதாரணம்: தாலவீச நியாயமாகிய கொட்டை முந்தினதோ பனை முந்தினதோ என்பதுபோல, மாயை முற்பட்டதோ கன்மம் முற்பட்டதோ என்று ஈசுர ஐக்கியவாதியை மறுத்ததற்கு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில் “சுத்த - அறிவெனிற் பாசஞ் செறியா மாயை - யுருஇரு வினையால் வருமிரு வினையும் - உருவா லன்றி மருவா திவற்றின் - முந்திய தேதோ வந்தணை வதற்கோர் - ஏது வேண்டும்” (6. 1 - 6) எ - து கண்டுகொள்க. இனி, இயல்பாயின் முத்தியென்பது ஏனென்று மறுத்தது வெள்ளைப் புடவைக்கு அழுக் கேறினாற்போல முத்தியினும் மாயா கன்மங்கள் மீளவுங் கூடுமென்றதென அறிக. இதற்கு பி - ம் சஙகற்ப நிராகரணத்தில் “தானியல் பென்னில் - வீடுற் றவரினுங் கூடக் கூடும்” (6. 6 - 7) எ - து கண்டுகொள்க. இனி, என் நீ சொல்லியது மலமென்பரென்று மறுத்ததற்கு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில் “அறிவிலாமையென் றனையது மலமாக் - குறிகொ ளாள ரறைகுவ ரன்றே” (6. 23 - 24) எ - து கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, ஆணவமலம் என்பது ஒன்றில்லை சுத்தனாயுள்ள ஆன்மாவை மாயா கன்மங்கள் இயல்பாக வந்து பொருந்துமென்ற ஐக்கிய வாதியை நோக்கி, அப்படியானல் கொட்டை முந்தினதோ பனை முந்தினதோ என்கிற அருவழக்கிலே வருமென்றும், இயல்பாயின் முத்தியைப் பெற்ற இடத்தும் மீளவும் மாயா கன்மங்கள் கூடுமென்றும் மறுத்து ஆணவமலம் உண்டென்று நாட்டின முறைமையும் அறிவித்தது. கஎ

அப்படியே ஓர் ஆணவ மலமென்பது ஒன்றுண்டானல் என்னாற் காணப்படாதோ என்று மீளவும் ஐக்கியவாதி வினவ அந்த

ஆணவ மலமானது திருவருட்பிரகாச முண்டானவர்களாலே காண் கிறதொழிய உன்னுற் காணப்படாதென்று அவனை மறுத்தருளிச் செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

36\. அந்நியமா னவைஉணர்த்தி அநந்நியமாய் நிறைந்த
அறிவறியா மையினுனும் அருள்நிலவும் காலம்
தன்னில்அவ னேயாவு மாய்நின்ற தொன்மை
தாமுணர்த லானும்உயிர் தானெனவொன் றிலதாய்
மன்னியிடும் மலமாயை கன்மங்கள் மாறி
வந்திடும்இங் கிதுவழுவா தாதலினுன் மனத்தால்
உன்னரிய திருவருளை ஒழியமலம் உளதென்(று)
உணர்வரிதால் அதனுண்மை தெரிவரிதாம் உனக்கே.

பற்றுதல் விடுதல்மற் றவற்றுள தொன்ருய்
உற்றிடு மலமுனுல் உணர்வரி தென்றது.

(உரை) அந்நியமானவை உணர்த்தி அநந்நியமாய் நிறைந்த அறிவறியாமையினுனும் - தனக்கு வேருன பிரபஞ்சத்தை அறிவித்துத் தனக்கு வேறற நிறைந்து நிற்கிற திருவருளைத் தானறியாதபடியாலும்; அருள் நிலவும் காலந் தன்னில் அவனே யாவுமாய் நின்ற தொன்மை தாமுணர்தலானும்-அந்தத் திருவருட்பிரகாசமுண்டான காலத்துத் தன்னிடத்திலே நிறகிற சிவமுதல்தானே எவ்விடத்தினும் நிறைந்து நிற்கிற பழைமையைத் தானறிகையாலும்; உயிர்தானென ஒன்றிலதாய் மன்னியிடும் மலம் - ஆன்மா என்ருெரு முதலில்லை என்னும்படி நிலைபெற்று நிற்கும் ஆணவ மலமானது. ஆணவ மென்ருென்று வேணுமோ மாயைதான் மறையாதோ என்னில்; மாயை கன்மங்கள் மாறி வந்திடும - மாயா மலமுங் கன்ம மலமுங் காரணத்தினுங் காரியத்தினும் விட்டும் பற்றியும் வரும்; இங்கிது வழுவாது - இவ்விடத்திந்த மாயையுங் கன்மமு மாறி வருகிறதும் மலமெவவிடத்துஞ் சகசமாய் ஆன்மாவோடு நிலைபெற்று நிற்கிறதுந் தப்பாது; ஆதலினுன் மனத்தால் உன்னரிய திருவருளை ஒழிய மலமுளதென் றுணர்வரிது - இப்படி ஆணவ மலஞ் சகசமாய் நிலை பெறறுள்ளதாகையால், மனத்திஞல் நினைததற்கரிய திருவருள்

பிரகாசித்த காலத்தல்லது ஆணவ மலமொன்று உண்டென்றறியப் படாது. (ஆல் - அசை.) அதனுண்மை தெரிவரிதாம் உனக்கே - அந்தத் திருவருள் உனக்கில்லாதபடியாலே அந்த ஆணவ மலத்தின் உண்மை உன்னால் அறியப்படாது.

அந்நியமானவை உணர்த்தி அநந்நியமாய் நிறைந்த அறிவறியாமையினுனு மென்றது ஐக்கியவாதியை மறுத்து இப்பொழுது இந்த மாயா கன்மங்கள் கூடின சகலத்துத் தேகாதிப் பிரபஞ்சத்தை அறிந்தும் இந்த மாயாகன்மங்கள் கூடுவதற்குமுன்பு நீ சுத்தனென்று சொன்ன அவதாரத்து ஆன்மாவினோடு ஐக்கியமாய் எங்கும் நிறைந்து நிற்கிற திருவருளைத் தரிசியாது இருந்தபடியாலும் அநாதியே அக்கினியைக் காட்டம் மறைத்து நின்றாற்போல ஆன்மா என்றொரு முதலில்லையென்னும்படி ஆணவமலம் மறைக்கையினாலுமென அறிக. என்று இங்ஙனமலனை மறுத்ததற்கு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில் "முன்பு நன்றுட னொன்றிய காலை - யின்ப மெய்துதற் கிலதுயி ராகலின் - நீயலை பொருத மாயா வாதி - யாயினை யமையும்" (6. 28 - 31) எ - ம், "மூல மலத்தாற் சாலு மாயை - கருமத் தளவிற் றருமுரு இறைவன்" (6. 32 - 33) எ - ம் கண்டுகொள்க. இனி, மாயை கன்மங்கள் மாறி வந்திடுமென்பதும் இந்த ஆணவ மலம்போல மாயா மலமுங் கன்ம மலமும் ஆன்மாவை அநாதியே பற்றிநிற்கவும் அவையிற்றின் காரியங்கள் விட்டும் பற்றியும் வருமென்றதென அறிக. அப்படிக் காரணமல மூன்றும் ஆன்மாவை அநாதியே கூடிநிற்குமென்பதற்கு பி - ம் சித்தியாரில் "மும்மலம் நெல்லினுக்கு முளையொடு தவிடு மிப்போல், மம்மர்செய் தணுவி னுண்மை வடிவினை மறைத்து நின்று" (2. 86) எ - து கண்டு கொள்க. அப்படி அந்த ஆணவமலம் அநாதியே ஆன்மாவை மறைத்து நிற்க மாயாகாரியமான கலையாதி தத்துவங்கள் அந்த மறைப்பை நீக்குமென்பதற்கு பி - ம் சித்தியாரில் "போதகா ரிய மறைத்து நின்றது புகல்ம லங்காண், ஓதலாங் குணமு மாக வுயிரினுள் விரவ லாலே, காதலா லவித்தை சிந்தத் தருநகலை யாதி மாயை, யாதலா லிரண்டுஞ் சோதி யிருளென வேறு மன்றே" எ - ம், "மலமென வேறொன் றில்லை மாயாகா ரியம தென்னில்,

இலகுயிர்க் கிச்சா ஞானக் கிரியைக ளெழுப்பு மாயை, விலகிடு மலமி வற்றை" எ - ம், "பரிதியை முகின்மறைப்பப் பாயொளி பதுங்கி ஞற்போல், உருவுயிர் மறைக்கின் ஞானக் கிரியைக ளொளிக்கு மாகும், கருதிடு மிச்சா ஞானக் காரியங் காயம் பெற்ருல், மருவிடு முயிர்க்குக் காயம் வந்திடா விடின்ம றைப்பே" (2. 84, 81, 83) எ - ம் கண்டுகொள்க.

இதனுற் சொல்லியது ஆணவமலம் இல்லையென்ற ஐக்கியவாதியை நோக்கி அந்த மலமுண்டென்று அநுபவத்திஞற் காட்டின முறைமையும் அந்த மலமுந் திருவருட் பிரகாசம் உள்ளவருக் கொழியக் காணப்படாதென்னும முறைமையும் அறிவித்தது. கஅ

இப்படி உண்டென்று நாட்டப்பட்ட ஆணவமலம் நீங்கும்வழி யேதென்று வினவச் சிவன்றன் அருளாலே மாயா காரியமாகிய கலையாதி தத்துவங்களைக் கூட்டி மலபாகம் வருத்துவனென்னும் முறைமையை மேலருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

சகலாவத்தை

37. புகலுமலம் ஒழித்தற்குக் கலாதிமுதல் மாயை
பொருந்தியிடும் அரனருளாற் போதம் தீபம்
சகலமெலாம் உடனுய வாறு போலத்
தரும்அருளை மலம்உயிர்கள் சாராமல் மறைக்கும்
இகலிவரும் இவையுணரின் இருள்வெளியாந் தன்மை
எய்தும்இவை தன்செய்தி இலங்கும் விந்துப்
பகர்வரிய உணர்வாகி ஒளியாய் உள்ளப்
பான்மையினுல் ஒருநாதம் படருந் தானே. கக

மலநிலை யொதுங்க மாயா காரியங்
குலவிடு மிருளொளி குறியிதற் கென்றது.

(உரை) புகலுமலம் ஒழித்தற்குக் கலாதிமுதல் மாயை பொருந்தியிடும் அரனருளால் - முன்னே சொல்லப்பட்ட ஆணவமலத்தைப் போக்குதற்குக் கலையாதி தத்துவஙகளாகிய காரியமாயை ஆன்மாவோடுங் கூடுந் தம்பிராஞர் காருண்ணியத்திஞலே ; அது என்போல

என்னில் ; போதம் தீபம் சகலமெலா முடனுய வாறுபோல - ஆன்ம போதம் சீவிக்குமிடத்து விளக்கானது பிரகாசித்தெரியுங்கால் தகளி யுந் திரியும் நெய்யுங் கூடிப் பிரகாசித்தெரிந்தாற் போல ; அப்படி ஆன்மாவையுங் கருவிகளையும் அந்த அருளேகூட்டிச் சீவிப்பிக்குமா கில் அந்த அருளை இந்த ஆன்மாவாலறிந்து கூடப்படாதோ என்னில்; தரும் அருளை மலம் உயிர்கள் சாராமல் மறைக்கும் - அப்படிக் கூடி நின்று அறிவிக்கிற திருவருளை ஆன்மா அறியாதபடி ஆணவ மலமா னது மறைத்து நிற்கும்; இகலிவரும் இவையுணரின் இருள்வெளியாந் தன்மை எய்தும் - இங்ஙனம் மாறுபட்டு வருகிற ஆணவ மலமும் மாயா காரியமும் விசாரித்துப் பார்க்குமிடத்து இருளையும் ஒளியை யும் உவமிக்கிற குறியை யுடைத்தா யிருக்கும் ; இவைதன் செய்தி - இந்த மலங்களின் முறைமை யிப்படியா யிருக்கும். அன்றியும் இந்தப் பதத்துக்கு இங்ஙனஞ் சொல்லப்பட்ட செய்யுள் ஐந்தும் கேவலத்தின் முறைமையாமென்று பொருளுரைப்பினுமாம். அஃதா வது “ஓங்கிவரும் பலவுயிர்கள்” (33) என்ற செய்யுளில் “ஈங்கு வரும்” என்ற பதந்தொடங்கி இவ்வளவுங் கேவலாவத்தையின் முறைமையைச் சொல்லுகையினலென அறிக. மேற் சகலாவத்தைக் குச் சுத்த மாயையிற் காரியமாகிய விந்துசத்தியில் தோற்றமாகிய வாக்குக்கள் காரியப்படும் முறைமை அருளிச்செய்கின்றது;இலங்கும் விந்து பகர்வரிய உணர்வாகி ஒளியா யுள்ளப் பான்மையினல் ஒரு நாதம் படருந்தானே - விளங்காநின்ற விந்துசத்தி சொல்லுதற்கரி தாகிய அறிவுமாய் விளக்கமுமாய் ஆன்மாக்களிடத்திலே அவரவர்க ளுக்குண்டான கன்மங்களுக்கீடாக வாக்குக்களைத் தோற்றுவிக்கைப் பொருட்டாக ஒருநாததததை உண்டாக்கும்.

புகலுமலம் ஒழித்தற்குக் கலாதிமுதன் மாயை பொருந்தியிடும் எ - கு ஆணவமலபாகம் வருகைக்கு மாயா காரியங்கள் ஆன்மாவை வந்து பொருந்துமென்று ஐக்கிய வாதியை மறுததற்கு பி - ம் சிவ ஞானபோதத்தில் “மாயா தனுவிளக்காய்” (4. 5) எ - ம், சித்தியா ரில் “எழுமுடல் கரண மாதி யிவைமல மலம லததாற், கழுவுவ னென்று சொன்ன காரண மென்னை யென்னிற், செழுநவை யறுவை சாணி யுவர்செறி வித்த ழுக்கை, முழுவதுங் கழிப்பன்

மாயை கொடுமல மொழிப்பன் முன்னேன்" (2. 52) எ - ம் கண்டு கொள்க. இனி தருமருளை மலமுயிர்கள் சாராமல் மறைக்கும் எ - கு அருளானது விகாரப்படாது நிர்விகாரியா யிருக்கும், ஆன்மாத் தானே விகாரப்பட்டறியுமென்கிற அவிகாரவாதியை நோக்கி மறுத்துச் சொன்னதாகவுமாம். இதற்கு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில் "நீர்நிழ லனைய சீர்பெறு கடவுளைச் - சேர்ந்தவர்க் கின்பம் வாய்ந்திடு மென்றனை - பாதவ மென்றுஞ் சேதன மின்மையின் - இளைத்தோர் வம்மி னென்பது துன்பம் - விளைத்தோர் தம்மில் வெறுப்புமொன் றிலதே" (11. 38 - 42) எ - து கண்டுகொள்க. இனி இருள் ஒளியாந் தன்மை எய்தும் எ - து ஆணவ மலத்துக்கு ஆன்மாவை மறைக்கிறது சுபாவம், மாயாகாரியமான கலாதிகளுக்கு அந்த மறைப்பை நீக்குகிறது சுபாவம் என்று பொருள் கூறியதற்கு பி - ம் சித்தியாரில் "போதகா ரியமறைத்து நின்றது புகல்ம லங் காண், ஓதலாங் குணமு மாக உயிரினில் விரவ லாலே, காதலா லவித்தை சிந்தத் தருங்கலை யாதி மாயை, ஆதலா லிரண்டுஞ் சோதி யிருளென வேறு மன்றே" (2. 84) எ - து கண்டுகொள்க. இனி இலங்கும் விந்து பகர்வரிய உணர்வாகி எ - கு விளக்கத்தைச் செய்கிற அறிவுமாயென்று பொருள்கூறியதேதென்னில் இது மூவகை ஆன்மாக்களுக்கும் அறிவைக் கொடுக்கையினுலேயென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "மூவகை அணுக்க ளுக்கு முறைமையால் விந்து ஞானம், மேவின தில்லை யாயின் விளங்கிய ஞான மின்றும்" (1. 26) எ - து கண்டுகொள்க. இனி, உள்ளப்பான்மையினுல் ஒருநாதம் படரும் எ - து சூக்குமை வாக்கென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "சூக்கும வாக்க துள்ளோர் சோதியா யழிவதின்றி" (1. 23) எ - து கண்டுகொள்க.

இதனுற்சொல்லியது ஆணவமலம் நீங்குதற்கு மாயா காரியமான கலையாதி தத்துவங்களைச் சிவன் கூட்டுவனென்றும், அப்படிக் கூட்டி அறிவிக்கிற சிவனை ஆன்மா அறியாதபடி ஆணவமலம் மறைக்குமென்னும் முறைமையும், இங்ஙனங் கேவலாவத்தையை முடித்து, மேற் சகலாவத்தையிற் சூக்குமை வாக்குத் தோறறும் முறைமையும் அறிவித்தது. கக

மேற் பைசந்தி மத்திமை வைகரி யென்னும் வாக்குக்கள் மூன்றுங் காரியப்படு முறைமை அருளிச் செய்வான் எடுத்துக் கொண்டருளியது.

வாக்குக்கள்

38. வந்தடைந்து பின்னமாய் வன்னங்கள் தோற்றம்
வரும்அடைவு படஒடுக்கி மயிலண்ட சலம்நேர்
சிந்தைதனில் உணர்வாகும் பைசந்தி உயிரிற்
சேர்ந்துவரும் அவைமருவும் உருஎவையும் தெரித்து
முந்தியிடும் செவியில்உறு துள்ளுணர்வாய் ஓசை
முழங்கியிடும் மத்திமைதான் வைகரியில் உதானன்
பந்தமுறும் உயிரணைந்து வந்தமொழிச் செவியின்
பால்அணைய நினைந்தபொருள் பகரும் தானே. ௨௦

சூக்குமை முதலாச் சொற்பத மீறு
ஆக்கிடும் வாக்கி னடைவினை வகுத்தது.

(உரை) வந்தடைந்து - அந்த நாதமாகிய அறிவுதானே வடிவாகச் சூக்குமை வந்து உந்தித்தானத்திலே பொருந்தி ; பின்னமாய் வன்னங்கள் தோற்றம் வருமடைவு பட ஒடுக்கி - வெவ்வேறாய் வரும் அக்கரங்களினுடைய சொரூபங்கள் தோன்று முறைமை தெரியாதபடி மறைத்து நிற்கும் ; மயிலண்ட சலம் நேர் - மயில் முட்டைக்குள் சலமானது புறம்பே மயிலினிறமாய்ச் சொரூபீகரித்துத் தோன்றச் செய்தே யுடைத்தால் சலமாய் விடுமாப்போல ; சிந்தைதனில் உணர்வாகும் பைசந்தி - பைசந்தி வாக்கானது ஆன்மாவினிடத்திலே நினைவு மாத்திரமாய் நிற்கும் ; உயிரிற்சேர்ந்து வரும் அவை மருவும் உரு எவையும் தெரித்து முந்தியிடுஞ் செவியில் உறுதுள்ளுணர்வாய் ஓசை முழங்கியிடு மத்திமைதான் - மத்திமை வாக்கானது மேற்சொல்லப்போகிற அக்கரங்களினுடைய சொரூபங்களைப் பிராணவாயுவோடுங்கூடி ஒழுங்குபட நிறுத்திச் செவிகளுங் கேளாதே ஆன்மாவினிடத்திலே உள்ளறிவுமாய்த் தொனியுமுண்டாய் முற்பட்டு நிற்கும் ; வைகரியில் உதானன் பந்தமுறும் உயிரணைந்து வந்தமொழிச் செவியின் பாலணைய நினைந்த பொருள்

பகருந்தானே-வைகரி வாக்கானது முற்கூறிய பிராணவாயுவோடுங் கூடிவந்து உதான வாயுவிலேயும் பந்தித்துச் செவிப்புலனிடத்திலே கேட்கத் தக்கதாக நினைவிலுண்டான வசனத்தைச் சொல்லும்.

இங்ஙனஞ் சொல்லப்பட்ட வாக்குக்களுக்குத் தானமும் வடிவு மாவது:சூக்குமைக்குத் தானம் நாபியடியும் நாதத்துவம் வடிவுமென அறிக; பைசந்திக்குத் தானம் உந்தியும் பிராணவாயு வடிவுமென அறிக; மத்திமைக்குத் தானம் நெஞ்சுங் கண்டமுமாய் நின்று பிராண வாயு வடிவுமென அறிக; வைகரிக்குத் தானம் தாலு மூலமும் பிராணவாயுவும் உதானவாயுவும் வடிவென அறிக. ஆக இங்ஙனஞ் சொல்லப்பட்ட வாக்குக்கள் நாலுக்கும் பி-ம் சித்தியாரில், "சூக்கும வாக்க துள்ளோர் சோதியா யழிவ தின்றி" எ - ம், "வேற்றுமைப் பட்ட வன்னம்" எ - ம், "உள்ளுணர் ஓசையாகி" எ-ம், "வைகரி செவியிற் கேட்பதாய்" (1. 23, 22, 21, 20) எ-ம் வரும் விருத்தம் நாலையு மொட்டிக் கண்டுகொள்க. இந்த வைகரி வாக்குக் காரியப் படுமிடத்து நாக்கு உண்ணாக்கு பல் உதடு மூக்கு இவையோடுங் கூடி நின்று காரியப்படுமென அறிக. இவையிற்றுக்கு பி - ம் நேமி நாதத்தில் "உந்தியிற் றோன்றி யுதான வளிபிறந்து, கந்தமலி நெஞ் சுதலை கண்டத்து - வந்தபின், நாசிநா வண்ண மிதழெயிறு மூக்கென் னப், பேசு மெழுத்தின் பிறப்பு" (6) எ - து கண்டுகொள்க. ஆக இங்ஙனஞ் சொல்லப்பட்ட இந்த வாக்குக்கள் நாலுந் தோன்றுகைக் குக் காரணமாகப் **பஞ்சமை** யென்றொரு வாக்குண்டென்றும் அதற் குத் தானம் மூலாதாரமென்றும் அது பிரணவ சொரூபமாயிருக்கு மென்றுஞ் சொலலுவாருமுளர். அதனை ஆராய்ந்து கண்டுகொள்க. இந்த வாக்குக்கள் காரியப்படுமிடத்துச் சாந்தியாதீத முதலான கலை கள் ஐந்தினோடும் பற்றுக்கோடாக நின்று காரியப்படுமென அறிக. அப்படிக் காரியப்படுமிடத்துப் பராசத்தியுந் திரோதசத்தியும் இச்சாசத்தியும் ஞானசத்தியுங் கிரியாசத்தியுங் கூடிநின்று காரி யப்படுத்துமென அறிக. இதில் சூக்குமை வாக்குச் சாந்தியாதீத கலை யுஞ் சாந்திகலையும் பற்றாக நிற்கப் பராசத்தியுந் திரோத சத்தியுங் காரியப்படுத்துமென அறிக. இனி பைசந்தி வாக்கு விததியாகலை பற்றாக நிற்க இச்சாசததி காரியப்படுத்துமென அறிக. இனி மத்

திமை வாக்குப் பிரதிட்டாகலை பற்றாக நிற்க ஞானசத்தி காரியப் படுத்துமென அறிக. இனி வைகரி வாக்குக்கு நிவிர்த்திகலை பற்றாக நிற்கக் கிரியாசத்தி காரியப்படுத்துமென அறிக. அன்றியும் முற் கூறிய பஞ்சமையென்னும் வாக்குக் கூட்டுகில் பராசத்தியுஞ் சாந்தியாதீதகலையும் அதற்குக் கூட்டிக்கொள்க. இங்ஙனஞ் சொல்லப் பட்ட வாக்குக்கள் நாலுங் கலைகள் ஐந்திஞேடுங் கூடிக் காரியப்படும் என்பதற்கு பி-ம் சித்தியாரில் " நிகழ்ந்திடும் வாக்கு நான்கும் நிவிர்த் தாதி கலையைப் பற்றித், திகழ்ந்திடும் அஞ்ச தாக " (1. 24) எ - து கண்டுகொள்க. இதனுள் ' நிகழ்ந்திடும் வாக்கு நான்கும் ' என்றது கொண்டே நிகழாத வாக்கும் ஒன்றுண்டென்பது கருத்தாகப் பஞ் சமை என்னும் வாக்கு உண்டானதென அறிக. இங்ஙனங் கூறப் பட்டவையிற்றில் சத்திகள் இவையிற்றைக் காரியப்படுத்துமென அறிக. இதற்கு பி - ம் இந்நூலில் மேல் வருகிற " இத்தகைமை இறையருளால் " (39) என்னும் விருத்தத்தை முடியவொட்டிக் கண்டுகொள்க. இனி உயிரிற்சேர்ந்து வருமவை மருவும் எ - து உயிரென்பது கொண்டே ஆன்மா என்பாருமுளர். அது பிராண வாயுவென அறிக. அப்படிப் பிராணவாயுவை உயிரென்பதற்கு பி-ம் சித்தியாரில் வாக்குக்கள் காரியப்படுமிடத்துச் சொன்ன விருத் தத்தில் " உள்ளுணர் ஓசை யாகிச் செவியினி லுறுதல் செய்யா, தொள்ளிய பிராண வாயு " (1. 21) எ - ம், "ஐயமில் பிராண வாயு அடைந்தெழுந் தடைவு டைத்தாம் " எ - ம் கண்டுகொள்க. உயிர் வாயுவென்றுஞ் சொல்லப்படுமென்பதற்கு பி - ம் " உயிரொலி வங்கூழ் சலநம் வாதம் வளி மாருதம்" என்னும் இலக்கணங்களினுங் கண்டுகொள்க.

இதனுற் சொல்லியது சூக்குமை வாக்கு நாத வடிவாக உந்தியை வந்துகூடி யாதாமொன்றைச் சொல்லுமிடத்துப் பைசந்தி வாக்கா னது அந்த வசனத்துக்குரித்தாகிய அக்கரங்களை மயில் முட்டையில் ஜலம்போலத் தோற்றுவித்து நிற்குமென்றும், மத்திமை வாக்கானது பிராணவாயுவையுங் கூடி உள்ளே தொனியாய் நிற்குமென்றும், வைகரி வாக்கானது பிராணவாயுவோடு உதானவாயுவையுங் கூடிச் செவிப்புலனுக்குக் கேட்பதாக வசனிக்குமென்றும் வருமுறை மையை யறிவித்தது. உ0

இந்த வாக்குக்கள் நாலோடுங்கூடி ஆன்மா அருளாலே காரியப்படுமிடத்துச் சுத்த தத்துவங்கள் ஐந்தினாலே காரியப்படுமென்றும் அந்தச் சுத்த தத்துவங்களிலே அசுத்த மாயையில் தோற்றப்பட்ட கலையாதி தத்துவங்களிற் கலையும் வித்தையும் காரியப்படும் முறைமையும் மேலருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

39. இத்தகைமை இறைஅருளால் உயிர்அறியும் அறிவுக்(கு)
ஈடாக வாடாதே ஈரிரண்டில் உரைத்த
வித்தைமுதல் ஐவரான் விளங்கு ஞானம்
மேவியிடும் எனஉரைப்பர் அசுத்த மாயை
வைத்தகலை தான்மூல மலம்சிறிதே நீக்கி
மருவும்வகை தெரிவிக்கும் வாயில்களின் பயனைப்
புத்திதர வித்தையிடை நின்றறிவை உயிர்க்குப் [தே.
பொருந்தியிடும் வகைபுணரும் புனிதசத்தி புணர்ந்

சுத்ததத் துவத்தால் தொல்லுயிர் உணர
வைத்திடும் கலைவித்தை மருவு மென்றது.

(உரை) இத்தகைமை வாடாதே ஈரிரண்டில் இறையருளால் உயிரறியும் அறிவுக்கீடாக - இந்த முறைமையாலே கெடாதே வருகிற வாக்குக்கள் நாலினும் கூடித் தம்பிரானார் காருண்ணியத்தினாலே ஆன்மா அறியுமறிவுக்குத் தக்கதாக ; உரைத்த வித்தை முதல் ஐவரான் விளங்கு ஞானம் மேவியிடுமென உரைப்பர் - முன்னே சுத்த மாயையிற் றோற்றமாகச் சொல்லப்பட்ட சுத்த வித்தை ஈசுவரம் சாதாக்கியஞ் சத்தி சிவம் என்கிற தத்துவங்கள் ஐந்தினாலும் பிரகாசிக்கிற அறிவு பொருந்தியிடுமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள். அன்றியும் ; அசுத்த மாயை வைத்த கலைதான் மூலமலம் சிறிதே நீக்கி மருவும்வகை தெரிவிக்கும் வாயில்களின் பயனை - அசுத்த மாயையிலே யுண்டாக்கப்பட்ட கலையானது அந்தச் சுத்த தத்துவத்திற் சத்திதத்துவம் உதவியாகக்கொண்டு ஆன்மாவை மறைக்கப்பட்ட ஆணவ மலத்தைச் சற்றே ஒதுக்கி இந்திரியங்களின் பயனாகிய விடயங்களை ஆன்மாப் பொருந்தும்படி

எழுப்புவிக்கும்; வித்தை யிடை புத்திதர உயிர்க்கு நின்றறிவை பொருந்தியிடும் வகை புணரும் - சுத்த மாயையில் தோற்றமாயுள்ள சுத்தவித்தை உதவியாகக்கொண்டு சொல்லப்பட்ட அசுத்த மாயை யில் தோற்றமாயுள்ள வித்தையானது அந்த விடயங்களை ஆன்மா கொள்ளுமிடத்து இன்னதென்று நிரூபித்து அறியத்தக்க ஞானத்தை ஆன்மாவுக்கும் விடயங்களுக்கும் நடுவேநின்று அறிவுண்டாம்படி கூட்டும். இதுதான் கூட்டுமுறைமை யாராலே யென்னில்; புனித சத்தி புணர்ந்தே - சுத்தனாகிய சிவனுடைய சத்திகள் தொழிலாகப் பூண்டுநின்று செலுத்த அதனோடுங் கூடிக்கொண்டு நின்று.

உரைத்த வித்தைமுதல் ஐவரான் விளங்கு ஞானம் எ - கு சுத்த தத்துவம் ஐந்தினாலும் ஆன்மாக்களுக்கு ஞானமுண்டாமென்ற தெங்ஙனே என்னில், சிவசத்திகள் சுத்த தத்துவங்களைக் காரியப் படுத்தச் சுத்த தத்துவங்கள் அசுத்த மாயையிற் கலாதிகளைக் காரியப் படுத்த அவையிற்றினாலே ஆன்மாக்களுக்கு அறிவுண்டாமென்ற தென அறிக. அஃதாவது கிரியாசத்தி சத்தி தத்துவத்தை எழுப் பச் சத்தி தத்துவங் காலமும் நியதியுங் கலையையும் எழுப்பக் கலை தழற்பொடி நீங்கினாற்போல ஆணவமலத்தைச் சிறிதே நீக்கி அந்தக் கலையே வடிவாக ஆன்மாவுக்குச் சிறிதறிவை உண்டாக்க ஞானசத்தி சுத்த வித்தையை யெழுப்ப சுத்தவித்தை வித்தையையெழுப்ப வித்தை ஆன்மாவுக்கு அறிவை உண்டாக்குமென்றதென அறிக. இனி, புத்திதர விதத்தை யிடைநின்று எ - கு புத்திதர என்பதை புத்திததுவம் என்பாருமுளர். அது பொருளாகாதென அறிக. "புந்தி பஞ்சாசற் பாவகமும் பண்ணுவிக்குந் தானே" (42) என்று புத்தி தத்துவத்தின் காரியப்பாடு பின்பே வருகையால் அதனை இவ் விடத்துக் கூறவேண்டுவதில்லையென அறிக. ஆகையால் புத்திதர என்பதை ஆன்மா அந்த விடயங்களை நிரூபித்தறியவென்று பொருள் கூறுமதே வழியென அறிக.

இதனாற் சொல்லியது முன்னர்ச்செய்யுளிற்கூறிய வாக்குக்கள் நாலிலும் ஆன்மாக்கள் அறியுமிடத்துச் சிவ தத்துவங்களினாலே அறியுமென்றும் அவையாலே அசுத்த மாயையிற் கலையும் விதத்தையுங் காரியப்படும் முறைமையையும் அறிவித்தது. உக

மேல் அராக தத்துவமும் நியதிதத்துவமுங் கால தத்துவமுங் காரியப்படுமுறைமை அருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

40. பேசரிய அராகம்தம் கன்மத்துக் கீடாய்ப்
பெற்றதனில் ஆசைதனைப் பெருகுவிக்கும் நியதி
தேசமிகும் அரசர்தரும் ஆணை செய்தி
செய்தவரைத் துய்ப்பிக்கும் செய்கை போல
நேசமுறு தம்கன்மம் நிச்சயித்து நிறுத்தும்
நிகழ்காலம் கழிகாலம் எதிர்கால மென்றே
ஓசைதர வருங்காலம் எல்லைபலம் புதுமை
உறுவிக்கும் இறைசத்தி உடனாய் நின்றே. உஉ

மாலுறும் அராகமும் மன்னிய நியதியுங்
காலமு மூன்றின் கருத்தையு முரைத்தது.

(உரை) பேசரிய அராகம் தம் கன்மத்துக் கீடாய்ப் பெற்றதனில் ஆசைதனைப் பெருகுவிக்கும் - சொல்லுதற்கரிய அராக தத்துவம் ஆன்மாக்கள் செய்த கன்மத்துக்கு ஈடாகப் பெற்றதிலே நின்றும் பெறுததற்கு ஆசையை மிகவும் உண்டாக்கும்; நியதி தேசமிகும் அரசர்தரும் ஆணை செய்தி செய்தவரைத் துய்ப்பிக்குஞ் செய்கைபோல நேசமுறு தம் கன்மம் நிச்சயித்து நிறுத்தும் - நியதி தத்துவமானது பொதுவாக இராச்சியம் பண்ணும் இராசாவினுடைய ஆக்கினையைக் கொண்டு உலகில் ஆன்மாக்களை எல்லைவிட்டுக் கடவாதபடி அந்த ஆக்கினையிலே நிறுத்தி நடத்தும் மந்திரியைப்போல இவவான்மாக்கள் செய்த கன்மத்தின் வழியன்றி ஏறகுறையப் போகாதபடி அறுதியாக நிறுத்தும்; நிகழ்காலம் கழிகாலம் எதிர்கால மென்றே ஓசைதர வருங்காலம் எல்லை பலம் புதுமை உறுவிக்கும் - கால தத்துவமானது நடக்கிறகாலமென்றும் இறந்தகாலமென்றும் வருகிற காலமென்றுஞ் சொல்லப்பட்டு, போனகாலத்தில் உண்டாகிய எல்லையையும் நடக்கிற காலத்தில் உண்டாகிய பலத்தையும் வருகிற காலத்தில் உண்டாகிய புதுமையையும் உண்டாக்கிநிற்கும். இவைதான்

ஆராலே யுண்டாக்கு மென்னில் ; இறை சத்தி உடனாய் நின்றே - கர்த்தாவினுடைய திருவருளான சத்தி கூடிநின்று காரியப்படுத்தும்.

பேசரிய அராகம் எ - து ஆசையின் மிகுதி சொல்லுதற் கரிதென்றதென அறிக. கழிகாலத்துக்கு எல்லையென்றது ஆண்டு திங்கள் நாளென அறிக. நிகழ்காலத்துக்குப் பலனென்றது தனக்கு அநுபவமான புசிப்பாயுள்ள விடயங்களையென அறிக. எதிர்காலத்துக்குப் புதுமையென்றது தானறியாததன்றி அறிந்தவற்றையும் புதுமை யென்றதென அறிக. இனி இறை சத்தி உடனாய் நின்றே என்றது இச்சாசத்தி ஈசுவர தத்துவத்தை எழுப்ப ஈசுவர தத்துவம் அராக தத்துவத்தை எழுப்ப அராக தத்துவம் ஆன்மாவுக் கிச்சையை எழுப்புமென்றதென அறிக. இனி நியதி யாதாமொரு பொருளை நிச்சயிக்குமிடத்துக் கிரியாசத்தி சத்தி தத்துவத்தைக்கொண்டு நியதியை எழுப்ப நியதி யாதாமொரு பொருளை நிச்சயிக்குமென்றதென அறிக. இனி காலங்கூட்டுமென்றது கிரியாசத்தி தத்துவத்தைக்கொண்டு காலத்தை எழுப்பக் காலம் ஆன்மா புசிக்கும் அவதரங்களைக் கூட்டுமென்றதென அறிக.

இதனாற் சொல்லியது ஆன்மாவுக்கு அராக தத்துவம் கன்மங்களுக்கீடாகப் பெற்றதைச் சிறிதாக்கிப் பெருததிலே ஆசையை மிகவும் உண்டாக்குமென்றும், நியதிதத்துவம் இராசாக்கினைபோலக் கன்மத்தை நிச்சயித்து நிறுத்துமென்றும், கால தத்துவம் கழிகாலத்தின் எல்லையையும் நிகழ்காலத்திற் பலத்தையும் எதிர்காலத்திற் புதுமையையும் உண்டாக்குமென்றும் வருமுறைமையை அறிவித்தது.

இங்ஙனஞ் சொல்லப்பட்ட தத்துவம் ஐந்தும் காரியப்படுகிற சமுகந்தானே புருட தத்துவமென்றும் பிரகிருதி தத்துவம் காரியப்படும் அவதரத்து மூன்று குணமாக நின்று காரியப்படும் முறைமையும் மேலருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

41\. ஐவகையால் உறுபயன்கள் நுகரவருங் காலம்
அதுபுருட தத்துவமென் றறைந்திடுவர் அறிந்தோர்
மெய்வகைய கலாசுத்தி தனின்இதற்கும் சுத்தி
மேவியிடும் வகைதானும் விரும்பியநூல் விளம்பும்

செய்வகையின் தொடர்ச்சியிங்குத் தோன்றுவிக்கும் குணத்தி
சேர்வுபுரி பிரகிருதி திரிகுணமாம் அவைதாம் [ன்
இவ்வகையிற் சாத்துவித ராசததா மதமாய்
இயம்புவர்கள் ஒன்றிரண்டு குணம்ஏற்க உடைத்தே.

புகன்றவற் றுல்வரு புருடதத் துவமும்
அகன்ற மானு மதன்குணம் விரித்தது.

(உரை) ஐவகையால் உறுபயன்கள் நுகரவருங் காலம் அதுபுருட தத்துவமென் றறைந்திடுவர் அறிந்தோர் - ஆன்மாவானது காலம் நியதி கலை வித்தை அராகம் இவை ஐந்துந் தனக்கு உடம்பாகக் கொண்டு இந்திரியங்களுடனே கூடிச் சத்தாதி விடயங்களைப் புசிக்க வருகிற அவதரத்தைப் புருட தத்துவமென்று சொல்லுவார் கள் பெரியோர்கள்; மெய்வகைய கலாசுத்தி தனின் இதற்கும் சுத்தி மேவியிடும் வகைதானும் விரும்பிய நூல் விளம்பும் - உண்மையாகச் சொல்லப்பட்ட மந்திர முதலான ஐந்தும் நிவிர்த்திமுதலான கலைகள் ஐந்தினுமடைந்து சுத்திபண்ணுமிடத்து இந்தப் புருட தத்துவத்தை யுஞ் சுததிபண்ணப்படுமென்று நம்மால் விரும்பப்பட்ட திவ்வியாக மங்கள் சொல்லும்; அன்றியும், மெய்வகைய கலாசுத்தி எ - கு மெய்யாகிய சரீரத்தில் ஐவகைப்பட்ட கலாசோதனை செய்யு மிடத்துமென அறிக; செய்வகையின் தொடர்ச்சி யிங்குத் தோன்று விக்குங் குணத்தின் சேர்வுபுரி பிரகிருதி திரிகுணமாம் - ஆன்மாக் கள் முன் ஜநநத்திற் செய்த கன்மத்துக்கு ஏதுவாயுள்ள சுக துக்கங் களை இபபொழுதுண்டாக்குங் குணங்களின் வடிவாய்ப் பொருந்து கிற பிரகிருதி மூன்று வகையாகிய குணமாம்; அவைதாம் - அந்தக் குணங்களின் பெயராவன; இவ்வகையிற் சாத்துவித ராசத தாமத மாய் இயம்புவர்கள் - இந்த முறைமையிலே சாத்துவித குணமென் றும் இராசத குணமென்றுந் தாமத குணமென்றும் பெரியோர்கள் சொல்லுவார்கள்; ஒன்றிரண்டு குணமேற்க வுடைத்தே - இந்தக் குணஙகள் மூன்றுக்கும் ஒவ்வொன்றுக் கிவவிரண்டு குணமாக ஆறு குணமும் அநாதியே பொருந்தும் இயல்பினை யுடைத்து.

மெய்வகைய கலாசுததி எ - கு மெய்யாகிய சரீரததில் ஐவகைப் பட்ட கலாசோதனை செயயுமிடத்து மென்னவுமாமென்று பொருள்

கூறியது ஏதென்னில், ஆசாரியன் தீக்ஷை செய்யும் அவதரத்துக் கலாசோதனை செய்யவேண்டுகையால் அதற்கு நிவர்த்தி முதலான கலைகள் ஐந்தினையுஞ் சீடன் சரீரத்திலே ஐந்துவகைப்படுத்திச் செய்யவேண்டுகையால் அப்படிச்சொன்னதென அறிக.

அதற்கு வகை எங்ஙனே என்னில் மூலாதாரந் தொடங்கி உந்திக்குமேல் எண்விரலளவு நிவிர்த்திகலைக்கு எல்லையென அறிக. அதற்கு மண்டலம் அக்கினி மண்டலம். ஆதாரம் மூலாதாரமுஞ் சுவாதிட்டானமும். அக்கரம் அகாரம். பிரகாசஞ் சொரிதழற் கொழுந்து. மலம் மாயாமலம். அவத்தை சாக்கிரம். மாத்திரை - ௩. மந்திரம் இருதயமுஞ் சத்தியோசாதமும். பதம் ஓநமோ முதல் மாதேவ ரந்தமாக உஅ - ம். வன்னம் க்ஷகாரமொன்றும். புவனம் காலாக்கினி முதல் வீரபத்திரர்கள் முடிவாகிய ராஅ-ம். தத்துவம் பிருதிவியொன்றும். தெய்வம் பிரமா. தொழில் சிருஷ்டி—என்று இங்ஙனம் நிவிர்த்திகலைக்குக் கண்டுகொள்க.

இனி, பிரதிட்டாகலைகளு இருதயந் தொடங்கிக் கண்டத்தளவும் எல்லையென அறிக. அதற்கு மண்டலம் ஆதித்த மண்டலம். ஆதாரம் மணிபூரகம். அக்கரம் உகாரம். பிரகாசம் அக்கினியும் ஆதித்தனுங் கூடின பிரகாசம். மலம் கன்ம மலம். அவத்தை சொப்பனம். மாத்திரை - உ. மந்திரம் சிரசும் வாமதேவமும். பதம் மகேசுர முதல் அரூபினி முடிவாகிய உக-ம். வன்னம் ஜ முதல் ட அந்தம் உச-ம். புவனம் அமரேசர் முதல் சிகண்டி முடிவாகிய ருசு-ம். தத்துவம் பிருதிவி நீங்கலாக ஆன்ம தத்துவம் உ௩-ம். தெய்வம் விஷ்ணு. தொழில் திதி—என்றிங்ஙனம் பிரதிட்டா கலைக்குக் கண்டுகொள்க.

இனி, வித்தியாகலைக்குக் கண்டத்துக்குமேல் தாலு மூலத்தளவு மெல்லை நாலங்குலமென அறிக. அதற்கு மண்டலம் ஆதித்த மண்டலம். ஆதாரம் அநாகதம். அக்கரம் மகாரம். பிரகாசம் மின். மலம் மாயேய மலம். அவத்தை சுழுத்தி. மாத்திரை - க. மந்திரம் சிகையும் அகோரமும். பதம் வியாபினி முதல் தியானகாரிய முடிவாகிய உ௰-ம். வன்னம் ஞ முதல் ஙம அந்தமாகிய ஏழும். புவனம் தியானம்முதல் வாமம் முடிவாகிய உஎ-ம். தத்துவம் வித்தியா

தத்துவம் ஏழும். தெய்வம் உருத்திரன். தொழில் சங்காரம்—என்றிங்ஙனம் வித்தியாகலைக்குக் கண்டுகொள்க.

இனி, சாந்திகலைக்குத் தாலுமூலத்துக்கு மேற்புருவ மத்தியத்தளவுமெல்லை நாலங்குலமெனா அறிக. இதற்கு மண்டலம் சோம மண்டலம். ஆதாரம் விசுத்தி. அக்கரம் விந்து. பிரகாசம் விளக்கொளி. மலம் திரோதாயி. அவத்தை துரியம். மாத்திரை அரை. மந்திரம் கவசமுந் தற்புருடமும். பதம் நித்திய நியோகினி முதல் வியோம வியாபினி முடிவாகிய ௧௧ - ம். வன்னம் ஶ முதல் க்ஷ அந்தமாக ௩-ம். புவனம் ஸ்ரீ முதல் சதாசிவ முடிவாகிய ௧௮-ம். தத்துவம் சுத்தவித்தையும ஈசுரமும் சாதாக்கியமும. தெய்வம் மகேசுரம். தொழில் திரோபாவம்—என்றிங்ஙனஞ் சாந்திகலைக்குக் கண்டுகொள்க.

இனி, சாந்தியாதீதகலைக்குப் புருவ மத்தியத்துக்குமேல் மூன்றங்குலம் எல்லையெனா அறிக. இதற்கு மண்டலம் சோம மண்டலம். ஆதாரம் ஆக்கினை. அக்கரம் நாதம். பிரகாசம் வாளொளி. மலம் ஆணவமலம். அவத்தை துரியாதீதம். மாத்திரை கால். மந்திரம் நேத்திரமும் அத்திரமும் ஈசானமும். பதம் பிரணவம் ஒன்றும். வன்னம் க்ஷ முதல் க்ஷ அந்தம் ௧௬-ம். புவனம் நிவர்த்தி முதல் சமனாந்தம் முடிவாகிய ௧௫-ம். தத்துவம் சத்தியுஞ் சிவமும். தெய்வம் சதாசிவம். தொழில் அநுக்கிரகம்—என்றிங்ஙனஞ் சாந்தியாதீதகலைக்குக் கண்டுகொள்க. ஆக இங்ஙனங் கலைகள் ஐந்துக்கும் கண்டுகொள்க.

இங்ஙனங் கூறிவந்த பொருள்களிற் கலாசோதனைக்கும் மந்திரங்கள் பதங்கள் வன்னங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைகள் என்று சொல்லியிருக்க இவை நீங்கலாக மற்றுள்ள ஆதார முதலான பொருள்கள் கூறவேண்டியதேதென்னில் அஃதாவது கலாசோதனை செய்யுமிடத்துச் சரீரத்தில் ஐவகைப்படுத்திச் செய்ய வேண்டுகையால் அந்தத் தத்துவங்கள்தோறும் நிற்கும் பொருள்களை வகுத்துக் கூறியதெனா அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் “மந்திரங்கள் முதலைந்தும கலையைந்தில் வியாத்தி” (8. 7) என்னும்

விருத்தம் முதலாகிய செய்யுள் மூன்றிலும் [1]பிராசாத அகவலினும் தத்துவப் பிரகாசத்தில் "இவ்வகையு மண்விகற்ப மெட்டு மேவி லெழிலலகா ரமுகிறஞ் சொரிதழல்மாத் திரையும்" (134) எ - ம் விருத்தம் முதலாகிய செய்யுள் எட்டினுங் கண்டுகொள்க. இனி ஒன் றிரண்டு குணமேற்க வுடைத்தே எ - கு ஒவ்வொரு குணத்திலே இவ் விரண்டு குணம் ஏற்க உண்டாமென்று பொருள் கூறியதற்கு வகுப்பேதென்னில், சாத்துவிதத்தில் இராசதமுஞ் சாதத்துவிதத்தில் தாமதமும் இராசதத்திற் சாத்துவிதமும் இராசதத்தில் தாமதமும் தாமதத்தில் இராசதமும் தாமதத்தில் சாத்துவிதமும் என்றிங்ஙனங் கண்டுகொள்க. இதற்கு பி - ம் சித்தியாரில் "வருஙகுண வடி வாய் மூலப் பிரகிருதி கலையிற் றோன்றித், தருஙகுண மூன்று மொன்றிற் றொன்மூன்றாய் மும்மூன் றாகும், இருஙகுண ரூப மாகி இசைந்திடு மெங்கு மான்மாப, பெருங்குண வடிவாய்ப் போக சாத னம் பெத்த மாமே" (2. 57) எ-து கண்டுகொள்க. குணத்தின் சேர்வு புரி பிரகிருதி என்பதற்கும் இந்தப் பிரமாணத்திலே கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது காலமும் நியதியுங் கலையும் வித்தையும் அராகமுங் கூடின சமுகந்தானே புருட தத்துவமென்றும் தீக்ஷை யிலே கலாசோதனை செய்யுமிடத்து இந்தப் புருடதத்துவத்துக்குஞ் சோதனை பண்ணவேண்டுமென்றும் குணசொரூபமாயுள்ள பிர கிருதி தானே மூன்று குணமாகக் காரியப்படுமென்னும் முறைமை யும் அறிவித்தது. உ௯

இங்ஙனஞ் சொல்லப்பட்ட குண மூன்றும் ஒன்பது வகையாகக் காரியப்படுகைக்கு வகுப்பெங்ஙனேயென்று வினவ அவை காரியப் படும் முறைமையும் மேல் புத்தி தத்துவங் காரியப்படும் முறைமை யும் அருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

42. அலகில்குணம் பிரகாசம் லகுதைவியா பிருதி
அடர்ச்சிமிகுங் கவுரவம்அ நியமம்இவை அடைவே
நிலவியிடும் மும்மூன்றும் உயிரொன்றில் கலந்தே
நிற்கும்இவை நிறைபுலனின் பயன்எவையும் கவரும்

---

[1] இது காவை அம்பலவாணத தம்பிரான் செய்தது. உரை யோடு அச்சிடப்பட்டிருக்கிறது.

குலவிவரு போகங்க ளிடமாய் மாறுக்
குறைவில்ஒளி யாம்அலகில் புலனிடத்தின் ஒருமை
பலவகையும் உடையதாய்ப் பரனருளாற் புந்தி
பஞ்சாசற் பாவகமும் பண்ணுவிக்குந் தானே. உச

விளம்பிய குணம்நவ மாக விரிந்தும்
வளர்ந்திகழ் புத்தியைம் பதுவகைத் தென்றது.

(உரை) அலகில் குணம்-எண்ணிறந்திருக்கப்பட்ட இந்தக் குணத்தின் விரிவைச்சொல்லுமிடத்து முன்சொல்லப்பட்ட பிரதானமான குணம்மூன்று மொழிந்து ஏறின குணம் ஆறுக்கும் வகையாவன; பிரகாசம் - பிரகாசமாயிருக்கும். அஃதாவது சாததுவிகததிலே இராசதங கூடினால் அந்தச் சாத்துவிகத்தைப் பிரகாசித்துக்கொண்டு நிற்கு மென்றதென அறிக; லகுதை - நொய்தாயிருக்கும். அஃதாவது சாத்துவிகத்திலே தாமதங் கூடினால் நல்லொழுங்குகளை மறைத்துக்கொண்டு அந்தப் பிரகாசத்தை நொய்தாக்கிக்கொண்டு நிற்குமென்றதென அறிக; வியாபிருதி - தெரியாமல் மறைத்து நிற்கும். அஃதாவது இராசதத்திலே தாமதங்கூடினால் நல்லொழுங்குகளை மறைத்துக்கொண்டு நிற்குமென்றதென அறிக; அடர்ச்சிமிகும் - செறிவித்து நிற்கும். அஃதாவது இராசதத்திலே சாத்துவிகங் கூடினால் நன்மைகளைச் செறிவித்து நிற்கு மென்றதென அறிக; கவுரவம் - பெருமையை உண்டாக்கும். அஃதாவது தாமதத்திலே இராசதங் கூடினால் கர்வத்திலே பெருமையைப் பண்ணி நிற்கு மென்றதென அறிக; அநியமம் - நல்ல நியமமல்லாததைச் செய்வித்து நிற்கும். அஃதாவது தாமதத்திலே சாத்துவிகங் கூடினால் அநிய நியமங்களைச் செய்விததுக்கொண்டு நிற்குமென்றதென அறிக; இவை யடைவே நிலவியிடும் - இந்தக் குணங்கள் இங்ஙனஞ் சொன்ன முறைமையிலே பொருந்திநிற்கும். இவை வெவ்வேறாய் நிற்குமோ கூடிநிற்குமோ என்னில்; மும்மூன்றும் உயிரொன்றில் கலந்து நிற்கும் - இவை ஒன்பது குணமுமொரு ஆன்மாவிலே கூடிநிற்கும்.

ஒன்பது குணமாவது சாத்துவிகத்திற் சாத்துவிகமென்றும் சாத்துவிகத்தில் இராசதமென்றும் சாத்துவிகத்தில் தாமதமென்

றும், இராசதத்தில் இராசதமென்றும் இராசதத்திற் சாத்துவிக மென்றும் இராசதத்தில் தாமதமென்றும், தாமதத்தில் தாமதமென் றும் தாமதத்திற் சாத்துவிகமென்றும் தாமதத்தில் இராசதமென் றும் இங்ஙனம் ஒன்பது வகைப்படும். அதற்கு வகையேதென்னில் சாத்துவிகத்திற் சாத்துவிகமாவது துறவும் சாந்தமும் மோக்ஷத திலே மிகுந்த தாகமுமாகையென அறிக. சாத்துவிகத்தில் இராசத மாவது துறவும் சாந்தமும் இடையே நழுவ முத்தியில் முயலுகையு மாமென அறிக. சாத்துவிகத்தில் தாமதமாவது துறவும் சாந்தமும் மோக்ஷத்திலே முயலுகையுமன்றி விடயவிருப்பமும் உண்டாகை யென அறிக. இனி இராசதத்தில் இராசதமாவது தன்மத்தில் ஆசை யோடுங்கூடி இடைவிடாமற் செய்கையென அறிக. இராசதத்திற் சாத்துவிகமாவது யாவர்க்குங் கிருபையோடே அறங்களைச் செய் கையென அறிக. இராசதத்தில் தாமதமாவது இவையிற்றினை இகழ் தலும் பாவத்தொழில்களைச் செய்தலுமென அறிக. இனி தாமதத் தில் தாமதமாவது மயக்கமும இகழ்ச்சியும் பாவமும் ஆசையும் பயமும் உறக்கமுமென அறிக. தாமததத்தில் இராசதமாவது தகா தன செய்தலும் உண்ணுதன உண்ணலுங் களிப்பும் வெகுளியுமென அறிக. தாமதத்திற் சாத்துவிகமாவது வேதாகமங்களில் விருத்தமா யிருக்கிற கிருத்தியமான சிறு தேவதைகளைப் பிரபத்தி பண்ணுகை யென அறிக. இப்படி எண்ணிறந்த குணங்களை உடைத்தாகையாலே அலகில் குணமென்று சொல்லபபட்டதென அறிக.

இங்ஙனங் குணபேதங்களாகக் கூடிநின்று செய்யுமிடத்து; இவை நிறைபுலனின் பயனெவையுங் கவரும் - இந்தக் குணங்கள் ஒன்பதும் நிறைந்து நிற்கிற இந்திரியங்களின் பயனுன விடயஙகளைத் தன்னிடத்திலே கவர்ந்து கொள்ளும்; குலவிவரு போகங்க ளிட மாய் மாறுக் குறைவில் ஒளியாம் - சர்வராலுங கொணடாடப்பட்டு வருகிற புசிப்புக்களை ஆன்மாக் கொள்ளுகிற இடமுமாய் உடல்முழு தும்விட்டு நீங்காத குறைவற்ற பிரகாசமுமாய் நிறகும். இவ்வளவும் விததியா தததுவத்தின் கலை தொடஙகிப் பிருகிருதி மாயையாகிய குணங்கள் காரியப்படுகையை அருளிச்செய்து மேல் ஆன்ம தததுவத்திற் புத்தி தத்துவங் காரியப்படுகையை அருளிச்செய்கின்றது;

அலகில் புலனிடத்தின் ஒருமை பலவகையும் உடையதாய்ப் பரனரு ளாற் புந்தி பஞ்சாசற் பாவகமும் பண்ணுவிக்கும் தானே - என்ன ுறந்த விருத்தியாகிய விடயங்களை இந்திரியங்களைக்கொண்டு ஆன் மாக் கொள்ளுமிடத்து நிச்சயித்தலைப் பலவகையாலும் உண்டாவ தாய்ச் சிவனுடைய அநுக்கிரகத்தினாலே புத்தியானது ஐம்பது ஐம்பது பேதங்களை ஒவ்வொரு குணங்கள் தோறுஞ் செய்துநிற்கும்.

இந்தப் புத்தியின் விருத்தி எங்ஙனே என்னில், அவ்வியத்த மாவது மூன்று குணங்களும் தோன்றாமல் வடவித்துப்போலே யிருந்த அவதரமென அறிக. குணதத்துவமாவது வடவித்திலே நின்றும் அங்குரந் தோன்றினாற்போல அவ்வியத்தத்திலே மூன்றாய்த் தோன்றிச் சமமாய் அலைவற நின்ற அவதரமென அறிக. வேறுபட்ட குணங்களையுடைத்தாய் ஏற்றக்குறைச்சல் புத்தி முதலான தத்து வங்களென அறிக. புத்தி தத்துவமாவது இராசதமுந் தாமதமுங் குறைந்து சாத்துவிகருணம் மேலிட்ட அவதரமென அறிக. இந்தப் புத்தியினது காரியமாவது தன்ம ஞான வைராக்கிய ஐஸ்வரியமென் றும் அதன்ம அஞ்ஞான அவைராக்கிய அநைஸ்வரியமென்றும் எட்டு வகையாம். இதில் தன்மத்திலே நின்றும் பத்து பாவகந் தோன்றும். ஞானத்திலே நின்றும் நூற்றெண்பது பாவகந்தோன்றும். வைராக்கி யத்திலே நின்றும் அறுபத்துநாலு பாவகந் தோன்றும். ஐஸ்வரி யத்திலே நின்றும் நூற்றெழுபத்தாறு பாவகந் தோன்றும். மற்ற அதன்மத்திலே நின்றும் முப்பத்தெட்டு பாவகந் தோன்றும். அஞ்ஞானத்திலே நின்றும் முப்பத்தெட்டு பாவகந் தோன்றும். அவைராக்கியத்திலே நின்றும் நூறு பாவகந் தோன்றும். அநைஸ் வரியத்திலே நின்றும் எட்டு பாவகந் தோன்றும். ஆக புத்தியி னுடைய காரியம் அறுநூற்றொருபத்து நாலென அறிக. அப்படி யிருக்க இந்நூலிலே பஞ்சாசற்பாவகமென்று நானூற்றைம்பதாகச் சொல்லுவான் ஏனென்னில் அப்படியுஞ் சில ஆகமங்களிலே சொல்லுகையாலென அறிக. அன்றியும் பஞ்சாசற்பாவகமுமென்ற உம்மைகொண்டே மற்றதும் உண்டென அறிக. இனி, புத்தி தத்துவத்தை அலகில் புலனிடத்தி னொருமை பல வகையு முடைய தாய் என்றதேதென்னில் அது கன்மாகன்மங்களும் உடையதாய்ச்

சத்தாதி விடயங்களிலே நிச்சயித்தலும் உடையதாய் இன்பதுன்பங் களிலே மோகத்தையும் உடையதாய் அறிவு தொழில்களுமுடைய தாய் நிற்கையினாலேஅப்படிச் சொன்னதென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "சித்தமா மவ்வி யத்தஞ் சிந்தனை யதுவுஞ் செய்யும், புத்தியவ் வியத்திற் றோன்றிப் புண்ணிய பாவஞ் சார்ந்து, வத்துநிச் சயமும் பண்ணி வருஞ்சுக துக்க மோகப், பித்தினின் மயங்கி ஞானக் கிரியையும் பேணி நிற்கும்" (2. 58) எ - து கண்டுகொள்க. இனி, புந்தி பஞ்சாசற்பாவகமும் பண்ணுவிக்கும் எ - கு புத்தி தத்துவ மானது குணங்களோடுங்கூடிச் சம்பந்தமா யிருக்கையினாலே ஒரு குணத்துக்கு ஐம்பது வகையாக ஒன்பது குணத்துக்கு நானூற் றைம்பது வகையாகப் பேதித்ததென அறிக. என்றிங்ஙனம் புத்தி குணத்தோடு சம்பந்தமாய் நிற்கும் என்பதற்கு பி - ம் தத்துவ விளக்கத்தில் "எண்ணிய புத்தியில் முக்குணஞ் சேரியல் பாற் கரந்து" எ - து கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது குணதத்துவம் ஒன்பது வகையாகக் காரியப்படும் முறைமையும் புத்திதத்துவம் ஒன்பது குணத்துக்கும் ஒவ்வொரு குணத்துக்கு ஐம்பது ஐம்பதாக நானூற்றைம்பது பாவக மாகக் காரியப்படும் முறைமையும் அறிவித்தது. உச

மேல் ஆங்காரமும் மனதுஞ் சித்தமுங் காரியப்படும் முறை மையை அருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

43. ஆனதனு வதனிலுறும் அநிலனையும் இயக்கி
ஆங்காரம் நீங்காத அகந்தைக்கு வித்தாய்
யானலது பிறரொருவர் எனையொப்பார் புவியின்
இல்லையெனும் இயல்பினதாய் இந்திரியம் புலன்கள்
தாம்நுகரும் அளவில்அதின் முந்தியுறும் இச்சை
தானுருவாய்ச் சங்கற்ப சதாகதியும் தந்து
மானதமா னதுநிற்கும் சிந்தைநினை வையம்
வந்துதரு மனமொழிய வகுப்பொ னாதே. உரு

அகந்தைக் கிடமா மாஙகா ரத்துட
னிகழ்ந்தெழு மனஞ்சித்த மிவ்வகைத தென்றது.

(உரை) ஆனதனு வதனிலுறும் அநிலனையும் இயக்கி ஆங்காரம் நீங்காத அகந்தைக்கு வித்தாய் யானலது பிறரொருவர் எனையொப்

பார் புவியின் இல்லையெனும் இயல்பினதாய்-ஆங்கார தத்துவமானது ஆன்மாக்கள் கன்மத்துக்கீடாக உண்டான சரீரத்திலே பொருந்திப் போதும்; வாயுவையும் இயங்கும்படிவிருத்தி நீங்காத மமதைக்கு மூலமாய் நானே யொழியப் பிறர் எனக்கொப்பார் பூமியிலில்லையெனும் இயல்பினையும் உடையதாய் நிற்கும். இனி மனது காரியப்படும் வகை யாவது;இந்திரியம் புலன்கள் தாம்நுகரும் அளவிலதின் முந்தியுறும் இச்சை தானுருவாய்ச் சங்கற்ப சதாகதியுந் தந்து மானதமானது நிற்கும் - இந்திரியங்களானது விடயமாகிய புலன்களைப் புசிக்குமிடத்து அதற்கு முந்திச் செல்லுமதா யிருக்கிற இச்சையே தனக்கு வடிவாயத் தனக்கு வேண்டினதிலே சதாகாலமுஞ் சங்கற்பித்துக் கொண்டு நிற்கும் மனதானது. இனி சித்தங் காரியப்படும் வகை யாவது ; சிந்தைநினைவு - சித்தமானது நினைவுமாத்திரமாய் நிற்கும். இங்ஙனமிவை காரியப்படுமிடத்து ; ஐயம் வந்துதரு மனமொழிய வருபொழுதே - யாதாமொன்றின்மேலே செல்லுமிடத்து ஆமோ அல்லவோவென்று ஐயப்பாட்டையுமுடைய மனதாலொழிய அவை காரியப்படமாட்டாது.

இதனாற் சொல்லியது யானெனதென்னும் மமதையையுடைய ஆங்காரமும் ஆமோ அல்லவோ என்கிற சந்தேகத்தினையுடைய மனதும் நினைவுமாத்திரமாயிருக்கிற சித்தமுங் காரியப்படும் முறைமையை அறிவித்தது. உரு

மேல் சோத்திராதியுஞ் சத்தாதியும் வசனாதியும் வாக்காதியுமாகத தத்துவம் இருபதுங் காரியப்படும் முறைமையை அருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

44. சொன்னமுறை செவிதுவக்கு நோக்கு நாக்குந்
துண்டம்இவை ஐந்திற்குந் தொகுவிடய மாக
மன்னியசத் தப்பரிச ரூபரச கந்தம்
மருவியிடும் இவைஅடைவே வாக்குப் பாதம்
பின்னர்வரு பாணிமிகு பாயுவினோ டுபத்தம்
பேசலுறும் ஐந்திற்கும் பிறங்கொலிகொள் வசனம்
உன்னரிய கமனதா னவிசர்க்கா னந்தம்
உற்றதொழில் பெற்றிடுவ துண்மை யாமே. உசு

ஞானமுங் கன்மமும் நண்ணுமிந் திரியமும்
ஊனமில் விடயமுந் தொழிலு முரைத்தது.

(உரை) சொன்னமுறை செவி துவக்கு நோக்கு நாக்குத் துண்டம் இவை ஐந்திற்கும் தொகுவிடயமாக - முன் சொல்லிவந்த முறைமையிலே உட்கரணங்களன்றியே புறக்கரணமாயுள்ள சோத்திரம் தொக்கு சக்ஷு சிங்ஙுவை ஆக்கிராணமென்னுமிவை ஐந்துக்குங் கூடத்தக்க விடயமாக; மன்னிய சத்தப் பரிச ரூப ரச கந்தம் மருவியிடும் - நிலைபெற்ற சத்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தம் இவை ஐந்தும் பொருந்தியிடும்; இவை அடைவே வாக்குப் பாதம் பின்னர் வருபாணி மிகு பாயுவினோடுபத்தம் பேசலுறும் ஐந்திற்கும் - வாக்கும் பாதமும் பின்வரப்பட்ட பாணியும் மிகுதலையுடைய பாயுவும் இதனோடு உபத்தமுமென்று சொல்லப்பட்ட கன்மேந்திரியம் ஐந்திற்கும்; பிறங்கொலிகொள் வசனம் உன்னரிய கமனதான விசர்க்கானந்தம் உற்றதொழில் பெற்றிடுவ துண்மையாமே - விளங்கப்பட்ட ஓசையையுடைய வசனமும் நினைத்தற்கரிய கமனமும் தானமும் விசர்க்கமும் ஆநந்தமுமென்று பொருந்தப்பட்ட ஐந்து தொழிலும் அடைவே உணடாகிறது முறைமையாம்.

வாக்கென்றது வாயென அறிக. இவை அடைவே என்றதற்கு வகையாவது: சோத்திரத்தின் வழித்து வாக்கு. தொக்குவின் வழித்துப் பாதம். சக்ஷுவின் வழித்துப் பாணி. சிங்ஙுவின் வழித்துப் பாயுவு. ஆக்கிராணத்தின் வழித்து உபத்தம். என்னும் இவையிற்றைக் காரியப்படுத்தும் அவதரததிலுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது புறக்கரணமாயுள்ள ஞானேந்திரியமாகிய சோத்திராதியும் அதன் விடயமாகிய சத்தாதியுங் கன்மேந்திரியமாகிய வாக்காதியும் அதன் தொழிலாகிய வசனாதியும் ஆக இருபதுங் காரியப்படும் முறைமையை அறிவித்தது. உசு

மேற் பூதங்கள் ஐந்துங் காரியப்படும் முறைமையை அருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

45. முந்தியஐம் பூதங்கள் வானாதி யாக
முயங்கியநற் செவிநாசி கண்ணுமெய்ம் முறையால்
இந்தவயி னின்றுவரும் ஐம்புலனும் உயிர்தாம்
எய்தும்வகை தம்முருவின் இலங்கியிடும் புறத்தும்

வந்தடைய இடங்கொடுக்கும் நிரந்தரமாய் வானம்
வாயுமிகச் சலித்தெவையுந் திரட்டுந்தீ வெம்மை
தந்தவைசுட் டொன்றுவிக்கும் நீர்குளிர்ந்து பதமே
தரும்உரத்துத் தரிக்கும்இது தரணி தானே. உஎ

ஒன்றுமைம் பூதங்க ளுள்ளும் புறம்பும்
நின்றுகா ரியப்படும் நெறியிது வென்றது.

(உரை) முந்திய ஐம்பூதங்கள் வானாதி யாக - தத்துவங்கள் எல்லாவற்றினும் முந்தத் தரிசனப்பட்டு வருகிற ஆகாசம் ஆதி யான பூதங்கள் ஐந்தினும்; முயங்கிய நற் செவி நாசி கண்ணு - பொருந்தப்பட்ட சோத்திர முதல் ஆக்கிராணம் ஈறாகவுள்ள இந்திரி யங்கள் ஐந்துமிடமாக; மெய்ம்முறையால் இந்த வயினின்று வரும் ஐம்புலனும் - உண்மையாக அடைவே இந்த விடயங்களிலே நின்று கூடாநிற்கும் விடயங்கள் ஐந்தும். அன்றியும், இந்தப் பதத்துக்கு இந்திரியங்கள் ஐந்திற்கும் அடைவிலே பொருள்சொல்ல வேண்டு கில், முயங்கிய நற் செவி மெய் கண் நாசி முறையால் இந்த வயி னின்று வரும் ஐம்புலனும் என்று பாடமோதி பொருள்படுத்து மிடத்து பொருந்தப்பட்ட நன்மைப் பகுதியினையுடைய சோத்தி ரம் தொக்கு சக்ஷு சிங்ஙுவை ஆக்கிராணம் இவை யடைவே நின்று வருகிற சத்தாதியாகிய விடயங்கள் ஐந்துமென்று பொருள்படுத் திக்கொள்க; உயிர்தாம் எய்தும்வகை தம்முருவின் இலங்கியிடும் - ஆன்மாக்கள் பொருந்தும்படித் தத்தஞ் சரீரங்களிலே விளங்கா நிற் கும்; புறததும் - உள்ளன்றியே புறம்பேயும் பூதங்கள் சீவிக்கும் படியாவது; வந்தடைய இடங் கொடுக்கும் நிரந்தரமாய் வானம் - ஆகாசமானது சர்வமுந் தன்னிடத்திலே வந்து பொருந்துகைக்கு இடத்தினையுங் கொடுத்து வெளியாய் நிற்கும்; வாயு மிகச் சலித் தெவையுந் திரட்டும் - வாயுவானது எல்லாவற்றையும் மிகுதியாக இயக்குவித்துக் கூட்டும்; தீ வெம்மை தந்தவை சுட்டொன்றுவிக் கும் - அக்கினியானது உஷ்ணத்தையும் உண்டாக்கித் தன்னோடுங் கூடினவையிற்றையுஞ் சுட்டொன்றுபடுத்தும்; நீர் குளிர்ந்து பதமே தரும் - அப்புவானது தன்னோடுங் கூடினவையிற்றைக் குளிர்வித்து

நெகிழ்ச்சியாக்கும்; உரத்துத் தரிக்கும் இது தரணி தானே - பிருதிவியானது கடினமாய் எல்லாவற்றையுந் தாங்கிநிற்கும்.

முந்திய ஐம்பூதங்கள் தம்முருவின் இலங்கியிடும் என்றது ஆன்மாக்கள் சோத்திராதிகளைக் கொண்டு சத்தாதிகளை அறியுமிடத்துப் பூதங்களிடமாக நின்று கொள்ளவேண்டுகையாலென அறிக. அதற்கு வகையாவது ஆன்மா ஆகாசமிடமாகநின்று சோத்திரத்தைப் பொருந்திச் சத்தத்தை அறிவன்; வாயுவிடமாக நின்று தொக்கைப் பொருந்திப் பரிசத்தை அறிவன்; தேயுவிடமாக நின்று சக்ஷுவைப் பொருந்தி உருவத்தை அறிவன்; அப்புவிடமாக நின்று சிங்ஙுவையைப் பொருந்தி இரதத்தை அறிவன்; பிருதிவியிடமாக நின்று ஆக்கிராணத்தைப் பொருந்தி கந்தத்தை அறிவன். இப்படியே ஞானேந்திரியங் காரியப்பட்டாற்போல ஆகாசமாதியான பூதங்களிடமாக நின்று கன்மேந்திரியமான வாக்காதிகள் காரியப்படும் முறைமையை அநுபவத்தாற் கண்டுகொள்க. தம்முருவின் என்றது பூதரூபமென்றுமாம். புறத்துமென்ற உம்மை கொண்டே உள்ளுமப்படிக் காரியப்படுமென்றதென அறிக.

இதனாற் சொல்லியது ஆன்மா சத்தாதிகளை அறியுமிடத்துப் பூதங்களிடமாக நின்றறியுமென்றும் அந்தப் பூதங்கள் காரியப்படுமிடத்து உள்ளும் புறம்புமாக நின்று காரியப்படுமென்றும் வரு முறைமையை அறிவித்தது. உ௭

இங்ஙனஞ் சொல்லப்பட்ட தத்துவம் முப்பத்தாறுஞ் சுத்தமாயிருப்பதொன்றோ அசுத்தமாயிருப்பதொன்றோ என்றும் இந்தத் தத்துவங்களோடு ஆன்மா கூடிநிற்குமிடத்து இவர்களுக்குண்டாகிய பயனேதென்றும் வினவ மேலருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

46. இங்கிரையின் ஐந்துசுத்தம் ஏழ்சுத்தா சுத்தம்
எண்மூன்றும் அசுத்தமெனும் இவைமுப்பத் தாறும்
மன்னியதத் துவங்களிடை மயங்கிநெடுந் துயர்தாம்
மருவும்உரு நிலையழிய வரும்பொழுது வரியார்

பன்னகம்அண் டசம்கனவு படர்வகையே முன்னம்
பகரவரும் கலாதிநிலை பரவியசூக் குமமாம்
தன்உருவில் அணைந்துபயன் அருந்திஅரன் அருளால்
தரையினிடை வருமென்று சாற்றும் நூலே. உ௮

தூல வுடல்விட்டுச் சூக்கும வுருவுடன்
மேலுறு பயன்துய்த்து மீளு மென்றது.

(உரை) இந்நிரையில் - இந்த முறைமையிலே ; ஐந்து சுத்தம் - முன்னே "உன்னலரும் பரசிவன்தன் அருளாலே" (21) என்னும் விருத்தத்தில் தோற்றமாகச் சொல்லப்பட்ட சிவதத்துவம் ஐந்துஞ் சுத்த தத்துவமென்று பேராம் ; ஏழ்சுத்தா சுத்தம்-வித்தியா தத்துவம் ஏழும் சுத்தா சுத்தமென்று பேராம் ; எண் மூன்றும் அசுத்தம் - ஆன்ம தத்துவம் இருபத்துநாலும் அசுத்தமென்று பேராம் ; எனும் இவை முபபத்தாறும் - என்றிங்ஙனம் மூன்று வகையாகச் சொல்லப் பட்ட தத்துவங்களினது தொகை முப்பத்தாறென்று காட்டப்பட் டிருக்கும் ; மன்னிய தத்துவங்களிடை மயங்கி-இப்படி நிலைபெற்ற தத்துவங்களின் நடுவே ஆன்மா மயக்கமுற்று ; நெடுந் துயர்தாம் மருவும் உரு நிலையழிய வரும்பொழுது - மிகவுஞ் சுகதுக்க வேதனை கள் பொருந்தப்பட்ட தூல சரீரததிலேயுள்ள கன்மந் தொலைந்து இதனை விட்டுப்போங் காலத்து; வரியார் பன்னகம் அண்டசம் கனவு படர் வகையே - வரி பொருந்தின பாம்பு தோலுரித்துப் போமாறு போலவும் முட்டையில் ஜநநமாயுள்ளவை அந்தத் தோடுவிட்டு நீங்குமாறு போலவும் நனவிலேயுள்ளவர்கள் கனவிலே அடையுமாறு போலவும் ; முன்னம் பகரவருங் கலாதிநிலை பரவிய சூக்குமமாம் தன் உருவில் அணைந்து பயன் அருந்தி - முன்னே சொல்லபபட்டு வரு கிற கலையாதியாயுள்ள தத்துவம் முப்பத்தொன்றும் விரிந்திருக்கப் பட்ட சூக்கும தேகமான யாதனாசரீரத்தைப் பொருந்திச் சுவர்க்க நரகங்களிலுண்டான இன்ப துன்பங்களைப் புசித்து; அரன் அருளால் தரையினிடை வருமென்று சாற்றும் நூலே - தம்பிரானார் காருண் ணியததினாலே மீளவும் பூமியின்கண்ணே வருமென்று சாத்திரங்கள் சொல்லும்.

சிவதத்துவம் ஐந்தையுஞ் சுத்தமென்றது ஏதென்னில், அது சுத்த மாயையில் தோற்றமாகையாலும் கர்த்தா கொள்ளப்பட்ட திருமேனியெல்லாம் அதினிடமாகக் கொள்ளுகையாலும் வேதாகமங்கள் தோற்றுகையாலுமென அறிக. இனி வித்தியா தத்துவம் ஏழையுஞ் சுத்தாசுத்த மென்ற தேதென்னில், இவையிற்றைச் சுத்த தத்துவங்கள் காரியப்படுத்துகையாலும் அசுத்த மாயையில் தோற்றமாகையாலுமென அறிக. இனி ஆன்ம தத்துவம் இருபத்து நாலையும் அசுத்தமென்றதேதென்னில் அது பிரகிருதியில் தோற்றமாகையாலும் மும்மலத்தையுடைய சகலர்க்குத் தனு கரண புவன போகங்களா யிருக்கையாலுமென அறிக. இனி வரியார் பன்னகம் அண்டசமென்றது தூல உடல்விட்டுச் சூக்கும தேகத்தோடும் போகிறதற்கு உவமையென அறிக. இனி கனவு படர்வகையே யென்றது ஒரு உடலிற்செய்த காரியம் மற்றோருடலில் தெரியாததற்கு உவமையென அறிக. இனி கலாதிநிலை பரவிய சூக்குமமா மென்றது கலையாதி தத்துவம் முப்பத்தொன்றுங் கூடியே சூக்கும தேகமா மென்றதென அறிக. இனி பயனருந்தி யென்றது தூல தேகத்தோடுங் கூடிநின்று செய்த புண்ணிய பாவத்துக்குத் தக்கதாகச் சூக்கும தேகத்தோடுங்கூடி இயம தண்டத்தினும் நரக சுவர்க்கங்களிலுள்ள இன்ப துன்பங்களினும் அநுபவிக்கிறதென அறிக. இனி தரையினிடை வருமென்றது அப்படித் தொலைந்துந் தொலையாத சேடகன்மத்தைப் புசிப்பதற்காக மீளவுந் தூல தேகத்தை வந்தெடுக்கையென அறிக.

இதனாற் சொல்லியது தத்துவம் முப்பத்தாறும் சுத்தமென்றுஞ் சுத்தாசுத்தமென்றும் அசுததமென்றும், இந்தத் தத்துவங்களினோடுங் கூடி நிற்கப்பட்ட ஆன்மாக்கள் தூல தேகத்தைவிட்டுப் போய்ச் சூக்கும தேகத்தோடுங்கூடி இன்ப துன்பங்களை இயம தண்டத்தினும் நரக சுவர்க்கங்களினும் அநுபவித்து மீளவும் பூமியின் கண்ணேவந்து தூல தேகத்தை எடுப்பார்களென்றும் வருமுறைமையை அறிவித்தது. உஅ

இங்ஙனம் ஜநந மரணப்பட்டு வருகிற ஆன்மாக்கள் எடுக்கப்பட்ட யோனிபேதம் எத்தனை வகைப்பட்டிருக்குமென்று வினவ

நால்வகைத் தோற்றமும் எழுவகைப் பிறப்பும் எண்பத்து நான்கு நூறுயிரம் யோனிபேதமுமா யிருக்குமென்னும் முறைமையை. மேலருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

47. தோற்றியிடும் அண்டசங்கள் சுவேதசங்கள் பாரில்
துதைந்துவரும் உற்பீசம் சராயுசங்கள் நான்கின்
ஊற்றமிகு தாபரங்கள் பத்தொன்ப தென்றும்
ஊர்வபதி னைந்தமரர் பதினொன்றே டுலவா
மாற்றருநீர் உறைவனநற் பறவைகள்நாற் காலி
மன்னியிடும் பப்பத்து மானிடர்ஒன் பதின்மர்
ஏற்றியொரு தொகைஅதனில் இயம்புவர்கள் யோனி
எண்பத்து நான்குநூ றுயிரமென் றெடுத்தே. உகூ

பாயிர மாகவெண் பத்து நான்குநூ
றுயிர யோனிக் கடைவிது என்றது.

(உரை) தோற்றியிடும் அண்டசங்கள் சுவேதசங்கள் பாரில் துதைந்து வரும் உற்பீசம் சராயுசங்கள் நான்கின் - ஆன்மாக்கள் ஜனனமெடுக்குமிடத்து முட்டையில் தோன்றுவன வேர்வையில் தோன்றுவன பூமியிற் செறிந்துவருகிற வித்தில் தோன்றுவன பைக்குடரிலே தோன்றுவன. இந்த நால்வகைத் தோற்றத்திலும் உண்டாகபபட்ட எழுவகைப் பிறப்பாவன; ஊற்றமிகு தாபரஙகள் பத்தொன்பதென்றும் - மிகவும் உறுதிபெற்றுடைய தாபரவர்க்கங் கள் பததொன்பது நூறுயிர வர்க்கமென்றும்; ஊர்வ பதினைந்து - ஊர்ந்து திரிவன பதினைந்து நூறுயிர வர்க்கமென்றும்; அமரர் பதினொன்றேடுலவா மாற்றரு நீர் உறைவன நற்பறவைகள் நாற்காலி மன்னியிடும் பப்பத்து - தேவர்கள் பதினொரு நூறுயிர வர்க்கமென்றும் ஒருகாலத்திலும் நீரைவிட்டு நீஙகாமல் உண்டாகப்பட்டவை பத்துநூறுயிர வர்க்கமென்றும் நல்ல பறவைகள் பத்துநூறுயிர வாக்கமென்றும் நாலு காலையுடையவை பத்துநூறுயிர வர்க்கமென்றும்; மானிடர் ஒன்பதின்மர் - மனிதர் ஒன்பது நூறுயிர வர்க்க மென்றும; ஏற்றியொரு தொகை அதனில் இயம்புவாகள் - ஆக இவை ஒன்றாக எண்ணி ஒருதொகைப படுத்துவர்கள் பெரியோாகள்.

அது ஏதென்னில்; யோனி எண்பத்து நான்கு நூறுயிரமென் றெடுத்தே - யோனி பேதங்கள் எண்பத்துநான்கு நூறுயிரமென்று வகையினைத் தெரித்து.

அண்டசமென்ற தோற்றம் பறவை பாம்பு முதலாயுள்ளவை யென அறிக. சுவேதசமென்ற தோற்றம் கிருமி கீடம் விட்டில் பேன் முதலானவையென அறிக. உற்பீசமென்ற தோற்றம் மரம் பூண்டு கொடி முதலானவையென அறிக. சராயுசமென்ற தோற்றம் நாற்காலிகள் மானுடர் தேவ வர்க்க முதலானவையென அறிக. ஆகத் தோற்றம் நால்வகையென அறிக. இதில் எழுவகைப் பிறப்புக்கு வகையாவன: தேவர் நரர் மிருகம் பக்ஷி ஊர்வன நீருறைவன விருக்ஷமென அறிக.

இதனுற் சொல்லியது நால்வகைத் தோற்றமும் எழுவகைப் பிறப்பும் இதிலுண்டான யோனிபேதம் எண்பத்து நான்கு நூறுயிரமாக விரிந்த முறைமையும் அறிவித்தது. உகூ

இங்ஙனம் ஆன்மாக்கள் ஜநநமரணப்பட்டு வரும் அவதரத்து மலபாகம் வந்து சத்திநிபாத முண்டாகும் முறைமையை மேலருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

சூத்திராவத்தை

48. இனையபல பிறவிகளின் இறந்துபிறந் தருளால்
இருவினைகள் புரிந்தருந்தும் இதுசகலம் அகலா
முனம்மருவும் இருபயனும் ஒருகாலத் தருந்த
முந்தநுக ருந்துபயன் அந்தமுற வந்த
வினையும்எதிர் வினையும்முடி வினைஉதவு பயனால்
நேராக நேராதல் மேவுங் கால்முற்
சினமருவு திரோதாயி கருணை யாகித்
திருந்தியசத் திநிபாதந் திகழு மன்றே. ருo

உருவுடன் போகத் துற்றிடுஞ் சகலமும்
மருவிய சத்தி நிபாதமும் வகுத்தது.

(உரை) இனைய பல பிறவிகளின் இறந்து பிறந்தருளால் இருவினைகள் புரிந்தருந்தும் இது சகலம் - ஆன்மாக்கள் இத்தன்மைத்

தாகிய எண்பத்து நான்கு நூறுயிர யோனிகள் தோறுஞ் சிவனுடைய அருளாலே பிறந்திறந்து புண்ணிய பாவங்களைச் செய்து இன்ப துன்பங்களை அநுபவிக்கிறது சகலாவத்தை. முன்னர் "புகலு மல மொழித்தற்கு" (37) என்ற செய்யுளில் "இலங்கும் விந்து பகர்வரிய உணர்வாகி" என்ற பதந்தொடங்கி இவ்வளவுஞ் சகலா வத்தையை அருளிச்செய்ததென அறிக. மேற் சுத்தாவத்தையை அருளிச்செய்கின்றது :—அகலாமுனம் மருவும் இரு பயனும் ஒரு காலத் தருந்த - இங்ஙனஞ் சொல்லப்பட்ட சகலாவத்தையைவிட்டு நீங்காமல் முன் ஜநநங்கள்தோறும் பொருந்தி வருகிற புண்ணிய பாவங்கள் இரண்டும் ஒரு ஜநநத்திலே புசித்துத் தொலையத் தக்கதாக; முந்த நுகருந்து பயன் - முன் ஜநநத்திலே புசிக்கச் செய்தே ஏறி ஆர்ச்சிதமாய் அத்துவாவிலே கட்டுப்பட்ட சஞ்சிதமும்; அந்தமுற வந்த வினையும் - இப்பொழுது புசித்து முடிவதாகவந்த உடலிலே கட்டுப்பட்ட பிராரத்த கன்மமும்; எதிர் வினையும் - இப்பொழுது புசிக்கச் செய்தேயுள்ள ஹிதாஹிதங்களிலே யேறுகிற ஆகாமிய மும்; முடிவினை உதவு பயனுல் நேராக நேராதல் மேவுங்கால்- இந்தக் கன்மங்கள் இவனுக்கு முடிந்துபோம்படி சிவபுண்ணியத்தின் அதிகத்தாலே எல்லாஞ் சேரத் துலையொக்கப் பொருந்தின இடத்து; முற்சினமருவு திரோதாயி கருணையாகித் திருந்திய சததிநிபாதந் திகழுமன்றே - முன் கோபம்போலே மறைத்துநின்ற திரோதாயி சத்தி காருண்ணியத்தைச் செய்து நன்மையுடைய சத்திநிபாதம் விளக்கும்.

சத்திநிபாதமாவது சத்தி செலுத்தாமல் நிற்கிறதென அறிக. அஃதாவது புண்ணிய பாவந் துலையொத்த ஆன்மாக்களைத் திரோ தானசத்தி நிக்கிரகமும் அநுக்கிரகசத்தி பதிதலுமாமென அறிக.இனி முந்தநுக ருந்துபய னென்றது முன் ஜநநங்களில் எடுக்கப்பட்ட உடம்புகளோடுங் கூடிநின்று புசிக்கச்செய்தே இந்த உடம்புக ளெடுக்கைக்கு ஏதுவாகக் கட்டுப்பட்ட சஞ்சித கன்மமென அறிக. இனி அந்தமுற வந்தவினை என்றது இந்தத் தேகாந்தமட்டும் புசிக்கிற பிராரதத கனமமென அறிக. இனி எதிர்வினை யென்றது இந்தப் பிராரததம் புசிக்கச்செயதே உண்டாகிய ஹிதாஹிதத்தாலே விளை

திற ஆகாமிய கன்மமெனை அறிக. இங்ஙனஞ் சொல்லப்பட்ட கன்மங்களுக்கு பி - ம் சித்தியாரில் "முற்செயல் விதியை இந்த முயற்சியோ டறுப வித்தால், இச்செயல் பலிக்கு மாறென் னிதமகி தங்கள் முன்னர், அச்செய லாலுல் இங்கு மவைசெயின் மேலைக் காகும்" எ - ம், "மேலைக்கு வித்து மாகி விளைந்தவை உணவு மாகி, ஞாலத்து வருமா போல நாஞ்செயும் வினைக ளெல்லாம், மேலத்தான் பலமாச் செய்யு மிதமகி தங்க ளெல்லாம், மூலத்த தாகி யென்றும் வந்திடும் முறைமை யோடே" (2. 11, 12) எ - ம் கண்டு கொள்க. இனி முடிவினை யுதவு பயனுல் நேராக நேராதல் எ - து சிவபுண்ணியத்தினுலே பசுபுண்ணியமும் பாவமுந் துலையொத்ததெனை அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "புண்ணியமேல் நோக்குவிக்கும பாவங்கீழ் நூக்கும் புண்ணியனைப் பூசித்த புண்ணியத்தி னுலே, நண்ணியஞானத்தினுல் இரண்டினையு மறுத்து ஞாலமொடு கீழ்மேலு நண்ணுனுகி, எண்ணுமிக லோகத்தே முத்திபெறு மிவன்தா னெங்கெழிலென் ஞாயிறெமக் கென்றுகுறை வின்றிக், கண்ணுதல்தன் நிறைவதனிற் கலந்து காயங் கழிந்தக்கா லெங்குமாய்க் கருதரன்போல் நிற்பன்" (8. 31) எ - து கண்டுகொள்க. இனி சினமருவு திரோதாயி யென்றது ஆன்மாக்களுக்குண்டான மலங்களைப் பாகம் வருதத வேண்டிப் புண்ணிய பாவங்களைச் செய்வித்துச் சுவர்க்க நரகங்களிலே செலுத்திப் பாகம் வருத்துகையாலெனை அறிக. திரோதாயி என்றது அவதரப்பெயரெனை அறிக. இனி, திருந்திய சத்திநிபாதந் திகழுமெனறது முன்னர்ப் பிரபஞ்சத்தைப் பொருளென்று காட்டிருசிப்பித்து நின்ற திரோதாயி தானே அருளாய்ப் பிரகாசிததுப் பழைய பிரபஞ்சத்தை உவாப்பித்துச் சிவனளவிலுந் திருவேடத்தாரளவிலுஞ் சிவாகமங்களிலும் பிரியத்தை உணடாக்குவித்து நிறகையெனை அறிக. இதற்கு பி - ம் போற்றிப் பஃறொடையில் "அன்பரைக்கண் டின்புறுதல், உயயு நெறிசிறிதே உணடாகிப் - பையவே, மட்டாய் மலராய் வருநாளின் முன்னைநாள், மொட்டாய உருவாம் முறைபோலக்-கிட்டியதோா, நல்ல பிறப்பிற் பிறப்பித்து நாடும்வினை, எல்லை இரண்டு மிடையொபபிற் - பல்பிறவி, அத்தமதி லன்றே அளவென்று பார்த்திருந்து, சததி பதிக்குந் தரம்போற்றி" (56-59) எ - து கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது முன்னர்ப் பதத்திலே சகலாவத்தையின் முறைமை முடிந்ததென்றும், சஞ்சிதம் பிராரத்தம் ஆகாமிய மென்னப்பட்ட மூவகைக் கன்மங்களுஞ் சிவபுண்ணியத்தின் மிகுதியாலே நீங்குமென்றும் அப்படி நீங்குமிடத்து இருவினையொப்புண்டாமென்றும் அப்படி இருவினை யொப்புண்டாகவே திரோதாயியாய் நின்ற அருள் காருண்ணிய சத்தியான முறைமையும் அறிவித்தது. ௩௦

இங்ஙனஞ் சொல்லப்பட்ட சத்திநிபாதம் எத்தனை வகைப்பட்டிருக்குமென்றும் இந்தச் சத்திநிபாதம் உண்டானவர்களுக்குக் காத்தா அநுக்கிரகஞ்செய்யும் முறைமை எப்படியென்றும் வினவ மேலருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

49. நாடியசத் திநிபாதம் நாலு பாதம்
நண்ணும்வகை எண்ணரிய ஞான பாதம்
கூடுமவர் தமக்குணர்வாய் நின்ற ஞானக்
கூத்தன்ஒரு மூர்த்திகொடு குறுகி மோகம்
நீடியகே வலசகலம் நிகழா வாறு
நிறுத்திமலம் அறுக்கும்இது நிலையார் சுத்தம்
கேடில்புகழ் தரும்சரியை கிரியா யோகக்
கேண்மையரேல் இவைஉணர்த்தக் கிளக்கும் நூலே.

கேவல சகல மேவலுற் றொருநிலை
யாவது சுத்தா வத்தை யென்றது.

(உரை) நாடிய சத்திநிபாதம் நாலு பாதம் - முன்னெடுத்துக் கூறப்பட்ட சத்திநிபாதம் நாலு பிரகாரமாயிருக்கும்; நண்ணும் வகை எண்ணரிய ஞானபாதம் கூடுமவர் தமக்கு - அந்தச் சத்திநிபாதம் நாலினும் பொருந்தும் வகையே நினைத்தற்கரிதாகிய ஞானபாதத்தைச் சேருகைக்கு உரித்தான நாலாஞ் சத்திநிபாதம் உள்ளவர்களுக்கு; உணர்வாய் நின்ற ஞானக்கூத்தன் ஒரு மூர்த்தி கொடு குறுகி - உயிர்க்குயிராய நிற்கிற ஞான நடனத்தினையுடைய தம்பிரான் ஆசாரிய மூர்த்தமாக எழுந்தருளி வந்து; மோகம் நீடிய கேவலசகலம் நிகழாவாறு நிறுத்தி - மறைப்பை மிக உண்டாக்குகிற கேவலாவத்தையையும் விகற்பத்தையுடைய சகலாவத்தையையுந்

தோற்றுதபடி அருளிலே நிறுத்தி ; மலம் அறுக்கும் இது நிலையார் சுத்தம் - இங்ஙனம் மலத்தைப் போக்குகிற இது நிலைபெற்ற சுத்தா வத்தையாம். இது யாவர்க்காமென்னில் ; கேடில் புகழ் தரும் சரியை கிரியா யோகக் கேண்மையரேல் இவை உணர்த்தக் கிளக்கும் நூலே - அழிவில்லாத புகழைத் தருவதாயுள்ள சரியை கிரியா யோகமென்னும் நிலைகளைக் குறைவறச் சரித்தவர்கள் உண்டாமாகில் அவர்களுக்கு இந்தச் சுத்தாவத்தையின் முறைமையை உணர்த்தப்படுமென்று சொல்லுந் திவ்வியாகமம்.

சத்திநிபாதம் நாலென்றதற்கு வகை ஏதென்னில் மந்தமென்றும் மந்ததரமென்றும் தீவிரமென்றுந் தீவிரதரமென்றும் வருமென அறிக. அஃதாவது முதற் சத்திநிபாதமாகிய மந்தம் வாழைத் தண்டிலே நெருப்புப் பற்றினாற்போலென அறிக. இனி இரண்டாஞ் சத்திநிபாதமாகிய மந்ததரம் பச்சை விறகிலே நெருப்புப் பற்றினாற் போலென அறிக. இனி மூன்றுஞ் சததிநிபாதமாகிய தீவிரம் உலர்ந்த விறகிலே நெருப்புப் பற்றினாற்போலென அறிக. இனி நாலாஞ் சத்திநிபாதமாகிய தீவிரதரங் கரியிலே நெருப்புப் பற்றினாற் போலென அறிக. இவையிற்றுக்கு பி - ம் “ நாலுவகைச் சததி நிபாதத்து நற்பருவ, மூல குருவே மொழியெனக்குக் - கோல, வரம்பைத்தண் டொண்பச்சைக் காட்டமுலர் காட்ட, நிரம்புகரி நேரா நினை ” (சிவானந்தமாலை, 40) எ - து கண்டுகொள்க. இந்தச் சத்திநிபாதம் நாலுக்கும் அநுபோகமாவது : முதற் சத்திநிபாதமாவது நமக்குப பேருயுள்ளதொரு கர்த்தா உண்டென்று அறிவெழுந் திருக்கையென அறிக. இரண்டாஞ் சத்திநிபாதமாவது அந்தக் கர்த்தாவைப் பெறுகைக்கு வழியெப்படியென்று ஆராய்கையென அறிக. இனி மூன்றுஞ் சத்திநிபாதமாவது அப்படி ஆராய்ந் தறிந்த கர்த்தாவைப் பெறவேணுமென்று பிரபஞ்சத்தை யுவர்த்துப் புளியம்பழமும் அதன் தோடும்போல நிற்றலென அறிக. இனி நான்காஞ் சத்திநிபாதமாவது பிரபஞ்சத்தை முறறத்துறந்து ஆசாரியனே பொருளென்று கொண்டு தானறநின்று வழிபடுகையென அறிக. அப்படிப் பிரபஞ்சத்தை முற்றத்துறக்க என்பதற்கு பி - ம் சித்தியாரில் “ ஆசைதரும் உலகமெலாம் அலகைத்தே ராமென்

றறிந்தகல அந்நிலையே யாகும்" (9. 1) எ - து கண்டுகொள்க. ஆசாரியனைப் பொருளென்று கொண்டு வழிபடுகைக்கு பி - ம் சித்தியாரில் "பரம்பிரம மிவனென்றும் பரசிவன்றா னென்றும் பரஞான மிவனென்றும் பராபரன்றா னென்றும், அரன்தருஞ்சீர் நிலைஎல்லா மிவனே யென்றும் அருட்குருவை வழிபடவே யவனிவன்றா னேயே, இரங்கியவா ரணமாமை மீனண்டஞ் சினையை இயல்பினொடும் பரிசித்தும் நினைந்தும் பார்த்தும், பரிந்தவைதா னாக்குமாபோற் சிவமே யாக்கும் பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்துந் தானே" (12. 7) எ - ம், "பன்னரிய பரமகுரு மறறவனை நாளும் பணிந்துபணி செய்ய வந்து பலிக்கு மன்றே" எ - ம் கண்டுகொள்க. இனி, உணர்வாய் நின்ற ஞானக்கூத்த னொருமூர்த்திகொடு குறுகி எ - கு அரூபியாய் நின்ற கர்த்தா உரூபியாய் வந்தானென்று பொருள்கூறியதற்கு பி - ம் திருவாசகத்தில் "அருபரத் தொருவன் அவனியில் வந்து - குருபர னாகி அருளிய பெருமையைச் - சிறுமையென் றிகழாதே திருவடியிணையை (4. 75-78) எ - ம், போற்றிப் பஃறொடையில் "பூவலயந், தன்னின்று நீங்காச் சகலர்க் கவர்போல, முன்னின்று மும்மலந் தீர்த் தாட்கொள்கை - யன்னவனுக், காதிகுண மாதலினு லாடுந் திருத்தொழிலுஞ், சோதி மணிமிடற்றுச் சுந்தரமும் - பாதியாம, பச்சை யிடமும் பவளத் திருச்சடைமேல், வைச்ச நதியும் மதிக்கொழுந்தும் - அச்சமற, ஆடும் அரவும் அழகார் திருநுதல்மேல், நீடுருவ வன்னி நெடுங்கண்ணுங் - கேடிலயங், கூட்டுந் தமருகமுங் கோல எரியகலும், பூட்டரவக் கச்சும் புலியதளும் - வீட்டின்ப, வெள்ளத தழுத்தி விடுந்தா னினுமடியார், உள்ளத்தி னும்பிரியா வொண்சிலம்புங் - கள்ளவினை, வென்று பிறப்பறுக்கச் சாத்தியவீ ரக்கழலும், ஒன்றுமுருத தோன்றும வுள்ளடக்கி - யென்றும், இறவாத இன்பத் தெமையிருத்த வேண்டிப், பிறவா முதல்வன் பிறந்து - நறவாருந், தாருலா வும்புயதுச் சம்பந்த நாதனென்று, பேரிலா நாதனொரு பேர்புனைந்து-பாரோர்தம், உண்டி யுறக்கம் பயமின்ப மொத்தொழுகிக், கொண்டு மகிழ்ந்த குணம்போற்றி" (61 - 71) எ - ம் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது சத்திநிபாதம நாலுவகைபபட்டிருக்கும் முறைமையும் அந்தச் சத்திநிபாதத்துக்கு ஈடாகக் கர்த்தா ஆசாரிய

மூர்த்தமாகவந்து இரக்ஷிக்கும் முறைமையும் அப்படி இரக்ஷிக்கு மிடத்துக் கேவலாவத்தையுஞ் சகலாவத்தையும் நீக்கிச் சுத்தாவத் தையிலே நிறுத்துவனென்னும் முறைமையும் அறிவித்தது. ௯க

மேல் மற்றுமுண்டான உலகாயதன் முதலாயுள்ள சமயிக ளுக்கும் இப்படிச் சுத்தாவத்தையிலே நின்றே முத்தியென்றிருக் குமோ வெவ்வேறு வழிகளாயிருக்குமோ என்ற மாணவகனை நோக்கி அவர்களுக்குண்டான நிலைகளும் முத்திகளும் இன்னபடியென்றும், அவை குற்றத்தையுடைய முத்திகளாமென்றும் மேலருளிச் செய் வான் எடுத்துக்கொண்டருளியது.

## முத்தி பேதங்களதியல்பு

50. அரிவையரின் புறுமுத்தி கந்த மைந்தும்
அறுமுதத்தி திரிகுணமும் அடங்கு முத்தி
விரிவுவினை கெடுமுத்தி மலம்போம் முத்தி
விக்கிரக நிதமுத்தி விவேக முத்தி
பரவுமுயிர் கெடுமுத்தி சித்தி முத்தி
பாடாண முத்திஇவை பழிசேர் முத்தி
திரிமலமும் அகலஉயிர் அருள்சேர் முத்தி
திகழ்முத்தி யிதுமுத்தித் திறத்த தாமே. ௯உ

தவமென் றவநெறி சரிப்பார் முத்தியுஞ்
சிவகதி தனையும் முறையுற வகுத்தது.

(உரை) அரிவையர் இன்புறு முத்தி - மகளிரிடத்துண்டான போகமே முத்தியென்கிற உலகாயதன் முத்தியும்; கந்தம் ஐந்தும் அறுமுத்தி - உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானம் என்கிற பஞ்ச கந்தங்களுங் கெடுகிறதே முத்தியென்கிற புத்தரிற சௌத்தி ராந்திகன் முத்தியும்; திரிகுணமும் அடங்குமுத்தி - முக்குணங் கெடுகிறதே முத்தியென்னும் அமணரில் நிகண்டவாதி முத்தியும்; அன்றியும் மாயாவாதத்தின் நிரீச்சுர சாங்கியன் முத்தியுமாம்; விரிவு வினை கெடுமுத்தி - எங்கும் விரிந்திருக்கப்பட்ட கன்மங்கள் கெடுகிறதே முத்தியென்கிற பிரபாகரன் முத்தியும்; மலம்போம்

முத்தி - ஆணவமலங் கெடுகிறதே முத்தியென்கிற அகச்சமயத்திற் பேதவாதி முத்தியும்; விக்கிரக நித்தமுத்தி - இந்தச் சரீரம் முத்தியி லும் அழியாது நித்தியமா யிருக்குமென்கிற அகச்சமயத்திற் சிவசம வாதி முத்தியும்; விவேக முத்தி - இந்தச் சரீரந் தொந்தனைப்பட்டு நிற்கிற சீவான்மாவுக்கு விவேகஞானம் உண்டாகிறதுதானே முத்தி யென்கிற மாயாவாதி முத்தியும்; பரவுமுயிர் கெடுமுத்தி - சொல் லப்பட்டு வருகிற ஆன்மா கெடுகிறதே முத்தியென்கிற மாயாவாதத் திற் பாற்கரியன் முத்தியும்; சித்தி முத்தி - பசுகரணங் கெட்டுச் சிவகரணமாகிறதே முத்தியென்கிற அகச்சமயத்திற் சங்கிராந்தவாதி முத்தியும்; அன்றியும் இதற்கு அட்டமாசித்தி யென்னவுமாம்; பாடாண முத்தி - ஆன்மா கேவலத்திற் கிடக்குந் தன்மைபோல முத்தியிலும் ஒன்றும் அறியாமற் பாடாணம்போற் கிடக்குமென் கிற பாடாணவாதி முத்தியும்; இவை பழிசேர் முத்தி - என்றிங்ஙனஞ் சொல்லப்பட்ட பத்துவகை முத்திகளுங் குற்றத்தையுடைய முத்திகளாம். பின்னை நன்மையாகிய முத்தி ஏதென்னில்; திரிமல மும் அகல உயிர் அருள்சேர் முத்தி திகழ்முத்தி - ஆணவம் மாயை காமியமென்கிற மூன்று மலங்களும் நீங்கி ஆன்மா அருளோடுங் கூடி நிற்கிறதே விளங்குதலையுடைய முத்தியாம்; இது முத்தித் திறத்த தாமே - இதுவே முத்தியென்று சொல்லப்பட்டவை எல்லா வற்றிலுந் திறப்பாட்டினையுடைய முத்தியாம்.

உலகாயதன் அரிவையர் இன்புறுமுத்தி என்றதேதென்னில், அவன் பிரத்தியக்ஷமொழிய அநுமானங் கொள்ளாதபடியாலே கன்மமும் ஆன்மாவுஞ் சிவனுமில்லையென்று சொல்லி இம்மைப் பயனாகிய மகளிரிடத் துண்டாகிய சிற்றின்பமே பொருளெனக் கொண்டானென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "ஊடுவ துணர்வ துற்ற கலவிமங் கையரை யுள்ளி, வாடுவ தடியில் வீழ்ந்து வருந்துவ தருந்த வம்பின், கூடுவ துணர்வு கெட்டுக் குணமெலாம் வேட்கை யாகி, நீடுவ தின்ப முத்தி யித்தில்நின் முர்கள் முத்தர்" (பரபக்கம் 31) எ - ம, அவன் மறுமைப்பயன் கொள்ளான் என்ப தற்கு பி - ம "வாசமார் குழலார் தங்கள் மணியல்குற் றடத்தே முழுகி, நேசமார் குமுதச் செவ்வா யமுதினை நிறைய வுண்டு,

தேசுலா மணிமென் தோள்மேற் சேர்ந்துவீற் றிருந்தி டாதே, மாசுலா மனத்தோ ரெல்லாம் மறுமைகொண் டழிவர் மன்னோ" எ-ம், "வீட்டினை யுளதென் றோடி மெலிவதிங் கென்னை வீடு, காட்டு வோர் கண்டோர் கேட்டோர் கரியவை யுண்டேற் காட்டீர், நாட்டினி லரச ரூணைக் கிசையவே நடந்து நாளும், ஈட்டிய பொருள் கொண் டிங்கே யின்பத்து ளிசைந்தி டீரே" (செ. 29, 32) எ - ம் கண்டுகொள்க. அவன் இங்ஙனஞ் சொன்ன முத்தியைப் பழிசேர் முத்தியென்று மறுத்ததேதென்னில், பன்றியானது கன்மத்துக் கீடாக விட்டையை விரும்பிப் புசித்தாற்போல அவனும் அசுத்தமா யிருக்கிற மகளிரிடத்துண்டாகிய சிற்றின்பத்தை அநுபவிக்கிறது தானே முத்தியென்கையினாலெனவறிக. என்றிங்ஙனம் மறுத்ததற்கு பி - ம் சித்தியாரில் "ஆசை யுற்றுழல் சூகரங்கள் அசுத்த மேவி யளைந்துதின், றேசு கித்தன வாயி டுஞ்சுக மேழை யோடுறு மின்பநீ, மாச தற்றொளிர் நித்த சுத்த வளர்ந்த ருஞ்சுக வாரிகாண், ஈச னுக்கடிமைத்தி றத்தி னியைந்து நாம்பெறு மின்பமே" (செ. 60) எ - ம், ஸ்திரீகளை அசுத்தமென்பதற்கு பி - ம் சித்தியாரில் "தோலி ரத்த மிறைச்சி மேதை எலும்பு மச்சை சுவேதநீர், ஆலெடுத்த முடைக குரம்பை அழுக்கி னோடு புழுக்குழாம், நூலொ ழுக்கிடு கோழை யீரல் நுரைக்கு மூத்திர பாத்திரஞ், சேல டர்த்தகண் ணார்க ளென்பது தேர்மலத்திரள் திண்ணமே" எ-ம், "பொன் குலாவு மணிக்க லன்கள் மலம்பு கிற்கை பொருந்திடா, மின்கு லாமிடை யார்கள் தாமுல கத்தின் வேட்கை விடும்பொருள், புன்பு லால்மல மூத்தி ராதி பொசிந்து நாறு புலைக்கலம், என்கொ லாமிவர் மேல்விழுந்த திவற்றி னென் பெற எண்ணியே" (செ. 59, 58) எ - ம் கண்டுகொள்க. அன்றியும் இம்மைப்பயனுஞ் சிவனாலே உண்டாக வேணுமென்று அவனை மறுத்ததற்கு பி - ம் சித்தியாரில் "வேத நாரண னார ணம்மறி யாவி ழுப்பொருள் பேதைபாற், றூத னாயிரு கான டந்திடு தோழன் வன்மைசெய் தொண்டனுக், காத லாலடி யார்க ளுக்கெளி யானடிக்கம லங்கள்நீ, காத லாலணை யீண்டன் வேண்டின இம்மை யேதருங் கண்டிடே" (செ. 57) எ - து கண்டுகொள்க.

இனி, இரண்டாவது புத்தரிற் சௌத்திராந்திகன் கந்தம் ஐந்தும் அறுமுத்தி யென்றது ஏதென்னில், பிருதிவி அப்பு தேயு வாயு

என்கிற பூதம் நாலும் வலி கந்தம் இரதம் வன்னம் என்கிற உபாதானரூபம் நாலும் ஆக உருவகந்தமெட்டும், குசலாவேதனை அகுசலாவேதனை குசலாகுசலா வேதனை என்கிற வேதனைக்கந்தம் மூன்றும், சோத்திரம் துவக்கு சக்ஷு சிங்நுவை ஆக்கிராணம் மனது என்கிற குறிப்புக்கந்தம் ஆறும், பொய்சொல்லல் கோட்சொல்லல் கோபித்துச்சொல்லல் பயனிலசொல்லல் என்கிற வாக்கின்குணம்நாலும், களவுக்குப்போதல் வழிதே தொழில் செய்தல் கொலைசெய்தல் என்கிற காயத்தின் குணம்மூன்றும், கொலைநினைக்கை காமப்பற்று ஆசை என்கிற மனததின்குணம் மூன்றும் ஆகக்கூறிய வகைமூன்றினுஞ் செய்யப்பட்ட தீக்குணம் பத்தும் அன்றியும் மெய்யுரை நல்வார்த்தை இனியனகூறல் பயன்படுசொல்லலென்கிற வாக்கின் குணம் நாலும் பள்ளி வலம்வருதல் தவம்புரிதல் தானஞ்செய்கை யென்கிற காயத்தின்குணம் மூன்றும் அருள்நினைவு ஆசையறுத்தல் தவப்பற்று என்கிற மனத்தின் குணம்மூன்றும் ஆக நற்குணம் பத்தும் ஆக வகை இரணடினுக்கும் உண்டாகப்பட்ட பாவனைக்கந்தம் இருபதும், சத்தம் பரிசம் ரூபம் இரதம் கந்தம் சித்தம் என்கிற விஞ்ஞான கந்தம் ஆறும், ஆக இங்ஙனம் நாற்பத்து மூன்று வகையாக எண்ணப்பட்டு வருகிற பஞ்ச கந்தங்கள் ஐந்துங் காரணங்கெட்டுக் காரியங்கிடக்கும் என்கிறது மிகுத்துரையில் வழக்குமாயப் பந்தத்துக்கமுமாய இது குற்ற வீடென்றும் கந்தங்கள் ஐந்தும் நேராகக் கெட்டு வீட்டையடையும் என்பதுவே முத்தி இன்பமெனக் கொண்டானென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் “ ஓங்கிய உருவ மோடும் வேதனை குறிப்பிளேடுநே, தாஙகுபா வனைவிஞ் ஞானந் தாமிவை ஐந்துங் கூடிப், பாங்கிறை சந்தா னததிற் கெடுவது பந்த துக்கம், ஆங்கவை பொன்றக் கேடா யழிவது முத்தி இன்பம் ” (பரபக்கம் 93) எ - து கண்டுகொள்க. அன்றியும், இந்தப் பஞ்ச கந்தஙகளும் நாற்பத்து மூன்றுவகையாய் நிற்குமென்பதற்கு பி - ம் புத்தநூலில் “ எட்டிவை உருவ மூன்று வேதனை யாறு ஞானம், ஒட்டிய குறிப்போராறு செய்கையு மிருப தாகக், கட்டிய பஞ்ச கந்தங் கணத்தினிற் பஙக மாகித், தொட்டநாற் பத்து மூன்றும் சுததநூற் றுணிவு தானே ” எ - து கணடுகொள்க. அவன் இஙஙனஞ் சொன்ன முத்தி

யைப் பழிசேர் முத்தியென்று மறுத்ததேதென்னில், அவன் ஆன்மா வில்லை என்கையினாலும் அப்படி உண்டென்று நாட்டப்பட்ட பஞ்ச கந்தங்களுங் கற்பூரத் தீபம்போலே அறக்கெட்டுப்போம் என்கையி னாலும் அந்த முத்தியைப் பெறுவானில்லாதபடியாலுமென அறிக. இதற்கு பி-ம் சித்தியாரில் " ஐந்துகந்தஞ் சந்தானத் தழிதல்பந்த னுக் கம் அறக்கெடுகை முத்தியின்ப மென்றறைந்தாய் கந்தம், ஐந்துமழிந் தால்முத்தி யணைபவரா ரென்ன அணைபவர்வே றில்லையென்று யார்க்குமுத்தி இன்பம், ஐந்தினுணர் வினுக்கென்னி னொழியாதவ வுணாவுண் டாகவே எவ்விடத்து முருவாதி கந்தம், ஐந்துமுள வாமதுவும் பந்த மாகி யரந்தைதரும் முத்தியின்ப மறிந்திலைகாண் நீயே" (பரபக்கம் 133) எ - து கண்டுகொள்க.

இனி, மூன்றாவது திரிகுணமும் அடங்குமுத்தி என்றது அமண ரில் நிகண்டவாதி சொன்னதென்றது ஏதென்னில் ஞானாவரணியம் தரிசனாவரணியம் வேதனீயம் மோகனீயம் ஆயுசு நாமம் கோத்திரம் அந்தராயம் என்கிற குணங்கள் எட்டும், பசித்தல் தாகம் பயம் செற் றல் உவகை மோகம் சிந்தனை பழித்தல் நோய் நசித்தல வேர்வை கேதம் மதம் வேண்டல் அதிசயித்தல் உருசிப்பு பிறபபு உறககம் என்கிற குணங்கள் பதினெட்டும், அரசிகம் இரதி அரதி சோகம் சுகுச்சை பயம் என்கிற குணங்கள் ஆறும் ஆக இங்ஙனஞ் சொல்லப் பட்டு வருகிற மூவகைக் குணங்களையும் விட்டுப் பூர்வ கன்மததி லுண்டாகிய கன்மங்கள் புசித்துத் தொலைநத அவதரந்தானே வீட் டின்பமெனக் கொண்டானென அறிக. இஙஙனஞ் சொல்லப்பட்ட மூன்றுவகைக் குணங்களினும் முதற்சொன்ன ஞானாவரணியம் ஆதி யாயுள்ள குணங்கள் எட்டுக்கும் பி - ம் சிததியாரில் " ஈறி லாதன அநந்த ஞானமுத லெண்கு ணங்களெனு மொண்குணம், மாறி லாத மதி மேவு சீதமென மன்னி வானவர் வணங்கவே, வேறு லாவுகுண ஞான ஆவரணி யாதி எட்டினையும் விட்டசீர், ஏறு பான்மையுடன் நீடு வாழருக னெங்களுக் கிறைவ னென்றனன் " (பரபககம் 144) எ - ம், இரண்டாவது சொன்ன பசிததலாதியாயுள்ள குணஙகள் பதினெட்டுக்கும் பி - ம் சித்தியாரில் " பசித்தல் தாகபய செற் றமோ டுவகை மோக சிந்தனை பழித்தனோய், நசித்தல் வேர்வினொடு

கேத மோடுமதம் வேண்ட லீண்டதி சயித்தலும், புசிப்பு வந்திடு பிறப்பு றக்கமிவை விட்டொ ரட்டகுண பூதனாய், வசித்த வன்னுல கின் மேலிருந் தொருசொ லிகலனுக் கருளு மென்றனன்" (செ.146) எ-ம், மூன்றுவது சொன்ன அரசிக மாதியாயுள்ள குணங்கள் ஆறுக் கும் பி - ம் சித்தியாரில் " ஏனு மொன்றுடைய வாகி யெங்குமணு வாயிரும்புகல் மரங்களும், பூணு மங்குரு வெலாமு மாகுமவை புற் கலப் பொருள்க ளென்னலாம், காணு மங்கறு வகைத்தொ ழிற் களவை கட்டு விட்டநெறி கன்மமேல், மாண நின்றுவரு மாறிமாறி முன வரைந்த துண்டுவிட மாட்சியே " (செ. 150) எ - ம் கண்டு கொள்க. அவன் இஙஙனஞ் சொன்ன முததியைப் பழிசேர்முத்தி யென்று மறுத்ததேதென்னில் குணஙகளை விட்டவிடந் தவமாகா தாகையாலும் பூர்வகன்மம் நிச்சயித்துப் புசிக்கைக்கு இவ்விடத்து ஆன்மாவுக்குத் தனக்கென்னவோர் அறிவு மில்லாதபடியாலுமென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் " பூர்வகன்ம மற்றிடப புசிதத பின்பு பொன்னெயில், நேர்வ தென்னி னக்கன் மத்து நிச்சய மிலா மையிற், றீர்வதின்மை தீரின் வாயில் சேர்த லின்மை தெண்கடல், நீர்வறந்த பின்பு பூளை மீனருந்த நின்றதே " (செ. 163) எ - து கண்டுகொள்க.

அன்றியும், திரிகுணமு மடஙகு முத்தி என்பதற்கு மாயா வாதத்திற் பேதமாயுள்ள நிரீச்சுரசாங்கியன் முத்தி என்னவு மாமென அறிக. அஃதெஙஙனே என்னில், பிரகிருதி தத்துவ மானது மூலசூக்குமமுமாய எல்லாப் பதார்த்தங்களுக்குங் காரணமு மாய் முக்குணஙகளும் ஒத்துநிற்கிறதே தனககு வடிவுமாய் அழிாத்த மாயிருக்குமை புததிமுதல் பிருதிவி ஈறுகிய தத்துவம் இருபத்து மூன்றும் இதனுடைய வியாததியாயிருக்கும். அதனோடுஙகூடின சுத்தபுருடனும் பாலனாகிய பிள்ளைகளைபபோலச் சேட்டையுடைய டாய்ப் பல யோனிகளையும் எடுத்து இந்தக் குணஙகளோடும் அநா தியே கூடிய புததியை யுடைத்தாய் அவித்தையின் வசத்திலே ஒழுகி ஜநந சம்பந்தமுண்டாயிருக்கிற சுகதுக்கமான குணங் களும் உணடாயிருக்கும். இது பெததம. இனி யவன் முத்தியிலிருக் கும்படியாவது, அநதப் பிரகிருதியினுடைய தன்மையை அறிந்து

புத்தியை அடைந்திருக்கிற அறியாமைபோய் விகிருதியாலுண்டான சுகதுக்கங்களைப் பிரகிருதிக்குண்டானதென்று கண்டு இது ஆன்மாவுக்கில்லையென்று குணத்திரயங்கள் அடங்க இருப்பது. இதுவே மோக்ஷமென்று சொல்லுவனென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "மூலம் புரியட் டகம்விகிர்தி யாகி மூன்றாய்ப் பிரகிருதி, தாலஞ் சூக்கு மம்பரமாய்ச் சுத்தப் புருடன் சந்நிதியிற், பாலன் சேட்டை புரிந்துலகம் யோனி பலவாய்ப் பரந்தொடுங்குஞ், சாலவென்று நிரீச்சுவர சாங்கி யன்றான் சாற்றிடுமே" (செ. 260) எ-து கண்டுகொள்க. இதனைப் பழிசேர் முத்தி என்று மறுத்ததேதென்னில், அப்படி ஆன்மா அநாதியே சுத்தனானால் பிரகிருதியால் மறைப்புண்டு கிடக்கமாட்டான்; அன்றியும் அது நீங்கி முத்தியைப் பெற்றாலும் முன்புபோலே மீளவுங்கூடும். ஆகையால் இவையிற்றைக் கூட்டுகைக்கு ஒரு கர்த்தாவும் வேண்டுகையால் அது பொருளல்லவென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "சுத்த னறிவன் புருடனெனிற் சூழா தாகும் பிரகிருதி, பெத்த நீங்கி னாலும்பின் பெத்த னவன் பேரறிவாற், கத்த மேவும் பிரகிருதி கண்டு கழிக்க மாட்டானேல், முத்த னாகான் சுத்தனுக்கு மூலப் பிரகி ருதியிலையாம்." எ - ம், "அறியான் புருடன் பிரகிருதி யசேத னங்கா ரியதனுகருக், குறியாய் நாத னுளனென்று கூறு முத்தி விவேகமெனிற், செறிவாந் தனைபோ காதறியிற் சேர்த்தோன் வேண்டுஞ் செயலிற்போம், நெறியாற் பணிசெய் துடற்பாச நீக்கிக் கொள்நீ நின்மலனால்" (செ. 261, 263) எ - ம் கண்டுகொள்க.

இனி, நாலாவது விரிவு வினைகெடு முத்தி யென்று பிரபாகரன் சொன்னதேதென்னில், அவனரிதாகச் செய்யப்பட்ட கன்மத்தின் முடிவிலே ஞானமென்பது ஒன்றுண்டாய் அந்தக் கனமததிலே அறிவுகூடிநின்று தொழிற்பட்டு அந்தக் கன்மமும் ஞானமுங்கெட்டு ஆன்மா மண்போலவுங் கல்லுப்போலவுங் கிடக்கிறதே முத்தியென்று கொண்டானென அறிக. இதற்கு பி - ம சித்தியாரில் "அருஞ்செயலின் அபாவத்தே அபூர்வமெனு மதுதோன்றித், தருஞ் செயலே நின்றழியிற் றன்பலிப்ப தாகுமது, வருஞ்செயலொன் றின்றியே மண்சிலைபோ லாமுத்தி, தருஞ்செயலீ தெனவுணர்ந்து

தாரணிமே லவன்சாற்றும்" (ஷை 205) எ - து கண்டுகொள்க. அவன் இங்ஙனஞ் சொன்ன முத்தியைப் பழிசேர் முத்தியென்று மறுத்ததேதென்னில், கன்மம் மறுமைப்பயனைத் தருமென்று வேதஞ் சொல்லுகைச் செய்தே அந்தக் கன்மங் கெட்டுப்போமென்று அவன் சொல்லுகையினாலும் அந்தக் கன்மத்தாலுண்டாகிய ஞானமுங் கெட்டுக் கல்லுப்போலவும் மண்போலவுங் கிடக்குமென்று அவன் சொல்லுகையால் அவ்விடத்துப் பேறில்லாத படியாலென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "வேறுபலன் தருவதுதான் வினையென்று வேதங்கள், கூறவோா அபூர்வந்தான் கொடுக்குமெனக் கொண்டவுரை, மாறுதரு மறையோடு முன்பின்றி வந்ததால், தேறியவிண் பூமுடிமேற் சேர்ந்துமணந் திகழ்ந்ததுவாம்" எ - ம், "ஆனந்தங் கதியென்ன அறிவழிகை வீடென்கை, ஊனம்பி னுணர்வழிந்தோர்க் குளதாகு முயர்முத்தி, தானிங்குச் சிவப்பொழியத் தழல்நிற்கு மாறில்லை, ஞானங்கெட் டுயிர்நிற்கு மெனுமுரைதா னன்றாதால்" (ஷை 206, 207) எ - ம் கண்டுகொள்க.

இனி, ஐந்தாவது மலம்போம் முத்தியென்றதைப் பேதவாதி சொன்னானென்றது ஏதென்னில், அவன் செம்பானது இரதகுளிகையினாலே காளிதங்கெட்டுப் பொன்னான தன்மைபோலச் சிவனுடைய அருளாலே ஆன்மாவுக்கு மலமானது கெட்டுப் பெறுவானும பேறுமாக முத்தியிலே இருப்பதே பொருளெனக் கொள்ளுகையினாலென அறிக. இதற்கு பி - ம் சங்கற்ப நிராகரணததில் "ஈசன தருளாற் பாசத தொகுதி - செறிவுறு செம்பிற் களையுறு களிம்பு - குளிகை தாக்க ஒளிபெற் றுங்கு - நித்த சுத்த முத்த ராக - வைததன ருலகின் மறைவல் லோரே" (7. 16-20) எ - து கண்டுகொள்க. அவன் இங்ஙனஞ் சொன்ன முத்தியைப பழிசேர் முத்தி என்றதேதென்னில் வேதாகமங்கள் பதி பசு பாச மூன்றும் நித்தியமென்று சொல்லச் செய்தே ஆணவ மலங கெடுமென்கையினாலுமென அறிக. இதற்கு பி - ம் சஙகறப நிராகரணததில் அவன் மறுபபிலே "மறைக ளாகமத் துறைகள்மற் றெவையும் - நாசமில் பதிபசு பாசமென் றுரைத்தல் - அயர்த்தோர் குளிகைச் சயத் தாற ருமிரக் - காளித நாசம் பாசத் தேய்த்தல் - கூடா தன்றியுங்

குளிகை சிருணம் - நீடா தழித்த நிலைநிலை யாகலிற் - பேத வாத மோதுதல் பிழையே" (8. 1-7) எ - து கண்டுகொள்க.

இனி, ஆருவது விக்கிரக நிததமுத்தி எ - கு சிவசமவாதி சுத்தமாயா சரீரம் அழியாமல் நித்தியமாயிருக்கிறதே முத்தியென் ருன் என்றதேதென்னில், வேட்டுவாளியானது ஒன்றுமறியாத பச் சைப் புழுவையெடுத்துத் தற்சொரூபமாக்கின தன்மைபோல ஒன்று மறியாத ஆன்மாவையுஞ் சிவனுடைய அருளெடுத்துக்கொண்டு தற்சொரூபமாக்க அந்த மாயா உடல்தானே நித்தியத்துவத்தைப் பெற்றிருப்பதுதானே முத்தியென்று கொள்கையினுலெனை அறிக. இதற்கு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில் "முன்னேன் தனது முதி ரொளி ஞானம் - அறியாப் பச்சைச் சிறுபுழுக் கவர்ந்த - வண்டென உயிரைக் கொண்டிடு முயிரது - தன்னை நோக்கித் தானது வாகி - ஐவகைத் தொழிலு மெய்வகை யுணர்வும் - பிரியா வாறு பெறறுத் - திரியாப் பெரியோா திரட்சிசேர்ந் திடுமே" (8. 19-25) எ - து கண்டுகொள்க. அவன் இங்ஙனஞ் சொன்ன முத்தியைப் பழிசேர் முத்தியென்றதேதென்னில, அருள்பொருந்தின ஆன்மாக்களுடைய மாயா தேகந்தானே நித்தியத்துவத்தைப் பெற்றிருக்கிறது பதமுத்தி யாகிய சாரூபமொழிந்து சாயுச்சிய மாகாதாகையாலும், அனறியும் யாதாமொரு சரீரதொந்தனையுள்ளமட்டும் மூன்று மலமும் போகா தாகையாலும் அப்படிச் சொன்னதென அறிக. இதற்கு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில் "முத்தி யுற்ற நற்றவ ரவையிடைச்-சேர்வ ரென்றனை சார்தரு முத்தி - சாலோக கியமோ சாயுச் சியமெனிற் - பந்த முற்ற கந்தல கழித்தல் - அறிவினே டறிவு பிரியாப் பெற்றி - வேண்டு மென்பதற் கீண்டிவ ரிவ்வா - றிருப்ப ரென்பதற் குருத் தான் வேண்டும்" (9. 73-79) எ - ம், சித்தியாரில் "அநாதியுடல் ஒன்றினைவிட் டொன்று பற்றிக் கன்மா லாயழிந்து வருதலா லந்த மில்லை, பினுதியருள் பெற்றவர்கள் நித்தவுரு வத்தைப் பெற் றிருக்கை முத்தியெனிற் பெறும்பதமே இதுவும், இனுதுநிலை இது தானுங் காயமுண்டேல் இருங்கன்ம மாயைமல மெல்லாம்உண் டாம், மனுதிதரும் உடலாதி காரியத்தால் அநாதி மலம்அறுக்கு மருந்தற்ருல் உடன்மாயுங காணே" (11. 3) எ - ம கண்டுகொள்க.

இனி, ஏழாவது விவேகமுத்தி எ - கு மாயாவாதி இவனுக்கு விவேகஞானம் உண்டாகிறதே முத்தி என்றுனென்று பொருள் கூறியதற்கு வகையேதென்னில், அவன் கருத்து நிர்மலமாயிருக்கிற ஆகாசத்தை மேகம் மறைத்த தன்மைபோலச் சுத்தமாயிருக்கிற பரப்பிரமமும் மாயா உபாதிகளினாலே வாதிக்கப்பட்டு இந்த உடலிலே மயங்கி நிற்கிறதே சீவான்மாவாவது; அந்த ஆகாசத்திலே ஒரு காற்றுத்தோன்றி அந்த மேகத்தை நீக்கின தன்மைபோல இந்தச் சீவான்மாவினிடத்திலே ஒரு விவேக ஞானந்தோன்றி அந்த மாயாவத்தையை நீக்குகிறதே முத்தியெனக் கொண்டானென அறிக. இதற்கு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில் “இவ்வியற் பந்தப் பௌவம தகல - விண்முதல் தந்த கொண்மூப் படலத் - திருளற வுதித்த கால்தக விவேகந்-தன்னிற் றோன்றிச் சாதக மனைத்தையும் - மன்னகப் பிரிப்பும் மடியிழை வாங்கலும் - போல ஞாலம் பொய் யறக் கழிஇத் - தானே தானாய்த் தன்னிற் றன்னைத் - தானே கண்டு தன்னல முற்று - வகையில் தத்துவ மசிபதத் தெளிவால் - அகமே பிரம மாயினன் எனஅறிந்-தசல னாகிநற் சலசல மதியெனக் - கண்டிடு முடலம் விண்டகல் கடத்து - மங்குல அடைதர வெங்குமாந் தகைத்தே” (3. 37-49) எ - று கண்டுகொள்க. அவன் இங்ஙனஞ் சொன்ன முத்தியைப பழிசேர் முத்தி என்றதேதென்னில், இந்தச் சீவான்மாவினிடதது உண்டாகிய விவேக ஞானம் முன்பே உள்ளதாகில் இவனுக்கு மயக்கம் வர வழக்கில்லை. பின்புள்ளதாகில் ஆகாயப் பூபோல இல்லாதது உண்டாகாது ஆகையாலென அறிக. இதற்கு பி - ம் சங்கறப நிராகரணத்தில் “பந்தம தகல முந்து விவேகம் - வான்வளி யெனத்தனிற் றானே தோன்றின் - முன்புளதாயின் மயங்கா திலதெனிற் - பின்புள தாகா திலதுள தெனின் வெளி - மலரது தரும்அனல்” (4. 174-178) எ - று கண்டுகொள்க.

இனி, எட்டாவது பரவுமுயிர் கெடுமுத்தி எ - கு மாயாவாதத்திற் பார்க்கரியன் ஆன்மா கெடுகிறதே முத்தி என்றுனென்று பொருள்கூறியதற்கு வகையேதென்னில், அவன் கருத்து பரப்பிரமந்தானே பிரபஞ்சமுமாய் ஆன்மாவுமாய் நின்று காரியப்படுகிற இடத்து ஆன்மா கன்மத்தை அநுஷ்டித்து ஞானமுண்டானவாறே

பிரமத்தோடுங் கூடி ஆன்மா அழிந்துபோகிறதே முத்தியெனக் கொண்டானென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "சித்தே யுல காய்ப் பரிணமித்துச் சீவ ஞகித் திகழ்ந்தமையாற், சத்தே எல்லா முத்தியினைச் சாரக் கண்ட ஞானங்கள், வைத்தே மொழியு மாமறைகள் சொன்ன மரபே வந்தக்கால், ஒத்தே கெட்டுப் பிர மத்தோ டொன்ருய்ப் போமென் றுரைத்தனனே" (பரபக்கம் 254) எ - து கண்டுகொள்க. அவன் இங்ஙனஞ் சொன்ன முத்தி யைப் பழிசேர் முத்தி என்றதேதென்னில் அந்தப் பரப்பிரமம் பிர பஞ்சமாகாதபடியாலும்; அன்றியும் ஆன்மாவாகாதபடியாலும் முத்தியில் ஆன்மாக் கெட்டுப்போமென்கையினுற் பெறுவான் இல் லாதபடியாலுமென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "இயம்பு கின்றதுல காயி டாதுசட மென்று மின்றுசட மாகியே, முயங்கு கின்றமையி னிலவ ணத்திரத முழுது மேகமதை முயல்கைபோற், பயந்த தென்னிலறியபபடும் பொருளு மறிவு மென்றுபல வாகுமோ, தியங்கு கின்றதெனு ரைத்திடாய் கடின மாதி யாகவரு சித்தனே" எ-ம், "அறிவி னேடுசெயல் மாறில் வீடதனை அணுகொ ணுதவை இரண்டினுல், உறுதி யானபிர மத்தி னேடழிய லொன்ற லாமென வுரைத்திகாண், இறுதி யேலதனெ டிசைவ தின்றிசைவ துள்ள தாயி டினவ் வின்பமே, பெறுதி நீயுடலொ டுயிர்க ளாயறிவு பிறக்கு மாறு செயல் பெறுவதென்." (ஷை 255, 259) எ - ம் கண்டுகொள்க.

இனி, ஒன்பதாவது சிதகி முத்தியென்று அகச்சமயத்திற் சங் கிராந்தவாதி ஆன்மா பசுகரணங்கெட்டுச் சிவகரணமாகிறதே முத்தி என்ருனென்று பொருள்கூறியதற்கு வகையதேதென்னில், அவன் ஆன்மாவுக்கு மலபாகம் வந்த இடத்துக் கண்ணுடியிற் காட்டின நிழல் அந்தக் கண்ணுடியிற் பொருந்தினுற்போலச் சிவனுடைய அருள் ஆன்மாவிலே பிரகாசித்த அவதரத்துக் காட்டத்தைப பொருந்தின அக்கினிபோலவும் உப்பளததைப் பொருந்தின புல்லும் வைக்கோ லும் போலவும் பசுத்துவங்கெட்டுச் சிவத்துவமாய்ப பசுகரணங் கெட்டுச் சிவகரணமாகிற சித்தியதே முத்தியெனக் கொள்ளுகை யினுலென அறிக. இதற்கு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில் "பழ மல நீங்க நிகழுங் காலை - வேற்ருேர் முகவொளி தோற்றுங் கல

னெனத் - தலைவனை தருளுயிர் நிலவிடும் நிலைக்-காட்டத் தங்கி மாட்டத் தங்கிய - தன்மையு மளத்த புல்வையி னீப்பும் - போன்றது வாகித் தோன்றிடு மதனாற் - பசுகர ணங்கள் சிவகர ணங்கள் - ஆக மாறி யறிவும் - ஏக மாமுயிர் யானென தின்றே" (9. 103 - 111) எ - து கண்டுகொள்க. அவன் இங்ஙனஞ் சொன்ன முத்தியைப் பழிசேர் முத்தி என்றதேதென்னில், அப்படிக் கண்ணாடியானது கொடுத்தது கொள்ளுந் தன்மை யுண்டாகையினாலும் ஆன்மாவுக்கு அது இல்லாதபடியாலும் மாயாகருவிகள் சடமானபடியாலே அது சிவசொரூபமாகாதபடியாலுமென அறிக. இதற்கு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில் "நோக்கு முகவொளி நீக்காத் தானெனக் - கவருந் தன்மை முகுரம் போலக் - கொடுத்தது கோடற் கடுத்ததுண் டன்றே - காட்டத் தங்கி கூட்டக் கூடும் - இந்தனத் தியற்கை வெந்தழல் தாங்கா - வுப்பளத் தடுத்த புற்பலா லங்கள் - சடத்த வேனுங் கொடுத்தது கொள்ளுந் - தன்மை யுண்டெனக் கின்மைய தன்றே - யவமுறு கருவி சிவமய மாமெனக் - கூறின தாகம் வேறு ருக் கவரா - தென்பதெ னவைமுற் றன்பந் துடைக்குந் - திரு வருள் மருவ வுரியன வென்னில் - அருளுரு மாயா இருளின தாங் கொல்" (10. 22 - 34) எ - து கண்டுகொள்க.

அன்றியும், இங்ஙனஞ் சொல்லப்பட்ட சித்திமுத்தி என்பதற்கு அட்டமாசித்தி என்னவுமாமென்று பொருள்கூறியதற்கு வழியேதென்னில், அணுமா மகிமா லகுமா கிரிமா ஈசத்துவம் வசித்துவம் பிராத்தி பிராகாமியம் என்னும் பெயர்களாயிருக்கும். இவையிற்றினுள் முதற்கூறிய அணுமா சித்தியாவது இவன் சூக்கும தேகமாக வேண்டுமென்றாற் சூக்கும தேகமாகையென அறிக. இனி இரண்டாவது மகிமா சித்தி யென்றது இவன் மகாமேருபோலப் பெருகவேணுமென்றால் அப்படியே பெருக்கையென அறிக. இனி மூன்றாவது லகுமா சித்தியென்றது பதினாலுலகங்களினுந் தடைபடாமல் மனவேகம் போல இவன் நினைத்த இடத்திலே போயிருக்கையென அறிக. இனி நாலாவது கிரிமா சித்தியென்றது ஐராவதம் முதலாயுள்ளவை அசைப்பினும் இவன் அசைவற்றிருக்கையென அறிக. இனி ஐந்தாவது ஈசத்துவம் என்றது சர்வான்மாக்

களையுந் தன்னுடைய ஆக்கினையிலே நடத்துவித்துக் கொள்ளுகை யென அறிக. இனி ஆறுவது வசித்துவ சித்தியென்றது பூலோகத் தைத் தெய்வலோகமாக்கியுந் தெய்வலோகத்தைப் பூலோகமாக்கி யும் வருகையென அறிக. இனி ஏழாவது பிராத்தி சித்தியென் றது அரிபிரமாதியான தேவர்களின் போகங்கள் தனக்கு வரவேணு மென்று மனதிலே நினைத்தால் அப்பொழுதே சித்திக்கிறதென அறிக. இனி எட்டாவது பிராகாமிய சித்தியென்றது ஒருகணப் பொழுதிலே அனேக நூறுயிரம் ஸ்திரீகளைச் சிருஷ்டித்து அப் பொழுதே அந்த ஸ்திரீகளுக்குப் பர்த்தாவா யநுபவிக்கையென அறிக. ஆகச் சித்தி எட்டும் இங்ஙனங் கண்டுகொள்க. இது முத்தியாகா தென்று மறுத்ததற்கு பி-ம் சித்தியாரில் "குறித்தடியி னின்றட்ட குணமெட்டுச் சித்தி கோகனகன் முதல்வாழ்வு குலவுபத மெல்லாம், வெறுத்துநெறி அறுவகையு மேலொடுகீ ழடங்க வெறும்பொயென நினைந்திருக்க மேலொடுகீ ழில்லான், நிறுத்துவதோர் குணமில்லான் தன்னையொரு வர்க்கு நினைப்பரியா னென்றுமிலா னேர்படவந் துள்ளே, பொறுப்பரிய பேரன்பை அருளியதன் வழியே புகுந் திடுவ னெங்குமிலாப் போகத்தைப் புரிந்தே" (9. 6) எ-து கண்டு கொள்க. இதனுள் எட்டுச் சித்தி என்பதை அட்டமா சிததியும் நன் முத்தியாகாதென்பதற்குக் கண்டுகொள்க. அன்றியும் தேவிகாலோத் திரததில் "அட்டமா சித்திமுதல் அனைத்துள்ள பேறுகளுங். கட்ட மாங் கதிகள்தரும பரகதி காணக் கொடா" எ-ம், கோயிற்புரா ணத்தில் "முத்தியு முடிவிலாத போகமு நாலி ரண்டாஞ், சித்தியு மென்செய" (115) எ-ம் வரும் ஏதுக்களினுங் கண்டுகொள்க.

இனி, பத்தாவது பாடாணமுத்தி எ-கு இவன் பாடாணம் போலே கிடக்கிறதே முத்தியென்று பாடாணவாதி சொன்ன னென்று பொருள்கூறியதேதென்னில், அவன் அறிவில்லாத ஆன மாக்கள் அதீதாவத்தைபபட்டுக் கிடக்குந் தன்மைபோலச் சுத்தா வத்தையினும் ஆன்மா ஒன்றுமறியாமற் கல்லுப்போலே கிடககு மென்று கொள்ளுகையால் அப்படிச் சொன்னதென அறிக. இதற்கு பி-ம் சங்கற்ப நிராகரணத்தில் "கொத்தை மாந்த ருய்த்திடு துயில் போற் - காட்சி யென்னக் காணுத் துயர - மாட்சியை முத்தி

யெனவருத் தனரே" (6. 38 - 40) எ - து கண்டுகொள்க. அவன் இங்ஙனஞ் சொன்ன முத்தியைப் பழிசேர் முத்தி என்றதேதென்னில், ஆன்மா கேவலப்பட்டுக் கிடக்குந்தன்மைபோல முத்தியிலும் ஒன்றுமறியாமற் கிடப்பனென்கையினால் சிவாநுபோகம் இல்லாத படியால் அது நன்முத்தி யாகாதென்றதென அறிக. இதற்கு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில் "காட்சி யென்னக் காணாத் துயர - மாட்சியை முத்தி யெனவருத் துரைக்கிற் - கரணு பாவம் மரணங் கரு மரம் - ஏய்ந்தவர் முத்தி சேர்ந்தவ ரன்றே - இனைய கதிக்கோர் முனைவரும வேண்டா - தனிதரு துயர மெனுமிது திடமே - பாடாணததிற் கூடா முத்தி" (7. 9 - 15) எ - து அவனை மறுத்த திலே கண்டுகொள்க.

இனி, திரிமலமும் அகல உயிர் அருள்சேர் முத்தி திகழ்முத்தி என்ற பதத்தில் திரிமலமும் அகல எ - கு ஆணவம் மாயை காமிய மென்று சொல்லப்பட்ட மலங்கள் மூன்றும் நீங்க என்று பொருள் கூறியதேதென்னில் அந்த மலங்கள் மூன்றும் நீங்கின இடமே சிவ ஞானத்தைப் பெற்ற இடமாதலால் அபபடிச் சொன்னதென அறிக. இதற்கு பி - ம் சிவஞானபோதத்தில் "புண்ணிய பாவம் பொருந்து மிக்காமியமும், மண்முதன் மாயைகாண் மாயையுங - கண்ணிய, அஞ் ஞானங் காட்டுமிவ் வாணவமு மிம்மூன்றும், மெய்ஞ்ஞானிக் காகா விடு" (12. 2) எ - து கண்டுகொள்க. அப்படி மூன்று மலங்களும் விட என்றதும் அந்த மலத்தின் குணபேதமான காரியங்களைவிட என்றதென அறிக; அவையாவன, ஆணவத்தின் குணம் எட்டும் மாயையின் குணம் ஏழுங் காமியத்தின் குணம் ஆறுமென அறிக. இவையிறறுக்கு பி - ம் இருபாவிருபஃதில் "கூறிய மூன்று மலத் தின் குணக்குறி - வேறு கிளக்கின் விகற்பங் கற்பங் - குரோதம் மோகங் கொலையஞர் மதநகை - விராயெண் குணனுமா ணவமென விளம்பினை - அஞ்ஞா னம்பொய் யயர்வே மோகம் - பைசா சூந்நிய மாச்சரி யம்பய - மாயவேழ் குணனு மாயைக் கருளினை - இருத்தலுங் கிடத்தலும் இருவினை இயற்றலும்-விடுத்தலும் பரிந்தை மேவலென் றெடுதத - அறுவகைக் குணனுங் கருமத் தருளினை" (4. 1 - 10) எ - து கண்டுகொள்க. உயிரருள்சேர் முத்தி திகழ் முத்தி எ - கு

ஆன்மா அருளோடுங் கூடின இடமே விளங்குதலையுடைய முத்தியா மென்று பொருள்கூறிய தேதென்னில், ஆன்மாக்கள் சிவனைப் பெறுமிடத்துச் சிவனுடைய அருட்சத்தியினிடமாகச் சென்று பெறவேண்டுகையால் அப்படிச் சொல்லப்பட்டதென அறிக. இதற்கு பி - ம் தத்துவ விளக்கத்தில் “ பவமே வியநெறி பந்திக்கும் ஈசன் பசுக்கள்தம்மை, அவமே வியநெறிப் போகங்களால் முற்ற அந் நிலையே, தவமே வியநெறி சத்திகண் ணுய்ச்சென்று சார்ந்து பின் னைச், சிவமே வுவரென்று காண்கொச்சை காவலன் சித்திரிப்பே ” எ - ம், சிவபுராணத்தில் “ அவனரு ளாலே அவன்தாள் வணங்கி ” (8. 1. 18) எ - ம் இப்பொருள் பற்றியேயென அறிக. இனி, இது முத்தித் திறத்ததாமே எ - கு இதுவே முத்திகளென்று சொல் லப் பட்டவை எல்லாவற்றினுந் திறப்பாட்டினையுடைய முத்தியா மென்று பொருள் கூறியதேதென்னில் மற்றுள்ள முத்திகளென்று சொல்லப்பட்ட பத்துவகை முத்திகளும் அழியப்படுமாகையால் அப்படிச் சொன்னதென அறிக. அவைகளெல்லாம் நன்முத்தியல்ல என்பதற்கு பி - ம் சித்தியாரில் “ இம்மையே ஈரெட்டாண் டெய்தி எழிலாரும் ஏந்திழையார் முத்தி யென்றும் இருஞ்சுவர்க்க முத்தி, அம்மையே என்றுமுத்தி ஐந்து கந்த மறக்கெடுகை என்றுமட்ட குண முத்தியென்றும்,மெய்ம்மையே பாடாணம்போல்கைமுத்தியென்றும் விவேகமுத்தி யென்றுந்தன் மெய்வடிவாஞ் சிவத்தைச், செம்மையே பெறுகை முத்தி யென்றுஞ் செப்புவாகள் சிவனடியைச் சேரு முத்தி செப்புவதிங் கியாமே ” (8. 12) என்றமையால் சிவனடியைச் சேருமுத்தி இவை நீங்கலாக வேறேயும் உணடென்பது கருத்தென அறிக. அஃதாவது சிததியாரில் “ இரும்பைக் காந்தம் வலித்தாற்போ லியைந்துங் குயிரை எரியிரும்பைச் செய்வதுபோல் இவனைததா னாக்கி, அரும்பிந்த னத்தையனல் அழிப்பதுபோல் மலத்தை அறுத்த மல னப்பணைந்த வுப்பேபோ லணைந்து, விரும்பிபொன னிினைக் குளிகை ஒளிபபதுபோல் அடக்கி மேளித்துத தானெல்லாம் வேதிப்பா னாகிக்,கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக் கட்டியையொத் திருப்பனந்த முத்தியினிற் கலந்தே ” (11. 12) எ - து கண்டுகொள்க. ஆகையால், முத்திக்கு ஏதுவான ஆன்மாக் களுக்குச் சிவன் தனது திருவடிஞானத்தைக் கடாக்ஷிக்கும் அவத

ரத்து அவர்களுக்கு உண்டான மலமாயா கன்மங்களை நீக்கித் தன்னுடைய திருவடியிலே கூட்டிக்கொள்ளுவன் என்பதே சைவசித்தாந்த முத்தியென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "படிக்கு நூல்கள் சிவாக மம்பசு பாச மோடு பதித்திறம், எடுத்தி யம்புவ தீசன் வார் கழ லேத்தி டுந்தொழி:லென்றுமே, விடுத்தி டும்பொருள் காம மாதிகள் வேண்டி டும்பொரு ளீண்டருள், முடித்து மும்மலம் விட்டு நின்மல னோடு நின்றிடன் முத்தியே" எ - ம், "அநாதிமுத்த னப்பரனு யசலனு யெல்லா அறிவுதொழி லநுக்கிரக முடையஅரன் கன்மம, நுனுதிகமற வொத்தவிடத தேசத்தி நிபாதம் நுழைவித்து மலஙகளெலா நுங்க நோக்கி, மனுதிகர ணங்களெலா மடக்கித்தன்னை வழிபடுநல் லறிவருளி மாக்கருணைக் கையால், இனுதபிறப் பிணி னின்று மெடுத்து மாரு இன்பமுத்திக் கேவைப்ப னெஙகள் முத்தி இதுவே" (பரபக்கம் 63, 134) எ - ம் கண்டுகொள்க.

இதனுற் சொல்லியது, ஆன்மாக்கள் முத்தியைப் பெறுமிடத்து மகளிரிடதநுண்டாகிய போகமே முத்தி என்கிற உலகாயதனும், பஞ்ச கந்தங்களுங் கெடுகிறதே முத்தி என்கிற புத்தரிற் சௌத்திராந்திகனும், மூன்றுவகையாகச் சொல்லப்பட்ட குணங்கள் கெடுகிறதே முத்தி என்கிற அமணரில் நிகண்டவாதியும், எங்கும் விரிந்திருக்கப்பட்ட கன்மங் கெடுகிறதே முததி என்கிற பிரபாகரனும், ஆணவமலங் கெடுகிறதே முத்தி என்கிற அகச்சமயத்திற பேதவாதியும், முத்தியிலுஞ் சரீரம் அழியாதென்கிற அகச்சமயத்திற் சிவசமவாதியும், இந்த உடலிலே சீவித்து நிற்கிற சீவான்மாவுக்கு விவேக ஞான முண்டாகிறதே முத்தி என்கிற மாயாவாதியும், இந்த ஆன்மா கெடுகிறதே முததி என்கிற பாற்கரியனும், ஆன்மா பசுகரணங் கெட்டுச் சிவகரணமாகிறதே முத்தி என்கிற சங்கிராந்தவாதியும், முத்தியிலும் ஒன்றுமறியாமற் கிடக்குமென்கிற பாடாணவாதியும் ஆக இபபடிச் சொல்லப்பட்ட பத்துவகை முத்தியும் மறுத்து, இவை எல்லாங் குற்றத்தையுடைய முத்திகளென்று காட்டி, ஆன்மா ஆணவம் மாயை காமியம் என்னப்பட்ட மும்மலங்களும் நீங்கிச் சிவனுடைய திருவருள் ஞானத்தைப் பெற்றுச் சிவாநுபவமாய் நிற்கிறதே சைவ சித்தாந்த முத்தி என்னும் முறைமையையும் அறிவித்தது. ௨அ

# உண்மை அதிகாரம்

இங்ஙனங் கூறப்பட்ட முத்தியைப் பெறுமிடத்து உண்மையை அறிந்து முத்திபெற வேண்டுகையால் மேல் உண்மையை அருளிச் செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

இந்த உண்மையில் முதற்செய்யுளுக்குத் தொந்தனையாவது : இங்ஙனம் பொதுவாக அருளிச்செய்யபபட்ட செய்யுள் ஐம்பதினும் பொருள்களைச் சாமாநியத்திலே உண்டென்று நாட்டினதொழிய விசேட அத்தங்களை அருளிச்செய்யாததேதென்று வினவின மாணுக் கனைநோக்கி அவைகளெல்லாம் பெத்தநிலையைக் கூறிவருகையால் பெத்தங் கூறுமிடத்து முத்திநிலையாகிய விசேட அத்தங்களைக் கூற வழக்கல்லாதபடியாலும் அன்றியும் பதியை இல்லையென்றும் பசுவை இல்லையென்றும் பாசத்தை இல்லையென்றுஞ் சொல்லப்பட்ட சமயி கள் எதிர்ப்படுகையால் அவர்களை நோக்கி மறுத்துக் கூறுமிடத்துப் பொருள்களைச் சாமாநியததிலே உண்டென்று நாட்டுமதொழிய ஆன்மதரிசனம் சிவதரிசனம் முதலாகவுள்ள விசேட அத்தங்களைக் கூற வழக்கல்லாதபடியாலும் முற்கூறிய செய்யுட்கள் ஐம்பதும் பொதுவாகக் கூறினோமென்றும், ஆன்மதரிசனம் சிவதரிசனம் முத லாகவுள்ள விசேட அத்தங்களை மேல் உண்மையிலே சொல்லுகிறோ மென்னும் முறைமையையும் அருளிச்செய்வான் எடுத்துக்கொண் டருளியது.

51. இங்கிவை பொது இயம்பும் என்பர்கள் இதன்மே லான்மாத்
தங்கிய அஞ்ச வதைத தன்னுண்மை உணர்த்துந் தன்மை
பொங்கொளி ஞான வாய்மை அதன்பயன் புனிதன் நாமம்
அங்கதின் அணைந்தோர் தன்மை அறைகுவன் அருளி னாலே. க

உண்மை நிலையி லொன்பது திறனும்
வண்மை யுடனே வனப்புற வகுத்தது.

(உரை) இங்கிவை பொது இயம்பும் என்பர்கள் - இவ்விடத்து இங்ஙனங் கூறப்பட்ட செய்யுள் ஐம்பதும் பெத்தநிலையைக் கூறு கையாலே பொருள்களைச் சாமாநியமாகக் கூறினதென்று பெரி

யோர்கள் சொல்லுவார்கள்; இதன்மேல் - இந்தப் பொது ஐம்பதிற்கு மேலாகக்கொண்டு உண்மையாவது; ஆன்மா - ஆன்ம இலக்கணம் ஓரதிகாரத்தானும்; தங்கிய அஞ்சவத்தை - ஆன்மா தங்கப்பட்ட சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியந் துரியாதீதமென்னும் அஞ்சவத்தையின் முறைமை ஓரதிகாரத்தானும்; தன்னுண்மை உணர்த்துந் தன்மை - ஆன்மாக்கள் ஆணவமலத்தாலே மறைப்புண்டு மூலாதாரத்திலே கேவலப்பட்டுக் கிடக்கிற அவதரத்துச் சிவன் கலையாதி தத்துவங்களைக் காரண மாயையிலே நின்றுந் தோற்றுவித்து அதனாலே அந்த ஆணவ மலததை நீக்கி அறிவிக்கிற முறைமை ஓரதிகாரத்தானும்; பொங்கொளி ஞானவாய்மை - மிகுந்த பிரகாசமாகிய பேரறிவாய் நிற்கிற சிவனுடைய ஞானத்தின் உண்மையை ஓரதிகாரத்தானும்; அதன் பயன் - அந்த ஞானத்தைப் பெறுமவர் பயனாகிய ஆன்ம தரிசனம் ஆன்ம சுத்தி ஆன்ம லாபம் என்னப்பட்ட மூன்று வகையும் மூன்றதிகாரத்தானும்; புனிதன் நாமம் - சுத்தனாயிருக்கிற சிவனுடைய திருநாமமாகிய அஞ்செழுத்தருள் நிலை ஓரதிகாரததானும்; அங்கதின் அணைந்தோர் தன்மை-அவ்விடத்து அந்த உண்மையாகிய சிவத்துடனே கூடிநின்று அநுபவிக்கிற சீவன்முத்தர் இலககணம் ஓரதிகாரத்தானும்; அறைகுவன் அருளினாலே - ஆக இங்ஙனஞ் சொல்லப்பட்ட அதிகாரம் ஒன்பதினாலுஞ் சொல்லாநின்றேன் தம்பிரானார் அநுக்கிரகத்தாலே இந்த உண்மை ஐம்பதையும்.

பொதுவியல்பு எ - கு முற்கூறிய செய்யுள் ஐம்பதினும் உண்டாகிய பொருள்களைச் சாமாநியத்திலே பெத்தநிலைகளைச் சொன்னதென்று பொருள்படுத்தினதற்கு வழியேதென்னில், சிவன் ஆன்மாக்களை மலபாகம வருத்துமிடத்து மலமாயா கன்மங்களோடுங் கூட்டி ஜநந மரணப்படுத்தி மலபாகம் வருத்தும் முறைமையைக் கூறுகையால் அப்படிச் சொன்னதென அறிக. மற்ற ஐம்பதும் உண்மை என்றதும் அந்தப் பெத்தநிலையை நீங்கி முத்திக்கு ஏதுவாயுள்ள உண்மைநிலையைப் பெறவேண்டும் பக்குவான்மாக்களை நோக்கிக் கூறுகையாலென அறிக. இவை இரண்டுக்கும் பி - ம் கோவைத் திருவாசகத்தில் "பொதுவினிற் றீர்தமென்னை யாண்டோன் புலியூரரன்" (146) எ-ம், "பொதுக்கடிந் தினிது காக்கும்" (12. 3. 35)

எ - ம் சித்தியாரில் "ஆரணநூற் பொது சைவம் அருஞ்சிறப்பு நூலாம்" (8. 15) எ-ம் வரும் ஏதுக்களைக் கண்டுகொள்க. இனி தன்னுண்மை உணர்த்துந் தன்மை எ - கு கேவலாவத்தை ஆன்மாவுக்கு உண்மையென்றது ஏதென்னில் செம்பைக் காளிதம் மறைத்தாற் போலவும் அக்கினியைக் காட்டம் மறைத்தாற்போலவும் ஆன்மாவை ஆணவமலம் அநாதியே மறைத்து நிற்கையால் அப்படிச்சொன்னதென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "கேவல சகல சுத்தமென்றுமூன் றவத்தை ஆன்மா, மேவுவன் கேவ லந்தன் னுண்மை" (4. 37) எ - ம், இந்நூலினும் "உறுந்தனி யதீத முண்மை புயிர்க்கு" (52) எ - ம் வருவதும் இப்பொருள் பற்றியென அறிக.

இதனுற் சொல்லியது முற்கூறப்பட்ட செய்யுள் ஐம்பதும் பொதுவென்றும், மேல் உண்மை ஐம்பதினும் ஆன்ம இலக்கண முதலாக ஒன்பது அதிகாரமாக வருமுறைமையும் அறிவித்தது. க

## மூன்றுஞ் சூத்திரம்

### ஆன்ம இலக்கணம்

இங்ஙனம் முன்னம் அருளிச்செய்த செய்யுள் ஐம்பதினுள் பாயிரம் பன்னிரண்டு செய்யுளும் நீக்கி மற்றுள்ளவை எல்லாம் முதற் சூத்திரம் இரண்டாஞ் சூத்திரமுமாக வகுத்தருளிச் செய்து, மேலுண்மையிலே நீக்கியுள்ள மூன்முஞ் சூத்திரம் முதலாகப் பத்துச் சூத்திரமும் வருகையால் அதில் மூன்முஞ் சூத்திரமாகிய ஆன்ம இலக்கணம் அருளிச்செய்வான் எடுத்துக் கொண்டருளியது.

அப்படி ஆன்ம இலக்கணம் மூன்முஞ் சூத்திரமாகைக்கு வழி ஏதென்னில் சிவஞானபோதத்தினுஞ் சிவஞான சித்தியாரினும் மூன்முஞ் சூததிரம் ஆன்ம இலக்கணமாக நிற்கையால் இவையிற்றையும் அப்படி வைக்கப்பட்டதென அறிக. அவை எங்ஙனேயென்னில், சிவஞானபோதத்தில் "உளதில தென்றலின் எனதுடல் என்றலின், ஐம்புலன் ஒடுக்கம் அறிதலில் கண்படில், உண்டிவினை யின்மையின் உணர்த்த உணர்தலின், மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா" (3) எ - ம், சிவஞானசித்தியாரில் "உயிரெனப் படுவ திந்த உடலின்வே றுளதாய் உற்றுச், செயிருறும் இச்சா ஞானச் செய்திக

ளுடைய தாகிப், பயில்வுறும் இன்ப துன்பப் பலன்களும் நுகரும் பார்க்கில், துயிலொடும் ஐந்த வத்தைப் படும்உண்மை துரியா தீதம்" (3. 1) எ - ம் மூன்முஞ் சூத்திரம் ஆன்ம இலக்கணத்துக்கு அருளிச்செய்கையால், இந்நூலினும் "செறிந்திடும்" (52) என்ற விருத்தந் தொடங்கி "ஓரிடத் திருத்தல்" (59) என்னும் விருத்த முடிவாகிய செய்யுள் எட்டினும் ஆன்ம இலக்கணத்தை அருளிச் செய்கையால் இதுவும் அப்படி மூன்முஞ் சூத்திரமாக நின்றதென அறிக. இவ்வதிகாரத்துக்கு வகுத்த செய்யுட்களில் ஆன்மப் பிர காசம் வரும் முறைமைக்கும் வகுப்புகளுக்கும் வகையேதென்னில், "தனியதீத முண்மை உயிர்க்கென உணர்த்து மன்றே" (52) எ - ம், "அருவினை யுடலு ளாவி அறிவினுல் அறியு மன்றே" (53) எ - ம், "ஆன்மா அறிவில தாகு மீச னசேதனத் தளித்தி டானே" (54) எ - ம், "அசத்தைச் சத்துட னின்று நீங்குந் தன்மையாற் சத சத் தாமே" (57) எ - ம் ஆன்மாவின் பிரசங்கம் வருகையால் அப் படிச் சொல்லப்பட்டதென அறிக. அவை வருமாறு மேல் வரு மிடத்திற் கண்டுகொள்க.

மேல்வரும் விருத்தத்துக்குத் தொந்தனையாவது இங்ஙனஞ் சொல்லப்பட்ட ஆன்மா ஒரு சரீரத்தோடுங்கூடிச் சீவிக்கும் முறை மையை அருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

52. செறிந்திடும் உடலுள் மன்னிச் சேர்புலன் வாயில் பற்றி
அறிந்ததில் அழுந்தும் ஒன்றும் அறிந்திடா அறியுந் தன்மை
பிறிந்தடை அஞ்ச வத்தை பெருகிய மலத்தாற் பேணி
உறுந்தனி அதீதம் உண்மை உயிர்க்கென உணர்த்து மன்றே.உ

தொல்லை வினையாற் றுவக்குண் டுழலும்
பல்லுயிர்த் தன்மை பாரித் துரைத்தது.

(உரை) செறிந்திடும் உடலுள் மன்னி - கன்மத்துக்கீடாகச் செறிந்து கூடின சரீரத்திலே நிலைபெருய் நின்று; சேர்புலன் வாயில் பற்றி அறிந்ததில் அழுந்தும் - பொருந்தத்தக்க விடயங்களை இந்திரியங்களினுலும் பூதங்களினுலும்அந்தக்கரணங்களினுலுங் கலா திகளினுலுஞ் சுத்த தத்துவங்களினுலும் பொருந்தி அறிந்து அனுப

வியாநிற்கும்; ஒன்றும் அறிந்திடா - இப்படி இந்தத் தத்துவங்களி னலே அறிந்து அநுபவிக்கச்செய்தேயும் இவையிற்ருலே யல்லவோ அறிகிறேமென்று அறியமாட்டாது; அறியுந் தன்மை பிறிந்து-அப் படி விசுவ வியாத்தனுய் நிற்கச்செய்தே அறிகருவிகள் பதிஞறு நீங்கி நின்ற கருவிகளோடுங்கூடி; அடையஞ்சவத்தை பெருகிய மலத்தாற் பேணியுறும் - ஒழுங்கிலே சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியந் துரியாதீதம் என்னப்பட்ட ஐந்தவத்தைகளினும் மிக்க ஆணவத்தான் மறைப்புண்டு அழுந்தாநிற்கும். இதுவன்றியும் இங்ஙனம் பொருள் கூறிவந்த பதமிரண்டையும் ஒன்றும் அறிந்திடா அறியுந் தன்மை பிறிந்தடை அஞ்சவத்தை பெருகிய மலத்தாற் பேணி யுறும் என் ெருரு பதமாக்கி ஒன்று மறிந்திடா எ - கு ஒன்றும் அறியாமற் கேவ லப்பட்டுக் கிடக்கத் தக்கதாக அறிகருவிகளும நீங்கி அடைவே அவத்தைப்பட்டு வருமென்று வருகாலமாகப் பொருளுரைப்பினு மாம்; தனி அதீதம் உண்மை - ஆன்மாவின் இயற்கையான சுபா வத்தை விசாரிக்குமிடத்து, சீவிக்குங் கருவிகளெல்லாம் நீங்கி முற் கூறிய ஆணவ மலத்தான் மறைப்புணடு மூலாதாரத்திலே பிரகிருதி தத்துவம் உடம்பாகக் கிடந்தழுந்துமதே அதீதமாம். இவைகளெல் லாம் யார்க்கென்னில்; உயிர்க்கென உணர்தது மன்றே - இந்த முறைமைகள் ஆன்மாவுக்கென்று சிவாகமஙகள் சொல்லாநிற்கும்.

செறிந்திடும் உடலுள் மன்னி எ - கு கன்மத்துக் கீடாகச் செறிந்து கூடின உடமபென்று பொருள்கூறியது ஏதென்னில் ஆன்மாக்கள் கன்மத்தைப் புசிக்குமிடத்து ஒவ்வொரு சரீரங் களை எடுத்து அதனேடுங்கூடிப் புசிக்கவேண்டுகையால் அப்படிச் சொன்னதென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "உடல்விடா யோனி பற்றி" (2. 37) என்ற செய்யுளின் முடிவிலே "இடருறு முருவங் கன்மத் தளவினி லெடுக்கு மன்றே" எ - ம், இந்நூலினும் "எண்ணரிதாய்" (19) என்னுஞ் செயயுளில் "இருவினையின் தன்மைகளுக் கீடான யாக்கை அண்ணலரு ளால் நணணி" எ - ம் வருமது கண்டுகொள்க. இனி, சேர்புலன் வாயில் பற்றி அறிந்தி லழுந்தும் எ - கு ஆன்மா கூடி அனுபவிக்கத்தக்க விடயங்களை இந் திரியங்களினுலும் பூதங்களினுலும் அந்தக்கரணங்களினுலுங் கலாதி

களினாலுஞ் சுத்த தத்துவங்களினாலும் அறிந்து அனுபவிக்குமென்ற தேதென்னில் அப்படி ஆன்மா இந்திரியங்களைக்கொண்டு விடயங் களைக் கொள்ளுமிடத்துப் பூதங்களினிடமாக நின்றறிகையினாலென அறிக. அந்தக்கரணங்களினால் என்றது, மனது பற்ற ஆங்காரம் எழுப் பப் புத்தி நிச்சயிக்கச் சித்தஞ் சிந்தித்ததென அறிக. இனி, கலாதி களினால் அறிய என்றது காலங்கூட்டியும் நியதிவரைந்துங் கலை தொழிற்படுத்தியும் வித்தை அறிவை எழுப்பியும் அராகம் இச் சையை எழுப்பியும் புருடன் போகவிச்சாவாகியும் பிரகிருதி யழுந்து வித்தும் வருகையென அறிக. இனி, சிவதத்துவங்களினால் அறிய என்றது அவையிற்றைப் பிரேரிப்பிக்கையினாலென அறிக. இனி, யொன்றும் அறிந்திடா எ - கு அந்தத் தத்துவங்களினாலே கூடியறி ந்து வருமிடத்து இவையிற்றாலேயல்லவோ கூடியறிந்து வருகிறோ மென்று ஆன்மா அறியமாட்டாதென்று பொருள் கூறிய தேதென் னில், ஆன்மா தத்துவங்களோடுங் கூடினவிடம் மயக்க அறிவாகை யாலே தன்செயலறுதி தோன்றாமல் யானெனதென்கிற மமதை பற்றி நிற்கையால் அப்படிச் சொன்னதென அறிக. இனி அறியுந் தன்மை பிறிந்து எ - கு ஆன்மா விசுவ வியாத்தனாய் நிற்கச்செய்தே அறிகருவிகள் பதினாறு நீங்கி நின்ற கருவிகளோடுங்கூடி அவத்தைப் படுமென்று பொருள் கூறிய தேதென்னில், ஆன்மா தத்துவம் முப்பத்தாறோடுங் கூடி விசுவ வியாத்தனாய் நிறகச்செய்தே அவத் தைப்படும் அவதரதது அறிகருவியாகிய சுத்த தத்துவம் ஐந்தும் வித்தியா தத்துவம் ஏழில் பிரகிருதி தத்துவம் நீங்கலாகக் கலாதிகள் ஆறும் பூதங்கள் ஐந்தும் ஆகப் பதினாறு நீங்கி நின்றகருவி இருபதும் தொண்ணூற்றாறு வகையில் வாயுக்கள் பத்தும் வசனாதிகள் ஐந்தும் ஆக முப்பத்தைந்தோடுங் கூடிச் சாக்கிரத்தில் முப்பத்தைந்து கருவி யும் சொப்பனத்தில் இருபத்தைந்து கருவியும் சுழுத்தியில் மூன்று கருவியும் துரியத்தில் இரண்டு கருவியும் அதீதத்தில் ஒரு கருவியுமாக நிற்கையால் அப்படிச் சொன்னதென அறிக. அப்படியானாலும் அவத் தைக்கு அறிகருவிகள் பதினாறும் நீங்குமென்பதொழிய வாயுக்கள் பத்தும் வசனாதிகள் ஐந்தும் சாக்கிரத்தினுங் கூடிநிற்கச் செய்தே அவத்தையிற கூடுமென்ற தேதென்னில், அப்படிச் சாககிரத்திற்

கூடிநின்றாலும் அவத்தைக்கு அவை மேலிட்டுச் சீவிக்கையினாலே அப்படிச் சொன்னதென அறிக.

அது எங்ஙனேயென்னில், அந்தத் தசவாயுக்களுக்குங் குணமாவது பிராணவாயு மேல்நோக்கியும் அபானவாயு கீழ்நோக்கியும் வியானவாயு கலந்தும் உதானவாயு விக்கியும் சமானவாயு சமமாக்கியும் நாகவாயு தும்மியுங் கூர்மவாயு கொட்டாவிவிட்டுஞ் சோம்பியும் கிரிகரவாயு கண்ணையிமைப்பித்தும் தேவதத்தவாயு நகைப்பித்தும் தனஞ்சயவாயு நாடிகளைத திறப்பித்து உடலை வீக்கியும் வருமாகையால் அப்படிச் சொன்னதென அறிக. இதற்கு பி-ம் தத்துவ சரிதையில் "செப்புமிடை பிங்கலைநற் சுழுமுனைகாந் தாரி திகழத்தி சிங்ஙுவையு மலம்புடையும் புருடன், ஒப்பரிய சங்கினியுங் குதமு மாகும் ஒருபத்திற் பிராணன் அபானன் பின்னும் வியானன், தப்பிலுதானன்சமான னாகன் கூர்மன் தருகிரிக ரன்தேவ தத்தன்தனஞ் செயனும் பத்தில், ஒப்பினாசி குதங்கலத்தல் விக்கல்சமந் தும்மல் உயர் சோம்பு கண்ணேற்றல் நகைமலர்ச்சீ விக்கே" எ-து கண்டு கொள்க. அவை எல்லாம் விசுவ வியாத்தியில்லையோ என்னில், அவையுண்டானாலும் ஆன்மபோதம் மேலிட்டு நிற்கையால் அவை அடங்கியும் அவத்தையில் ஆன்மபோதம் மலததினாலே மறைந்து அடங்கி நிற்கையால் அவை மேலிட்டும் நிற்குமென்றதென அறிக. அதற்கு அநுபோகம் ஏதென்னில் விசுவ வியாத்தியில் அடங்கிநின்று இயஙகின வாயுக்கள் அவத்தையிலே மேலிட்டுப் பெருமூச்செறிந்து நின்று காரியப்படுமாகையால் அபபடிச் சொன்னதென அறிக. வாயுக்கள் அப்படியானாலும் வசனாதிகள் ஐந்தும் விசுவ வியாததியிலும் உண்டாயிருக்க அவத்தையிலே மேலிட்டுநின்று சீவிக்குமென்றது ஏதென்னில், விசுவ வியாத்தியிலுங் கன்மேந்திரியமான வாக்காதிகளுக்கு விடயமாக நின்று சீவித்தாலும் அவத்தைப்படும் அவதரத்துஞ் சொப்பனத்தில் அந்த வாக்காதிகள் நீங்கினாலும் வசனாதிகள் நின்று சீவிக்கையால் அப்படிச் சொன்னதென அறிக. அஃதெங்ஙனே யென்னில், ஆன்மா சொப்பனத்தனான அவதரத்தும இந்தப் பூதவுடல் அசைவற்றுக் கிடக்கச்செய்தேயும் ஒருவரோடு வைதும் வாழ்த்தியும் சிலவிடங்களுக்குப் போயும் மீண்டுஞ் சில

பண்டங்களை இடுதல் ஏற்றல் செய்தும் விசர்க்கித்தும் வீட்டித்தும் மைதுனம் பண்ணியும் சிறுநீர் போக்கியும் வருகையால் அவத்தையி லும் வசனாதி யுண்டாகையால் அப்படிச் சொன்னதென அறிக. ஆகையால் அவத்தையில் வாயுக்கள் பத்தும் வசனாதிகள் ஐந்தும் மேலிட்டு நின்று சீவிக்குமென்பதை அனுபவத்தாற் கண்டுகொள்க.

இனி, அடை அஞ்சவத்தைப் பெருகிய மலத்தாற் பேணியுறும் எ - கு அவத்தைகளின் அடைவே சாக்கிராவத்தைக்கு முப்பத் தைந்து கருவியென்றும் சொப்பனாவத்தைக்கு இருபத்தைந்து கருவியென்றும் சுழுத்தி அவத்தைக்கு மூன்று கருவியென்றும் துரியாவத்தையில் இரண்டு கருவியென்றும் அதீதாவத்தையில் ஒரு கருவியென்றும் பொருள் கூறியதற்கு பி - ம் சித்தியாரில் "சாக்கிர முப்பத் தைந்து நுதலினிற் கனவு தன்னில், ஆக்கிய இருபத் தைந்து களத்தினிற் சுழுனை மூன்று, நீக்கிய இதயந் தன் னில் துரியததில் இரண்டு நாபி, நோக்கிய துரியா தீதம் நுவ லின்மூ லததி னென்றே" (4. 33) எ - து கண்டுகொள்க. அன்றி யும் பெருகிய மலம் எ - கு மிக்க மலமென்று பொருள்கூறியது ஏதென்னில் அந்த ஆணவமலம் ஒன்றாயிருந்துஞ் சர்வான்மாக்களை யும் மறைத்து நிற்கையாலும் அநாதியே தொடங்கி மேலும் ஆன்ம வர்க்க முள்ளமட்டும் அந்த மலம் நீங்காதாகையாலும் அபபடிச் சொன்னதென அறிக. இனி தனியதீத முண்மை எ - கு கருவிக ளொன்றுமில்லை என்றிருக்கப் பிரகிருதிதத்துவமும் உடம்பாகக்கிடக் கிறதே யதீதமென்று பொருள்கூறிய தேதென்னில், அந்தப் பிர கிருதி தததுவம் மற்றுள்ள கருவிகளைப்போல ஆன்மாவை விட்டும் பற்றியும் வாராமற் கேவல சகலம் இரண்டினும் உயிரும் உடலும் போலப் பிரிவற்று நிற்கையால் அப்படிச் சொன்னதென அறிக. அப்படியானால் தனியதீத மென்பானேனென்னில், அஃதாவது யாதாமொருவர் தனித்திருக்கிறார்களென்றால் அவர்களுயிரும் உடம் பும இரணடாயிருக்கவும் ஒருவரென்றும் தனியரென்றும் பெயர் பெறறாற்போலவென அறிக. இதற்குமேல் "எண்ணவொன் றிலா ததீதம" (60) என்னும் விருத்தத்துக்கு எழுதுகிற நுட்பததினுங் கணடுகொளக. இனி, அதீததததை ஆனமாவுக்கு உணமையென்பான்

ஏனென்னில் கருவிகளோடுங் கூடிநின்று சீவித்தவிடம் செயற்கை அறிவாகையாலும் சீவிக்குங் கருவிகள் நீங்கினவிடம் இயற்கை அறிவாகையாலும் அப்படிச் சொன்னதென அறிக. அப்படி ஆன்மாவுக்கு இயற்கையான சுபாவமே உண்மை என்பதற்கு பி - ம் "கேவலந் தன் னுண்மை" (சித்தியார், 4. 37) எ - ம், "விஞ்சிய சுபாவ மலத் துடன் மேவுதல்" எ - ம் வருமது நூல்களிலே கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது ஆன்மாக்கள் ஒவ்வொரு சரீரங்களிலே கூடி நிற்குமிடத்து இந்திரியங்களோடுங் கூடிநின்று சீவிக்கும் முறைமையும் அப்படி நிற்கச்செய்தே அறிகருவிகள் நீங்கி அவத் தைப்படு முறைமையும் அதீதத்திற் கேவலாவத்தைக்குச் சீவிக்குங் கருவிகளெல்லாம் நீங்கி ஆணவத்தான் மறைப்புண்டு மூலாதாரத் திலே கிடக்குமுறைமையும் அறிவித்தது. உ

இப்படி ஆன்மா என்பதொன்று உண்டாயிருக்கச்செய்தே அதனை இல்லையென்று உலகாயதன் இந்தப் பூததேகந்தானே அறி கிறதென்றும், புத்தரில் மாத்தியமிகன் இந்திரியங்கள் தானே அறி கிறதென்றும், மாயாவாதி பிரமத்தின் சந்நிதியிலே அந்தககரணங் கள் தானே அறிகிறதென்றும், மீளவும் உலகாயதன் வாயுப் பூதந் தானே அறிகிறதென்றுஞ் சொல்லுவானேனென்று வினவின மாண வகனை நோக்கி அவரவர் அத்தங்களை மறுத்துக் காட்டிச் சிவன் அறி விக்க ஆன்மாவே இந்த உடலிலே நின்று அறிகிறதென்னும் முறை மையை மேலருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

53. உருஉணர் விலாமை யானும் ஓரொரு புலன்க ளாக
மருவிநின் றறித லானும் மனுதிகள் தம்மின் மன்னித்
தருபயன் நுகர்த லானும் உயிர்சட மாத லானும்
அருவினை உடலுள் ஆவி அறிவினால் அறியு மன்றே. ௩

புகலுயி ரில்லெனும் புறச்சம யத்தவர்
தகவி லுரையைச் சாற்றி மறுததது.

(உரை) அப்படி ஆன்மா என்பதொன்றில்லை இந்தப் பூததேகந் தானே அறியுமென்கிற உலகாயதன் கருத்தை மறுத்தருளிச்செய கின்றது. உரு உணர்விலாமையானும் - இந்தச் சரீரமானது உறக்க

மானபொழுதுஞ் சவமானபொழுதும் அறியாதபடியாலே இவை யிற்றைக்கொண் டறிகைக்கு ஒரு ஆன்மா உண்டென்று அறிவா யாக. அன்றியும் இரண்டாவது இந்திரியங்கள் அறியுமென்ற மாத் தியமிகன் கருத்தை மறுத்து அருளிச்செய்கின்றது ; ஒரோரு புலன் களாக மருவிநின்றறிதலானும்-இந்திரியங்கள் உறக்கத்தின் அறியாத படியாலும், அன்றியும் இவை ஒன்றறிந்தது ஒன்றறியாதபடியாலும் இந்த இந்திரியங்களைக்கொண்டறிகைக்கு ஒரு ஆன்மா உண்டென்று அறிவாயாக. அன்றியும் மூன்றாவது அந்தக்கரணங்கள் அறியுமென் கிற மாயாவாதி கருத்தை மறுத்தருளிச் செய்கின்றது ; மனாதிகள் தம்மின் மன்னித் தருபயன் நுகர்தலானும் - மனம் புத்தி ஆங்காரஞ் சித்தமென்னப்பட்ட அந்தக்கரணங்கள் ஒன்றை ஒன்று அறியாத படியாலும் அன்றியும் ஒன்றறிந்தது ஒன்றறியாதபடியாலும் இவை யிற்றைக் கொண்டு அறிகைக்கு ஒரு ஆன்மா உண்டென்று அறிவா யாக. அன்றியும் நாலாவது வாயுப்பூதம் அறியுமென்ற மீளவும் உலகாயதன் சொன்ன கருத்தை மறுத்தருளிச் செய்கின்றது ; உயிர் சட மாதலானும் - உறக்கத்தின்கண் வாயுப்பூதம் இயங்கச் செய் தேயும் அறிவற்றுக் கிடக்கையாலும் இதனைக்கொண்டு அறிகைக்கு ஒரு ஆன்மா உண்டென்று அறிவாயாக. இங்ஙனம் இவை அறியா தாகையால் ; அருவினை உடலுள் ஆவி அறிவினுல் அறியுமன்றே - கட்புலனுக்குத் தெரியாமலருபமா யிருக்கப்பட்ட கன்மத்துக்கீடாக உண்டான உடம்பிலே நிற்கிற ஆன்மா கர்த்தாவின் திருவருளி னுலே அறிவிக்க அறிந்து சீவியாநிற்கும்.

இங்ஙனம் நாட்டப்பட்ட சமயிகளுக்கு உதாரணம் : உருவுணர் விலாமையானும் எ - கு இந்தப் பூததேகமானது சவமான பொழுது அறியாதென்றும் அன்றியும் உறக்கத்தின்கண் வாயுப்பூதம் அறியா தென்றும் உலகாயதன் கருத்தை மறுததற்கு பி - ம் சிவஞான சித் தியாரில் " அறிவு பூதம தென்னில் வேறு புறத்த நிந்தமை கண்டி லம், செறிவு தான்உட லத்தெ னில்சவ மான போதுடல் தேருமோ, குறிகொ ளாதுடல் வாயு வானது கூடிடா மையின் என்னின்நீ, பிறித ராதுயிர் நிற்க ஞானம் உறக்கம் என்பிற வாததே " (பரபக் கம், 42) எ - து கண்டுகொள்க. இனி, ஒரோரு புலன்களாக மருவி

நின் றறிதலானும் எ - கு இந்திரியங்கள் அறியாதென்றும் புத்தரில் மாத்தியமிகன் கருத்தை மறுத்ததற்கு பி - ம் சித்தியாரில் "கருவி யும் ஒளியும் வேறு கண்டிடுங் கருத்து நிற்கப், பொருள்புண ராமை யாலே போதம்வந் தெழுவ தின்றும், மருவிடும் பொருளுணண் டாக வந்தெழும் புந்தி யானல், பொருளுள தாகு மாகப் போதமும் உள்ள தாமே" (ஷை 140) எ - ம், "அறிவதைம் பொறியே யென்னின் உறக்கத்தி னறிவா வாகும், அறிவதும் ஒன்றென்றாக ஒன்றொன்றாய் அறியு மென்னில், அறிவுக ளொன்றை யொன்றங் கறிந்திடா ஐந்தை யுங்கொண், டறிவதொன் றுண்ட தான்மா ஐம்பொறி அறிந்தி டாவே" (3. 3) எ - து கண்டுகொள்க. இனி, மூன்றாவது மனுதிகள் தம்மின் மன்னித் தருபயன் றுகர்தலானும் எ - கு அந்தக் கரணங்கள் அறியாதென்று மாயாவாதி கருத்தை மறுத்ததற்கு பி-ம் சித்தியாரில் "வேற தாகும்உரு வத்திலேபரம் வெளிப்ப டும்மென விளம்பில்நீ, ஊறி லாஉருஅ சத்தி லேபிரம முண்டுதா னுணர்வி லாததென், மாறி வாயுவு மனுதி யானவையும் வந்தி டாமையினி வின்றெனின், ஈறு தானுடைய தாயதோ பிரம மென்கொ லோவிவை யிறப்பதே" (பரபக்கம், 244) எ - து கண்டுகொள்க. இனி, நாலாவது உயிர் சடமாதலானும் எ - கு வாயுபபூதம் அறியா தென்று உலகாயதனை மறுத்ததற்கு முற்பதத்திலே இவனை மறுத்த உதாரணத்திலே கண்டுகொள்க. அன்றியும் உயிர் சடமாதலானும் எ - கு பிராணவாயு என்று பொருள்படுததி அகச்சமயத்திற் சங்கி ராந்தவாதி என்பாருமுளா. அதற்கு இந்தச் செய்யுளின் கருத்து "புகலுயி ரில்லெனும் புறச்சம யத்தவர், தகவி லுரையைச் சாற்றி மறுத்தது" என்று புறச்சமயிகள் அத்தத்தை மறுக்கையி னுலே அது அத்தமல்லவென அறிக.

இதனுற் சொல்லியது ஆன்மா என்பது ஒன்றில்லை யென்று சொல்லுகிற உலகாயதன் மாத்தியமிகன், மாயாவாதி இவர்கள் மூவர் அத்தத்தையும் மறுத்து, மாணவகனை நோக்கி ஆன்மா உண் டென்று நாட்டி, இந்த ஆன்மாவுஞ் சிவனறிவிக்க அறிந்து இந்த உடலிலே நின்று சீவிக்குமென்னும் முறைமையை அறிவித்தது. ரு

அப்படிச் சிவனறிவிக்க ஆன்மா அறியுமென்பது பொருளல்ல ஆன்மா தானேயல்லவோ அறிந்து சீவித்து நிற்கும் என்கிற அவிகார

வாதியையும், அதுவல்ல ஆன்மாவுக்கு அறிவில்லையென்கிற சங்கிராந்தவாதியையும்,அதுவல்ல ஆன்மாவுக்கு இந்திரியங்கள் அறிவைக் கொடுக்குமென்கிற சிவசமவாதியையும், அதுவல்ல ஆன்மாவுக் கென்ன ஒரு சிறறறிவுஞ் சற்றுமில்லை சிவனறிவு கொடுத்தறிவித்தால் அறியுமென்கிற பரிணாமவாதியையும் மறுத்தருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

54\. அறிவெனில் வாயில்வேண்டா அன்றெனில் அவைதாம்என்னை
அறிவதை உதவு மென்னில் அசேதனம் அவைதா மெல்லாம்
அறிபவன் அறியுந் தன்மை அருளுவன் என்னி லான்மா
அறிவில தாகும் ஈசன் அசேதனத் தளித்தி டானே. ச

உயிருள தென்னு முட்சம யத்தவர்
செயிருறு மொழியைத் தெரிந்து செப்பியது.

(உரை) அப்படிச் சிவனறிவிக்கவேண்டா ஆன்மா தானே அறியுமென்கிற ஈஸ்வர அவிகாரவாதியை மறுத்தருளிச் செய்கின்றது. அறிவெனில் வாயில் வேண்டா - அப்படி ஆன்மாவை அறிவென்பையாமாகில் ஒன்றைஅறியுமிடத்து இந்திரியங்களைக்கொண்டு அறிய வேண்டுவதில்லையாம். ஆகையால் தற்சுதந்தரமா யறிகிறவன் அல்ல என்பது கருத்து. அன்றியும இரண்டாவது ஆன்மாவை அறிவல்ல என்கிற சங்கிராந்தவாதியை மறுத்தருளிச் செய்கின்றது; அன்றெனில் அவைதாம் என்னை - ஆன்மாவை அறிவல்ல என்பையாமாகில் அந்தஇந்திரியங்களால் இவனுக்கு ஒருபயனுமில்லையாகவேண்டும. ஆகையால் இவனுக் கறிவில்லையென்னவும் ஒணாதென்பது கருத்து. அன்றியும் மூன்ருவது இந்திரியங்கள் ஆன்மாவுக்கு அறிவைக் கொடுக்குமென்ற சிவசமவாதியை மறுத்தருளிச் செய்கின்றது; அறிவதை உதவுமென்னில் அசேதனம் அவைதாம் - இந்திரியங்கள் ஆன்மாவுக்கு அறிவைக் கொடுக்கு மென்பையாமாகிற் சேதனனுயுள்ள ஆன்மாவுக்கு அசேதனமாயுள்ள இந்திரியங்கள் அறிவைக் கொடுக்கமாட்டாது. ஆகையால் இந்திரியங்களைக்கொண்டு ஆன்மா அறியுமென்பது கருதது. இனி நாலாவது ஆன்மாவுக் கெனவோர் சிறறறிவுதானுமில்லை சிவனறிவு கொடுத்தால் அறியுமென்ற பரிணாம

வாதியை மறுத்தருளிச் செய்கின்றது; எல்லாம் அறிபவன் அறியுந் தன்மை அருளுவன் என்னி லான்மா அறிவில தாகும் - சர்வத்தையும் ஒரு நிகழ்ச்சியாய் அறிகிற சிவன்தானே ஆன்மாவுக்கு அறிவைக் கொடுப்பனென்று நீ சொல்லில் முன்பு ஆன்மாவுக்குச் சிற்றறிவு தானு மில்லையாக வேண்டும். அப்படி ஆன்மாவுக்கு முன்பு அறிவுண்டாமாகில் சிவன் அறிவிக்க வேண்டுமோ என்று நீசொல்லில்; ஈசன் அசேதனதளித்தி டானே - சிவன் அறிவுள்ள முதலுக்கு அறிவைக் கொடுப்பதொழிந்து அறிவில்லாத கடபடாதிகளுக்கு அறிவைக் கொடான்.

உதாரணம் :—இங்ஙனங் கூறப்பட்ட சமயிகள் மதமும் அதற்கு மறுப்புஞ் சங்கற்பநிராகரணத்திலே காட்டுதும். ஈஸ்வரவிகாரவாதி ஆன்மாவை அறிவென்றதற்கு பி - ம் "பலை றுளைக் கடத்தி னுள்விளக் கேய்ப்ப - அறிவுள தாகும் உருவுறும் உயிர்கள்" (10. 48 - 49) எ - து அவன் மதத்திலே கண்டுகொள்க. அப்படி ஆன்மா அறிவல்லவென் றவனை மறுத்ததற்கு பி - ம் "இருந்ததன் கேள்வி திருந்திடும் உயிர்கள் - அறிவின வாயிற் பொறிபுலன் என்னை - மற்றவை பற்றி உற்றறிந் திடுதலின் - அறிவென வழங்கும் உயிரென உரைத்தல் - காணுங் கண்ணினன் கைகொடு தடவிப - பூணும் பொருளின் பெயர்பல புகறல் - என்னுங் கிளவி தன்னொடு தருமே" (11. 1-7) எ - து அவன் மறுப்பிலே கண்டுகொள்க. இனி, இரண்டாவது ஆன்மாவை அறிவல்லவென்று சங்கிராந்தவாதி சொன்னதற்கு பி - ம் "நீங்காது ஒளிர்உயிர் - விளக்கென நிற்கும் அளப்புறும் அறிவின்று" (9. 91-92) எ-து அவன் மதத்தில் கண்டுகொள்க. இனி ஆன்மாவுக்கு அறிவுண்டென்றவனை மறுத்ததற்கு பி-ம் "இன்றுன துரையின் நன்றி உயிர்ஒளித் - தீபம் போலத் தாபந் தரில்இருள் - செறியுந் தன்மை என் அறிவில தாகில் - ஒளியென உரைத்த தெளிவதற் கேதாம்" (10. 1-4) எ - து அவன் மறுப்பிலே கண்டுகொள்க. இனி மூன்றுவது இந்திரியங்கள் ஆன்மாவுக்கு அறிவைக் கொடுகருமென்று சிவசமவாதி சொன்னதற்கு பி - ம் "பாசம் ஐம்புலன் தேசுற உணர்த்தப் - பசுத்தனி ஞானம் பொசித்திடு மன்றே" (8. 13-14) எ - து அவன் மதத்தில் கண்டுகொள்க. இனி இந்திரியங்கள் ஆன்மாவுக்கு

அறிவைக் கொடுக்கமாட்டாதென்று அவனை மறுத்ததற்கு பி - ம் "பொறிபுலன் - தானே அறியா" (9. 7-8) எ - து அவன் மறுப்பிலே கண்டுகொள்க. இனி, நாலாவது ஆன்மாவுக்குச் சிற்றறிவு தானு மில்லை சிவனறிவு கொடுத்தாலல்லது அறிவில்லையென்று பரிணாமவாதி சொன்னதற்கு பி - ம் "அறிவோன் தானும் அறிவிப் போனும் - அறிவாய் அறிகின் றானும் அறிவுறு - மெய்ப்பொருள் தானும் வியந்தி து வெனப்படும் - அப்பொருள் யாவும் அவனே என்றும்" (11. 77-80) எ - து அவன் மதத்திலே கண்டுகொள்க. இனி, ஆன்மாவுக்கு அநாதியே சிற்றறிவுண்டென்று அவனை மறுத்ததற்கு பி - ம் "அறிவொன் றில்லோர்க் கிறையருள் உதவுதல் - பிறிவறி வரிய செறிஇருள் இடத்தோர் - அந்தகர்க் காண வந்தோர் எம்மை - நீவிருங் காண வேணும் என்றுங் - கெடுத்தொரு தீபங் கொடுத்ததை ஒக்கும் - இச்செயற் கிறைவன் கொச்சையன் அன்றே" (12. 115-120) எ - து அவன் மறுப்பிலே கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, ஆன்மா தானே அறியுமென்ற அவிகார வாதியையும், ஆன்மாவுக்கென்னவோர் அறிவில்லை என்ற சங்கிராந்த வாதியையும், ஆன்மாவுக்கு இந்திரியங்கள் அறிவைக் கொடுக்கு மென்ற சிவசமவாதியையும், ஆன்மாவுக்குச் சிற்றறிவுதானுமில்லை சிவனறிவித்தால் அறியுமென்ற பரிணாமவாதியையும் மறுத்தருளிச் சிற்றறிவாயுள்ள ஆன்மாவுஞ் சிவனறிவித்தால் அறியுமென்னும் முறைமையை அறிவித்தது. உ

அப்படி ஆன்மாவுக்கென்ன ஓரறிவுண்டாமாகில் அப்படி அறிவிக்கின்ற சிவனை இவனால் அறியப்படாதோ என்கின்ற பரிணாமவாதியையுஞ் சிவனை ஆன்மாவால் ஒரு காலத்தினும் அறியப்படாதென்கின்ற பாடாணவாதியையும் மறுத்து, ஆன்மா இந்திரியங்களுடனே கூடி அறியும் அறிவால் அசத்தாகிய பிரபஞ்சத்தை அறியுமதொழிந்து சிவனை அறியமாட்டாதென்னும் முறைமையை மேலருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

55\. அறிவினால் அறிந்த யாவும் அசத்தாதல் அறிதியென்றும்
அறிவினால் அறியொ ணாதேல் ஆவதொன் றின்மைதொன்மை

அறிவுதான் ஒன்றை முந்தி அதுவது வாகக் காணும்
அறிவுகாண் அசத்து மற்ற தறிவினுக் கறியொண் ணாதே.ரு

பொறியா லுயிரறி பொருளசத் தந்த
அறிவா லமலனை யறிவரி தென்றது.

(உரை) ஆன்மாவைச் சிவன் அறிவித்தாலும் இந்த ஆன்மாவுக்கு அறிவு உண்டாகில் அந்தச் சிவனை இவனால் அறியப்படாதோ என்கிற பரிணாமவாதியை மறுத்தருளிச் செய்கின்றது. அறிவினால் அறிந்த யாவும் அசத்தாதல் அறிதி - ஆன்மபோதத்தாற் சுட்டி அறியப்பட்ட பொருள்களெல்லாம் அசத்தாய் அழிந்துபோகிறது உண்மையென்று அறிவாயாக. ஓகோ, வாக்கு மனோதீதகோசரனாய் இருக்கப்பட்ட சிவனை இவனால் அறியப்படுமோ என்ற பாடாணவாதியை நோக்கி மறுத்தருளிச் செய்கின்றது; என்றும் அறிவினால் அறியொணாதேல் ஆவதொன் றின்மை - இந்தப் பெத்தத்திலொழிந்து முத்தியினும் இவன் சிவனை அறியானாமாகில் இந்த ஆன்மாவுக்கு ஒரு பயனுமில்லையாம். அப்படிச் சொல்லுகிறதென்ன, முற்பதத்திலே ஆன்மபோதத்தால் அறியப்பட்டதெல்லாம் அசத்தாய் அழிந்துபோமென்று சொல்லி, இப்பொழுது இவனாற் சிவனை அறியப்படாதாமாகில் இவனுக்கு ஒரு பயனுமில்லை என்பான். ஏனென்று மீளவுங் கேட்ட பரிணாமவாதியை மறுத்தருளிச் செய்கின்றது; தொன்மை அறிவுதான் ஒன்றை முந்தி அதுவதுவாகக் காணும் அறிவுகாண் அசத்து - பழைய ஆன்மபோதமானது இந்திரியங்களுடனே கூடி அந்த விடயந் தானாய் முற்பட்டு நின்று காண்கிற அறிவைகாண் அசத்தாய் அழிந்துபோமென்றோம். ஆனால் பின்னை எங்ஙனே என்னில்; மற்றது அறிவினுக் கறியொணாதே - (மற்று வினைமாற்று) அந்த ஞானமானது இந்த இந்திரியங்களோடு கூடி அறியும் அறிவால் அறியப்படாது.

அறிவினால் அறிந்த யாவும் அசத்தாதல் அறிதி எ - கு அப்படிச் சிவன் அறிவித்து நிறகச்செய்தேயும் ஆன்மபோதத்தால் அறிகிறதெல்லாம் அசத்தாமென்று பரிணாமவாதியை மறுத்ததேதென்னில், சிவன் அறிவிக்கச்செய்தேயும் ஆன்மாவால் அபபடி அறிவிக்

கிற சிவனை அறியப்படாதென்றதென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "அன்னிய மிலாமை யானும் அறிவினுள் நிற்ற லானும், உன்னிய வெல்லாம் உண்ணின் றுணர்த்தலவன் ஆதலானும், என்னது யானென் றேதும் இருஞ்செருக் கறுத்த லானும், தன்னறி வதனாற் காணுந் தகைமையன் அல்லன் ஈசன்" (6. 8) எ - து கண்டு கொள்க. இனி இரண்டாவது, என்றும் அறிவினால் அறியொணா தேல் ஆவதொன்றின்மை எ - கு முத்தியிலுஞ் சிவனை ஆன்மாவால் அறியப்படாதாயின் இவனுக்கொரு பயனுமில்லையென்று பாடாண வாதியை மறுத்ததற்கு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில் "காட்சி யென்னக் காணாத் துயர - மாட்சியை முத்தி எனவகுத் துரைக்கிற் - கரணு பாவம் மரணம் கருமரம் - எய்ந்தவர் முத்தி சேர்ந்தவ ரன்றே - இனைய கதிக்கோர் முனைவரும் வேண்டா - தனிதரு துயரம் எனும் இது திடனே - பாடா ணத்திற் கூடா முத்தி" (7. 9-15) எ - து கண்டுகொள்க. இனி மூன்றாவது, தொன்மை அறிவுதான் ஒன்றை முநதி அதுவதுவாகக் காணும் அறிவுகாண் அசத்து என்று மீளவும் பரிணமவாதியை மறுத்ததற்கு பி - ம் முற்செய்யுளில் இரண்டாம் பதத்தில் "அறிவதை யுதவு மென்னில் அசேதன மவைதாம்" (54) எ - து கண்டுகொள்க. இனி நாலாவது, மற்றது அறிவினுக்கு அறியொணாதே என்றதை அந்த ஞானமானது இந்திரியங்களோடுங் கூடி அறியும் அறிவால் அறியப்படாதென்றதற்கு பி - ம் திருவாசகத்தில் "அனைத்துலகு மாயநின்னை ஐம்புலன்கள் காண்கிலா" (5. 76) எ - ம், காளத்தி யந்தாதியினும் "நிறைந்தெங்கு நீயேயாய் நின்றாலு மெனறும் - அமைந்தைம் புலன்காண வாராய்" (11. 9. 48) எ - ம் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது ஆன்மாவுக்குச் சிற்றறிவு உண்டா மாகில் தன்னை அறிவிக்கிற சிவனை அவனறியானோ என்ற பரிணம வாதியையும் ஆன்மாவால் ஒருகாலத்திலுஞ் சிவனை அறியப்படா தென்ற பாடாணவாதியையும் மறுத்து, பெதத மொழிய முத்தியினும் ஆன்மா அறிந்து அநுபவியாதபொழுது அவனுக்கொரு பயனும் உண்டாகாதென்னும் முறைமையை அறிவித்தது. (3)

அப்படி அசத்தாகிய பிரபஞ்சத்தை ஆன்மபோதத்தால் அறியப்படுமோ என்று பரிணமவாதி ஆசாரியரை வினவ, அப்பொழுது

ஈஸ்வர அவிகாரவாதி வந்து அசத்தாகிய பிரபஞ்சத்தை ஆன்மா அறியாமற் பின்னை அறிகிறதேதென்று கேட்க, அப்படியல்ல பிர பஞ்சத்தை அறிகிறது சிவனே அறிவனென்று மீளவும் பரிணமவாதி சொல்லுகையும், அதனை அல்லவென்று மறுத்து இந்திரியங்கள் அறியுமென்று சங்கிராந்தவாதி சொல்லுகையும், அதனை அல்ல என்று மறுத்து ஆன்மாவும் இந்திரியங்களுங் கூடி அறியுமென்று சிவசமவாதி சொல்லுகையும், அதனை அல்லவென்று மறுத்து ஆன் மாவும் அருளுங் கூடி அறியுமென்று ஈஸ்வர ஐக்கியவாதி சொல்லு கையும், அதனை அல்லவென்று மறுதது அருளும் இந்திரியங்களுங் கூடி அறியுமென்று சைவர் சொல்லுகையுமான அவதரத்து இவர் கள் ஒருவர்க்கொருவர் மாறுபாடாகச் சொல்லுகிற இதிலே அசத் தாகிய பிரபஞ்சத்தை அறிகிறதுதான் எந்த அறிவென்று ஆசாரி யரை நோக்கி மாணவகன் வினவின அவதரத்து இவர்கள் ஆறு பேருஞ் சொல்லுகிற அர்த்தங்களெல்லாஞ் சித்தாந்தத்துக்கு வாரா தென்று அவரவர் சொல்லப்பட்ட அத்தங்களெல்லாவற்றையும் மறுத்துக் காட்டி அருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

56. எவ்வறி வசத்த றிந்த தெனில்உயிர் அறியா தீசன்
அவ்வறி வறியான் அல்ல தசேதனம் அறியா தாவி
செவ்விய கருவி கூடித் தெரிவுறு தருளிற் சேரா
ஒவ்விரு வகைய தென்னில் ஒளியிரு ளொருங்குறுவே. ௬

அந்த அசததை யசத்தென் றறிந்தது
எந்த அறிவென் றியம்புக என்றது.

(உரை) எவ்வறி வசத்தறிந்ததெனில் - இந்தச் சமயிகள் ஆறு பேருஞ் சொல்லுகிற இதிலே அசத்தாகிய பிரபஞ்சத்தை அறி கிறது எந்த அறிவென்று நீ கேட்கிருயாமாகில்; உயிர் அறியாது - அசததை ஆன்மாவால் அறியப்படாது. அதுவேனென்னில், ஆன்மா தனக்கென்ன ஓரறிவிலாதபடியாலே பிரபஞ்சத்தைத் தானுக அறிய மாட்டாதாகையாலென அறிக. அன்றியும்; ஈசன் அவ்வறி வறி யான் - சிவனுக்கும் அப்படி அறிகிற அறிவில்லை. அது ஏனென் னில், அவனெங்கும் பூரணனுயிருக்கையாலே அவனுக்கொன்றை

யுஞ் சுட்டி அறியவேண்டுவதில்லை யாகையாலென அறிக; அல்ல தசேதனம் அறியாது - அவை இரண்டையுமன்றி இந்திரியங்களுந் தானாக அறியமாட்டாது. அது ஏனென்னில் அவை சடமானபடி யாலே தானாக அறியமாட்டாதாகையாலென அறிக. அன்றியும்; ஆவி செவ்விய கருவி கூடித் தெரிவுறாது - ஆன்மாவும் சேர்பட்ட கருவிகளுங் கூடி அறியமாட்டாது. அது ஏனென்னில், ஆன்மா தனக்கென்னவோர் அறிவில்லாதபடியாலும் இந்திரியங்கள் சட மானபடியாலுந் தம்மிற் கூடி அறியமாட்டாதாகையாலென அறிக. அன்றியும்; அருளிற் சேரா - ஆன்மா அருளோடுங் கூடி அசத்தை அறியவேண்டுவதில்லை. அது ஏனென்னில், ஆன்மா அருளோடுங் கூடின இடம் முத்திக்கு ஏதுவாகையால் அசத்தாகிய பிரபஞ்சத்தை அறியவேண்டுவதில்லை யாகையாலென அறிக. அன்றியும்; ஒவ் விரு வகையதென்னில் - இங்ஙனஞ் சொல்லிவந்த ஒழுங்கிலே பதி பசு பாசம் மூன்றினுள்ளும் ஒவ்வொன்றாக அறியுமென்றும் இவ் விரண்டாக அறியுமென்றுஞ் சொல்லிவந்த வகையில் ஒழிந்துள்ள அருளும் இந்திரியங்களுங்கூடி அசத்தாகிய பிரபஞ்சத்தை அறியு மென்னில் அப்படி யறியாது. அதுவேனென்னில்; ஒளியிருள் ஒருங்குறுவே - ஒளியாகிய ஞானமும் இருளாகிய அஞ்ஞானமும் ஓரிடத்திற்கூடி நில்லாதாகையால்.

என்னவே சிவன் தோய்வற நின்றுணர்த்த ஆன்மா பிரபஞ் சத்தோடுங் கூடி அறியுமென்பது கருத்து. இதற்கு பி - ம் இந் நூலிலே " தனக்கென அறிவி லாதான் தானிவை அறிந்து சாரான், தனக்கென அறிவி லாத வாயில்தான் அறியா சாரத், தனக்கென அறிவி லாதான் தத்துவ வன்ன ரூபன், தனக்கென அறியா னல்இச் சகலமும் நுகருந் தானே" (64) எ - து கண்டுகொள்க.

உதாரணம் :—இந்தச் சமயிகள் ஆறுபேருடைய மதத்துக்கும் மறுப்புக்கும் உண்டான பிரமாணங்கள் சங்கற்ப நிராகரணத்தில் காட்டுதும். அவை வருமாறு: இச்செய்யுளின் முதற் பதத்திலே அசத்தாகிய பிரபஞ்சத்தை உயிரறியுமென்று ஈஸ்வர அவிகாரவாதி சொன்னதற்கு பி - ம் "பஃறுளைக் கடத்தி னுள்விளக் கேய்ப்ப - அறிவுள தாகும் உருவுறும உயிர்கள் - கண்ணு லோசையுங் கரண

முங் கருத - வொண்ணு தென்னும் உணர்வுடை மையிஞல் - அவ் வவ புலன்கட் கவ்வவ பொறிகள் - செவ்விதின் நிறுவிச் சேர்ந் தவை நுகரும்" (10. 48-53) எ - து கண்டுகொள்க. அசத்தை உயிரறியாதென்று அவனை மறுத்ததற்கு பி-ம் " அவ்வவ புலன்கட் கவ்வவ பொறிகளைச் - செவ்விதின் நிறுவலின் அறிவெனச் செப் பினை - அறிவி லாமைகண் டனம்அணை புலற்குப் - பொறிகள் ஏவ லின் அறிவொடு பொருந்தில் - கண்டதோர் பொறியாற் கொண் டிட வேண்டும்" (11. 8-12) எ - து கண்டுகொள்க. இனி, அசத் தாகிய பிரபஞ்சத்தைச் சிவனறிவனென்று இரண்டாவது பரிணும வாதி சொன்னதற்கு பி - ம் " அறிவோன் தானும் அறிவிப் போனும் - அறிவாய் அறிகின் ருேனும் அறிவுறு - மெய்ப்பொருள் தானும் விபந்தி து வெனப்படும் - அப்பொருள் யாவும் அவனே என்றும்" (11. 77-80) எ - து கண்டுகொள்க. இனி, அசத்தைச் சிவனுக்கு அறியவேண்டுவ தில்லையென்று அவனை மறுத்ததற்கு பி - ம் " தனக் கெனில் அஃதும் இசைப்பதொன் றன்றே - தன்போல் அறிஞருந் தலைவரும் இலரால் - மின்போல் நிலைமையை வேண்டலும் பழுதே" (12. 13-15) எ - து கண்டுகொள்க. இனி, அசத்தாகிய பிரபஞ் சத்தை இந்திரியங்கள் அறியுமென்று மூன்ருவது சங்கிராந்தவாதி சொன்னதற்கு பி - ம் "பூட்டைப் - பலவகை உறுப்பும் இலகிய தொழில்போல் - ஐம்பொறி புலன்கள் இன்புறு மன்றே" (9. 95-97) எ - து கண்டுகொள்க. அப்படி இந்திரியங்களாற் பிரபஞ்சத்தை அறியப்படாதென்று அவனை மறுத்ததற்கு பி - ம் "புலன்ஐம் பொறியில் நிலவிடும் என்றனை - அஞ்சும் ஒருகால் அஞ்சா தறிதற் கழிவென்" (10. 12-14) எ - ம், "இதுவே யல்லது கதுமென இருசெவி - இருகூற் ருெருகால் தெரியாத் தன்மைவந் - தெய்தும் அனுதியும் மெய்யிர்ச் செயலுந்-தனக்கிலை யொருவர்க் கெனத்தெளி கிலையே" (10. 18-21) எ - ம் கண்டுகொள்க. இனி, அசத்தாகிய பிரபஞ்சத்தை ஆன்மாவும் இந்திரியங்களுங் கூடி அறியுமென்று நாலாவது சிவசமவாதி சொன்னதற்கு பி - ம் " பாசம் ஐம்புலன் தேசுற வுணர்த்தப் - பசுத்தனி ஞானம் பொசித்திடு மன்றே" (8. 13-14) எ - து கண்டுகொள்க. அப்படி அவை இரண்டுங் கூடினு

லும் அசத்தாகிய பிரபஞ்சத்தை அறியமாட்டாதென்று அவனை மறுத்ததற்கு பி - ம் "அங்கியம் அறியா மன்னுயிர் பொறிபுலன் - தானே அறியா" (9. 7-8) எ - து கண்டுகொள்க. இனி, அசத்தாகிய பிரபஞ்சத்தை அருளும் ஆன்மாவுங் கூடி அறியுமென்று ஐந்தாவது ஈஸ்வர ஐக்கியவாதி சொன்னதற்கு பி - ம் "உலகத் - தாயவன் உயிர்க்கு மாயையின் அருளால் - இருவினைத் தகையின் உருவினைத் தருமால் - கருமுகில் அடா இரிதரு கதிர்போன் - றறிவாம் உயிரிற் பிறியா தேயும்" (5. 4-8) எ - து கண்டுகொள்க. அப்படி அருளும் ஆன்மாவுங் கூடின அவதரந்தானே முத்தியாமென்று அவனை மறுத்ததற்கு பி - ம் "அறிவிற் கறிவு செறியவேண்டின்றே - உண்மையில் இருமையும் ஒளியே எனில்ஒரு - தன்மையாகமுன் சாற்றின ரிலரே" (6. 25-27) எ - து கண்டுகொள்க. இனி, அசத்தாகிய பிரபஞ்சத்தை அருளும் இந்திரியங்களுங்கூடி அறியுமென்று ஆறுவது சைவர் சொன்னதற்கு பி - ம் "அண்ணல் - கலைமுத லாக நிலவிய கருவிகள் - விளக்கென உதவுங் துளக்கறப் பொருந்தி" (12. 143-145) எ - து கண்டுகொள்க. அப்படியல்ல இந்திரியங்கள் ஆன்மாவோடு சம்பந்தமொழியச் சிவனோடு சம்பந்தமில்லையென்று அவரை மறுத்ததற்கு பி - ம் "மலம்இருள் இறையொளி - தான்அமர் விளக்கில் தருமருட் கலாதிகள் - ஈனமில் இவனிடத் தெவ்வா றிசைந்தன" (13. 8-10) எ - து கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, அசத்தாகிய பிரபஞ்சத்தை உயிர் அறியுமென்ற ஈஸ்வர அவிகாரவாதியையும் சிவமறியுமென்ற பரிணமவாதியையும் இந்திரியங்கள் அறியுமென்ற சங்கிராந்தவாதியையும் ஆன்மாவும் இந்திரியங்களுங்கூடி அறியுமென்ற சிவசமவாதியையும் ஆன்மாவும் அருளுங்கூடி அறியுமென்ற ஈஸ்வர ஐக்கியவாதியையும் அருளும் இந்திரியங்களுங்கூடி அறியுமென்ற சைவரையும் மறுத்த முறைமையை அறிவித்தது.

இங்ஙனம் பிரபஞ்ச காரியப்பட்டு நிற்கிற ஆன்மாவை முற்கூறிய விருத்தங்களில் அறிவென்ற சமயிகளையும் மறுத்தீர், அறிவல்ல என்ற சமயிகளையும் மறுத்தீர், பின்னை இதனை ஏதென்று சொல்லப்படும், சத்தாகிய அறிவனென்று சொல்லப்படுமோ அசத

தாகிய அறியாதவனென்று சொல்லப்படுமோ என்று வினவின மாண வகனை நோக்கி அருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

57. சத்திது வென்ற சத்துத் தானறி யாத சத்தைச்
சத்தறிந் தகல வேண்டா அசத்திது சத்தி தென்றோர்
சத்திருள் ஒளிய லாக்கண் தன்மைய தாம்அ சத்தைச்
சத்துடன் நின்று நீக்குந் தன்மையாற் சதசத் தாமே. எ

சத்தசத் தறியா தம்மிலவ் விரண்டையும்
உய்த்தறி வதுசத சத்தென் றுரைத்தது.

(உரை) சத்திதுவென்று அசத்துத் தானறியாது - சத்தாகிய சிவத்தை இது சிவமென்று அசத்தாகிய பாசங்கள் அறியமாட்டாது; அசத்தைச் சத்தறிந் தகலவேண்டா - அசத்தாகிய பாசங்கள் சிவத்தைப் பொருந்தாதபடியாலே அவையிற்றைச் சத்தாகிய சிவம் இது பொல்லாதென்றறிந்து நீங்க வேண்டுவதில்லை. ஆகையால்; அசத்திது சத்திதென்றோர் சத்து - அசத்தாகிய பாசத்தோடு கூடின பொழுது அந்தப் பாசந் தானாய் நின்றறிந்தும் சத்தாகிய சிவத்தோடுங் கூடினபொழுது அந்தச் சிவந்தானாய் நின்றறிநதும், இங்ஙனம் இவையிரண்டோடுங் கூடி அறிந்து வருகிற ஆன்மாவும் அறியுஞ் சத்தாம். அதென்போல என்னில்; இருளொளியலாக கண் தன்மையதாம் - இருளோடுங்கூடி அந்த இருள்தானாய் நின்று விழித்தும் ஒளியோடுங்கூடி அந்த ஒளி தானாய்நின்று விழித்தும் நின்றகண் அவ்விருளும் ஒளியும் அல்லாது நின்ற தன்மைபோல ஆன்மாவும் அந்தச் சத்தும் இந்த அசத்துமன்றித் தனித்தொரு முதலாய் நிற்கும். ஆனால் இந்த ஆன்மாவைச் சத்தென்று சொல்லலாமோ அசத்தென்று சொல்லலாமோ என்னில்; அசத்தைச் சத்துடன் நின்று நீக்குந் தன்மையாற் சதசத் தாமே - முன்பு கூடிநின்ற பாசங்களைச் சிவத்தோடுங்கூடி நின்று நீக்கும் முறைமையாலே ஆன்மாவுக்குச் சதசத்தன் என்கிறதே இயல்பாம். என்னவே அறிவித்தால் அறிவனென்பது கருத்து.

சத்தாகிய சிவத்தை அசத்தாகிய பாசம் அறியாதென்றது எங்ஙனே யென்னில் உடலும் உயிருங் கூடியிருந்து சீவிக்கச் செய்தே

யும் உயிரை உடலறியா திருந்தாற்போலவென அறிக. அசத்தாகிய பாசத்தைச் சத்தாகிய சிவனறிந்து அகல வேண்டா என்றது இந்திர சாலங் காட்டுமவனை அது பிரமிப்பிக்க மாட்டாதாற்போலப் பாசங் கள் சடமானபடியாலே சிவனை மறைக்கமாட்டாதாகையால் அவ னுக்கு இதையறிந்து அகல வேண்டா என்றதென அறிக. ஆன் மாவை இருளும் ஒளியுமல்லாத கண்ணின் தன்மைபோல என்றது தானாக அறிகிறவனுமல்ல அறிவித்தால் அறியாமலிருக்கிறவனு மல்ல என்றதென அறிக. சதசத்தென்றது சிவனறிவித்தால் ஆன்மா அறிவனென்றதென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "அறிந் திடும் ஆன்மா வொன்றை ஒன்றினால் அறித லானும், அறிந்தவை மறத்த லானும் அறிவிக்க அறித லானும், அறிந்திடுந் தன்னை யுந்தான் அறியாமை யானுந் தானே, அறிந்திடும் அறிவன் அன்றும் அறிவிக்க அறிவ னன்றே" (5. 3) எ - து கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது ஆன்மா அறியும் பகுதிக்கு உரியவனோ அறியாப் பகுதிக்கு உரியவனோ என்று வினவின மாணக்கனை நோக்கி இவன் தானாக அறிகிறவனுமல்ல சிவன் அறிவிக்க அறியாம லிருக்கிறவனுமல்ல ஒளியோடுகூடிக் கண்ட கண்போல அருளோ டுக்கூடி அறியுமென்னும் முறைமையை அறிவித்தது. எ

அப்படி ஆன்மா இருளும் ஒளியுமல்லாத கண்ணினது தன்மை போலே இருக்குமென்ற திருஷ்டாந்தத்தினால் விளக்கு காட்டக் கண் கண்டது கொண்டே சிவனறிவு கொடுத்தால் அறிகிறதொழி யத் தனித்தறிவில்லையென்ற பரிணமைவாதியை மறுத்து, ஆன்மாவுக் குச் சிவனறிவிக்க அறிந்தாலுஞ் சிற்றறிவுண்டென்னும் முறை மையை மேலருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

58. கண்ணொளி விளக்களித்துக் காட்டிடு மென்னின் முன்னம்
கண்ணொளி ஒன்று மின்றும் விளக்கொளி கலந்த வற்
கண்ணொளி அகல நின்றே கண்டிடும் வேறு காணக் [றைக்
கண்ணொளிவிளக்கின்சோதி கலந்திடுகருத்தொன்றன்றே. அ

அற்றமி லுயிர்க்கறி விலையெனல் அடாது
சிற்றறி வென்றுமுண டென்று செப்பியது.

(உரை) கண்ணொளி விளக்களித்துக் காட்டிடு மென்னில் - கண்ணினது பிரகாசத்தையும் விளக்கு கொடுத்துக் காட்டுமென்று

நீ சொல்லில் ; முன்னங் கண்ணொளி யொன்று மின்றும் - விளக்கு காட்டுவதற்கு முன்பு கண்ணுக்குப் பிரகாசமொன்று மில்லையாக வேண்டும். அப்படி விளக்கு வருவதற்குமுன் கண்ணுக்கு ஒளி யுண்டோ என்று நீ கேட்கில்; விளக்கொளி கலந்தவற்றைக் கண் ணொளி அகல நின்றே கண்டிடும் - விளக்கின் பிரகாசங் கூடிக் காட்டுகிற பதார்த்தங்களைக் கண்ணின் பிரகாசமானது விளக்கின் பிரகாசததோடுங் கூடாமல் இருளிலே நின்று காண்கையால் கண் ணுக்குத் தனியே ஒளியுணடென்று அறிவாயாக. அப்படி இருளுக் குள்ளே நின்று கண் கண்டதாகிலும் ; வேறு காணு - காண்கிற பதார்த்தங்களை விளக்கொளியோடுங் கூடி நின்று காண்கிறதொழி யத் தனித்துக் காணமாட்டாதென்று நீ சொல்லுகிறுயாமாகில் அப் படி விளக்கோடு கூடிக் கண் கண்டதாமாகிலும் ; கணணொளி விளக்கின் சோதி கலந்திடுங் கருத்தொன் றன்றே - கண்ணினுடைய பிரகாசம் விளக்கினுடைய பிரகாசத்தோடுங் கூடியே நின்று சீவித்ததாகிலும் கருத்து வேறுபாடுண்டு. அஃதெங்ஙனே என்னில், விளக்கு எல்லாவற்றையுஞ் சுட்டறநின்று காட்டும் ; கண் எல்லா வற்றையுஞ் சுட்டிநின்று காணும் ; அதுபோலச் சிவனுஞ் சுட்டற நின்று அறிவிப்பன் ; ஆன்மாவும் சுட்டிநின்று அறியும். ஆகையால் ஆன்மாவுக்குஞ் சிவனுக்கும் அறிவொன்றல்ல. அன்றியும், விளக்கு கண்ணுக்கொளியைக் கொடுத்துக் காட்டுமேயாமுல் விழிகண் குரு டனுக்கும் விளக்கு காட்டவேணும் ; அதுவில்லாதது கொண்டே கண்ணுக்கு விளக்கு ஒளியைக் கொடுத்துக் காட்டுமென்கிறது சித் தாந்த விரோதமென அறிக.

உதாரணம் : கண்ணுக்கு விளக்கு ஒளியைக் காட்டினுற் போல முன்னே சிற்றறிவுதானு மில்லாத ஆன்மாவுக்குச் சிவன் அறிவைக் கொடுத்து அறிவிபபனென்று பரிணமவாதி சொன்ன தற்கு பி - ம் சங்கற்ப நிராகரணததில் " கண்ணின தொளிஅக் கண் ணின தெனில்அது - திண்ணிய இருளிற் செறிபொருள் தெரித்த லும் - இன்மை மின்மினி யெனஇரு கணமணித் - தன்மை தானுந் தாவில ததனுல் - கண்ணின துருவும் அதிற்கதிர் ஒளியும் - நணண ருஞ் சத்தி சத்தர்கள் நடிப்பே" (11. 63 - 68) எ - து கணடு

கொள்க. அப்படியே சிவனறிவிக்க ஆன்மா அறிந்தாலும் அநா தியே ஆன்மாவுக்குச் சிற்றறிவுண்டென்று அவனே மறுத்ததற்கு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில் "கண்ணின துருவும் அதிற்கதிர் ஒளியும் - நண்ணருஞ் சத்தின் நாடகம் எனில்அதற் - கேதுவும் பயனும் ஓதவேண்டும் - நின்மொழி விரோதம் நீடல வியற்கையும்- தன்மை சாத்திரமுஞ் சகலமும் என்செயும்" (12. 70 - 74) எ-ம், "அறிவொன் றில்லோர்க் கிறையருள் உதவுதல் - பிறிவறி வரியச் செறிஇருள் இடத்தோர் - அந்தகர்க் காண வந்தோர் எம்மை - நீவி ரும் காண வேணும் என்றுங் - கெடுத்தொரு தீபங் கொடுத்ததை ஒக்கும் - இச்செயற் கிறைவன் கொச்சையன் அன்றே" (12. 115-120) எ - ம் கண்டுகொள்க. இனி, கருத்தொன்றன்றே எ - கு சிவனுக்கும் ஆன்மாவுக்கும் ஓரறிவல்ல என்றதற்கு பி - ம் சித்தியா ரில் "சிவன்சீவ னென்றிரண்டுஞ் சித்தொன்று மென்னில் சிவன ருட்சித் திவன்அருளைச் சேருஞ்சித் தவன்றான், பவங்கெடு புத்தி முத்தி பண்ணுஞ்சித் திவற்றிற் படியுஞ்சித் தறிவிக்கப் படுஞ்சித்து மிவன்றான், அவன்றனே அறியுஞ்சித் தாதலின லிரண்டும் அணைந் தாலும் ஒன்றாகா தநந்நியமா யிருக்கும், இவன்றானும் புத்தியுஞ்சித் திவனோமோ புத்தி இதுவசித்தென் றிடில்அவனுக் கிவனும்அசித் தாமே" (11. 11) எ - து கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது கண்ணுக்கு விளக்கு காட்டக் கண் கண்டது கொண்டே ஆன்மாவுக்குச் சிற்றறிவு தானு மில்லையென்ற பரிணமவாதியை மறுத்து விளக்கோடு கூடிக் கண் கண்டதாமாகி னும் விளக்கினொளி கண்ணில் தாக்காமல் இருளிலே நின்று காண் கையால் ஆன்மாவுக்குச் சிவனறிவித்தாலும் அநாதியே சிற்றறிவுண் டென்னும் முறைமையை அறிவித்தது. அ

இங்ஙனஞ் சிற்றறிவனென்று சொல்லி நாட்டப்பட்ட இந்த ஆன்மா ஒரு சரீரத்தோடுங் கூடிநின்று சீவிக்குமிடத்து ஒரு தானத் திலே நின்றறியுமென்றும், சரீரமெங்கும் நிறைந்தறியுமென்றும், எங்கும பூரணமாய் நின்றறியுமென்றும், தானே விளங்கின அறிவாய் நிற்குமென்றும், அறியாமையா யிருக்குமென்றும், இங்ஙனம் பலவகை களாகச சில சமயிகளா யுள்ளவர்கள் சொல்லும அத்தங்களின்

உண்மையாகச் சொல்லுவதேதென்று வினவின மாணவகனை நோக்கி இவைகளெல்லாஞ் சித்தாந்த வழக்கினை அறிந்த நல்லோர்கள் சொல்லார்களென்று மேலருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

59. ஓரிடத் திருத்தல் மாயா உருநிறைந் திடுதல் ஒன்றும்
பேரிடத் துறைதல் தானே பிறங்கறி வாகி நிற்றல் [லோர்
சோர்வுடைச் சடநி கழ்த்தல் எனுமிவை சொல்லார் நல்
ஓர்விடத் துணரும் உண்மை ஒளிதரும் உபலம் போலும்.௬

தொடுத்தஐ வகையின் தொல்லுயிர்த் தன்மை
அடுத்தத னியல்பியல் பாகு மென்றது.

(உரை) ஓரிடத்திருத்தல் - ஆன்மா ஒருடலிலேநின்று அறியுமிடத்து ஒரு தானத்திலேநின்று அறியுமென்றும்; மாயாஉரு நிறைந்திடுதல் - இந்த மாயா தேகமெங்கும் நிறைந்தறியுமென்றும்; ஒன்றும் பேரிடத்துறைதல் - எங்கும் பூரணமாய் நின்றறியுமென்றும்; தானே பிறங்கறிவாகி நிற்றல் - ஒருவா அறிவியாமல் தானே விளகக முடைய அறிவாயிருக்குமென்றும்; சோர்வுடைச் சடநிகழ்த்தல் - குற்றத்தையுடைய அசேதனமாயிருக்கு மென்றும்; எனுமிவை சொல்லார் நல்லோர் - என்றிங்ஙனஞ் சொல்லப்பட்ட அர்த்தங்களைச் சித்தாந்த வழக்கை அறிநத பெரியோர்கள் சொல்லாாகள். பின்னை எங்ஙனேயென்னில்; ஓாவிடதது உணரும் உண்மை ஒளிதரும் உபலம்போலும் - விசாரிக்குமிடதது ஆன்மா ஒரு சரீரத்திலே நின்று அறிகிற முறைமை பிரகாசத்தினையுடைய படிகம்போலக் கூடின தன் தன்மையாய் நிற்கும்.

ஓரிடத்திருத்தல் என்றதை நல்லோர் சொல்லாரென்று மறுததது ஏதென்னில் அப்படி ஆன்மா ஒரு தானத்திலே நின்றறியுமாஞல் உருப்பட்டழிவதுஞ்செயயும், சரீரமெஙகும் பரிசிததாலும் அறியமாட்டாதென அறிக. என்று இஙஙனம் மறுத்ததற்கு பி - ம் சித்தியாரில் “உடலினின் ஏகதேசி உயிரெனின் உருவாய் மாயும், படர்வுறு மறிவின் நெஙகும் சுடரொளிப் பண்ப தென்னில், சுடர் தொடிற் சுடுவ தெங்கும் தொட்டிட அறிவுண் டாகும், அடர்புலன்

இடத்து மொக்க அறிவெழ வேண்டு மன்றே" (4. 16) எ-து கண்டு கொள்க. ஆகையால் இப்படி இல்லாததுகொண்டே ஏகதேசஞ் சொல்ல வழக்கில்லையென அறிக.

இனி இரண்டாவது, மாயாவுரு நிறைந்திடுதல் என்றதை நல்லோர் சொல்லாரென்று மறுத்ததேதென்னில் அப்படி ஆன்மா ஒரு சரீரமெங்கும் நிறைந்துநின்று அறியுமேயாமாகிற் கீழாலவத்தைப் பட்டு மூலாதாரத்திலே ஒடுங்கிக் கிடக்கவும் வழக்கில்லை. அன்றியுஞ் சத்தாதி விடயங்களை அறியுமிடத்துப் புலன்களெல்லாம் ஒக்கச் சீவிக்கவும் வேணும். அன்றியுஞ் சரீரத்திலே சில குறைவுபட்டால் அதற்குத் தக்கது ஆன்மாவிலுஞ் சில குறைவுபடவும் வேணும். என்றிங்ஙனம் மறுத்ததற்கு பி - ம் சித்தியாரில் "உருவினில் நிறைந்து நின்றங் குணர்ந்திடும் உயிர தென்னின், மருவிடா துறக்கம் வாயில் அறிவொக்க வழங்க வேண்டும், பெருகிடும் சுருங்கும் போதம் பேருடல் சிற்று டற்கண், வருமுடல் குறைக்க வொக்கக் குறைந்து பின் மாயு மன்றே" (4. 17) எ - து கண்டுகொள்க. ஆகையால் அப்படியில்லாததுகொண்டே சரீரமெங்கும் நிறைந்துநின்று அறிய வழக்கில்லையென அறிக.

இனி மூன்றாவது, ஒன்றும் பேரிடத் துறைதலென்றதை நல்லோர் சொல்லாரென்று மறுத்ததேதென்னில் அப்படி ஆன்மா எங்கும் பூரணமாய் நின்றறியுமேயானால் அவதைப்படவும் வழக்கில்லை, ஜனன மரணப்படவும் வழக்கில்லை. அன்றியுஞ் சத்தாதி விடயங்களைக் கொள்ளுமிடத்து ஒவ்வொரு புலன்களாகச் சீவிக்கவும் வழக்கில்லையாகவும் வேண்டும். என்றிங்ஙனம் மறுத்ததற்கு பி - ம் சித்தியாரில் "எங்குந்தான் வியாபி யாய்நின் றுணருமிவ் வான்மா வென்னில், தங்கிடும் அவத்தை போக்கு வரவுகள் சாற்றல் வேண்டும், பங்கமார் புலனொன் றொன்றாய்ப் பார்த்திடல் பகரல் வேண்டும், இங்கெலாம் ஒழிந்தான் நிற்ப தெங்ஙனம் இயம்பல் வேண்டும்" (4. 18) எ - து கண்டுகொள்க. ஆகையால், அப்படி யில்லாதது கொண்டே எங்கும் பூரணமாய் நின்றறியுமென்பது வழக்கில்லையென அறிக.

இனி நாலாவது, தானே பிறங்கறிவாகி நிற்றலென்றதை நல்லோர் சொல்லாரென்று மறுத்ததேதென்னில் அப்படி ஆன்மா

தானே அறியுமேயானுல் சத்தாதி விடயங்களைக் கொள்ளுமிடத்துப் புலன்களைக்கொண்டு அறியவேண்டுவதில்லை. அன்றியும் அந்தக்கரணங்களைக்கொண்டும் அறியவேண்டுவதில்லை. என்றிங்ஙனம் மறுத்ததற்கு பி - ம் சித்தியாரில் "அறிவிச்சை செயல்க ளெல்லாம் அடைந்தனல் வெம்மை யும்போல், குறியுற்றங் கேகா னேக குணகுணி பாவ மாகி, நெறியுற்று நிற்கு மென்னில் நிகழ்புலன் கரணமெல்லாம், செறிவுற்றங் கறிவு கொள்ள வேண்டுமோ சீவ னூர்க்கே" (4. 6) எ - து கண்டுகொள்க. ஆகையால் அப்படி இல்லாதது கொண்டே ஆன்மா தானே அறிவனென்பது வழக்கில்லையென அறிக.

இனி ஐந்தாவது, சோர்வுடைச் சட நிகழ்த்த லென்றதை நல்லோர் சொல்லாரென்று மறுத்ததேதென்னில் அப்படி ஆன்மா அறியாமையாய் இருக்குமேயானுல் ஒருவர் அறிவித்தாலும் அறிய வழக்கில்லை. அன்றியும் உபாதியை நீங்கி முத்தியைப் பெற்று அநுபவிக்கவும் வழக்கில்லையாம், என்றிங்ஙனம் மறுத்ததற்கு பி - ம் சித்தியாரில் "அசித்தெனில் உணரா தான்மா அசித்துச்சித தாகு மென்னின், அசிதநுச்சித் தாகா தாகும் சித்தசித் தாவ தில்லை, அசித தொரு புறமா யொன்றில் சித்தொரு புறமாய் நில்லா, தசித்துருச் சித்தே யென்னின் அசித்தடைந் தறிவ தின்றும்" (4. 14) என்பதனுள் "அசித்தெனல் உணரா தான்மா" எ - து கண்டு கொள்க. ஆகையால் அப்படி இல்லாதது கொண்டே ஆன்மாவை அறிவல்ல என்னவும் வழக்கில்லையென அறிக.

ஆக இங்ஙனஞ் சொல்லப்பட்ட வகைகள் ஐந்தினையும் மறுத்து ஓரிடத் துணருமுண்மை ஒளிதரு முபலம்போலும் எ - கு ஆன்மாவானது சுத்தபடிகம்போலக் கூடினதன் தன்மையா யிருக்குமென்று பொருள்படுத்தினதற்கு அநுபவமேதென்னில், சுத்தபடிகமானது இருள்வந்து மேலிட்ட அவதரத்து அந்த இருளோடுங்கூடி இருளின் நிறமாயிருந்தும் பஞ்ச வன்னங்களோடு கூடின அவதரத்து அந்தப் பஞ்ச வன்னங்களின் நிறமாயிருந்தும் ஒளிமேலிட்ட பொழுது அந்த ஒளியோடுங்கூடி ஒளிதானுயிருந்தும் வரும். அதுபோல ஆன்மாவும் ஆணவமலமேலிட்டு மறைத்த அவதரத்து அந்த மலத்தோடுங் கூடி அறியாமையாய்க் கிடந்தும், அப்படிக் கிடக்கச் செய்தே கலையாதி தத்துவங்களோடுங்கூடிப் பிரபஞ்ச காரியப்பட்டுச் சகல

ஞகியும், இவையிரண்டு பகுதியும் நீங்குவதாக அருள்மேலிட்ட அவதரத்து அந்த அருளோடுங்கூடி அறிவாய்நின்றும், இங்ஙனங் கேவலஞகியுஞ் சகலஞகியுஞ் சுத்தஞகியுங் கூடினதன் தன்மையாய் நிற்கையாலே படிகத்தை உவமை சொன்னதென அறிக. இங்ஙனஞ் சொல்லப்பட்ட அவத்தை மூன்றுக்கும் பி - ம் சித்தியாரில் "கேவல சகல சுத்தம் என்றுமூன் றவத்தை ஆன்மா, மேவுவன் கேவலந்தன் னுண்மைமெய்ப் பொறிக ளெல்லாங், காவலன் கொடுத்த போது சகலஞ மலங்க ளெல்லாம், ஓவின போது சுத்த முடையன் உற்பவந்து டைத்தே" (4. 37) எ - து கண்டுகொள்க. இதுவன்றியுஞ் சகலம் ஒன்றையுமபற்றி ஆன்மா படிகம்போலக் கூடினதன் தன்மைக்குப் பஞ்ச இந்திரியங்களோடுங் கூடிநிற்பதே சொல்லலாம். அதுவன்றியும் மூன்றவத்தைக்கும் அநுபவங் காட்டிச் சொன்னது படிகம் முற்றுவமையாகையாலென அறிக. இபபடிக் கூடினதன் தன்மையாயுள்ள ஆன்மாவினுண்மை நிலைமையும் ஆசாரியன் காட்டக் கண்டு அதை அறிந்து கொள்ளுக.

இதஞற் சொல்லியது, ஆன்மா ஒரு சரீரத்தோடுங் கூடிநின்று சீவிக்குமிடத்து நிற்குமுறைமை எப்படியென்று வினவின மாணவகனைநோக்கி ஒரு தானத்திலே நின்றறியுமென்றும், சரீரமெங்கும் நிறைந்து நின்று அறியுமென்றும், எங்கும் பூரணமாய் நின்று அறியுமென்றும், விளங்கின அறிவாயிருக்குமென்றும் அறியாமையாயிருக்குமென்றும், இங்ஙனம் பலவகையாகச் சொல்லப்பட்ட சமயிகள் கருத்துக்களை மறுத்து, ஆன்மா இவையிறண்டுடுங்கூடி அறியுமிடத்துப் படிகமானது பஞ்சவன்னங்களோடுங்கூடி அதுவதுவாய் நின்று காரியபபடுவதுபோல ஆன்மாவுங் கூடினதன் தன்மையாய் நின்று சீவிக்குமென்னும் முறைமையை அறிவித்தது. க

## நான்காஞ் சூத்திரம்

### அவத்தைத் தன்மை

இங்ஙனங் கூடினதன் தன்மையாயுள்ள ஆன்மாவுக்கு அவத்தைப்படும் முறைமையும் உண்டாகையால் ஆன்ம இலக்கணத்துக்கு மேலாக நாலாஞ் சூத்திரமாகிய அவத்தைத் தன்மை யென்னும் அதிகாரம் வைக்கப்பட்டது.

இவ்வதிகாரம் நாலாஞ்சூத்திரமாக நின்ற முறைமை எங்ஙனே யென்னில் சிவஞானபோதத்தில் நாலாஞ் சூத்திரமும் அவத்தைத் தன்மையை அருளிச்செய்கையினுல் இதுவுமப்படி வைக்கப்பட்ட தென அறிக. அது எங்ஙனேயென்னில் : " அந்தக் கரணம் அவற்றி னென் றன்றவை, சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா, தமைச் சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே " (4) என்னுஞ் சூத்திரத்துக்கு "இவ்வான்மாக்கள் சகச மலத்தினுல் உணர்வின்று " (டிெ வார்த்தி கம்) என்பது கருத்தாகையால் இந்நூலினும் இவ்வதிகாரமாகிய " எண்ணவொன் றிலாததீதம் ", " இவ்வகை யவத்தை ", " நீக்கமி லதீதம் " (60, 61, 62) என்னும் விருத்தம் மூன்றும் அவத்தைத் தன்மையைச் சொல்லுகையால் இதுவும் நாலாஞ் சூத்திரமாக நின்ற தென அறிக. அப்படி உண்டாகப்பட்ட அவத்தை எத்தனை வகைப் பட்டிருக்குமென்னில் அது பதினெட்டுவகை அவத்தை யுண்டாய் வரும். அதற்கு வழியேதென்னில் காரணவத்தை மூன்றுங் காரியா வத்தை பதினைந்துமாய் வருமென்றறிக.

இதிற் காரணவத்தை மூன்றேதென்னில் காரண கேவலமென் றுங் காரண சகலமென்றும் காரண சுத்தமென்றும் வரும். இதிற் காரண கேவலமாவது சர்வ சங்கார காலத்து ஆன்மாக்கள் சுத்த மாயா காரணத்திலே ஒடுங்கிச் சிருஷ்டி காலமளவும் ஆணவமலத் தான் மறைப்புண்டு ஒன்றுமறியாமற் கிடக்கும் அவதரமென அறிக. காரண சகலமேதென்னிற் சிருஷ்டி தொடங்கிச் சர்வ சங்காரம் வருமளவும் ஆன்மாக்கள் யோனிவிட்டு யோனிபற்றி எண்பத்து நான்கு நூறுயிரம் யோனி பேதத்திலும் பிறந்திறந்து திரிகிற அவ தரமென அறிக. காரண சுத்தமேதென்னில் இங்ஙனங் கேவல சகலப்பட்டுப் பிறந்திறந்து திரியும் அவதரத்து ஆணவ மலபாகம வந்த ஆன்மாக்களுக்கு இருவினையொப்புஞ் சத்திநிபாதமும் உண்டா மாகையால் அந்த அவதரத்துச் சிவன் ஆசாரிய மூர்த்தமாக எழுந் தருளி இரக்ஷித்துத் தனது திருவருளான ஞானத்தையுங் கடா க்ஷித்து நிஷ்டாபரராக்கிப் பிராரத்தந் தொலைந்தவாறே தனது பூரண நிலையோடுங் கூட்டிக்கொண்ட அவதரமென அறிக. இங்ஙனங் கூறப்பட்ட காரணவத்தை மூன்றுக்கும் பி - ம் சித்தியாரில் " அறி

விலன் அமூர்த்தன் நித்தன் அராகாதி குணங்க ளோடும், செறிவிலன் கலாதி யோடும் சேர்விலன் செயல்க ளில்லான், குறியிலன் கர்த்தா வல்லன் போகத்திற் கொள்கை யில்லான், பிறிவிலன் மலத்தி னோடும் வியாபிகே வலத்தில் ஆன்மா" (4. 38) எ - து கேவலத் துக்குக் கண்டுகொள்க. "உருவினைக் கொண்டு போக போக்கியத் துன்னல் செப்பல், வருசெயல் மருவிச் சத்த மாதியாம் விடயம் தன்னிற், பரிவதுஞ் செய்திங் கெல்லா யோனியும் புக்கு ழன்று, திரிதருஞ் சகல மான அவத்தையிற் சீவன் சேர்ந்தே" (4. 39) எ - து சகலத்துக்குக் கண்டுகொள்க. "இருவினைச் செயல்க ளொப்பின் ஈசன்தன் சத்தி தோயக், குருவருள் பெற்று ஞான யோகத்தைக் குறுகி முன்னைத், திரிமல மறுத்துப் பண்டைச் சிற் றறி வொழிந்து ஞானம், பெருகிநா யகன்தன் பாதம் பெறுவது சுத்த மாமே" (4. 40) எ - து சுத்தத்துக்குக் கண்டுகொள்க.

இனி, காரியாவத்தை பதினைந்துக்கும் வழியேதென்னில் கீழா லவத்தை ஐந்தும் நிலையிற்படும் அவத்தை ஐந்தும் நின்மலாவத்தை ஐந்துமென அறிக. இவை பதினைந்துக்கும் பி - ம் சிவஞான போதத்தில் "இலாடத்தே சாக்கிரத்தை எய்திய உள்ளம், இலா டத்தே ஐந்தவத்தை எய்தும் - இலாடத்தே, அவ்வவ இந்திரியத் தத்துறைகள் கண்டதுவே, அவ்வவற்றின் நீங்கலது வாங்கு" (4. 7) எ - ம், சித்தியாரில் "அறிதரு முதல வத்தை அடைதரு மிடத்தே ஐந்துஞ், செறிதருங் கரணந் தன்னிற் செயல்தொறும் உணர்ந்து கொள்நீ, பிறிவிலா ஞானத் தோரும் பிறப்பற அருளா லாங்கே, குறியொடு அஞ்சவத்தை கூடுவர் வீடு கூட" (4. 35) எ - ம், இந் நூலினும் "இவ்வகை யவத்தை தன்னில்" (61) என்ற விருத்தமும் இப்பொருள் பற்றியென அறிக. ஆக முன்னுங் கூட்டி அவத்தைப் பதினெட்டும் இவ்வதிகாரத்து வகுத்த செய்யுள் மூன்றினுங் கண்டு கொள்க. அவை வருமாறு.

இங்ஙனஞ் சொல்லப்பட்ட அவத்தைகளிற் கீழாலவத்தையிற் காரியாவத்தை ஐந்துஞ் சாக்கிர முதலாக அருளிச் செய்யாமல் அதீத முதலாக அருளிச்செய்வான் எடுத்துக் கொண்டருளியது.

60\. எண்ணொன் றிலாத தீதம் எய்திய துரியத் தொன்று
நண்ணிடும் சுழுத்தி தன்னின் நயந்துள தொன்று பின்னும்

அண்ணிடும் கனவு தன்னில் ஆறேழாம் சாக்கிரத்தின்
கண்ணுறும் அஞ்சா றுய கருவிகள் காணுந் தானே. க

உடலிடை யுயிருறு மோரைந் தவத்தையி
னடையுறு கருவியி னடைவினை வகுத்தது.

(உரை) எண்ண ஒன்றிலா ததீதம் - ஆன்மாவானது ஆணவ மல மறைப்பாகக் கீழாலவத்தைப்பட்டுச் செல்லும் அவதரத்துப் பிரகிருதி தத்துவம் உடம்பாகச்சென்று மூலாதாரமாகிய அதீதத் தானத்தில் சென்றொடுங்கும் அவதரத்து அவ்விடத்துச் சீவிக்குங் கருவிகள் ஒன்றுமின்றி அந்தப் பிரகிருதியென்னத் தானென்னப் பிறிவற்றுக் கிடந்து அழுந்துமதே யதீதமாம். என்னவே, அழுந்துந் தொழில் பிரகிருதிக்கு உடையதாகையால் அதீதத்திற பிரகிருதி உண்டென்பதை அநுபவத்தாற் கண்டுகொள்க. அன்றியும், இதற்கு மேல் இச்செய்யுளுக் கெழுதுகிற நுட்பத்திலே ஏதுக்களும் பிரமா ணங்களுங் காட்டி எழுதுகிற வகையினுங் கண்டுகொள்க; எய்திய துரியத்தொன்று - அந்த மூலாதாரத்துக்கு மேலாகப் பொருந்தப் பட்ட நாபியாகிய துரியத்தானத்திலே நிற்குங் கருவி பிராணவாயு வொன்று. பிராணவாயு நிற்கையாவது ஆனமா துரியத்திலே பிர கிருதி தத்துவம் உடம்பாகப் பிராணவாயுவோடுங் கூடி நிற்கும் அவ தரத்து அந்தத் துரியத்தைவிட்டு அதீதத்திலே பிரகிருதி தத்துவம் உடம்பாகச் செல்லுமிடத்து அந்தத் துரியத்திலே பிராணவாயு நின்று விடுகையால் அப்படிச் சொன்னதென அறிக; நண்ணிடுஞ் சுழுத்தி தன்னின் நயந்துள தொன்று - அந்தத் துரியத்துக்கு மேலாகப் பொருந்தப்பட்ட இதயமாகிய சுழுததித் தானத்திலே விருப்பதுடனே நிற்குங் கருவி சித்தமொன்று. சித்தம் நிற்கை யாவது ஆன்மா அந்தச் சுழுத்தியிலே பிரகிருதிதத்துவம் உடம்பாகச் சித்தத்தோடும் பிராணவாயுவோடுங்கூடி நிற்கும் அவதரத்து அந்தச் சுழுத்தியைவிட்டுப் பிரகிருதி தத்துவம் உடம்பாகப் பிராணவாயு வோடுங்கூடித் துரியத்திற் செல்லுமிடத்து அந்தச் சுழுத்தியிலே சித்தமொன்று நின்று விடுகையால் அப்படிச் சொன்னதென அறிக; அண்ணிடும கனவு தன்னில பின்னுமா றேழாம் - அந்தச் சுழுத்திக்கு

'மேலாக அடுத்த கண்டமாகிய சொப்பனத்தானத்திலே (பின்னு மென்ற விதப்பால் முற்கூறிய பிராணவாயுவுக்குப் பின்னுள்ள ஒழிந்த வாயுக்களொன்பதும்) ஆறேழாகிய சத்தாதிகள் ஐந்தும் வசனாதிகள் ஐந்தும் அந்தக் கரணங்களிற் சித்தம் நீங்கலாக மனம் புத்தி அகங்காரமும் ஆகப் பதின்மூன்றும், ஆக மூன்றுங்கூட்டி இருபத்திரண்டு நிற்கும். அன்றியும், இந்தப் பதத்துக்குப் பின்னுமென்றது வாயுக்கள் ஒன்பதுக்குப் பொருள்பட்டதென்று 'பின்னு மண்ணிடுங் கனவிலாறே ழொன்பதா' மென்று பாடமோதி இருபத்திரண்டு கருவி சொப்பனத தானத்திலே நிற்குமென்று தொகைப்படுத்திப் பொருளுரைப்பாருமுளர். இந்தப் பொருளுக்கேற்க அந்தப் பாடத்தைக் கூட்டிக்கொள்க. சொப்பனத்தானத்தில் நிற்குங் கருவி இருபத்திரண்டாவது ஏதென்னில், ஆன்மா அந்தக் கண்டத்தானத்திலே வாயுக்கள் பத்தும் வசனாதி ஐந்தும் சத்தாதி ஐந்தும் அந்தக் கரணங்கள் நாலும் ஆக இருபத்து நாலோடுங்கூடிப் பிரகிருதி தத்துவம் உடம்பாக நிற்குமிடத்து அந்தக் கண்டமாகிய சொப்பனத் தானத்தை விட்டுப் பிரகிருதி தத்துவம் உடம்பாகப் பிராணவாயுவோடுஞ் சித்தத்தோடுங்கூடி இதயமாகிய சுழுத்தித் தானத்திலே செல்லும் அவதரத்து முற்கூறிய கருவிகள் இருபத்திரண்டுஞ் சொப்பனத் தானத்திலே நின்று விடுகையால் அப்படிச் சொன்னதென அறிக; சாக்கிரத்தின் கண்ணுறும் அஞ்சாறாய கருவிகள்-கண்டத்துக்கு மேலாகிய இலாடத்தானமாகிய சாக்கிரத்தானத்திலே பூதங்கள் ஐந்தின் வழித்தாகிய ஞானேந்திரியமாகிய சோத்திராதிகள் ஐந்துங் கன்மேந்திரியமாகிய வாக்காதிகள் ஐந்தும் ஆகப் பத்துக் கருவிகளுஞ் சாக்கிரத்திலே நிற்கும். பத்துக் கருவிகள் நிற்றலாவது ஆன்மா தத்துவம் முப்பத்தாறோடுங்கூடி விசுவ வியாத்தனாய் நிற்கச்செய்தே அதிலே அறி கருவிகளாகிய சிவ தத்துவம் ஐந்தும் வித்தியா தத்துவமேழிற் பிரகிருதித்தத்துவம் நீங்கலாகக்கலாதிகளாறும் ஆன்ம தத்துவம் இருபத்து நாலிற் பூதங்கள் ஐந்தும் ஆகப் பதினாறு நீங்கலாக நின்ற கருவி இருபதும் தொண்ணூற்றாறு வகையில் வாயுக்கள் பத்தும் வசனாதி ஐந்தும ஆக முப்பத்தைந்தோடுங்கூடி ஆன்மா ஓடச் சமைந்தேறுகிற தோணிபற்றுவானை கைவிட்டு நின்றாற்போல அந்த இலாடத்தானத்திலே

சாக்கிராவத்தைப்பட்டு நிற்கச்செய்தே, ஆன்மா அதனைவிட்டுச் சொப்பனத் தானத்திற் செல்லுமிடத்து வாயுக்கள் பத்தும் வசனாதி ஐந்துஞ் சத்தாதி ஐந்தும் அந்தக்கரணங்கள் நாலும் ஆக இருபத்து நாலோடுங்கூடிப் பிரகிருதி தத்துவம் உடம்பாகச் செல்லுகையால் இந்த இருபத்தைந்து நீங்கலாக மற்றுள்ள சோத்திராதி ஐந்தும் வாக்காதி ஐந்தும் அந்த இலாடத்தானத்திலே நின்றுவிடுகையால் அப்படிச் சொன்னதென அறிக; அஞ்சாறுய கருவிகள் - பூதங்கள் ஐந்தின் வழித்தாகிய கருவிகளென்றதேதென்னில், ஆன்மா இந்திரியங்களைக்கொண்டு விடயங்களைக் கொள்ளுமிடத்துப் பூதங்களிடமாக நின்று கொள்ளுகையால் அப்படிச் சொன்னதென அறிக. காணுந் தானே - ஆன்மா அவத்தைப்பட்டுச் செல்லும் அவதரத்து அந்தந்தத் தானங்கள் தோறும் அந்தந்தக் கருவிகளை விட்டுவிட்டுப் போம் முறைமையை இங்ஙனம் இப்படி அறியப்படும்.

இங்ஙனம் பொருள் கூறிவந்த வகையில், பின்னு மண்ணிடுங் கனவுதன்னி லாறேழாம் எ - கு பின்னுமென்றது வாயுக்கள் ஒன்பதுக்கும் பொருள்படாதென்று பின்னுமண்ணிடுங் கனவி லாறேழொன்பதாம் என்று பாடமோதுவாரு முளரென்றதற்கு வழியேதென்னில், இந்தச் செய்யுளுக்குக் கருத்து ஆன்மா அவத்தைப்பட்டுச் செல்லும் அவதரத்து அந்தந்தத் தானங்கள்தோறும் விட்டு விட்டுப்போங் கருவிக்குத் தொகை சொல்லுகையால் சொப்பனத் தானத்தில் விட்டுப்போங் கருவி இருபத்திரண்டுக்குத் தொகை சொல்லுமிடத்துப் பின்னு மண்ணிடுங் கனவுதன்னி லாறேழாம் என்று பதின்மூன்றுக்குத தொகைசொன்னதொழிய மற்றவொன்பதுக்குத் தொகைசொல்லாதபடியால் பின்னு மண்ணிடுங் கனவி லாறே ழொன்பதாம் என்று பாடமோதி இருபத்திரண்டென்று பொருள் கூறுகை கருததாகையால் அப்படிப் பாடமோதினதென அறிக. அப்படியானால், முன்னே பிராணவாயுவைச் சொல்லி வருகையாற் பின்னுமென்றது பிற்பட்ட வாயுக்களொன்பதுமென்று பொருள் கூறுகைக்குத தொகையாகாதோ என்னில், அப்படி முன்னே பிராணவாயுவென்றதும் வியாக்கியானஞ் செய்தவர்கள் சொன்னதொழியப் பாடத்திற் சொல்லாததாகையால் அதுவும்

பொருளல்ல என்பது கருத்தெனவறிக. இங்ஙனம் பொருள் கூறி வந்தவகைக்கு உதாரணங்கள் வருமாறு:—அஃதாவது, ஆன்மா அவத்தைப்பட்டுச் செல்லுமிடத்துச் சாக்கிரந்தொடங்கி அதீதம் அளவும் அந்தந்தத் தானங்கள்தோறுங் கூடிநிற்குங் கருவிகள் இன்னின்ன தென்று தொகை சொன்னதற்கு பி - ம் திருமந்திரத்தில் "முப்பதோ டைந்தாய் முதல்விட்டங் கைஐந்தாடச், செப்பதின் மூன்றாய்த் திகழ்ந்திரண் டொன்றதா, யிப்பதி நின்ற வியல்பை அறிந்தவர், அப்பதி கொள்பவ ராய்ந்துகொள் வீரே" (2143) எ - ம், சித்தியாரில் "சாக்கிர முப்பத் தைந்து நுதலினிற் கனவு தன்னில் ஆக்கிய இருபத் தைந்து களத்தினிற் சுழுனை மூன்று, நீக்கிய இதயந் தன்னில் துரியத்தி லிரண்டு நாபி, நோக்கிய துரியா தீதம் நுவலின் மூலத்தி லொன்றே" (4. 33) எ - ம், மெய்ஞ்ஞானவிளக்கத்தில் "நனவு தனிற்கருவி முப்பத்தைந் தாகுங், கனவிருபத் தோரைந் தாங் காணில் - முனிசுழுத்தி, மூன்றாகுங் காலை முழுத்துரிய மோரிரண்டே, யூன்றுமதீ தந்தருமா றொன்று" எ - ம் வருமேதுக்களைக் கண்டுகொள்க.

என்றிங்ஙனம் அவத்தைக்குக் கருவி முப்பத்தைந்தென்று சொல்லியிருக்கிற இதிலே முப்பத்துநாலு கருவியென்றும் ஒன்று ஆன்மா என்றுஞ் சில நூல்களிற் சொல்லுவா னேனென்னில், அப்படிச்சொன்னதும் பிரகிருதி தத்துவத்தை ஆன்மா என்று சொன்னதெனவறிக. அதற்கு வழியேதென்னில், பிரகிருதி தத்துவம் மற்றுள்ள கருவிகளைப்போல ஆன்மாவை விட்டும் பற்றியும் வாராமற் கேவல சகலமிரண்டினும் உயிரும் உடம்பும்போலப் பிறிவற்று நிற்கையால் உடலுக்கிட்ட பெயர் உயிருக்கு நின்றாற்போலப் பிரகிருதி தத்துவத்தின்பெயர் ஆன்மாவுக்குச் சொல்லியும், விளக்குச் சுடரொளியுந் தகளியும் விளக்கென்று பெயர்பெறுமாற்போல ஆன்மாவின் பெயர் பிரகிருதி தத்துவத்திற்குச் சொல்லியும் வருகையால் இவ்விடத்துக்கும் ஆன்மாவின் பெயர் பிரகிருதி தத்துவத்துக்குஞ் சொன்னதெனவறிக. அப்படி ஒன்றின் பெயர் ஒன்றிற்கு மாறி வருகைக்கு பி - ம் சிவஞானபோதத்தின் மூன்றாஞ் சூத்திரத்தின்

[1]சூரணையில் "ஒடுங்கினவிடத் தின்பதுன்ப சீவனம் பிரகிருதிக் கின்மையின் ஒடுங்காவிடத் தின்பதுன்பம் சீவியாநிற்ப துளதாதலின் அதுவே யவ்வான்மாவாம்" என்றதனுள் "ஒடுங்கின விடத்தின்ப துன்ப சீவனம் பிரகிருதிக்கின்மையின்" என்பதைப் பிரகிருதி தத்துவத்தின் பேர் ஆன்மாவுக்கு வருமது கண்டுகொள்க.

இனி, ஆன்மாவின் பெயர் பிரகிருதி தத்துவத்துக்கு வருமதற்கு பி-ம் சித்தியாரில் இரண்டாஞ் சூத்திரத்தில் தத்துவத்தின் தொகை சொல்லுமிடத்துண்டாகிய விருத்தத்தில் "சுத்ததத் துவங்களொன்று முன்னமே சொன்ன ஐந்தும், இத்தகை மையின் இயம்பும் இவைமுப் பத்தொன்று மாகத், தத்துவ முப்பத் தாறுஞ் சைதன்னி யங்களாந்து, சித்தசித் தான்மா வொன்று முப்பதும் அசித்தே செப்பில்" (2.69); இதிற் சித்தசித் தான்மா வொன்று மென்பதைக் கண்டுகொள்க. இதனையுஞ் சித்தசித் தான்மாவென்று ஆன்மாவின் பெயர் வருகையால் ஆன்மா என்பாருமுளர். அது வழக்கல்லவென அறிக. அதுவே னென்னில், தத்துவங்களுக்குத் தொகை சொல்லிச் செலவு சொல்லுமிடத்து மீளவுந் தத்துவங்களைச் சொல்லாமல் ஆன்மாவைச் சொல்லுகை வழக்கல்லாதபடியால் அதனைச் சொல்லவொணாதென்றதென அறிக. அன்றியும் சித்தசித் தான்மா என்றதைப் புருட தத்துவ மென்பாருமுளர். அது வழக்கல்லவென அறிக. அதுவே னென்னில், அதனைத் தத்துவ சமூகத்திற் றோன்றுங் கருவியென்று "நிச்சயம் புருட னாகிப் பொருமையி னிற்கு மன்றே" (சித்தியார் 2. 56) எ-ம், "ஐவகையா லுறுபயன்கள் நுகரவருங் கால மது புருட தத்துவம்" (சிவப்பிரகாசம் 41) எ-ம் நூல்களிற் சொல்லி வருகையால் ஆன்மா தத்துவங்களோடுங் கூடிநின்று சகலனைச் சீவிக்கு மவதாரத்து உண்டாகுங் கருவியாகையாலும் பிரகிருதி தத்துவம்போல ஆன்மாவை விடப்படாமற் கேவல சகல மிரண்டினுங்கூடி நில்லாதாகையாலும் அதனை யாகாதென்றதென அறிக. அன்றியும் புருட தத்துவந்தன்னை ஆன்மா என்றாலும் ஆன்மாவின் பெயர் தத்துவத்துக்கும் வருமென்பது கண்டுகொள்க. என்றாலுஞ்

---

[1]இது மூன்றாஞ் சூத்திரம் - ஐந்தாம் அதிகரணத்து வார்த்திகப் பொழிப்பில் காணப்படுகிறது.

சித்தசித் தான்மா என்றது பிரகிருதி தத்துவமே துணிபென அறிக. அப்படியானாலும் அவதரத்தைப்பட்டுச் செல்லும் அவதரத்து மற்றுள்ள தத்துவமுடம்பாகச் செல்லாதோ பிரகிருதி தத்துவம் வேணுமோ வென்னில், அப்படி மற்றுள்ள தத்துவம் உடம்பாகத் துரியமளவும் வந்து சென்றதாகிலுந் துரியத்திலே பிராணவாயு நின்றுவிடுகை யால் துரியத்தைவிட்டு அதீதத்திலே செல்லுமிடத்து ஆன்மா வானது தனித்துச் செல்லாது. அஃதெப்படி யென்னில், " அங்கி யானது தானுமொன்றை யணைந்துநின்று நிகழ்ந்திடும், பங்கியா துயிர் தானு மிப்படி பற்றி யல்லது நின்றிடா " (சித்தியார், பரபக்கம் 52) என்று நூலகளிற் சொல்லி வருகையால் ஆன்மாவானது ஒன்றோடு கூடி நிற்பதொழியத் தனித்து நில்லாதாகையால் அவ்விடத்துக்குப் பிரகிருதி தத்துவம் உடம்பாகச் செல்லவேண்டுகையால் அது வேண்டுமென்பதை அநுபவத்தாற் கண்டுகொள்க. அப்படியானால் ஆன்மாவுக்கு ஆணவமலஞ் சகசமாய் நிற்கையால் அந்த ஆணவ மலந் தாரகமாகச் சென்றொடுங்காதோ பிரகிருதி தத்துவம் வேணு மோவென்னில், அந்த ஆணவமலமும் ஆன்மாவோடுங் கூடி நின்று மறைக்கிறதொழியத் தாரகமாகாதாகையால் அதனைச் சொல்ல வேண்டுவதில்லையென அறிக. ஆகையால் அவ்விடத்துக்குப் பிரகிருதி தத்துவம் உடம்பாகச்சென்று அதீதத்திலும் பிரகிருதி தத்துவமும் ஆன்மாவுங் கூடிக் கிடக்குமென்பதே வழக்கென அறிக. அப்படி அதீதத்தில் இரண்டுங்கூடிக் கிடக்குமேயானால் சித்தியாரில் அவத் தைக்குச் சொல்லுமிடத்து " படைகொடு பவனி போதும் பார்மன் னன் புகும்போ தில்லில், கடைதொறும் விட்டு விட்டுக் காவலு மிட் டுப் பின்னை, அடைதருந் தனியே யந்தப் புரத்தினில் அதுபோ லான்மா, உடலினில் ஐந்த வத்தை உறுமுயிர் காவ லாக " (4. 32) எ-ம், இந்நூலினும் "அடையஞ்சவத்தைப் பெருகிய மலத்தாற் பேணி, உறுந்தனி அதீதம் உணமை உயிர்கெனெ உணர்தது மன்றே " (52) எ-ம் அதீதத்தி லொருமுதலாகச் சொல்லுவானேனென்னில் அப்படி ஒன்றென்றதும் பிரகிருதியையும் ஆன்மாவையுங் கூட்டியே ஒன் றென்றதென அறிக. அதற்கு வழியேதென்னில் ஓரான்மா ஒருட லோடுங்கூடி இருக்குமிடத்து உடலென்றும் உயிரென்றும் இரண்

டும் முதலாயிருக்கச் செய்தேயும் அவனென்றும் அவளென்றும் அதுவென்றும் ஒன்ருய் நின்ருற்போல ஆன்மாவும் பிரகிருதியுந் தேகமுந் தேகியும்போலப்பிறிவற்று இரண்டுமுதலு மொன்ருய்நின்ற தென அறிக. அப்படி ஆன்மாவைவிட்டுப் பிருகிருதி தத்துவம் நில்லாதென்றும் பிரகிருதி தத்துவத்தைவிட்டு ஆன்மா நில்லாதென் றுஞ் சொன்னதற்கு பி - ம் சித்தியாரில் "புருடன் பிரகிருதி பெற் ருற் போதஞ் சிறிதங் குண்டாகிக், குருடன் முதுகில் முடவனிருந் தூர்ந்தாற் போலப் பிரகிருதி, இருள் தனிடத்தே இருந்தியங்கும்" (பரபக்கம் 262) எ - து கண்டுகொள்க. அப்படிப் புருடன் பிர கிருதி பெற்ருலென்பது கொண்டே பிறகு வந்து கூடினதாமே யென்னில், அப்படிச் சொன்னது அந்த அதீதந் தன்னிலே அந்தப் பிரகிருதியழுந்த அந்தப் பிரகிருதியுங் கழன்று மாயாகாரணத்திலே கிடந்து உணர்த்து முறைமையிற் கூடினதென அறிக. ஆகையாற் கேவல சகலம் இரண்டினும் ஆன்மாவும பிரகிருதியும் ஒன்றை ஒன்று விடப்படாமல் உயிரும் உடலும் போலப் பிரிவற்று நிற்கு மென்பதே வழக்கென அறிக. அப்படிக் கேவலத்திற பிரகிருதி தத்துவமுண்டாமாகில் தத்துவத் தோற்றஞ் சொல்லுமிடத்துச் சித்தியாரில் "வருங்குண வடிவாய் மூலப் பிரகிருதி கலையில் தோன்றித், தருங்குண மூன்ருய் ஒன்றிற் ருன்மூன்ருய் மும்மூன் ருகும்" (2. 57) எ - ம், இந்நூலினும் "உருத்திரராற் கலையதனில் பிரகிருதி குணங்கள் உளவாகும்" (26) எ - ம் தோற்றஞ் சொல்லு வான் ஏனென்னில், அப்படித தோற்றஞ் சொன்னதும் ஆன்மா வானது அதீதத்தில் சீவியாமற் கிடந்து சகலனைச் சீவிக்கும் அவ தரத்து இச்சா ஞானக் கிரியா சொரூப ஞைற்போல, அந்தப் பிர கிருதி தத்துவமும் ஆன்மாக்கள் ஒடுங்கும் அவதரதது உபாதானமாகச் சீவியாமனின்றும் தோன்றும் அவதரத்துக்குக குணசொரூபமாகத் தோன்றிச் சீவித்தும் வருகையாலும் அப்படிச் சொன்னதென அறிக. அபபடிப் பிரகிருதி தததுவம் மோகினியிற் ருேறறமாகிய காரிய மாயையோடுந் தோன்றியும ஒடுஙகியும் வரச்செயதே இதுவொன் றும் உபாதானமாய் நிற்குமுறைமை எஙஙனேயென்னில், அது சுத்த மாயையிற் காரியமாகிய விந்து சத்தி சூக்குமை வாக்கு முதலானவை

யிற்றுக்கு உபாதானமாய் நின்றொடுங்குமதுபோலவென அறிக. அப்படியானால் ஒருபாதானத்திலே ஒருபாதானம் ஒடுங்கு முறைமை எங்ஙனே என்னில், அஃதொருவரிடத்திலே மற்றுமோர் ஆன்மா கர்ப்பத்திலே பதிந்து கிடந்தாற்போலவென அறிக. அப்படியானாற் கருவி கூடினவிடமெல்லாம் ஆன்மாவுக்குச் சீவிப்புண்டென்று சொல்லியிருக்கக் கேவலத்திற் பிரகிருதி தத்துவங் கூடிநிற்குமேயாகில் ஆன்மா சீவிப்பற்றுக் கிடக்குமுறைமை எங்ஙனேயென்னில், ஆன்மா ஒரு சரீர சம்பந்தமாய் நின்றவிடமெல்லாம் சீவிக்குமென்று சொல்லியிருக்கவுங் கேவலபபட்டுக் கிடக்கும் அவதரத்துச் சரீர சமபந்தமாயக் கிடந்து சீவியாமல் நிற்குமதுபோலவென அறிக. ஆகையால், பிரகிருதி தததுவம் ஆன்மாவோடுங்கூடி எவ்விடத்தினும் உயிரும் உடலும்போலப் பிரிவற்றுநின்று சகலத்திற் குணசொரூபமாய் நின்று காரியப்பட்டுங் கேவலத்தில் உபாதானமாய் நிறகுமென்பது முற்கூறிவந்த உபமானங்களினாலும் அநுபவத்தினாலுங கணடுகொள்க.

அன்றியும், இச்செய்யுளில் "எண்ணவொன் றிலாத நீதம்" என்கையால் அதீதத்திற் கருவிகளொன்றுமில்லை மற்றுள்ள நாலவத்தைகளுக்குமே கருவியுள்ள தென்பாருமுளர். அதீததநிற் பிரகிருதி தத்துவம் உண்டென்பதைபபற்றி முற்கூறி வந்த வகைகளில் இந்நூலுக்குக் கருத்தாகக் காவையம்பலநாதத் தம்பிரானார் அருளிச்செய்த குறட்பாவில் இச்செய்யுளுக்கு வகுத்த குறட்பாவாகிய "உடலிடை யுயிருறு மோரைந் தவத்தையி - னடைவுறு கருவியி னடைவினை வகுத்தது" என்று ஐந்தவத்தைக்குங் கருவியுணடென்று அருளிச் செய்கையாலும் அதீதத்திலுங கருவியுணடென்பது கணடுகொள்க. எனனவே அதீதத்திற பிரகிருதி தத்துவம் உண்டென்பது கருதது. அன்றியும் அப்படி ஆன்மாவைக் கேவல சகலமிரண்டினும் விடப்படாமல் வருங்கருவி பிரகிருதி தததுவமல்ல புருட தததுவம் எனபாருமுளர். அது வழக்கல்லவென அறிக. அதுவேனென்னில், ஆன்மா விசுவவியாத்தியை விட்டு அவத்தைபபடும் அவதரதது அறிகருவி பதினாறுநீஙகி அவத்தைப படுகையால் அதிலே காலமும் நியதியுங கலையும் விததையும்

அராகமுங்கூடி நீங்குகையால் அந்த ஐந்து கருவிகளுங்கூடிச் சீவிக்குஞ் சமூகத்தில் தோன்றுங் கருவி புருட தத்துவமாதலால் அந்தக் கலாதிகள் ஐந்தும் அவத்தைப்படும் அவதரத்துக் கூடாததுகொண்டு அந்தச் சமூகத்தில் தோற்றமாகிய புருட தத்துவமும் அவத்தையிற் கூடாதென அறிக. அன்றியும், புருட தத்துவத்தையும் பிரகிருதி தத்துவத்தையும் ஒரு கருவியென்றும் அது ஆன்மா அவத்தைப்படும் அவதரத்துத் துரியமளவும் புருட தத்துவமென்று பெயர் பெற்று நின்று அதீதத்திற் பிரகிருதி தத்துவமென்று பெயராய் நிற்குமென்பாருமுளர். அஃதிரண்டும் ஒரு கருவியென்பது வழக்கல்லவென அறிக. அது எங்ஙனேயென்னில், இந்நூலிலே தத்துவத் தோற்றஞ் சொல்லுமிடத்தில் "அருத்திமிகுங் கலைகாலம்" (26) என்னுந் திருவிருத்தத்திலே "உருததிரராற கலையதனிற் பிரகிருதி குணங்கள் உளவாகும்" என்று பிரகிருதிக்குத் தோறறஞ் சொல்லியும் "ஐவகையால் உறுபயன்கள் நுகரவருங் காலம் அதுபுருட தத்துவமென் றறைந்திடுவா அறிந்தோர்" (41) என்று புருட தத்துவந் தத்துவ சமூகத்திற்றேன்றுங் கருவியென்று சொல்லுகையாலும் புருட தத்துவம் வேறு பிரகிருதி தத்துவம் வேறென அறிக. அன்றியும், இதுவே கருததென்பதைப்பறறிக் காவை அம்பலநாதத் தம்பிரானுர் இந்நூலுக்குக் கருத்தாக அருளிச்செய்த குறள் வெண பாவில் "ஐவகையா லுறுபயன்கள் நுகரவருங் கால மதுபுருட தத்துவம்" எனனுஞ் செய்யுளின் கருத்தாகிய 'புகன்றவற் றுலவர் புருடதத் துவமு - மகன்ற மானு மதன்குணம் விரித்தது" என்று தத்துவங்கள் காரியப்படுமிடத்துப் புருட தத்துவமும் பிரகிருதி தத்துவமும் வேறு வேருகச் சொல்லுகையாலும் அவை இரண்டையும் ஒரு கருவியாகச் சொல்லவொண்ணுதென அறிக. அன்றியும, தத்துவம் முப்பத்தாறுக்குத் தொகை சொல்லுமிடதது ஆன்ம தததுவம் இருபத்துநாலு வித்தியா தத்துவம் ஏழு சிவ தத்துவம் ஐந்தென்று சொல்லுமிடத்து அவை இரண்டும் ஒரு கருவியானுல் முப்பத்தாறுக்குத் தொகையில்லாதபடியாலும், அன்றியும் அததுவாசோதனையிற் கலைபடைப்புக்குச் சித்தியாரில் "தத்துவமு மோரேழு" (8. 8) என்று வித்தியாகலைக்கு வித்தியா தத்துவம் ஏழாகையாலும், அவை

இரண்டையும் ஒரு கருவியென்ன வொன்றென்ன அறிக. அப்படியானல் வித்தியா தத்துவம் ஏழென்பதற்குக் காலம் நியதி கலை வித்தை அராகம் புருடன் மாயையென்று நூல்களிற் சொல்லுகையால் புருடனையும் பிரகிருதியையும் ஒரு தத்துவமாக்கி மாயை என்பதை ஒரு தத்துவமாக்கி ஆக வித்தியா தத்துவம் ஏழென்று தொகைப்படுத்தி ஆகத் தத்துவம் முப்பத்தாறென்று சொல்லப்படாதோவென்னில் அப்படி மாயை யென்றதும் பிரகிருதி தன்னையேயென அறிக. ஆகையாற் புருடன் வேறு பிரகிருதி வேறென அறிக.

அப்படிப் பிரகிருதி தன்னையே மாயையென்ப தொழிய மாயையெனவொரு கருவி தனித்தில்லை யென்பதற்கு வகையேதென்னில் தத்துவத்தோற்றஞ் சொல்லுமிடத்துக் காலம் நியதி கலை வித்தை அராகம் பிரகிருதியென்று ஆறுக்குத் தோற்றஞ்சொல்லி வருகையாலும், புருட தத்துவத்தோற்றம் " ஐவகையால் உறுபயன்கள் நுகரவருங் காலம் அதுபுருட தத்துவமென்று "(41) அவ்விடத்தில் தோற்றஞ் சொல்லுகையாலும், மாயையென்று ஒரு கருவிக்குத் தோற்றமோரிடத்திலுஞ் சொல்லாதபடியாலும், அன்றியுந் தத்துவங்கள் காரியப்படுமிடத்து மாயையென்று ஒரு கருவி காரியப்படுகை சொல்லாதபடியாலும்,பிரகிருதி தன்னையே மாயையென்பதொழியத் தனித்தொரு கருவி மாயையாகச் சொல்லப்படாதென அறிக. ஆகையால் புருடன் வேறு பிரகிருதி வேறென அறிக. அப்படிப் புருடன் ஒரு கருவியும் பிரகிருதி ஒரு கருவியுமானல் ஒடுக்கஞ் சொல்லுமிடத்து " வித்தையி லொடுங்கும் ஆறும் " (சித்தியார் 2. 72) என்று ஆறாகச் சொன்னதேதென்னில் புருட தத்துவந் தத்துவ சமூகத்தில் தோற்றமாகையாலும் மற்றுள்ள காலமும் நியதியுங் கலையும் வித்தையும் அராகமும் பிரகிருதியும் காரண மாயையில் தோற்றமாகையாலுந் தோன்றின ஒழுங்கிலே ஒடுக்கஞ் சொல்லவேண்டுகையாற் புருட தத்துவத்துக்குக் காரண மாயையில் தோற்றமில்லாதபடியாலும் மற்றுள்ள ஆறு தத்துவமுங் காரண மாயையில் ஒடுங்குகையால் " வித்தையி லொடுங்கும்ஆறும் " என்றதென அறிக. ஆகையாற் புருட தத்துவம் வேறு பிரகிருதி

தத்துவம் வேறெனை அறிக. அன்றியும் "சித்தமா மவ்வியத்தம்" (௸ 2. 58) என்று நூல்களிற் சொல்லி வருகையால் அவ்வியத்த மான பிரகிருதி தானே சித்தமுமாய்த் தோன்றுகையால் பிரகிருதி யையுஞ் சித்தத்தையும் ஒரு கருவியாக்கி அவத்தைக்குக் கருவி முப்பத்துநாலென்று சொல்லுவாருமுளர். அதுவும் பொருளல்ல வென அறிக. அதற்குக் குற்றமேதென்னில், அப்படிப் பிரகிருதியுஞ் சித்தமும் ஒரு கருவியாஞல் ஆன்மதத்துவம் இருபத்துநாலினுஞ் சித்தத்தை ஒரு கருவியாகவும் வித்தியாதத்துவம் ஏழினும் பிர கிருதியை ஒரு கருவியாகவுஞ் சொல்லித் தத்துவம் முபபத்தாறென் கையாலும், அன்றியும் இவை காரியப்படுமிடத்துச் சித்தமானது நினைவுமாத்திரமாய் நின்று காரியப்படுமென்றும் பிரகிருதி முக் குணங்களால் ஒன்பது வகையாக நின்று காரியப்படுமென்றுஞ் சொல்லி வருகையால் இரண்டையுமொரு கருவியாகச் சொல்ல வொண்ணுதெனை அறிக. அன்றியும் பிரகிருதிதானே சித்தமாமென் னும் வழக்கைப்பற்றி இரண்டுமொன்ருமென்ருலும் பிரகிருதியினின் றுஞ் சித்தமுண்டாகையாற் சித்தமானது சுழுத்தியில் நினைவு மாத் திரமாய் நிற்குமென்று நூல்களிற் சொல்லுகையாலும் பிரகிருதி காரணமாய்ச் சித்தந் தோன்றுகையாற் பிரகிருதிகெட்டுச் சிததம் நிற்க வழக்கில்லாதபடியினுலும் அப்படிச் சொல்லவொணுதெனை அறிக. அப்படிப் பிரகிருதி காரணமாகச் சிததந்தோன்று மென்றது ஆன்ம தத்துவம் இருபத்துநாலும் பிரகிருதியிலே தோன்றி மீளவும் அதிலே ஒடுங்குகையாலும் அது வழக்கல்லவெனை அறிக. அப்படிப் பிரகிருதியிலே ஆன்ம தத்துவம் இருபத்துநாலுந் தோன்றி மீளவும் அதிலே ஒடுங்குமென்பதற்கு பி - ம் இந்நூலில் "உருததிரராற் கலையதனிற் பிரகிருதி குணங்கள் உளவாகும் ஆங்காரம் புந்தியினில் உதிக்கும்" (26) என்று தோற்றத்துக்குச் சொல்லியும சித்தியா ரில் "தத்துவம் எண்மூன்றுஞ் சென்ருன்ம தததுவத தொடுங குங்கும்" (2. 72) என்று ஒடுக்கத்துக்குச் சொல்லியும் வருமது கண்டு கொள்க. ஆகையாற் புருட தத்துவம் வேறு பிரகிருதி தத்துவம் வேறு சித்தம் வேறெனை அறிக. அன்றியும அவததையிற பிரகிருதி தத்துவங கூடாதென்னில் அதில தோற்றமாயுள்ள அந்தக்கரணங

களும் இந்திரியங்களும் அவத்தைத்தானங்களினின்று காரியப்படுகையாற் காரணமில்லாதபொழுது காரியம் சேவியாதாகையால் அவத்தையிற் பிரகிருதி உண்டென்பதை அநுபவத்தாற் கண்டுகொள்க. என்னவே, ஆன்மா அவத்தைப்படுமிடத்துப் பிரகிருதிதத்துவம் உடம்பாகச் சென்று மூலாதாரத்திலே அந்தப் பிரகிருதியோடும் அழுந்திக் கிடக்குமென்கிறதே சித்தாந்தப்பொருளென அறிக.

என்றிங்ஙனஞ் சொல்லிவந்த வகையில் அவத்தைக்குக் கருவி முப்பதைத்தென்பதும் ஆன்மா அதீதத்திற் பிரகிருதி தத்துவம் உடம்பாகச் சென்றிருக்குமென்பதே வழக்கென்பதுங் கண்டு கொள்க. இதற்கு பி-ம் சிற்றம்பலநாடித் தம்பிரானார் அருளிச் செய்த [1]ஞானப்பஃறொடையில் "ஐயாறு மைந்து மணைகருவி, என்று மிதிற்புருவத் திடைபத்தும் போக்கிருபத், தைந்தோ டேகளத்திற றங்கிச், சுழுத்தி தனின்மூன்றும் துரியத் திரண்டும், விழிதததினை வற்றுயிரை விட்டு - அழுத்தியிடு, மூலப் பிரகிருதி யோடேயம் மூலமலம், கோலக் கிடந்துணர்த்தக் கூறுங்கால்" என்றருளிச்செய்ததுங் கண்டுகொள்க. அன்றியும் சிவாகமத்தில் அசிந்திதமென்கிற ஆகமத்தின் கிரந்தத்திலே அவத்தைக்குக் கருவி முப்பததைந்தென்பதற்குப் பிரமாணங் கண்டுகொள்க. ஆன்ம தததுவம் இருபத்துநாலுக்கும் பிரகிருதி தத்துவம் பிரதானமாகையால் பிரகிருதியைக் கேத்திரக்கினனென்றதென அறிக.

இதனாற் சொல்லியது ஆன்மா கீழாலவத்தைப்பட்டுப் பிரகிருதி தத்துவம் உடம்பாகச்சென்று மூலாதாரத்திலே ஒடுங்குமவதரத்துச் சாக்கிரததானத்தில் விட்டுப்போங் கருவி பத்தென்றும் சொப்பனததானத்தில் விட்டுப்போங் கருவி இருபத்திரண்டென்றும் சுழுத்தித்தானத்தில் விட்டுபபோங கருவி ஒன்றென்றும் துரியத்தானத்தில் விட்டுப்போங் கருவி ஒன்றென்றும் வருமுறைமையையும் அறிவித்தது. க

இங்ஙனஞ் சொல்லப்பட்ட அவத்தைகள் ஐந்தும் அடியேனுக்குத தரிசனம் வந்ததில்லையென்ற மாணவகனை நோக்கிச் சகலா

[1] அச்சிடபபட்டுள்ள சிற்றம்பல நாடிகள் சாத்திரக்கொத்தில் இந்நூல் காணப்படவில்லை.

வத்தையிற் காரியமாயுள்ள நிலையிற்படும் அவதரத்திலுண்டான ஐந்தவத்தைகளினுந் தரிசனப்படுத்தி யதுகொண்டே திருவருட்பிரகாசமுள்ள புண்ணியவான்களுக்குண்டான மேலாலவத்தையும் ஆசாரியன்கண்ணுக அறியவேணுமென்னும் முறைமையும் அருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

61. இவ்வகை அவத்தை தன்னில் எய்திடும் கரணமெல்லாம்
மெய்வகை இடத்தி லுற்று மேவுமா கண்டு மிக்க
பொய்வகைப் பவம் அகற்றப் புரிந்திடில் அருளா லாங்கே
ஐவகைஅவத்தைஉய்க்கும் அறிவினல்அறிந்துகொள்ளே. உ

தத்துவ சமூகந் தன்னிலேந் தவத்தையுஞ்
சுத்தம தாமைந் தவத்தையுஞ் சொன்னது.

(உரை) இவ்வகை அவத்தை தன்னில் எய்திடுங கரணமெலாம் - இந்த அடைவிலே முற்கூறப்பட்ட அவத்தைகள் ஐந்தினும் உணடான கருவிகள் ஏற்றக் குறைச்சலாய் நின்ற முறைமைகளெல்லாவற்றையும்; மெய்வகை இடத்திலுற்று மேவுமா கண்டு - மெய்யிலே வகைப்பட்ட இலாடத்தானத்திலே அஞ்சவத்தைப்படும் முறைமையை அறிந்து; மிக்க பொய்வகைப் பவம்அகற்றப் புரிந்திடில் - மிகவும் பொய்யாயிருக்கப்பட்ட ஜநந மரண துக்கங்களை நீக்க விசாரிக்கில்; அருளாலாங்கே ஐவகை அவத்தை உய்க்கும் - தம்பிரானார் காருண்ணியததினலே மேலான சுத்தாவத்தைகள் ஐந்தையும் அந்த இலாடத்தானத்திலே செலுத்தாநிற்கும். அதனை அறியுமுறைமை எங்ஙனேயென்னில்; அறிவினல் அறிந்துகொள்ளே - ஆசாரியன் கண்ணுக அறிந்துகொள்ளுக. அன்றியும் ஐவகைஅவத்தை உய்க்கும் அறிவினல் அறிந்துகொள்ளே என்றொரு பதமாக்கி முற்கூறிய கீழாலவத்தைகொண்டும் நிலையிற்படும் அவததைகொண்டும் மேலாலவததையும் அறியப்படுமென்னவுமாமென அறிக.

மெய்வகை யிடததிலுறறு மேவுமா கணடு எ - து சாக்கிரத்தானத்திலே உண்டாகிய நிலையிற்படும அவத்தை ஐந்தையுங் கண்டென்றதென அறிக. அஃதாவது, ஒருபண்டத்தை மறந்தவன் அந்தப பண்டங் காணுதபொழுது பிராணவாயுவும் இயங்காமல் மூர்ச்சித்

திருந்த அவதரம் நிலையிற்படும் அவத்தையிற் சாக்கிர துரியாதீத மென அறிக. இனி, அந்தப் பிராணவாயு இயங்கத்தக்கதாகப் பெரு மூச்செறிந்து விசாரித்தறிவோமென்று நின்ற அவதர நிலையிற்படும் அவத்தையிற் சாக்கிர துரியமென அறிக. இனி, அவவிடத்திலே யல்லவோ போனோமென்று நினைவெழுந்திருந்த அவதர நிலையிற்படும் அவத்தையிற் சாக்கிர சுழுத்தியென அறிக. இனி, இன்னவிடத்திலே அல்லவோ பண்டம் வைத்தோமென்று விசாரப்பட்டிருந்த அவதர நிலையிற்படும் அவத்தையிற் சாக்கிர சொப்பனமென அறிக. இனி, அந்தப பண்டம் வைத்த இடத்திலே சென்று கண்டது நிலையிற்படும் அவத்தையிற் சாக்கிர சாக்கிரமென அறிக. இந்த நிலையிற்படும் அவத்தைக்குக் கருவிகளாவன சுத்த தத்துவங்கள் ஐந்துமென அறிக. அது எங்ஙனே யென்னில், அதீதத்துக்குச் சிவ தத்துவமொன்று மென அறிக; துரியத்துக்குச் சிவ தத்துவமுஞ் சத்திதத்துவமுமென அறிக; சுழுத்திக்குச் சிவ தத்துவமுஞ் சத்தி தத்துவமுஞ் சாதாக்கிய தத்துவமுமென அறிக; சொப்பனத்துக்குச் சிவ தத்துவமும் சத்தி தத்துவமுஞ் சாதாக்கிய தத்துவமும் ஈசுரதத்துவமுமென அறிக; சாக்கிரத்துக்குச் சுத்த தத்துவம் ஐந்துமென அறிக; இதற்கு பி - ம் சித்தியாரில் “ஐந்துசாக கிரத்தின் நான்கு கனவினிற் சுழுனை மூன்று. வந்திடுந் துரியந் தன்னின் இரண்டொன்று துரியா தீதந், தந்திடுஞ் சாக்கி ராதி அவத்தைகள் தானந்தோறும், உந்திடுங் கரணந் தன்னில் செயல்தொறு முணர்ந்து கொள்ளே” (4. 36) எ - து கண்டுகொள்க. இனி, இந்த நிலையிற்படும் அவத்தைகொண்டே கீழாலவத்தை அறியப்படு மென்பதற்கும் இந்த நிலையிற்படும் அவத்தையிற் கருவிகள் நீங்குகிறது தானே சுத்தாவத்தையா மென் பதற்கும் பி - ம் சித்தியாரில் “அறிதரு முதலவத்தை அடை தரு மிடத்தே ஐந்தும், செறிதருங் கரணந் தன்னில் செயல்தொறுங் கண்டு கொள்நீ, பிறிவிலா ஞானத் தோறும் பிறப்பற அருளா லாங்கே, குறியொடும் ஐந்தவத்தை கூடுவா வீடு கூட” (4. 35) எ - ம், சிவஞானபோதத்தில் “இலாடத்தே சாக்கிரத்தை எய்திய உள்ளம், இலாடத்தே ஐந்தவத்தை எய்தும் - இலாடத்தே, அவ்வவ இந்திரியத் தத்துறைகள் கண்டதுவே, அவ்வவற்றின் நீங்கலது

வாங்கு" (4. 7) எ - ம் கண்டுகொள்க. என்னவே இந்தச் சகலாவத்தையில் உண்டான கருவிகள் ஏற்றக்குறைச்சல்கள்போல அந்தக் கீழாலவத்தைக்குமென அறிக. இது சகலாவத்தையிற் காரியாவத்தையைச் சொன்னதென அறிக. இனி, அருளாலாங்கே ஐவகை அவத்தை உய்க்கும் என்றது சுத்தாவத்தையென அறிக. அவை வருமாறு : நின்மல சாககிர நின்மல சொப்பன நின்மல சுழுத்தி நின்மல துரிய நின்மல துரியாதீதமென அறிக அஃதாவது, சுத்த தத்துவம ஐந்தில் சுதத வித்தை நீங்கின அவதரஞ் சாக்கிரத்திற் சாக்கிரம் ; சுத்த வித்தையும் ஈசுரமும் நீங்கின அவதரஞ் சாக்கிரத்திற் சொப்பனம் ; சுத்த வித்தையும் ஈசுரமுஞ் சாதாக்கியமும் நீங்கின அவதரஞ் சாக்கிரத்திற் சுழுத்தி ; சுத்த வித்தையும் ஈசுரமுஞ் சாதாக்கியமுஞ் சத்தியும் நீஙகின அவதரஞ் சாக்கிரத்தில் துரியம் ; சுத்த தத்துவம் ஐந்தும் நீங்கின அவதரஞ் சாக்கிரத்தில் அதீதமென அறிக. இவை ஐந்து தத்துவமும் நீங்க என்றது கொண்டே இவை ஐந்தும் பிரேரிக்கப்பட்ட கருவிகளும் நீங்கவென்பதை அநுபவத்தாற் கண்டுகொள்க. இதற்கு பி - ம் சிவஞானபோதத்தில் "இலாடத்தே சாக்கிரதலை" (4. 7) என்ற செய்யுள் முடிவில் "அவ்வவற்றின் நீங்கலது வாங்கு" எ - து கண்டுகொள்க. இது சுத்தாவத்தையிற் காரியாவத்தையென அறிக.

இதனாற் சொல்லியது கீழாலவத்தை ஐந்தையுந் தரிசனப்படுத்த வேண்டிச் சகலாவத்தையிற் காரியாவத்தையாகிய நிலையிற்படும் அவத்தைகொண்டே தரிசிப்பித்த முறைமையும் அதுகொண்டே சுத்தாவத்தையிற் காரியாவத்தை ஐந்தையுந் தரிசிப்பித்த முறைமையும் அறிவித்தது. நிலையிற்படும் அவத்தையென்றது மத்தியாலவத்தையென அறிக. மேலாலவத்தை யென்றது சுத்தாவத்தையென அறிக. உ

இங்ஙனஞ் சொல்லப்பட்ட காரியாவத்தைகள் தரிசிப்பித்தாற போல முற்கூறிய காரணவத்தைகள் மூன்றுந் தரிசிப்பிக்கவேணுமென்று மாணவகனை நோக்கிக் காரியாவத்தையில் உண்டான கேவல சகல சுத்தம்போல இருக்குங் காரணவத்தையில் உண்டான

கேவல சகல சுத்தமென்னும் முறைமையை மேலருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

62. நீக்கமில் அதீத மாசு நிறைந்தகே வலமா நீர்மை
சாக்கிரங் கலாதி சேர்ந்த சகலமாந் தன்மை யாகும்
நீக்கமில் இரண்டுங் கூடா தொழியவோர் நிலையில் நீடும்
சாக்கிர அதீதஞ் சுத்தந் தகைமைய தாகுந் தானே. ௫

கேவல சகல சுத்தமென் றுரைத்த
மூவகை தெளிபு முறைமை மொழிந்தது.

(உரை) நீக்கமில் அதீத மாசு நிறைந்த கேவலமா நீர்மை - ஆன்மாக்கள் மாயா கருவிகளெல்லாம் நீங்க நீங்காத ஆணவ மலத்தாலே மறைப்புண்டு மூலாதாரத்திலே கிடக்கிற அதீதம்போலே இருக்குஞ் சர்வசங்காரத்தும் காரண மாயையிலே தத்துவங்களெல்லாமொடுங்க அதிலே சர்வான்மாக்களுமொடுங்கி ஆணவ மலத்தாலே மறைப்புண்டு கிடக்கிறதே காரணமாகிய கேவலாவத்தையின் முறைமை; கலாதி சேர்ந்த சகலமாந் தன்மை யாகுஞ் சாக்கிரம் - ஆன்மாக்கள் கலையாதியாயுள்ள தத்துவங்களுடனே கலந்து ஒவ்வொரு விடயங்களிற் கூடிநின்று பிரிகிற காரியமாகிய சாக்கிராவத்தைக்கு ஒக்கும்,கன்மத்துக்கீடாக எண்பத்துநான்கு நூறாயிரம் யோனிகள் தோறும் பிறந்திறந்து திரிகிற சகலாவத்தையாகிய காரணவத்தையின் முறைமை; நீக்கமில் இரண்டுங்கூடா தொழியவோர் நிலையில் நீடும் சாக்கிர அதீதஞ் சுத்தத் தகைமைய தாகுந் தானே - ஒன்றைவிட் டொன்றுபற்றி ஆன்மாவை விட்டு நீங்காமல் வருகிற பெருமை பொருந்திய கேவல சகல மிரண்டினுங் கூடாமல் அருளுடனேகூடி இரண்டற நிலைபெற்று நேயத்துடனே அழுந்துகிற சாக்கிராதீதத்துக்கு ஒக்கும், பரமுத்தியான சுத்தாவத்தையாகிய காரணமும்.

அதீதமென்றது சீவிக்குங் கருவிகளெல்லாங் கழன்ற விடமென அறிக. கேவலமென்றது சர்வ சங்காரமென அறிக. சாக்கிரமென்றது கலையாதி தத்துவங்களோடுங்கூடிச் சீவித்து நிற்கையென அறிக. சகலமென்றது சிருஷ்டி தொடங்கிச் சங்காரமளவும் பிறந்திறந்து

வருகிறதென அறிக. சாக்கிராதீதமென்றது கருவிகள் முப்பத் தாறுங் கழன்று கேவல சகலத்தினும் அழுந்தாமல் அருளிடமாகச் சென்று ஞேயத்தழுந்தலாகிய உண்மை நிட்டையையென அறிக. சுத்தமென்றது திருவடியிலே இரண்டறக்கூடிநின்ற பரமுத்தியை யென அறிக. இவையிற்றுக்கு பி - ம் சித்தியாரில் "கேவல சகல சுத்தம் என்றுமூன் றவத்தை யான்மா, மேவுவன்" எ - ம், "அறிவிலன் அமூர்த்தன் நித்தன் அராகாதி குணங்க ளோடும் செறி விலன்" எ - ம், "உருவினைக் கொண்டு போக போக்கியத் துன்னல்" எ - ம், "இருவினைச் செயல்க ளொப்பில் ஈசன்தன் சத்தி தோய" (4.37, 38, 39, 40) எ - ம் வரும் விருத்தங்களைக் கேவல சகல சுத்தம் மூன்றுக்குங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது ஆன்மா தத்துவங்களெல்லாங் கழன்று ஆணவமலத்தான் மறைப்புண்டு பிரகிருதி தத்துவம் உடம்பாக மூலா தாரத்திலே கிடக்கிற அதீதம்போலே கிடக்கும் சர்வ சங்கார கேவலத்திலென்றும், ஆன்மா கலையாதி தத்துவங்களோடுங் கூடி ஒவ்வொன்றாகச் சீவிக்கிற சாக்கிரம்போல இருக்கும் யோனிவிட்டு யோனிபற்றிப் பிறந்திறந்து வருகிற சகலமென்றும், இந்தக் கேவல சகல மிரண்டும் நீங்கின சாக்கிராதீதம்போல இருக்குந் திருவடியிலே இரண்டறக் கூடின சுத்தமான பரமுத்தியென்றும் வருமுறை மையை அறிவித்தது. ௩

## ஐந்தாஞ் சூத்திரம்

### உணர்த்து முறைமை

இங்ஙனம் முற்கூறிய வகையே அவத்தைப்பட்டுக் கிடக்கும் ஆன் மாக்களுக்குச் சிவன் உணர்த்து முறைமையும் உண்டாமாகையால் அவத்தைக்குமேல் ஐந்தாஞ் சூத்திரமாகிய உணர்த்து முறைமை யென்னும் அதிகாரம் வைக்கபபட்டது. இவ்வதிகாரததில் ஐந்தாஞ் சூத்திரம் நின்ற முறைமை எங்ஙனே யென்னில், சிவஞானபோதத் தில் "விளம்பிய உள்ளத்து மெய்வாய் கணமூக்கு, அளந்தறிந் தறியா ஆங்கவை போலத், தாந்தம் உணர்வின் தமியருள், காந்தங் கண்ட பசாசத தவையே" என்னும் ஐந்தாஞ் சூத்திரத்துக்கு "இவ்

வான்மாக்களிடத்துத் தமது முதலுபகாரம் உணர்த்துதனுதலிற்று" என்றமையால், இந்நூலினும் இவ்வதிகாரத்து "மருவிய பொறியில் ஒன்றும்" (63) என்ற விருத்தந் தொடங்கி "அறிந்திடும் மனதி" (67) என்ற விருததம் முடிவாகிய செய்யுள் ஐந்தும் ஆன்மாக்களைச் சிவனுணர்த்து முறைமையைச் சொல்லுகையால் இதுவும் ஐந்தாஞ் சூத்திரமாக நின்றதெனஅறிக. இச்செய்யுட்களில் அவை வருமாறு எஙஙனேயென்னில், "தனக்கென அறிவி லாதான்" (64) என்ற செய்யுளில் "தனக்கென வறியா னலிச் சகலமு நுகருந் தானே" எ - ம, "அறிந்திடும் மனதி" (67) என்ற செய்யுளில் "கன்மத் தொன்மை அறிந்தவை நுகரு மாறும் அருளுவன் அமலன் தானே" எ - ம் வருகையால் அப்படிச் சொல்லப்பட்டதென அறிக. இங்ஙனம் இவ்வதிகாரத்துக்கு வகுதத செய்யுட்களிற் சில விருத்தங் களைச் சூத்திரத்துக்கு உவமை காட்டி மற்ற விருத்தஙகளுக்கு உவமைகாட்டாத தேதென்னில், அஃதாவது அவை இந்தப் பொரு ளுககு மாறுபாடு சொல்லுஞ் சமயிகள் கருத்துக்களை மறுத்த செய் யுட்களாகையாலென அறிக. மேல்வருஞ் சூத்திரஙகளுக்கும் இஙங னங் கண்டுகொள்க.

இனி, இவ்வதிகாரத்துக்கு முதற் செய்யுளாகிய "மருவிய பொறியி லொன்றும்" என்ற செயயுளுக்குத் தொந்தனை வருமாறு: அபபடி அவத்தைப்பட்டுக கிடக்கும் ஆன்மாக்கள் உணருமுறைமை எங்ஙனேயென்று வினையதற்கு உத்தரம் அருளிச்செய்வான் எடுத்துக் கொணடருளியது.

63. மருவிய பொறியில் ஒன்றும் மாபூதம் ஐந்தி லொன்றும்
கருவிகள் நான்கும் நீங்காக் கலாதிகள் ஐந்தும் கூடி
ஒருபுலன் நுகரும் இந்த ஒழுஙகொழிந் துயிரும் ஒன்றைத்
தெரிவுறு தவனெ ழிந்தத் திரள்களும் செயலி லாவே. க

உணர்தது முறைமையில் ஒருபுல னுகர
இணைக்குறு கருவிகள் இவையா மென்றது.

(உரை) ஆனமா இந்திரியஙகளைக்கொண்டு விடயஙகளைக் கொள்ளுமிடதது; மருவிய பொறியில் ஒன்றும்-அபபொழுதைகநுப

பொருந்தப்பட்ட இந்திரியங்களிலே யொன்றும்; மாபூதம் ஐந்தி லொன்றும் - பெரிய பூதஙகளாகிய பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாச மாகிய இவையிற்றிலே அப்பொறிகளுக்கேற்ற பூதமொன்றும்,— கருவிகள் நான்கும் - மனம் புத்தி ஆங்காரஞ் சித்தம் என்கிற அந்தக் கரணங்கள் நான்கும்; நீங்காக் கலாதிகள் - முற்கூறிய கரணங்களை விட்டு நீங்காத கலை காலம் நியதி வித்தை அராகம் புருடன் பிரகிருதி மாயை என்கின்ற வித்தியா தத்துவம் ஏழும்; ஐந்தும் - சுத்த வித்தை ஈஸ்வரம் சாதாக்கியம் சத்தி சிவம் என்கின்ற சிவ தத்துவம் ஐந்தும்; கூடி ஒரு புலன் நுகரும் - ஆக இங்ஙனஞ் சொல்லப்பட்ட தத்துவங் கள் பதினெட்டுங் கூடியே ஆன்மா ஒரு விடயத்தைப் புசிப்பன். இந்தக் கருவிகள் கூடாதபொழுது ஆன்மாவுக்குப் புசிப்பில்லையோ வென்னில்; இந்த ஒழுங்கொழிந் துயிரும் ஒன்றைத் தெரிவுறுது - இந்த முறைமையிலே சொல்லப்பட்ட கருவிகள் கூடினலொழிய ஆன்மாவும் ஒன்றைப் புலப்பட அறியமாட்டாது. அந்த ஆன்மா கூடாதபொழுது அந்தக் கருவிகள் தாளுக அறியாதோ என்னில்; அவனெழிந்து அத்திரள்களும் செயலிலாவே - அந்த ஆன்மாவைக் கூடாமல் அந்தக் கருவிகளுந் தாளுக அறியமாட்டா.

இங்ஙனம் பொருள் கூறிவந்த வகையில் ஆன்மா யாதொரு விடயத்தைப் புசிக்குமிடத்து அந்த விடயங்களுக்கேற்ற இந்திரியங் களிலே யாதாமொன்றும அதற்கேற்ற பூதஙகளிலே யாதாமொன் றும் அந்தக்கரணங்கள் நாலும் கலாதிகள் ஏழும் சுத்த தத்துவம் ஐந்தும் ஆகப் பதினெட்டுக் கருவிகளுங கூடியே புசிக்கவேணு மென்று பொருள் கூறியதற்கு வழியேதென்னில், அஃதாவது, சிவனுடைய சத்திகள் சுத்த தத்துவம் ஐந்தையுங்கொண்டு வித்தியா தத்துவமாகிய கலாதிகள் ஏழையும் காரியப்படுததியும் அந்தக் கலாதிகள் ஏழும் ஆன்ம தத்துவம் இருபத்துநாலையுங் காரியப்படுத்தி யும் வருகையால் அப்படிச் சொல்லபபட்டதென அறிக. அவை ஒன்றினெலொன்று காரியப்படு முறைமை எங்ஙனே என்னில், சிவ னுடைய சத்திகள் சுதத தததுவம் ஐந்தையும் நடத்தும் வகையா வது, இச்சா சததி ஈஸ்வரத்தை நடத்தும்; கிரியா சத்தி சத்தி தத்துவத்தையஞ் சாதாக்கியத்தையும் நடத்தும்; ஞான சத்தி சிவ

தத்துவத்தையும் சுத்த வித்தையையும் நடத்துமென அறிக. இதற்கு பி - ம் " இச்சை நடத்தியிடு மீச்சுர தத்துவத்தை, மெய்ச்சத்தி சாதாக்ய மேவியிடும் - நிச்சயமே, ஏன்ற கிரியை நடத்தியிடு மெய்ஞ் ஞான, மான்றசிவஞ் சுத்தவித்தை யாம்" எ - து கண்டுகொள்க. இனி, சுத்த தத்துவம் ஐந்தாலும் வித்தியா தத்துவமாகிய கலாதிகள் ஏழுங் காரியப்பட்டு வருகையாவது நாதசொரூபமாகிய சிவ தத்துவம் அதோ மாயையிலே நின்று ஆன்ம தத்துவம் இருபத்து நாலுக்கும் உபாதானமாகிய பிரகிருதி மாயையைத் தோற்றுவித்தும், அதற்கு அந்தமாகிய விந்து வடிவாகிய சத்திதத்துவத்தைக்கொண்டு காலமும் நியதியுங் கலையுந் தோற்றுவித்தும், சுத்தவித்தை வித்தையைத் தோற்றுவித்தும், ஈஸ்வரம் அராகத்தைத் தோற்றுவித்தும் ஆக இங்ஙனந் தோன்றப்பட்ட காலமும் நியதியுங் கலையும் வித்தையும் அராகமுங் கூடின சமுகத்திலுண்டான புருடதத்துவத்தைச் சாதாக்கிய தத்துவங் காரியப்படுத்தியும் வருமென்பதை நூல்களினாலும் அனுபவத்தினாலும் கண்டுகொள்க. இவையிற்றுக்கு பி-ம் "கால நியதி கலைசத்தி தானடத்து - மேலும்வித்தை வித்தையரா கம்மீசர் - சாலவே, மாயை சிவம்புருடன் சாதாக் கியமேவி, நேய முடனடுத்து நின்று" எ-து கண்டுகொள்க. இனி இந்த வித்தியா தத்துவம் ஏழாலும் ஆன்ம தத்துவம் இருபத்துநாலுங் காரியப்படும்வகை எங்ஙனே என்னில், கலையானது முற்கூறிய பிரகிருதி மாயையை எழுப்பி அதிலே நின்றுங் குணங்களைத் தோற்றுவிக்க, அந்தக் குணங்களிடமாக அந்தக் கரணங்களும் இந்திரியங்களும் விடயங்களும் பூதங்களும் ஒன்றிலே ஒன்றாகத் தோன்றி விரிந்த அவதரத்து, அந்தக் கலையானது சித்தத்துக்கும் உட்கருவியாய் நின்று போகங்களிலே நினைவை எழுப்பியும், நியதி புத்திக்கும் உட்கருவியாய் நின்று போகங்களை நிச்சயித்து அறுதிப்படுத்தியும், வித்தை ஆங்காரத்துக்கும் உட்கருவியாய் நின்று போகங்களிலே அறிவை எழுப்பியும், அராகம் மனதுக்கும் உட்கருவியாய் நின்று போகங்களிலே ஆசையாகப் பற்றியும், புருடன் இந்திரியங்களை எழுப்பிப் போகங்களைப் புசிப்பித்தும், பிரகிருதி போகங்களிலே அழுத்துவித்தும், காலம் இவை எல்லாவற்றையுங் கூட்டியும் வருகையால் அப்படிச் சொன்னதென அறிக.

என்றிங்ஙனம் பொருள்கூறிவந்த வகையிற் கலை சித்தத்துக்குட் கருவி யென்றும் நியதி புத்திக் குட்கருவியென்றும் வித்தை ஆங் காரத்துக் குட்கருவி என்றும் அராகம் மனத்துக் குட்கருவி என்றும் சொன்னதற்கு வழியேதென்னில், " அந்தக்கரணங்களின் குணம் நினைந்தாராய்ந்து துணிந்து செயல் மணந்து " எ - ம், " நியதி சிந் தித்தா ராய்ந்து துணிந்து செயற்படும், அந்தக் கரண வமைச்சரும்" எ - ம் நூல்களிற் சொல்லி வருகையாற் சித்தம் நினைவை எழுப்புங் கருவியாயும் ஆங்காரம் அறிவை மேலிடுவிக்குங் கருவியாயும் புத்தி நிச்சயிக்குங் கருவியாயும் மனது பற்றுங் கருவியாயுமிருக்கும்; இவை யிற்றுக்கு உட்கருவியென்ற கலையும் வித்தையும் நியதியும் அராகமும் நிற்கும் வகையாவது கலை ஆணவ மலத்தைச் சிறிதே நீக்கி அறிவை எழுப்புங் கருவியாகையாலும் வித்தை அறிவை மேலிடுவிக்குங் கருவி யாகையாலும் நியதி நிச்சயிக்குங் கருவியாகையாலும் அராகம் ஆசையை எழுப்புங் கருவியாகையாலும் அப்படிக் கூறப்பட்ட தென அறிக. என்னு மிவையிற்றுக்கு பி - ம் இந்நூலில் " அசுத்த மாயை, வைத்தகலை தான்மூல மலஞ் சிறிதே நீக்கி மருவும் வகை தெரிவிக்கும் " (39) எ - ம், சித்தியாரில் " சித்தமாம் அவ்வி யத்தஞ் சிந்தனை யதுவுஞ் செய்யும் " (2. 58) எ - ம் வருமது கலையுஞ் சித்தமும் நினைவை எழுப்புங் கருவி என்ப தற்குக் கண்டுகொள்க. இனி, வித்தையும் ஆங்காரமும் அறிவை மேலிடுவிக்குங் கருவியென்பதற்கு பி - ம் " வித்தை உயர் கலையத னில் தோன்றி அறிவினை உதிக்கப் பண்ணும் " எ - ம், " ஆங்காரம் புத்தி யின்கண் உதித்தகந் தைக்கு வித்தாய், ஈங்கார்தான் என்னோ டொப்பார் " (சித்தியார் 2. 55, 59) எ - ம் வருமது கண்டுகொள்க. இனி, நியதியும் புத்தியும் நிச்சயிக்குங் கருவியென்பதற்கு பி - ம் " நியதிபின் தோன்றிக் கன்ம நிச்சயம் பண்ணி நிற்கும் " (ஷை 2. 55) எ - ம், " புத்திஅவ் வியத்தில் தோன்றிப் புண்ணிய பாவஞ் சார்ந்து, வத்துநிச் சயமும் பண்ணி " (ஷை 2. 58) எ - ம் வருமது கண்டுகொள்க. இனி, மனதும் அராகமும் ஆசையைப் பற்றுவிக் குங் கருவி என்பதற்கு பி - ம " விச்சையின் அராகந்தோன்றி வினை வழி போகத் தின்கண், இச்சையைப் பண்ணி நிற்கும்" எ - ம், "மன

மது தைச தத்தின் வந்தொரு பொருளை முந்தி, நினைவதுஞ் செய்து " (ஷி 2. 56, 60) எ-ம் வருமது கண்டுகொள்க. ஆகையால், அந்தக் கரணங்கள் நாலுக்கும் சித்தத்துக்குக் கலையும் ஆங்காரத்துக்கு வித்தையும் புத்திக்கு நியதியும் மனத்துக்கு அராகமும் உட்கருவியாய் நிற்குமென்பதை அநுபவத்தாற் கண்டுகொள்க.

இனி, சுத்த தத்துவங்கள் ஐந்தும் வித்தியா தத்துவங்கள் ஏழையுங் காரியப்படுத்துமென்றும் வித்தியா தத்துவம் ஏழும் ஆன்ம தத்துவம் இருபத்துநாலையுங் காரியப்படுத்துமென்றுஞ் சொன்னதற்கு வழியேதென்னில், சிவ தத்துவம் ஐந்தும் பிரேர காண்டமென்றும் வித்தியா தத்துவம ஏழும் போக சயிததிரிய காண்டமென்றும் ஆன்ம தத்துவம் இருபத்துநாலும் போக்கிய காண்டமென்றுஞ் சொல்லுகையால் அப்படிச் சொல்லபட்டதென அறிக. இதற்கு பி-ம் சித்தியாரில் "ஐந்து சுத்தத்தின் கீழேழ் சுததா சுத்தம் அசுத்தம், தந்திடும் புமான்கீ ழெண்மூன் ருயதத் துவஞ்சீ வர்க்கு, வந்திடும் பிரேர காண்டம் மருவு போக சயித்திரத்தோ, டந்தமில் அணுக்க ளுக்குப் போக்கிய காண்ட மாமே" (2. 70) எ-து கண்டுகொள்க. இனி, வித்தியா தத்துவம் ஏழும் ஆன்ம தத்துவம் இருபதநாலையுங் காரியப்படுத்து மென்பதற்கு பி-ம் சித்தியாரில் "வாயாதி சோத்தி ராதி புறத்துவாழ் கருவியாகும், ஓயாத மனாதி காயத் துணருமுட் கருவி யாகும், ஆய்வார் கட் கராக மாதி அவற்றினுட் கருவி யென்பர், மாயாள்தன் வயிற்றின் வற்ருல் துடக்குண்டு வாழு மான்மா" (2. 63) எ-து கண்டுகொளக. இனி, சிவ சத்திகளாலே இந்தத் தத்துவங்களொன்றையொன்று காரியப்படுத்துமென்றும் அப்படிக் காரியப்பட்டுத் தோன்றுமிடதது சுத்த மாயையாலே அசுத்த மாயை காரியப்படுமிடத்து அதிலே பிரகிருதி மாயையானது ஆன்ம தத்துவம் இருபத்து நாலுக்கும் உபாதானமாகத் தோன்றுமென்றும் மற்றுள்ள தத்துவங்களும் அவையிற்றிலே தோன்றுமென்றும கூறியதற்கு பி-ம் சித்தியாரில் "விந்துவின் மாயை யாகி மாயையின் அவ்வி யத்தம், வந்திடும் விந்து தன்பால் வைகரி யாதி மாயை, முந்திடும் அராக மாதி முககுண மாதி மூலம், தந்திடுஞ் சிவன வன்தன் சந்நிதி தன்னில்

நின்றே" (1. 19) எ - து கண்டு கொள்க. இங்ஙனம் பிரகிருதி மாயையை அவ்வியத்தமென்றும் மூலமென்றும் பெயர் கூறிய தேதென்னில், பிரகிருதி மாயைக்கு மூலப் பிரகிருதி என்றும் அவ்வியத்தமென்றும் புமானென்றும் மானென்றும் மாயையென்றும் உள்ளமென்றும் ஆன்ம தத்துவமென்றும் பெயராகையால் அப்படிச் சொன்னதென அறிக. என்று இங்ஙனங் கூறிவந்த வகைகளால் ஆன்மா ஒருவிடயததைக் கொள்ளுமிடத்துப் பதினெட்டுக் கருவியுங் கூடியே புசிக்கவேணும் என்பதை அநுபவத்தாற் கணடுகொள்க.

இஙஙனம் பொருள் கூறிவந்த இந்தச் செய்யுளின் முதற்பாகமாகிய "மருவிய பொறியில் ஒன்றும் மாபூதம் ஐந்தில் ஒன்றும் கருவிகள் நான்கும் நீங்காக் கலாதிகள் ஐந்துங் கூடி யொரு புலனுகரும்" என்ற பதத்தை ஐக்கியவாதியை நோக்கி மறுத்துக் கூறிய தென்னவுமாம். அஃதெஙஙனேயென்னில், உணர்த்து முறைமைக்குச் சொல்லுமிடத்து ஆணவ மலததான் மறைப்புண்டு கிடக்கும் ஆன்மாவைச் சிவன் மாயா கருவிகளைக் கூட்டி உணர்த்துவனென்றமையால், அப்படி ஆணவமலமென்பது ஒன்றுமில்லை மாயா கருவிகளே ஆன்மபோதத்தை மறைக்குமென்பது ஐக்கியவாதி கருத்தாகையால், மாயா கருவிகள் கூடியே ஆன்ம போதம் சீவிக்குமென்று இந்தப் பதம் நடகையால் அவனை மறுத்துக் கூறினதென்றதென அறிக. இனி, அந்த ஒழுஙகொழிந்து உயிருமொன்றைத் தெரிவுறுதென்ற பதமும அவிகாரவாதியை நோக்கி மறுத்துக் கூறினது என்னவுமாம. அஃதெஙஙனே என்னில், அவன் ஆன்மா தானே அறியுமென்று சொல்லுகையால் இந்தப் பதங கருவிகள் கூடியே ஆன்மா அறியுமென்றமையால் அவனை மறுதததென்றதென அறிக. இனி, அவனொழிந் தத்திரள்களுஞ் செயலிலாவே என்ற பதமும் சங்கிராந்தவாதியை நோக்கி மறுததுக்கூறின தென்னவுமாம். அஃதெங்ஙனே என்னில், அவன் ஆன்மா அறியாது கருவிகள் அறியுமென்று சொல்லுகையால் இநதப்பதம் ஆன்மாவைக் கூடாமற் கருவிகள் அறியாதென்று மறுததுக் கூறுகையால் அவனை மறுத்ததென அறிக. இந்த மூன்று வகைக்கும் உதாரணம் சங்கற்ப நிராகரணததிலே கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது சிவன் ஆன்மாக்களை உணர்த்தும் முறைமையில் ஆன்மாக்கள் பதினெட்டுக் கருவிகள் கூடி அறியு மென்றும் கருவிகளைக் கூடாமல் ஆன்மா அறியாதென்றும் ஆன்மா வைக் கூடாமற் கருவிகள் தாமாக அறியாதென்றுஞ் சொன்ன முறைமையை அறிவித்தது. க

அப்படி ஆன்மாவுங் கருவிகளுந் தம்மிற் கூடி அறியுமாற்றாற் கர்த்தா உணர்த்துவனென்பான் ஏனென்று வினவின மாணவகனை நோக்கி அருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

64. தனக்கென அறிவி லாதான் தானிவை அறிந்து சாரான்
தனக்கறி விலாத வாயில் தான்அறி யாது சாரா
தனக்கென அறிவி லாதான் தத்துவ வன்ன ரூபன்
தனக்கென அறிவா னால்இச் சகலமும் நுகருந் தானே.

தத்துவஞ் சடமுயிர் தானு வறியாது
ஒத்துணா வதுபதி யுணர்வா லென்றது.

(உரை) தனக்கென அறிவி லாதான் தான் இவை அறிந்து சாரான் - ஒருத்தர் அறிவியாமல் தனக்கெனவோர் அறிவில்லாத ஆன்மா அதீதப்பட்டுக் கிடக்கும் அவதரத்துத் தானாக இந்தத் தத்துவங்களைக்கூடி அறியமாட்டான்; தனக்கறி விலாதவாயில் தானறி யாது சாரா-தனக்கென்ன ஒரு காலத்திலும் அறிவற்றுச் சடமாயிருக் கப்பட்ட இந்திரியங்கள் அதீதப்பட்டுக் கிடக்கிற ஆன்மாவை அறிந்து கூடமாட்டாது. அப்படியானாலும்; தனக்கென அறிவிலா தான் தத்துவ வன்ன ரூபன் - தனக்கென்னவோர் அறிவில்லாத ஆன்மா பஞ்சவன்னங்களை யடுத்த படிகம்போலத் தத்துவங்களினது சொரூபமே தனக்கு வடிவாய் நிற்பன். இப்படிக் கூடினதன் தன்மையாய் நிற்கிறவனாகையால் தற்சுதந்தர முள்ளவனல்ல. ஆனால் இவைதன்னிற் கூடியறிந்தபடி எங்ஙனே என்னில்; தனக்கென அறிவானால் இச் சகலமும் நுகருந்தானே - தனக்கொருவர் அறிவி யாமல் தானே சர்வத்தையும் அறியத்தக்க சிவனாலே ஆன்மா சர்வத் தையும் அறிந்து சீவியாநிற்பன். ஆன்மா சர்வத்தையும் அறிவனென்

றது அந்தக்கரணங்களோடுஞ் சோத்திராதிகளோடுங்கூடிச் சத்தாதிகளை அறிவனென்றதென அறிக.

ஆன்மாவைத் தனக்கென அறிவிலாதான் என்றது அதீதப்பட்டுக் கிடக்கும் அவதரத்துச் சரீர சம்பந்தனுயிருந்தும் ஒன்றையும் அறியாமற் கிடக்கையினுலென அறிக. இதற்கு பி - ம் சிவஞான போதத்தில் "அவ்வுடலின் நின்றுயிர்ப்ப ஐம்பொறிகள் தாங்கிடப்பச், செவ்விதின் அவ்வுடலிற் சென்றடங்கி" (3. 4) எ - து கண்டு கொள்க. இனி, கருவிகளைச் சடமென்றதும் அப்படி ஒன்றையும் அறியாமற் கிடக்கையினுலென அறிக.

இதனுற் சொல்லியது ஆன்மாவுக்குத் தனக்கென ஓர் அறிவில்லாதபடியாலே தானுகத் தத்துவங்களைக் கூடி அறியமாட்டாதென்றும் கருவிகள் சடமாகையாலே அவை தானுக ஆன்மாவைக் கூடி அறியமாட்டாதென்றும் இவை இரணடையுங் கூட்டிக் காரியப்படுததுவது சிவனேயென்றும் வருமுறைமையை அறிவித்தது. உ

அப்படி ஆன்மாவையுங் கருவிகளையுஞ் சிவனே கூட்டி அறிவிப்பனென்கிறதென்ன சிவன் விகாரமறநிற்க அவனருளைக்கொண்டு ஆன்மா தானே சுட்டி அறிந்து வருமென்கிற அவிகாரவாதியையும் அப்படி அல்லவென்று ஆன்மாவுக்காகச் சிவன் தானே பிரபஞ்சத்தைச் சுட்டியறிந்து நிற்பனென்ற பரிணுமவாதியையும் மறுத்தருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

65. கண்டறி புலன்கள் காணும் கருத்திஞல் ஒருத்தன் ஞானம்
கொண்டுளம் அறியு மென்னில் கொள்பவன் முதலி யாகும்
மண்டிய உணர்வு யிர்க்கா மன்னிநின் றறியு மென்னில்
உண்டிட வேண்டு வானுக் கொருவன்வே றுண்ட லாமே.

இப்பரி சன்றி யிகலுறு சமயிகள்
செப்பிய மொழியைத் தப்பென மறுததது.

(உரை) கண்டறி புலன்கள் காணுங் கருத்திஞல் - கண்டு கேட் டுண்டுயிர்த்து உற்றறியப்பட்ட இந்திரியங்களைக் கொண்டு ஆன்மா தனக்கேற்ற விடயஙகளைக் கொள்ளும் முறைமைபோல ; ஒருத்தன் ஞானம் கொண்டுளம் அறியுமென்னில் - எங்குந்தா னொரு

வனுமாய் நின்று சர்வான்மாக்களுக்கும் உயிர்க்குயிராயும் நின்று சேட்டிப்பிக்கிற சிவனுடைய ஞானத்தைக்கொண்டு ஆன்மா அறியு மென்று நீ சொல்லில்; கொள்பவன் முதலியாகும் - என்றிங்ஙனம் அறிந்துகொள்ளுகிற ஆன்மாவே கர்த்தாவாவன். அப்படியல்ல ஆன்மாவுக்காகச் சிவனறிவனென்ற பரிணமவாதியை மறுத்தருளிச் செய்கின்றது; மண்டிய உணர்வுயிர்க்கா மன்னிநின் றறியுமென் னில் - சிவனுடைய மிகுத்த ஞானமானது ஆன்மாவுக்காக நிலைபெற் றறியுமென்று நீ சொல்லில்; உண்டிட வேண்டுவானுக் கொரு வன்வே றுண்டலாமே - பசித்திருப்பான் ஒருவனுக்காக அயலே ஒருவனுண்டானென்னுந் தன்மைகொக்கும். ஆதலாற் சிவனு டைய ஞானத்தைக்கொண்டு ஆன்மா முதன்மையாக நின்றறிவது மில்லை ஆன்மாவுக்காகச் சிவனறிந்து நிற்பதுமில்லை என்பது கருத்து.

என்னவே சிற்றறிவாயுள்ள ஆன்மாவைப் பேரறிவாயுள்ள சிவ னறிவிக்க அந்த அறிவே ஆதாரமாக ஆன்மா அறிவனென்றதெனக் கொள்க. இதற்கு பி - ம் திருவாசகத்தில் "அவனரு ளாலே அவன்தாள் வணங்கி" (1. 18) எ - ம், தேவாரத்தில் "காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக் காலே" (6. 95. 3) எ - ம் வரும் ஏதுக் களைக் கண்டுகொள்க.

உதாரணம் :—ஆன்மா இந்திரியங்களைக்கொண்டு விடயங்களை அறிந்தாற்போலச் சிவன் விகாரமற நிற்க அவனருளைக்கொண்டு ஆன்மா முதன்மையாக நின்றறிவனென்று அவிகாரவாதி சொன்ன தற்கு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில் "நீர்நிழ லனைய சீர்பெறு கடவுளை - சலமிலனாகிச் சார்ந்தவர்க் கென்றும் - நலம்மிக நல்கும் நாதனை அணைந்து - பூழி வெம்மை பொருந்தா துயர்ந்த - நீழல் வாழும் நினைவினர் போலத் - திருவடி நீழல் சேர்ந்து - கருவுறு துயரங் களைந்திருந் திடுமே" (10. 59 - 65) எ - து கண்டுகொள்க. இது அததமாகாதென் றவனை மறுத்ததற்கு பி - ம் சஙகற்ப நிராகர ணததில் "பாதவம் என்றும் சேதனம் இன்மையின் - இணைந்தோர் வம்மின் என்பதும் துன்பம் - விளைததோா தம்வயின் வெறுப்புமொன் றிலதே - பொடிததிடு கொப்புள் வெடிததிடு பாதம் - வெய்ய பூழி யின் உள்ளுற அழுஙகி - ஆற்றுதல் இன்றி யாறியங குநாமுன் -

தோற்றிடும் என்று சொல்லவும் இலதால் - இவ்வகை கடவுட் கியம்புதல் தவறே" (11. 40 - 47) எ - து கண்டுகொள்க. ஆன்மாவுக்குச் சிற்றறிவுதானுமில்லை அவனுக்காகச் சிவன் அறிவனென்று பரிணாமவாதி சொன்னதற்கு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில் "அறிவோன் தானும் அறிவிப் போனும் - அறிவாய் அறிகின் றேனும் அறிவுறு - மெய்ப்பொருள் தானும் வியந்திது வெனப்படும் - அப்பொருள் யாவும் அவனே என்றும்" (11. 77-80) எ - து கண்டுகொள்க. இது அத்தமல்லவென் றவனை மறுத்ததற்கு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில் "அறிவொன் றில்லோர்க் கிறையருள் உதவுதல் - பிறிவறி வரிய செறிஇருள் இடத்தோர் - அந்தகர்க் காண வந்தோர் எம்மை - நீவிரும் காண வேணும் என்றுங் - கெடுத்தொரு தீபம் கொடுத்ததை ஒக்கும் - இச்செயற் கிறைவன் கொச்சையன் அன்றே" (12. 115-120) எ - து கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது சிவன் விகாரமற நிற்கச் சிவனுடைய ஞானத்தைக்கொண்டு ஆன்மா அறிவனென்ற அவிகாரவாதியையும் அப்படியல்ல ஆன்மாவுக்காகச் சிவனறிகிறதொழிய ஆன்மாவுக்கென்ன ஒரு சிற்றறிவுதானும் இல்லையென்கிற பரிணாமவாதியையும் மறுத்த முறைமையை அறிவித்தது. ௩

இப்படியே சிவனறிவிக்கச்செய்தே அந்தச் சிவன் செய்விக்கிறதை யறியாமல் ஆன்மாக்கள் நான் செய்தேன் பிறர் செய்தாரென்று சுட்டிக்கொண்டு அந்தச் சிவனை இழந்து நிற்கிற முறைமையெப்படியென்று வினவின மாணவகனை நோக்கித் திருஷ்டாந்த முகமாக அருளிச்செய்வான் எடுத்துக் கொண்டருளியது.

66. இருள்நனி இரவி தான்வந் திரித்தலும் இரவில் எண்ணும்
பொருள்நிலை கண்டு மாந்தர் பொருந்திடு மாறு போல
மருள்நிலை யெங்கு நீங்க மகிழ்ந்துயிர் தன்னுள் மன்னும்
அருளையும் ஒழிய ஞாலத் தறிந்தவா றறியு மன்றே. ௪

பருதி யுதவியைப பாரறி யாபோல்
அருளுத வியையுயிர் அறியா தென்றது.

(உரை) இருள்நனி இரவி தான்வந் திரித்தலும் - இருளினது மிகுதியை ஆதித்தன் வந்து நீக்கினவிடத்து; இரவி எண்ணும்

பொருள் நிலைகண்டு மாந்தர் பொருந்திடுமாறுபோல - ஆன்மாக்கள் இராக்காலத்தில் விசாரித்த காரியஙகளெல்லாம் அவன் சந்நிதியிலே கண்டு தத்தந தொழில்களைச் செய்யுமிடத்து இந்த ஆதித்தன் காட்டவல்லவோ நாம் கண்டோமென்று நினையாமல் அந்த ஆதித்தனை இழந்து நின்று தங்கள் சாமர்த்தியமாகக் கண்டு செய்து வருமாறுபோல ; மருள்நிலை யெஙகும் நீங்க மகிழ்ந்துயிர் தன்னுள் மன்னும் அருளையும ஒழிய - ஆணவ மலத்தின் மறைப்பு எவ்விடத்தினும் விட்டு நீங்க விருப்பத்துடனே ஆன்மாவினிடத்திலே நிலை பெறறுப பிரகாசிக்கிற அருளாலே ஆன்மாக்கள் அறிந்து சீவித்து நிற்க இந்த அருளாலொழிந்தறிந்து புசிக்கக்கூடாதென்று அறியாமல் தாம் தஞ் சாமர்த்தியத்தினுலே அல்லவோ அறிந்து புசிக்கிறு மென்று விசாரித்திருக்கிறது எப்படியென்னில் ; ஞாலததறிந்தவாறு அறியுமன்றே - முன் சொன்னபடியே பிரபஞ்சத்தில் ஆன்மாக்கள் ஆதித்தன் சந்நிதியிலே கண்டுந் தத்தந் தொழில்கள் செய்யச் செயதேயும் அந்த ஆதித்தனை இழந்து நின்று தாங்கள் செய்தோ மென்னும் முறைமைபோலும்.

மருள்நிலை எஙகும் நீங்க என்றது ஆன்மாக்கள் புசிக்குமிடம் எங்கும் அவதாரந்தோறும் மலநீஙகுமென்றதென அறிக. இதறகு பி - ம " நிலைக்குணங கணந்தொறு மவத்தை நீடுதல் " எ - து கண்டு கொள்க.

இதனுற் சொல்லியது சர்வான்மாக்களும் ஆதித்தனுலே இருளானது நீஙகத் தததம் தொழில்கள் செய்யச் செயதேயும் அவனை இழந்து தாஙகள் செய்தோமென்னுந் தன்மைபோலச் சிவனுலே அறிந்து சாவமும் சீவிக்கச்செய்தேயும் அந்தச் சிவனை இழந்து தாஙகள் செய்தோமென்று நிற்கிறதும் அத்தன்மைக்கு ஒக்குமென் னும் முறைமையை அறிவித்தது. ௬

இந்த அத்ததனை இன்னமும் ஒரு அநுபோக திருஷ்டாந்தமாக அருளிச்செயகின்றது.

67. அறிந்திடும் மறுதி வாயி லானவை அவன்ற னுலே
அறிந்திடும் எனறும் ஒன்றும் அறிநதிடா அவைபோல்யாவும

அறிந்திடும் அறியுந் தன்மை அறிந்திடா கன்மத் தொன்மை
அறிந்தவை நுகரு மாறும் அருளுவன் அமலன் தானே. ரு

பொறியுங் கரணமும் போலுயிர் அருளால்
அறியுந் தன்மை யறியா தென்றது.

(உரை) அறிந்திடும் மனுதி வாயிலானவை - யாதாமொன்றை அறியத்தக்க அந்தக்கரணங்களும் இந்திரியங்களுமென்று சொல்லப்பட்ட கருவி கரணங்கள்; அவன்றனுலே அறிந்திடும் - ஆன்மாவினுலே பிரபஞ்சவிடயத்தை அறியாநிற்கும். அப்படி அறியச்செய்தேயும்; என்றும் ஒன்றும் அறிந்திடா - எக்காலமும் ஆன்மாவினுலே அல்லவோ நாமறிகிறோமென்று அந்தககரணங்களும் இந்திரியங்களுஞ் சிறிதும் அறியமாட்டாது; அவைபோல் - தனக்குக் காட்டாக உள்ள ஆன்மாவை அந்தக் கருவி கரணஙகள் அறியாதிருந்தாற்போல; யாவும் அறிந்திடு மறியுந்தன்மை அறிந்திடா - சர்வான்மாககளுந் தங்களுக் கறியவேண்டியதெல்லாம் சிவனுடைய ஞானத்தாலே அறிந்து புசியா நிற்கச்செய்தேயும் அந்த அருளாலே அல்லவோ அறிந்து புசிக்கிறோமென்று அறியமாட்டார்கள். ஆகையால் அதுவுமன்றி; கன்மத் தொன்மை அறிந்தவை நுகருமாறும் அருளுவன் அமலன் தானே - பழையதாக ஊட்டுகிற கன்ம பலன்களையும் ஆன்மாக்கள் தாமே அறிந்து புசிக்கமாட்டார்கள். அது கொண்டே அவையிற்றைப் புசிக்கிற முறைமைகளையுங் கூட்டுவன் நிமலனுகிய சிவன்தானே.

கன்மத்தொன்மை அறிந்தவை நுகருமாறும் அருளுவன் அமலன தானே எ - து சைவர் அத்தத்தை மறுத்ததென்னவுமாம். அஃதெங்ஙனேயென்னில், அவர்கள் ஊழாயுள்ள கன்மங்களைப் புசிக்குமிடத்து ஆன்மாக்கள் தாமே அறிந்து புசிக்கும், சிவன் கூட்ட வேண்டுவதில்லை யென்கையாலென அறிக. அஃதாவது சிவன் ஆன்மாவையுங் கருவிகளையுங் கூட்டினுற் பின்னைத தானே சீவிக்குமென்பது கருதது. இதற்கு பி - ம் சஙகற்ப நிராகரணத்தில் "அண்ணல் - கலைமுத லாக நிலவிய கருவிகள் - விளக்கென உதவுந் துளக்கறப் பொருந்தி - இருவினை நுகர்வில் வருவினை செய்து - மாறிப் பிறந்து வருநெடுங காலத்து" (12. 143-147) எ - து கண்டுகொள்க.

இதனுற் சொல்லியது அந்தக்கரணங்களும் இந்திரியஙகளும் ஆன்மாவினுலே அறிந்து புசிக்கச்செய்தேயும் அந்த ஆன்மாவினுலே யல்லவோ அறிகிருேமென்று அறியாதாற்போல ஆன்மாக்களுஞ் சிவனுலே அறிந்து சீவிக்கச்செய்தேயும் அந்தச் சிவனை இழந்து நிற்கிறதும் அப்படி யென்னும் முறைமையை அறிவித்தது. ரு

## ஞானவாய்மை

## ஆருஞ் சூத்திரம்

இஙஙனம் உணர்த்து முறைமையிற் பிரபஞ்ச காரியப்பட்டு வரும் ஆன்மாக்களுக்கு மலபாகம் வந்து முத்தியும் உணடாமாகை யால், இவ்வதிகாரத்துக்கு மேலாக ஆருஞ்சூததிரமும் மேலதற்கோர் புறனடையாகிய ஏழாஞ் சூத்திரமுமாகிய ஞானவாய்மையென்னும் அதிகாரம் வைக்கப்பட்டது.

இவ்வதிகாரத்துக்குச் சூத்திரம் இரண்டு நின்ற முறைமை யெங் ஙனேயென்னில், "காட்டிடுங கரணம்" (68) என்ற விருத்தமொன் றும் ஆருஞ் சூத்திரமாகவும், "பன்னிறங் கவரும்" (69) "மாயைமா மாயை" (70) என்ற விருததம் இரண்டும் ஏழாஞ் சூத்திரமாகவும் நின்றதென அறிக. இதற்கு வழியேதென்னில் சிவஞானபோததநில் ஆருஞ் சூத்திரமாகிய "உணருரு அசத்தெனில் உணரா தின்மை யின், இருதிற னல்லது சிவசத் தாமென, இரண்டு வகையின் இசைக் கும்மன் னுலகே" எ - கு சத்தும் அசத்தும் வரைசெய்து நிற்ற லானும், "சுணடறிவினுல் அறியப்பட்ட சுட்டு அசத்து" (வார்த் திகம்) ஆகையினுலும், "அறிவுறும் பொருளோ வீச னறிவுறு தவனே" எ - ம் "உணராத பொருள்சத் தென்னி லொருபய னில்லை" (6. 1, 4) எ - ம் சிததியாரில் ஆருஞ் சூத்திரததில் வருகை யாலும், "இவ்விரணடு தன்மையுமின்றி வாக்கு மனுதீத கோசரமா யுள்ளது சத்தாயுள்ள சிவம் (சூ. 6, வூாத்திகம) என்கையாலும, இந்நூலினும "காட்டிடும் கரண மொன்றும இல்லையேற காணு ணுதாம், நாட்டிய இவறருல் ஞானம் நணுகவும ஒண்ணு" (68) எ - ம சத்தும அசத்தும் வரைசெயது நிற்றலால் இதுவும ஆருஞ சூததிரமாக நின்றதென அறிக. மறறுள்ள விருததம் இரணடும

மேலதற்கோர் புறனடையாகிய ஏழாஞ் சூத்திரமாக நின்ற முறைமை எங்ஙனேயென்னில்,சிவஞானபோதத்தில் ஏழாஞ் சூத்திரமாகிய "யாவையும் சூநியம் சதசெதிர் ஆகலின், சத்தே அறியா தசத்தில தறியா, திருதிற னறிவுள திரண்டலா ஆன்மா" எ - கு "மெய்யினிடத்துப பொய் அப்பிரகாசமாய் நிற்றலான்"(வார்த்திகம்) எ - ம், உதாரணத்திலும் "அந்நியமி லாமை யரற்கொன் றுணர் வின்றும், அந்நியமி லானசத்தைக் காண்குவனேல் - அந்நியமாக் காணுன் அவன்முன் கதிர்முன் னிருள்போல, மாணு வசத்தின்மை மற்று" (7.1) எ - ம் வருங் கருத்தால் இந்நூலினும் "பன்னிறங் கவரும்" (69) என்ற விருத்தத்தில் "வளரொளி போல வையம், தன்னகம் பயிலும் நற்சிற் சடங்களின் தன்மை தாவா" என்கை யாலும், "இனி அசத்தினுக்கு உணர்வின்று" (வார்த்திகம்) என் னுங் கருத்தால் "இவ்விரண்டையும் அறிவதாய் உபதேசியா நின்றவறிவு இரண்டின்பாலும் உளதாயுள்ள அதுவே அவ்வான்மா வாம்" (வார்த்திகம்) என்றதால் இந்நூலினும் "மாயை மாமாயை (70) என்னும் விருத்தம் "இருதிற னறிவுள இரண்டலா ஆன்மா" என்னுங் கருத்தைப்பற்றி "மருளெனி லிருளாய் நிற்கும், அரு ளெனி லொளியாய் நிற்கும்" எ - ம் ஆன்மாவுக்குக் கூடினதன் தன்மைக் கருளிச்செய்கையால் இவையும் ஏழாஞ் சூத்திரமாய் நின்ற தென அறிக.

மேல் "காட்டிடுங் கரணம்" என்னும் விருத்தத்துக்குத தொந்தனையாவது இங்ஙனம் இவ்வதிகாரததால் அருளிச் செய்யப் பட்ட ஞானத்தின் உணமையை அடியேன் போதங்கொண்டு அறியப் படும் பொருளாய் இருக்குமோ அறியப்படாத பொருளாயிருக்குமோ என்று வினவின மாணவகனை நோக்கி அருளிச்செய்வான் எடுத்துக் கொண்டருளியது.

68\. காட்டிடும் கரண மொன்றும் இல்லையேற் காணு னுதாம்
நாட்டிய இவற்றுன் ஞானம் நணுகவும் ஒண்ணு முன்னம்
ஈட்டிய தவத்தி னுலே இறைஅரு ளுருவாய் வந்து
கூட்டிடும் இவற்றை நீக்கிக் குரைகழல் குறுகு மாறே. க

முற்பவத் துயிர்கள் முயன்றநற் றவத்தால்
அற்புதன் திருவுரு வாவ னென்றது.

(உரை) காட்டிடும் கரணமொன்றும் இல்லையேற் காணொணு தாம்-உனக்குக் காட்டாகவுள்ள கருவிகளொன்று மில்லாத பொழுது பழைய அறிவுதானும் இல்லையாய்ச் சுத்த கேவலமே முத்தியென்கிற பாடாணவாதி மத்தமுமாய் முடியும்; நாட்டிய இவற்றுன் ஞானம் நணுகவும் ஒணுது - இங்ஙனஞ் சொல்லப்பட்ட தத்துவங்களோடுங் கூடி அறியுமென்னில் ஒரு காலத்தும் அருளிற்சென்று கிட்டவும் ஒணுது.இது சங்கிராந்தவாதி மத்தமுமாய் முடியும்.இந்த இரண்டு வகையுமன்றி அந்த ஞானததை அறிந்து பெறுமுறைமை எங்ஙனே என்னில்; முன்னம் ஈட்டிய தவத்திஞலே இறை அருளுருவாய்வந்து கூட்டிடும்-ஆன்மாக்கள் முன் ஜநநங்களிற் செய்த சிவபுண்ணியததின் மிகுதியாலே தம்பிரானுர் ஆசாரிய மூர்த்தமாகத் திருமேனிகொண்டு எழுநதருளிவந்து கூட்டாநிற்கும்; இவற்றை நீக்கிக் குரைகழல் குறுகு மாறே - இங்ஙனம் முன்சொன்ன கேவல சகலம் இரண்டை யும் நீக்கி ஆரவாரத்தை யுடைத்தாகிய வீரககழல் பொருந்தின ஸ்ரீபாதத்தைச் சென்று பொருந்தும் முறைமையை.

உதாரணம் :—கருவிகளெல்லாங் கழன்ற கேவலம் பாடாண வாதி மத்தமாமென்று மறுத்ததற்கு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில் "காட்சி யென்னக் காணுத துயர - மாட்சியை முத்தி என வகுத் துரைக்கிற் - கரணு பாவம் மரணங் கருமரம் - ஏய்ந்தவர் முத்தி சேர்ந்தவ ரன்றே - யனைய கதிக்கோர் முனைவரும் வேண்டா - தனிதரு துயரம் எனும்இது திடனே - பாடா ணத்திற் கூடா முத்தி" (7. 9 - 15) எ - ம, சித்தியாரில் "கரணஙகள் கெட விருக்கை முததியா மென்னில் கதியாகும சினைமுட்டை கருமரத் தின் உயிர்கள், மரணஙகொண் டிடஉறங்க மயஙகிமூர்ச் சிகக வாயுத் தம் பனைபண்ண வல்விடததை அடையச், சரணஙகள் புகுநிழல் போல் தனைஅடையுஞ் சமாதி தவிராது மலமதுவும் பசுஞான மாகும, அரணஙக ளெரித்தவன்தன் அடியைஅறி விறந்தங் கறிந் திடா செறிந்ததுகள் அகற்றி டீரே" (9. 3) எ - து கணடுகொள்க.

இனி, கருவிகளோடுஙகூடிநின்று அறிகிற சகலஞ் சங்கராந்தவாதி

அத்தமாமென்று மறுத்ததற்கு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில் "நிறைந்து நீயாய் நின்றனை யேனும் - மறைந்தைம் புலனுய் வாரா யென்றும் - கரணம் எல்லாங் கடந்தனை என்றும் - மரணம்ஐ ஐந் தின் அப்புறத் தென்றும் - முன்னருட் டலைவர் பன்னினர் எனவும் - இனையவை ஒழிய அறிகுவ தெவ்வா - றென்ற நிற்கலிக் கொன் றிய இன்பம் - கூறுதல் தருமருட் பேறினை அன்றே" (10. 37 - 44) எ - து கண்டுகொள்க. அன்றியும், இந்த விருத்தம் ஆறுஞ் சூத்திர மென்பதற்கு பி - ம் சித்தியாரில் "அறிவுறும் பொருளோ ஈச னறிவுறு தவனே வென்னில், அறிபொருள் அசித்த சத்தாம் அறி யாத தின்றும் எங்கும், செறிசிவம் இரண்டு மின்றிச் சித்தொடு சத் தாய் நிற்கும்" (6. 1) எ - து கண்டுகொள்க.

இதனுற் சொல்லியது கருவிகளெல்லாம் நீங்கின கேவலத்திலு லுங் கருவிகளைக் கொண்டறிகிற சகலத்திலுலுஞ் சிவசொரூபத்தை அறியப்படாதென்னும் முறைமையும் ஆன்மாக்கள் முற்செய்த தவத்திலுலே கர்த்தா ஆசாரிய மூர்த்தமாக எழுந்தருளி அந்த உண்மை ஞானத்தைக் கடாக்ஷித்தருளுவனென்னும் முறைமையும் அறிவித்தது. க

## ஏழாஞ் சூத்திரம்

இவ்வதிகாரத்துக்குமேல் வரும் விருத்தம் இரண்டும் ஏழாஞ் சூத்திரத்தின் கருத்தாகையால் மேலதற்கோர் புறனடையாகிய ஏழாஞ் சூத்திரத்தில் வைத்ததுக்கொண்டு அருளிச்செய்வான் எடுத் துக்கொண்டருளியது.

மேல் வரும் விருத்தத்துக்குத் தொடர்ந்நனையாவது அப்படி ஆசாரிய மூர்த்தமாக எழுந்தருளி வந்து கடாக்ஷித்தருளுகிற ஞானமேதென்று வினவ மேலொரு திருஷ்டாந்த முகமாக அரு ளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

69. பன்னிறங் கவரும் தொன்மைப் படிகநீ டொளியும் பன்
மன்னிலங் கியல்பும் தந்த வளரொளி போல வையம்[மை
தன்னகம் பயிலும் நற்சிற் சடங்களின் தன்மை தாவா
நன்னலம் பெறநி றைந்த ஞானமே ஞான மென்பர். க

பன்னிறம் பளிங்கிற் பற்றிடப் பற்றுப்
பொன்னொளி போலும் மன்னரு ளென்றது.

(உரை) பன்னிறங் கவருந் தொன்மைப் படிகநீ டொளியும் - பல நிறங்களையுந் தன்னிடத்திலே கவர்ந்து கொள்ளுகிற அநாதியே யுடைத்தாகிய படிகத்தினது நிலைபெற்ற பிரகாசத்தினையும்; பன்மை மன்னிலங் கியல்பும் - அந்தப் படிகத்திலே பொருந்தப்பட்ட பல வன்னங்களும் அதிலே பிரதிபிம்பஞ்செய்து நிற்கிற முறைமையும்; தந்தவள ரொளிபோல - அவை இரண்டையுங் கூட்டிக் காரியப் படுத்துகிற ஆதித்தப் பிரகாசம்போல; வையம் தன்னகம் பயிலும் நறசித்து - பிரபஞ்சமாகிய பாசங்களையும் ஆன்மாக்களையுந் தன் னுடைய சேட்டையாலே கூட்டிக் காரியப்படுத்தி நிறகுந் திரு வருள் ஞானமானது அப்படிக் கூட்டிக் காரியப்படுததி நிற்கச் செய்தே முற்கூறிய உபமானத்திற் படிகத்தையும் வன்னஙகளையுங் கூட்டிக் காரியப்படுத்தின ஆதித்தப் பிரகாசமும் அவையிற்றில் தோய்வற்று நின்றாற்போல; சடஙகள் தன் தன்மை தாவா நன்னலம் பெற நிறைந்த ஞானமே ஞானமென்பார் - சடமாகிய பாச மயக்கந் தன்னை வந்து பொருந்தாதபடி தோய்வற நிற்கிற திருவருள் ஞானத் தையே மேலான உண்மை ஞானமென்று பெரியோர்கள் சொல்லு வார்கள்.

பன்னிறங் கவருந் தொன்மைப் படிக நீடொளியும் பன்மை மன்னிலங்கியல்புந் தந்த வள ரொளிபோல என்று படிகத்தையும் வனனஙகளையும் ஆதித்தப் பிரகாசத்தையும் உபமானமாகக் கூறியது படிகம் ஆன்மாவுககு உவமையென அறிக; வன்னஙகள் பாசத்துக்கு உவமையென அறிக; ஆதித்தப் பிரகாசந் திருவருள் ஞானத்துக்கு உவமையென அறிக. இனி, வையந்தன்னகம் பயிலும் எ - கு வைய மென்றது ஆன்மாக்களும் பாசங்களுமென்று பொருள் கூறியதற்கு பி - ம் தத்துவ விளக்கததில "கருமலி பாசம சேதனங் கட்டுண்பர் சேதனரென், திருமையில் வைய மடங்குமென் றெண்ணுக" (9) எ - று கண்டுகொள்க. இனி, நற்சிதது எ - கு இந்நூலிலே "இரு ளகறறிப பாதம் உற்றிடு நறபசு வருக்கம்" (19) என்னுங கருத்தைப் பறறி ஆனமாவிலே வைததுக்கொண்டு மலபாகம வந்த ஆனமா

என்று பொருளுரைப்பாரு முளர். அப்படியானாலும், இந்தச் செய்யுள் ஞானவாய்மையென்னும் அதிகாரத்தில் உள்ளதாகையால் அந்தத் திருவருள் ஞானத்திலே கூட்டிப் பொருளுரைப்பது ஒழிய ஆன்ம ஞானத்திற்கூட்டிப் பொருள்கூறுகை வழியல்லவென அறிக. அன்றியும், நற்சித்து என்பதைத் திருவருள் ஞானமென்பதே பொருளாமென்பதற்கு பி-ம் இந்நூலைப் பின்சென்ற நூலாகிய திரு நெறி விளக்கத்திலே இந்தச் செய்யுளுக்கு எதிரிடை விருத்தமாகிய "பற்றிய நிறங்க ளாகும் பளிங்கினை தொளியும் பற்றி, நிற்றலை யளிக்கும் வெய்யோ னீடொளி யதுவும் போல, முற்றுல கதற்குச் சார்வாய் முயற்றினும் முந்நீர் விண்போற், சிற்றினிற் சடங்கள் தோயா என்பர்சிற் சத்தி சேர்ந்தோர்" என்பதற்குப பொருள் திருவருள்ஞானம் பிரபஞ்ச காரியப்படுததி நிற்கச்செய்தே தோய் வறறு நிற்குமென்பதற்குச் சமுத்திரத்திற் கூடின ஆகாயத்தைப் போலத் தோய்வற நிற்குமென்று கூறுகையால்,நற்சித்து என்றதைத் திருவருள் ஞானமென்பதே பொருளென அறிக. அன்றியும், இச் செய்யுளின் கருத்தாகிய குறள் வெண்பாவிலும் "பன்னிறம் பளிங் கிற பறறிடப் பற்றுப்-பொன்னொளி போலு மன்னரு ளென்றதும்" இபபொருள்பற்றி நின்றதென அறிக. அல்லதூஉம், சதுர்த்த சங் கிரகத்திலே இந்தச் செய்யுளுக்குச் சேர்த்த கிரந்தத்தினுங் கண்டு கொள்க. இனி, நன்னலமபெற நிறைந்த ஞானமே ஞானம் எ - கு சிவனுடைய நலத்தை மற்றொருவர் பெற வேணடுகையால் இந் தச் செயயுளுக்குச சோத்த கிரநதமும் அபபொருளைபபற்றி நின்ற தென அறிக. அன்றியும், இதற்கு மலபாகம் வந்த ஆன்மாக் களுக்குத திருவருள் ஞானமுண்டாம்படி யென்று பொருள் உரைப்பினுமாம். அதற்கு வழியேதென்னில், முற்கூறிய உப மானததில் ஆதித்தப் பிரகாசததினாலே படிகததிலே வன்னஙகள் பிரதிபிம்பஞ் செய்யுமிடத்து அந்த ஆதித்தன் சாயவோடும்பொழுது அதிலே பிரதிபிம்பஞ்செய்தும் அந்த ஆதித்தன் மததியானமான பொழுது அந்தப் படிகததின் உச்சியிலே நேர்பட்ட அவதரத்து அந்த வன்னங்கள் கூடியிருக்கச்செய்தே அந்தப்படிகம் வன்னங்களிற் பற்றுமல் ஆதித்தப் பிரகாசத்தைக் கவர்ந்துகொண்டு நின்றாற்போல

அந்தத் திருவருள் ஞானமும் ஆன்மாக்களுக்கு மலபாகம் வாராத நாளெல்லாம் பிரபஞ்சத்திலே புசிப்பித்து மலபாகம்வந்த அவதரத்து அந்தப் பிரபஞ்சப பற்றறும்படி நேர்பட்டுத் தனது திருவருளைக் கடாக்ஷித்து கிற்கையால் அப்படிச் சொன்னதென அறிக. இதற்கு பி - ம் திருவருட்பயனில் "தனக்கு நிழலின்றும் ஒளிகவருந் தம்ப - மெனக்கவர நில்லா திருள்" (67) எ - து கண்டுகொள்க. அன்றியும் அந்தத் திருவருள் ஞானம் ஆன்மாக்களைப் பெத்த முத்தி இரண்டினுங் காரியபபடுத்தி நிற்கும் என்பதற்கு பி - ம் இந்நூலில் "ஏற்ற விவை" (18) எனனுஞ் செயயுளிலே "போற்றலரும் அருளாருளே யன்றி மற்றுப புகன்றவையும அருளொழியப் புகலொ ணுதே" எ - து கண்டுகொள்க.

இதனுற் சொல்லியது ஆதித்தப் பிரகாசமானது படிகத்தையும் வன்னபேதஙகளையுங் கூட்டிக் காரியப்படுத்தி நிற்கச்செய்தே அந்த வன்னஙகளில தோய்வற நின்முற்போலச் சிவனுடைய திருவருள் ஞானமும் ஆன்மாக்களையும் பாசங்களையுங் கூட்டிப் பிரபஞ்ச காரியப்படுத்தி நிற்கச்செய்தேயும் அந்தப் பிரபஞ்ச பாசங்களில் தோய்வற நிற்கின்ற ஞானத்தையே உண்மைஞான மென்னும முறைமையை அறிவித்தது. க

இஙஙனம் அநாதியே கூடிநின்று காரியப்படுத்தி நிற்கிற அருளானது இற்றைவரையும பிரகாசியாமல் இருந்ததேனென்று வினவின மாணவகனை நோக்கி ஆன்மாக்களுக்கு அருளும் மலமும் அநாதியே கூடிநிற்கிறதே முறைமை ஆகையால் அந்த மல மேலிட்டபொழுது அருள் மறைந்துநின்று காரியப்படுத்துமென்றும் அந்த மலபாகம் வகத அவதரதது அந்த அருள் பிரகாசித்து நிற்கிறதும் இயல்பாகையால் அந்த மலம் நீஙகியே அருள் பிரகாசிக்குமென னும் உத்தரம் மேல் அருளிச்செய்வான் எடுததுககொணடருளியது.

70. மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை
ஆயஆ ருயிரின் மேவும் மருளினில் இருளாய் நிற்கும்
மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை
ஆயஆ ருயிரின் மேவும் அருளினில் ஒளியாய் நிற்கும்.உ

இருண்மல மொழிய வினைய ஒளியாய்
அருளுடன் மருவு மவர்திற முரைத்தது.

(உரை) மாயைமா மாயை மூயாவரு மிருவினையின் வாய்மை ஆய ஆருயிரின் மேவும் மருளெனில் இருளாய் நிற்கும் - அசுத்த மாயையில் தோற்றப்பட்ட தத்துவம் முப்பத்தொன்றுஞ் சுதத மாயையில் தோற்றப்பட்ட தத்துவம் அஞ்சுமாகத் தத்துவம் முப்பத்தாறுங் கெடாதே வரப்பட்ட புண்ணிய பாவங்கள் மேன்மேல் வர்த்தியா நிற்கிற ஆன்மாவினிடத்திலே ஆணவ மலமாகிய அறியாமை மேலிட்டபொழுது ஆன்மாவும் அறியாமையாய் நிற்கும்; மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை ஆய ஆருயிரின் மேவும் அருளெனில் ஒளியாய் நிற்கும் - அசுத்த மாயையில் தோற்றப்பட்ட தத்துவம் முப்பத்தொன்றுஞ் சுத்த மாயையில் தோற்றப்பட்ட தத்துவம் ஐந்தும் ஆகத் தத்துவம் முப்பததாறும் மாய்ந்துபோவதாகப் புண்ணிய பாவங்கள் க்ஷயம்வந்த ஆன்மாவிடத்திலே அருள்மேலிட்டபொழுது ஆன்மாவும் அறிவாய்ப் பிரகாசித்து நிற்கும்.

உதாரணம்: இந்தச் செய்யுளுக்கிட்ட தொந்தனையில் ஆன்மாவை அருளும் மலமும் அநாதியே கூடிநிற்குமென்பதற்கு பி - ம சித்தியாரில் ஏழாஞ் சூத்திரத்தில் "சுத்தமெய்ஞ் ஞான மேனிச் சோதிபால்" (7. 3) என்ற செய்யுளின் முடிவிலே "சததுள போதே வேறும் சதசத்தும் அசத்து மெல்லாம், வைததிடும அநாதியாக வாரிநீர் லவணம் போல" எ - து கண்டுகொள்க. இந்தச் செய்யுளின் முற்பதத்திலும் பிற்பதததிலும் இருளெனில் மருளாய் நிற்கும், அருளெனில் ஒளியாய் நிற்கும் என்றது ஆன்மா மலத்தோடும் அருளோடும்கூடி அதுவதுவாய் நிற்கு மென்றது. இதற்கு பி - ம் சிவஞானபோதத்தில் ஏழாஞ் சூததிரமாகிய "யாவையுஞ் சூநியம்" என்ற செய்யுளின் பிற்பதத்தில் "இருதிற னறிவுள திரண்டலா ஆன்மா" எ - து கண்டுகொள்க. இனி, அருளானது ஆன்மாவோடும் அநாதியே கூடியிருக்கச்செய்தே மலபாகம் வாராத ஆன்மாக்களுக்கு அந்த அருள் கூடிநிற்கச்செய்தேயும் பிரகாசியாதென்று பொருள் கூறியதற்கு பி - ம் திருவருட்பயனில் "ஊமன்கண்

போல வொளியு மிகஇருளே, யாமன்கண் காணு தவை" (19) எ - து கண்டுகொள்க. ஊமனென்றது கூகையென அறிக. ஒளியும் மிக இருளே யென்றது கூகைக்குப் பகற்காலத்திற் கண்டெரியா தென்பது கருத்து. திருவள்ளுவதேவரும் "பகல்வெல்லுங் கூகை யைக் காக்கை" (குறள் 481) என்றதும் இப்பொருள் பற்றியென அறிக. அன்றியும் சித்தியாரிலேயும் "இங்குந்தான் அந்தகருக் கிரவி இரு ளாகும் ஈசனருட் கண்ணில்லார்க் கொளியாயே யிருளாம்" (11. 8) என்பதும் இப்பொருள்பற்றியென அறிக. இனி இந்தச் செய் யுள் மாயை மாமாயையென்றும் மிதித்ததை மிதித்து ஒரு சொல்லை இருகாற் சொல்லியதேதென்னில், "கூறிய பொருளைக் கூறலு மாகும் - வேறொரு பொருளை விளக்கு மாகில்" என்னும் விதியைப் பற்றியென அறிக. வேறொரு பொருளை விளைத்த லாவது முற்பதத் துக்கு மாயாவென்றது மாயாகன்மங்கள் க்ஷயம் வாராத ஆன்மா என்றதென அறிக. பிற்பதத்துக்கு மாயா என்றது மாயா கன்மங்கள் க்ஷயம்வந்த ஆன்மா என்றதென அறிக. அப்படி ஒரு சொல் இரண் டாவது எங்ஙனேயென்னில், வாராப்போனேன்றசொல் வந்து போனதற்கும் வாராமற்போனதற்கும் நின்றாற் போலவென அறிக.

இதனாற் சொல்லியது ஆன்மாக்கள் மாயா கன்மங்கள் க்ஷயம் வாராத நாள்களெல்லாம் மலத்தோடுங்கூடி அறியாமையாய் நிற் பார்களென்றும் மாயாகன்மங்கள் க்ஷயம் வந்தநாளுக்கு அருளோடுங் கூடிப் பிரகாசமாய் நிற்பார்களென்னும் முறைமையும் அறிவித்தது.

## எட்டாஞ் சூத்திரம்

### ஞானவாய்மையின் பயன்

மூன் அதிகாரததில் அருளிச்செய்த ஞானத்தினுண்மை பயன் படுமிடத்து ஆன்ம தரிசனமென்றும் ஆன்மசுததியென்றும் ஆன்ம லாபமென்றுந் தெரித்துப் பயன்படவேணடுகையால், மேல் அதன் பயன் என்னும் அதிகாரம வைக்கப்பட்டதென அறிக.

அபபடி அதிகாரம ஒன்றாயிருக்க மூன்று வகையாக வேண் டுவா னேனென்னில், இவ்வதிகாரததில் மூன்று சூத்திரம் அடங்கி வருகையால் அபபடி வைககப்பட்டதென அறிக. அஃதெஙஙனே

யென்னில், ஆன்ம தரிசனம் எட்டாஞ் சூத்திரமாகவும், ஆன்ம சுத்தி ஒன்பதாஞ் சூத்திரமாகவும், ஆன்ம லாபம் பத்தாஞ் சூத்திரமாகவும் நிற்கையால் அப்படிச் சொன்னதென அறிக. அதற்கு வழியேதென்னில், சிவஞானபோதத்தில் எட்டாஞ் சூத்திரம் ஆன்ம தரிசனமாகவும் ஒன்பதாஞ் சூத்திரம் ஆன்ம சுத்தியாகவும் பத்தாஞ் சூத்திரம் ஆன்ம லாபமாகவும் வருகையால் இதுவுமப்படி வைக்கப்பட்டதென அறிக. அஃதெங்ஙனே யென்னில், "தேசுற மருவும்" (71) என்ற விருத்தந்தொடங்கி "எல்லையில் பிறவி" (89) என்ற விருத்த முடிவாகிய செய்யுள் பத்தொன்பதினுள்ளும் "தேசுற மருவும்" என்ற விருத்தமொன்றும் இவ்வதிகாரங்கள் மூன்றுக்கும் வகுப்பாகஅருளிச் செய்து, மேல் "தன்னறிவதனால்" (72) என்ற விருததந்தொடங்கி "சுத்தமாஞ் சத்தி" (75) என்ற விருத்த முடிவாகிய செய்யுள் நாலும் ஆன்ம தரிசனமாகவும், "புகலரும் அசத்தர்" (76) என்ற விருத்தந் தொடங்கி "அடைபவர் சிவமேயாகும்" (79) என்ற விருத்தமுடிவாகிய செய்யுள் நாலும் ஆன்ம சுத்தியாகவும், "பொறிபுறு கருவி" (80) என்ற விருத்தந் தொடங்கி "எல்லையில் பிறவி" (89) என்ற விருத்த முடிவாகிய செய்யுள் பத்தும் ஆன்ம லாபமாகவும் வருகையால், சிவஞானபோதத்தில் "ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத், தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட், டந்நிய மின்மையி னரன்கழல் செலுமே" என்ற எட்டாஞ் சூததிரத்தின் கருத்து "இவ்வான்மாக்களுக்கு ஞானததினை உணாதது முறைமையினை உணாத்துதனுதலிற்று" (வார்த்திகம்) என்பதனால், இந்நூலினும் ஆன்மதரிசனத்துக்கு வகுதத செய் புட்களில் "தன்னறிவதனால்" என்ற விருத்தத்தில் "தன்னையுந் தானே காணுந் தானது வாகி நின்றே" என்பதனால் ஆன்ம தரிசனமென்னும் அதிகாரம் எட்டாஞ் சூத்திரமாகுமென்றதென அறிக.

மேல் ஒன்பதாஞ் சூததிரத்துக்கும சிவஞானபோததில் "ஊனககண் பாசம் உணராப பதியை, ஞானக் கணணினிற் சிந்தை நாடி, உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத், தண்ணிழலாம் பதி விதி எண்ணும் அஞ்செழுத்தே" (9) என்னுஞ் சூத்திரத்தின் கருத்து "ஆன்மசுத்தி பண்ணுமாறு உணர்த்துதனுதலிற்று" (வார்த்

திகம்) என்பதனல் இந்நூலினும் ஆன்ம சுத்திக்கு வகுத்த செய்யுள்களில் "இந்நிலை" (78) என்னும் விருத்தத்தில் "கரணம் ஆகா வகையதில் அறிவடங்கி மன்னிட வியாபி யாய வான்பயன் தோன்று மன்றே" என்பதனல் ஆன்ம சுத்தியென்னும் அதிகாரம் ஒன்பதாஞ் சூத்திரமாக நின்றதென அறிக.

மேற் பத்தாஞ் சூத்திரத்துக்கும் சிவஞானபோதத்தில் "அவனே தானே ஆகிய அந்நெறி, ஏக னுகி இறைபணி நிற்க, மலமாயை தன்னெடு வல்வினை யின்றே" (10) என்னுஞ் சூத்திரத்தின் கருத்து "யானெனதெனனுஞ் செருக்கற்று அவனது ஸ்ரீபாதத்தை அணையும்" (வார்த்திகம்) என்பதனல் இந்நூலினும ஆன்ம லாபத்துககு வகுத்த செய்யுள்களில் "தோன்றி நின்ற, சிற்பர மதனல் உள்ளச் செயலறுத திட உதிக்குந், தற்பரம்" (80) எ-ம், "மற்றதும் பகல்விளக்கின் மாய்ந்திட வருவ துண்டேல், பெற்றிடும் அதனை" (82) எ-ம், "பாவிக்கவேண்டா ஆண்ட பரனருள்பற்றி னேர்க்கே" (86) எ-ம் தற்போதங்கெட நிற்பதுவே கருத்தாகையால் இதுவும் பத்தாஞ் சூத்திரமாக நின்றதென அறிக. அப்படியானல் முன்னே முகவுரையில் சூததிர வகுபபிலே இதற்குப் பின்னே வருகிற ஐந்தெழுதது அருள் நிலையை ஒன்பதாஞ் சூத்திரததிற கூட்டினதேதென்னில் அஃதாவது சிவஞானபோததகில் ஒன்பதாஞ் சூததிரமாகிய "ஊனக்கண் பாச முணராப பதியை" என்னுஞ் சூத்திரத்தின் பிற்பக்கததிலே "பாசமொருவத, தண்ணிழலாம் பதி விதி யெண்ணுமஞ் செழுததே" என்பதனுலும, சித்தியாரிலும் ஒன்பதாஞ் சூத்திரமாகிய "பாசஞானத்தாலும் பசு ஞானத்தாலும்" (1) என்ற செய்யுளிலேயும் "ஓசை தரும் அஞ்செழுததை விதிபபடி யுச்சரிக்க" எனபதனுலும் அந்தப் பஞ்சாக்கரதனதயும் ஒன்பதாஞ் சூத்திரததிலே கூட்டி வைக்கப்பட்டதென அறிக. அப்படி ஒன்பதாஞ் சூத்திரததின் பகுதியாயிருக்க இந்நூலிலே பத்தாஞ் சூத்திரமாகிய ஆன்ம லாபத்துக்குப் பின்பாகப் பஞ்சாக்கரமாகிய ஐந்தெழுத்தருள்நிலை வைக்கவேண்டுவான் ஏனென்னில், அந்தப பத்தாஞ் சூததிரமாகிய ஆன்ம லாபமென்பதனில் சிவனேடுகூடிப் பிறிவறநின்று சிவாநுபவத்தை அநுபவிக்கப்பட்ட சிவஞானிகள் அந்த நிலைகுலைந்த அவதரததும் வேறு பிரபஞ்ச வாதனையிற கூடாதபடி அதுவும் ஒருபாய நிட்டை

யாகக்கொண்டு மீளவும் பழைய ஆன்ம சுத்தியில் நிற்கவேண்டுகை யாற் பத்தாஞ் சூத்திரத்துக்கு மேலாகவும் ஒன்பதாஞ் சூத்திரத்தின் பகுதியாகிய ஐந்தெழுத்தருள்நிலையை வைக்கப்பட்டதென அறிக. இந்தப் பஞ்சாக்கர தரிசனத்தை முற்கூறப்பட்ட நூல்களைப்போல ஒன்பதாஞ் சூத்திரத்தினோடுங் கூட்டி வையாமல் இந்நூலில் வேறே பகுத்து வைக்கைக்கு விதியேதென்னில், இந்தச் சிவப்பிரகாசஞ் சார்பு நூலாகையால் "இருவர் நூற்குமொருசிறை தொடங்கித் - திரிபுவேறுடையது புடைநூலாகும்" (நன்னூல் 8) என்னும் இலக்கண விதியைப்பற்றி அந்நூல்களின் ஒழுங்கில் வாராமல் முற்பிற் பாடாக வைக்கப்பட்டதென அறிக. ஆகையால் முற்கூறிய "அதன் பயன்" என்ற செய்யுள் முதலிய பத்தொன்பதும் இந்தப் பஞ்சாக்கர தரிசனத்தின் பகுதியான விருத்தம் மூன்றும் ஆகச் செய்யுளிருபத்திரண்டும் ஆன்ம தரிசனமாகிய எட்டாஞ் சூத்திரமும் ஆன்ம சுத்தியாகிய ஒன்பதாஞ் சூத்திரமும் ஆன்ம லாபமாகிய பத்தாஞ் சூத்திரமுமாக நின்றதென அறிக.

இங்ஙனம் வகுத்தருளிச் செய்யப்பட்ட எட்டாஞ் சூத்திரமாகிய ஆன்ம தரிசனத்துக்கும் ஒன்பதாஞ் சூத்திரமாகிய ஆன்ம சுத்திக்கும் பத்தாஞ் சூத்திரமாகிய ஆன்ம லாபத்துக்கும் அதிகார வகுப்பருளிச் செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

71. தேசுற மருவும் ஆன்ம தெரிசனம் ஆன்ம சுத்தி
ஆசிலா ஆன்ம லாபம் ஆகமூன் றுரும் மூன்றும்
பாசம தகல ஞானம் பற்றல்தான் பணியை நீத்தல்
ஏசில்நே யத்த ழுந்தல் எனுமிவற் றடங்கு மன்றே. க

உயர்தவஞ் செய்தவர்க் குறுமமூ வகையாம்
பயனுறும் வழியைப் பாரித் துரைத்தது.

(உரை) தேசுற மருவும் ஆன்ம தரிசனம் ஆன்மசுத்தி ஆசிலா ஆன்ம லாபம் ஆக மூன்றுரும்-விளக்கமுண்டாகப் பொருந்தப்பட்ட ஆன்மாவைத் தரிசிக்கை என்றும் ஆன்மாவைச் சுத்திபண்ணுகை யென்றும் குற்றமில்லாத ஆன்மாவினுடைய பிரயோசனமென்றும் ஆக மூன்று வகையாம்; மூன்றும் - இந்த மூன்று வகையுமேதென்னில்; பாசம தகல ஞானம் பற்றல் - பாசங்களாகிய தேகாதிப் பிர

பஞ்சங்களா யுள்ளவை நீங்கும்படி இவையிற்றைக் கூடின அருளோ டும் பொருந்துகை ஆன்ம தரிசனமாம்; தான் பணியை நீத்தல் - தன்னுடைய இச்சா ஞானக் கிரியைகளை விட்டு அந்த அருளிலே மூழ்குகிற தற்போதம் சீவியாமல் நிற்கிறதுதானே ஆன்ம சுத்தி யாம்; ஏசில் நேயத் தழுந்தல் - குற்றமில்லாத சிவ சொரூபமாகிய ஞேயத்திலே அழுந்துகிறதுதானே ஆன்மாவினுடைய இலாபமா வது; எனுமிவற் றடங்கு மன்றே - என்றிங்ஙனஞ் சொல்லப்பட்ட ஞாதுரு ஞான ஞேய மென்னும் மூன்றினுள்ளும் அடங்கும்.

ஆன்ம தரிசனமாவது தனக்கறிவாகக் கூடிநின்று காரியப்படுத் துகிற பிருதிவி முதலான தத்துவங்களை நாமல்லவென்று கழித்து அந்த அருளே தனுவாகப் பொருந்தி அந்தத் தத்துவங்களையுந் தன்னை யும் அந்த அருளையுந் தரிசித்து நின்றவிடமென அறிக. அன்றியும், ஆன்மசுத்தி யென்றது அந்த அருள்காட்டத் தான் காண்கிற காட் சியை இழந்து அந்த அருளே தலைமறைவாக நின்றவிடமென அறிக. அன்றியும், ஆன்மலாபமென்றது அந்த அருள்மேலீடாக நிற்கச் செய்தே அவ்விடத்திலே ஓரின்பம் விளைதலென அறிக. என்றிங் ஙனம் மூன்றுவகையாகச் சொன்னதற்கு பி - ம் உரூப சொரூப அகவல் "மன்னருள் தன்னின் மன்னுயிர் மன்னுதல் - இன்னுயிர்த் தரிசன மென்பர் நல்லோர்-சுத்திதன் போதந் தோன்றா திருக்கை - அத்தகு மிலாபம் நேயத தழுந்தல்" எ - து கணடுகொள்க.

இதனுற் சொல்லியது அந்த உண்மை ஞானத்தை ஆன்மாக் கள் பெறுமிடத்து ஆனம தரிசனமென்றும் ஆன்ம சுத்தியென்றும் ஆன்ம லாபமென்றும் மூன்று வகையாக நின்று பெறுமென்னும் முறைமையை அறிவித்தது. க

## ஆன்ம தரிசனம்

இங்ஙனஞ் சொல்லப்பட்ட மூன்று பகுதியினுள்ளும் எட்டாஞ் சூத்திரமாகிய ஆன்ம தரிசனத்தை முந்த அருளிச்செய்வான் எடுத துகொணடருளியது.

72. தன்னறி வதனால் ஏதும் தனக்கறி வில்லை யேனும
தன்னறி வாக எல்லாம் தனித்தனி பயன ருந்தும்

தன்னறி வறியுந் தன்மை தன்னாலே தனைய றிந்தால்
தன்னையும் தானே காணுந் தானது வாகி நின்றே. உ

பவமா றுவிதன் பரிசினை யுணர்ந்துபின்
சிவமாய் நிற்கவுயிர் தெரியு மென்றது.

(உரை) தன்னறி வதனால் எதுந் தனக்கறி வில்லை யேனும் - ஆன்மாவுக்குத் தன்னுடைய அறிவாலே யாதாமொன்றை அறிகைக்குத் தனக்கென்ன ஓரறிவு மில்லையாமாயினும்; தன்னறிவாக எல்லாந் தனித்தனிப் பயனருந்தும் - தான் இந்திரியங்களுடனே கூடி நின்றறிகிற அறிவுகளெல்லாவற்றையுஞ் சிவன் கூட்டி அறிவிக்கிற தென்று அறியாமல் தன்னாலே அறிந்ததாக ஒவ்வொரு விடயங்களிலே யொற்றித்துநின்று அநுபவியாநிற்கும்; தனனறி வறியுந் தன்மை - இப்படி அறிகிறது ஆன்ம போதததின் முறைமையாம். இங்ஙனம் மாறுபாடாக அறிகிற முறைமை விட்டு; தன்னாலே தனை யறிந்தால் - அந்தச் சிவனுடைய ஞானததாலே சிவனை யறிந்தால்; தன்னையுந் தானே காணும் - ஆன்மாவினுடைய செயலறுதியையும அந்த ஆன்மா தன்னாலே காணவும்படும். அஃதெஙஙனேயென்னில்; தானதுவாகி நின்றே - ஆன்மாவானது அந்தச் சிவஞானததோடுங் கூடிநின்ற அவதரதது.

தன்னையுமென்ற இழித்துரைகொணடே ஆன்மா தற்சுதந்தரமாக அறியமாட்டானென்பது கருததென அறிக. இதறகு பி - ம் சித்தியாரில் "அறிந்திடும் ஆன்மா வொன்றை மறறொன்றால் அறிதலானும், அறிந்தவை மறதத லானும் அறிவிக்க அறித லானும், அறிந்திடுந் தன்னை யுந்தான் அறியாமை யானுந் தானே, அறிந்திடும் அறிவன் அன்றும் அறிவிகக அறிவ னன்றே" (5. 3) எ - து கண்டு கொள்க.

இதனாற் சொல்லியது ஆன்மா பெததத் தன்மையிலே நின்றும் பிரபஞ்சத்தோடுங்கூடிச் சீவிக்குமிடததுத் தனக்கென ஒரு செயவில்லாமல் இருக்கச்செய்தேயுந் தன் செயலாகச் செய்கிறேமென்று நின்ற முறைமையும் முத்தித் தன்மையிலே சிவனுடைய அருளாலே தற்றெரிசனம் வந்தவிடத்து அந்த அருளோடுங கூடி

அறிகிறதொழிந்து நமக்கென்றொரு செயலில்லையென்று தன்னுடைய செயலறுதியை அறிந்த முறைமையும் அறிவித்தது. உ

இன்னமும் இந்த மூவகை யத்தத்தைத் தெளிய அருளிச் செய்யவேணுமென்று வினவ மேலருளிச்செய்வான் எடுத்துக் கொண்டருளியது.

73. தத்துவ மான வற்றின் தன்மைகள் உணருங் காலை
உய்ந்துணர்ந் திடஉ திப்ப தொளிவளர் ஞான மாகும்
அந்தன்மை அறியு மாறும் அகன்றிட அதுவாய் ஆன்மாச்
சுத்தமாம் சுத்த ஞானத் தொருமுதல் தோன்று மன்றே. ௩

அதனை நிரூபித் தந்தமூ வகைப்பயன்
விதமுட னிதுவென விளங்க வுரைத்தது.

(உரை) தத்துவ மானவற்றின் தன்மைகள் உணருங்காலை உய்த்தறிந் திடஉதிப்ப தொளிவளர் ஞானமாகும் - தததுவங்களினுடைய உரூப சொரூப சுபாவத்தை அறியுமிடத்து அவையிற்றை அந்நியமாக அறிந்திடத் தோன்றுவது பிரகாசத்தினை மிகுதியாகவுடைய அருளென்றே சொல்லப்படுவது; அத்தன்மை அறியுமாறும் அகன்றிட - அப்படி அந்த அருள் காட்டக் காண்கிற காட்சியை நீங்கி; அதுவாய் ஆன்மா சுததமாம்-அந்த அருளோடுங் கூடி அது தானாய்த் தற்போதம் சீவியாமல் நிற்கவே ஆன்ம சுத்தியாம். அப்படி நிற்கவே; சுத்தஞானத தொருமுதல் தோன்றும் அன்றே - அப்பொழுதே நின்மலமாகிய அருளுககு முதலாயுள்ள சிவமாகிய ஞேயந் தோன்றும்.

தததுவங்களின் உண்மையை உணர என்றது அவையிற்றைச் சடமென்று காண்கையென அறிக. இனி உய்த்தறிந்திட என்றது தேகாதிப் பிரபஞ்சங்களை நீங்குகையென அறிக. அததனமை அறியுமாறும அகன்றிட என்றது தன்னுடைய போதத்தின் மேலீடாகிய இச்சா ஞானக் கிரியைகளை விடுகையென அறிக.

இதனற சொல்லியது ஆன்மாவானது தத்துவங்களைச் சடமென்று கணடுநீங்கி அருளே தனுவாய் நின்றவிடம் ஆன்ம தரிசனமென்றும அபபடி நிற்கச் செயதே அநத அருளே மேலீடாகத் தற போதம் சீவியாமல் நின்றவிடம் ஆன்ம சுத்தி என்றும் அப்படி நிற

கச்செய்தே அந்தஞானத்துக்கு முதலாகிய சிவமான ஞேயந் தோன்று கிறதே ஆன்மலாபமென்றும் வருமுறைமையை அறிவித்தது. ந

அப்படியிருந்த ஞானத்துக்கு முதலாய் ஒரு ஞேயந் தோன்று மென்கிறதென்ன இந்த ஞானமாகிய அருளோடுங் கூடி அந்த அருளே தானாய் நிற்கிறதல்லவோ பயனென்கிற சங்கிராந்தவாதியை மறுத்து, அந்த அருளையுந் தவிர வேறே ஞேயமாகிய சிவமுண் டென்று மேலருளிச் செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

74. உறைதரும்உணர்வு மன்றி அதன் முதல் உள்ள தென்றிங்(கு)
அறைவதென் என்னில் அணணல் அருளெனு மதுவே யன்றி
நிறையொளி முதல தன்றி நின்றிடா நிமல னுகும்
இறையவன் முதல வன்றன் இலங்கருள் சத்தி யாமே.ச

அன்ன பேரொளிக் காதவன் முதலாந்
தன்மைபோல் அருட்கரன் தன்முத லென்றது.

(உரை) உறைதரும் உணர்வுமன்றி அதன்முதல் உள்ள தென் றிங் கறைவதென் என்னில் - ஆன்மாவி னிடத்திலே பொருந்தி நிற்கிற அருளாகிய ஞானமொழிய அதற்கு முதலாக ஒரு ஞேயமுண் டென்று சொல்லுவானேனென்று நீ கேட்கில்; அண்ணல் அரு ளெனும் - அது தம்பிரானுருளே யென்று சிவாகமஙகள் சொல்லும். அப்படி அநத அருளென்றுஞ் சிவமென்றும் இரண்டா யிருக்குமோ என்னில்; அதுவேயன்றி - அந்தச் சிவத்தை யொழிந்து அருள்தனித் தொருமுதலாய் நில்லாது. அதென்போல வென்னில்; நிறையொளி முதலதன்றி நின்றிடா - மிக்க பிரகாசமானது அதற்கு முதலாகிய ஆதித்தனையன்றித் தனித்துண்டாகாது. அதுபோல; நிமலனுகும் இறையவன் முதல் - நின்மல சொருபமாகிய சிவன் அந்த ஞானத் துக்கு முதலாகிய காரணமாய நிற்பன். அப்படியந்த அருளுஞ் சிவமும் பிறிவற்று நிற்குமாகில் அந்த அருளே அமையாதோ என்றுநீ கேட்கில் அப்படிப் பிறிவற்று நின்றாலும் ஆன்மாக்கள் பயன்படு மிடத்து அந்த அருள் கொண்டே போதாது. அதேனென்னில்; அவன்றன் இலஙகருள் சத்தியாமே - அப்படி யந்தச் சிவனிடத்து விளங்காநின்ற அருளானது அந்தச் சிவனுக்குச் சத்தியாம்.

என்னவே, சத்தியாமே என்ற இழித்துரையால் இந்தச் சத்தியால் ஆன்மாக்களுக்கு இன்பம் விளையாதென்பது கருத்து. அதேனென்னில், இந்தச் சத்தியும் பெண், அந்தச் சிவனோடுங்கூடி ஆன்மாவோ இன்பத்தை அநுபவிக்க வேண்டுகையால் ஆன்மாவும் பெண்; ஆகையால் இரண்டு பெண்கள் தம்மிற்கூடி அநுபவித்தால் இன்பம் விளையாததுபோலவென அறிக. இதற்கு பி - ம் திருவருட்பயனில் "இருவர் மடந்தையருக் கென்பயன்இன் புணடாம் - ஒருவன் ஒருத்தி உறின்" (72) எ - து கண்டுகொள்க. ஆன்மாவையும் பெணணென்பதற்கு பி - ம் திருப்பாட்டில் "தன்னை மறந்தாள் தன்னுமங் கெட்டாள் தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே" (6. 25. 7.) என்னும் ஏதுக்களைக் கண்டுகொள்க.

உதாரணம் : அந்த அருளைப்பெற்ற ஆன்மாக்களும் அந்த அருளோடுங் கூடி, உபபளத்தைப் பொருந்தின புல்லும் வைக்கோலும் உபபாநதன்மைபோல, அந்த அருளே சொரூபமாய் நிற்கிறதொழிய அதற்கு மேலாக வேறொரு ஞேயமென்பது ஒன்றில்லையென்று சஙகிராந்தவாதி சொன்னதற்கு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில் "ஏற்றோர் முகவொளி தோற்றும் கலனெனத் - தலைவன தருளுயிா நிலவிடும் நிலவக் - காட்டத் தங்கி மாட்டத தங்கிய - தன்மையும் அளத்துப் புல்வையின் நீப்பும்-போன்றது வாகித் தோன்றிடும் அதனாற் - பசுகர ணங்கள் சிவகர ணங்க - ளாக மாறி அறிவும் - ஏகமாம்உயிர் யானென றின்றே" (9. 104-111) எ-து கண்டுகொள்க. இது அததமல்லவென்றவனை மறுததற்கு பி - ம் "நோக்கும் முகவொளி நீககாத் தானெனக - கவருந் தன்மை முகுரம் போலக் - கொடுத்தது கோடற கடுத்ததுண் டன்றே - காட்டத தங்கி கூட்டக் கூட்டும் - இந்தனத் தியற்கை வெந்தழல் தாஙகா-உபபளத தடுத்த புறபலா லங்கள் - சடத்த வேனுங் கொடுத்தது கொள்ளுந் - தன்மை உணடுனக்கு இன்மைய தன்றே" (10. 22-29) எ - து கண்டுகொள்க.

இதனுற் சொல்லியது ஆன்மாக்கள் முத்தியைப் பெறுமிடத்து அருளாகிய ஞானத்தோடுங கூடுகிறதொழியச் சிவமாகிய ஞேயமென்ப தொனறிலலை யென்ற சஙகிராந்தவாதியை மறுத்து, அருள் சததியாகையாலே அந்தச் சிவத்தோடுங கூடியே ஆன்மநாயகி

இன்பம் அநுபவிக்கையால் சிவம் வேணுமென்னும் முறைமையை அறிவித்தது. ௯

அப்படியானால் அந்தச் சத்தியாற் பயனில்லையோ என்று மீளவும் அவன் வினவ அப்படி அநுபவத்துக்குப் பயனில்லை என்னலாமொழிப ஆன்மாக்களுக்கு உண்டாகிய அநாதி மலஙகளை நீக்கி அந்தச் சிவத்தோடுற கூட்டுகைக்கு அந்தச் சததியே வேணுமென்னும் முறைமையை ஒரு திருஷ்டாந்த முகமாக அருளிச்செய்வான் எடுத்தக கொண்டருளியது.

75. சுத்தமாம் சத்தி ஞானச் சுடராகும் சிவமொ ழிந்தச்
சத்திதான் இன்றாம் முன்னைத் தகவிலா மலங்கள் வாட்டி
அத்தனை அருளும் எங்கும் அடைந்திடும் இருள் அகற்றி
வைத்திடும் இரவி காட்டும் வளரொளி போல்ம கிழ்ந்தே.௫

ஒத்தறு பருதியை ஒளிதரு வதுபோற்
சத்தியும் பிரானைத் தருமென் றுரைததது.

(உரை) சுத்தமாஞ் சத்திஞானச் சுடராகும் - நின்மல சொரூபமாய் இருக்கப்பட்ட சத்தியானது ஞானப்பிரகாசமாயிருக்கும். அப்படி இருக்கவும் சிவம் வேணுமென்பானேனென்னில்; சிவமொழிந்தச் சததிதான் இன்றாம் - அந்தச் சிவமில்லாமல் இந்தச் சத்திதானுண்டாக மாட்டாது. ஆனால் இந்தச் சத்தியாற் பயனில்லையோவென்னில்; முன்னைத் தகவிலா மலங்கள் வாட்ட அத்தனை அருளும் - அநாதியே வரப்பட்ட குற்றத்தை யுடைத்தாகிய மலங்களின் கௌரவத்தைக் கெடுத்துத் தனக்கு முதலா யிருக்கிற சிவனோடும் ஆன்மாக்களைக் கூட்டும். அதென்போல என்னில்; எங்கும் அடைந்திடும் இருள் அகற்றி வைத்திடும் இரவிகாட்டும் வளரொளிபோல் மகிழ்ந்தே - எவ்விடததினுஞ் செறிந்திருக்கிற இருளின் மேலீட்டைக் கீழ்படுததித் தனக்கு முதலாயிருக்கிற ஆதித்தனைக் காட்டுகிற பெரிய பிரகாசம்போல அந்தச் சத்தியுங் கிருபையுடனே.

என்னவே, ஆனமாக்கள் சிவனைப பெறுமிடத்து அருளாகிய சததியிடமாகப் பெறவேணுமென்பது கருத்து. இதற்கு பி - ம் தத்துவ விளக்கத்தில் “பவமே வியநெறி பந்திகரு மீசன் பசுக்கள்

தம்மை, யவமே வியநெறி போகங்க ளால்முற்ற அங்கிலையே, தவமே வியநெறி சத்திகண் ணுற்சென்று சார்ந்து பின்னைச், சிவமே வுவ ரென்றுகாண் கொச்சை காவலன் சித்திரிப்பே" எ - து கண்டு கொள்க.

இதனுற சொல்லியது திருவருளாகிய சத்தி ஆன்மாக்களுக் குண்டாகிய மலங்களைப் பாகம்வருத்தித் தனக்கு முதலாகிய சிவத் துடனே கூட்டும் முறைமையை அறிவித்தது. ரு.

## ஒன்பதாஞ் சூத்திரம்

### ஆன்ம சுத்தி

மேல் ஒன்பதாஞ் சூத்திரமாகிய ஆன்மசுத்தி வருமாறு. அஃதா வது ஆன்மா தத்துவங்களோடுங் கூடிநின்று சீவிக்கிற முறைமையை விட்டு அந்த அருளோடுங்கூடி அது மேலீடாக மூழ்கித் தற்போதம் சீவியாமல் நிற்கிற அவதரத்தைச் சொல்லுவதென அறிக.

அபபடி அருளைப்பெற்றவர்கள் தற்போதம் சீவியாமல் நிற்பர்க ளென்ன வேண்டுவதில்லை, பசாசு பிடியுண்டவன் அந்தப் பசாசு செய்யுற கிருத்தியங்களெல்லாஞ் செய்துநின்முற்போல அந்த அருளைப் பெற்றவர்களும் அந்த அருளுக்குண்டான கிருத்தியங்க ளெல்லாஞ் செய்து நிற்பர்களென்கிற சமவாதியை நோக்கி மறுத் தருளிச்செய்வான் எடுத்துக் கொண்டருளியது.

76. புகலரும் அசத்தர் தம்பால் பொருந்திய அலகை யேபோல்
அகிலமும் உணரு மீசன் அருளுயிர் மேவ லாலே
சகலமும் நிகழ வேண்டுந் தலைவன்ஐந் தொழிலுந் தானே
இகலற இயற்றல் வேண்டும் என்றது நன்றி யின்றே.௧

அருளுயிா தன்னி லலகைசேர் குறிபோல்
மருவிடு முதன்மை வாய்மையன் றென்றது.

(உரை) புகலரும் அசத்தர் தம்பால் பொருந்திய அலகையே போல் - ஒரு நறகுணமும் உண்டென்று சொல்லுதற்கரிய அஞ் ஞானிகளிடத்திலே பொருந்திநின்ற பசாசுபோல; அகிலமும் உணருமீசன் அருளுயிர் மேவலாலே - சர்வத்தையும் ஒரு நிகழ்ச்சி

யாக அறிகிற சிவனுடைய அருளானது ஆன்மாவிலே பொருந்து கையினலே அந்தப் பேய்க்குள்ள தன்மைகளெல்லாம் பிடியுண்டவர் களுக்கும் உண்டானுற்போல; சகலமும் நிகழவேண்டுந் தலைவன் ஐந்தொழிலுந்தானே இகலற இயற்றல் வேண்டும் என்றது நன்றி யின்றே - அந்தச் சிவனருளைப் பெற்றவர்களுக்கும் அந்தச் சிவனைப் போலச் சர்வஞ்ஞத்துவம் உண்டாமென்றும் பஞ்சகிருத்திய மாறு பாடில்லாமல் செய்வதுஞ் செய்யு மென்றும் நீ சொன்னது சித்தாந்த அத்தத்துக்கு நன்று யிருந்ததில்லை.

இச்செய்யுளுக்கு இங்ஙனம் பொருள்படுத்தி வந்த வகையில், சகலமும் நிகழவேண்டும் தலைவன் ஐந்தொழிலுந் தானே இகலற இயற்றல் வேண்டும் எ - கு பேய் பிடியுண்டவன் அப்பேய் செய்யுங் கிருத்தியங்களை எல்லாஞ் செய்வதுபோலச் சிவனைப் பெற்றவர்க ளுஞ் சிவனைப்போலச் சாவஞ்ஞத்துவமும் பஞ்ச கிருததியமுஞ் செய்யவேண்டுமென்று சமயிகள் மதத்தை மறுத்ததாகப் பொரு ளுரைப்பாருமுளர். அது கருத்தல்ல. அஃதெங்ஙனே யென்னில், அப்படிச் சொன்னது அந்த அருளைப் பெற்றவர்களுக்குச் சர்வஞ் ஞத்துவமும் பஞ்சகிருத்தியமும் உண்டாமென்று அந்தச் சமயிகள் மதமாகச் சொன்னரென்பதே கருத்தென அறிக. அதுவே கருத் தென்பதற்கு பி - ம் இந்நூலைப்பின்சென்ற நூலாகிய திருநெறிவிளக் கத்தினும் இந்த விருத்தத்துக்கு எதிரிடை விருத்தமாகிய "பூசுரார்க் கடிய சத்தன் தன்னிடைப் பொருந்தல் போல, ஈசன தருளுயிர்ப் பால் எய்தலால் இவனே யாவும், மாசற அறியுமென்றும் ஐந்தொழில் புரியு மென்றும், பேசுத லுண்மை ஞான மன்றிது பிராந்தி ஞானம்"; இதனுள் "ஈசன தருளுயிர்ப்பால் எய்தலா லிவனே யா்வும், மாசற அறியுமென்றும் ஐந்தொழில் புரியுமென்றும், பேசுத லுண்மை ஞான மன்றிது" என்றமையால் அவன் சர்வஞ்ஞத்துவமும் பஞ்சகிருத் தியமும் உண்டாமென்ருன் என்றதையே மறுததென்பதை அநு பவத்தாற் கண்டுகொள்க. ஆகையால், பேய் பிடியுண்டவன் அந்தப் பேய்க்குள்ள கிருத்தியங்களெல்லாஞ் செய்தாறபோல அருளைப் பெற்ற ஆன்மாக்களும் அந்த அருளுக்கு உண்டான சர்வஞ்ஞத்துவ மும் பஞ்சகிருத்தியமுஞ் செயவார்களென்பதே கருத்தென அறிக.

அப்படியானால் அந்தப் பேய்க்குண்டான தன்மைகளெல்லாம் பிடியுண்டானவனுக்கு உண்டானதுபோலச் சிவனுக்கு உண்டான தன்மையுஞ் சிவனருளைப் பெற்ற ஆன்மாக்களுக்கும் உண்டாகுமென்று சமவாதி சொன்னதற்கு வழியேதென்னில், அப்படிப் பேய் பிடியுண்டவன் இன்னான் இன்ன பண்டங் கொண்டுவருகிறானென்றும் இந்நாள் மழைபெய்யுமென்றும் நெருப்பை மிதித்துநின் முடியும் சுடுகிற பாற்சோற்றிலே கையையிட்டுத் துழாவியும் நின்றாற் போல, அந்த அருளைப் பொருந்தின ஆன்மாக்களுக்குஞ் சர்வஞ்ஞத்துவமும பஞ்சகிருததியமும் உண்டாமென்று சொன்னானென்றதென அறிக. அவனப்படிச் சொன்னானென்பதற்கு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில், "முன்னோன் றனது முதிர்ஒளி ஞானம் - அறியாப் பச்சைச் சிறுபுழுக் கவர்ந்த - வண்டென உயிரைக் கொண்டிடும் உயிர்அது - தன்னை நோக்கித் தான்அது வாகி - ஐவகைத் தொழிலும் மெய்வகை உணர்வும் - பிரியா வாறு பெற்றுத் - திரியாப் பெரியோர் திரட்சிசேர்ந் திடுமே" (8. 19-25) எ - து கண்டு கொள்க. என்றது நன்றியின்றே என்றவனை மறுத்ததற்கு பி - ம் மேல் வருகிற செய்யுளுக்குக் காட்டி மறுக்கிற உதாரணததிலே கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது பசாசு பிடியுண்டவனுக்கு அந்தப பசாசின் குணமுந் தொழிலும் உண்டானாற்போலச் சிவனருளைப பெற்ற ஆன்மாக்களுக்குஞ் சிவனுடைய சர்வஞ்ஞத்துவமும் பஞ்சகிருததியமும் உண்டாமென்று சமவாதி சொன்னானென்னும் முறைமையை அறிவித்தது. க

அப்படி ஆக்ஷேபமாக்கிக் கொண்டு நன்றியின்றே யென்றதேதென்று மீளவுஞ் சமவாதி கேட்க நீ சொன்ன திருஷ்டாந்தததால் அந்த அருளைப் பெறறவர்களுக்குச் சர்வஞ்ஞத்துவமும் பஞ்சகிருத்தியமும் உண்டாகாதென்னும் முறைமையை மேல் அருளிச் செய்வான் எடுத்துக் கொண்டருளியது.

77. இன்றுநோக் குரைந டக்கும்
இயல்பிலோற் கினைய வாய்ந்து
நின்றதோர் அலகை நேர்ந்தால்
நிகழ்வதென் அதுபோ லுள்ளத்(து)

ஒன்றிய உணர்வு தம்பால்
உள்ளது நிகழ்த்தும் ஈசன்
தன்தொழில் நடாத்தும் மேனி
தனக்கெனக் கொண்டு தானே. உ

பற்றிய அலகையின் பரிசுயிர்க் குளதெனுஞ்
சொற்பழு தாறும்வகை தோன்ற மறுத்தது.

(உரை) இன்று நோக்குரை நடக்கும் இயல்பிலோர்க்கினைய வாய்ந்து நின்றதோர் அலகை நேர்ந்தால் நிகழ்வதென் - இப்பொழுது குருடனுமாய் ஊமையுமாய் முடவனுமாய் இருப்பானொருவனைப் பசாசு பிடித்தபொழுது அவன் காணவல்லவன் ஆனானே பேச வல்லவன் ஆனானே நடக்க வல்லவன் ஆனானே ; அதுபோல் - அத்தன்மை போல் ; உள்ளத்தொன்றிய உணர்வு தம்பால் உள்ளது நிகழ்த்தும்- ஆன்மாவினிடத்திலே பொருந்தின அருளானது அவர்களுக்குண்டான இச்சா ஞானக் கிரியைகளுக்கு ஈடாக அறிவித்து நிற்குமாகையால் ; ஈசன் தன் தொழில் நடாத்தும் மேனி தனக்கெனக் கொண்டு தானே - பரமேஸ்வரனும் தனக்குப் பொருந்தினதொரு திருமேனியைத் தானே எடுத்துக்கொண்டு தனக்கு முறைமையான கிருத்தியங்களையும் நடத்துவன்.

உள்ளத்தொன்றிய உணர்வு எ - து உயிர்க்குயிராய் நிறகிற திருவருளையென அறிக. தம்பாலுள்ளது நிகழ்த்தும் எ - து ஆன்மாவுக்குண்டான சிற்றறிவுக்குத் தக்கதாக அறிவித்து நின்றதென அறிக. இங்ஙனஞ் சமவாதி சொன்ன திருஷ்டாந்தத்தையும் பொருளையும் மறுத்ததற்கு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில் " அவன் இவன் ஆகில் இவன் அவன் செய்தி - என்று செய்வான் ஒன்றிய மதத்தால் - எல்லாம் அறிதல் செல்லா துயிர்கள் - சிற்றறி வெனும்இச் சொல்தவ றுகும் - என்பதென் அலகை தன்பத மடைந்தோர் - கொண்ட வாறு கண்டனம் என்னில் - மூங்கை அந்தரூற் றோங்கிய குணங்குறி - செய்ததென் இன்னும் பவவமுற் றழுந்தினும் - நாழி கொள்ளா தாழியில் அலைபுனல் - அதனாற் கருத்து முதலுள தாக - வேண்டும் அன்றே " (9. 57 - 67) எ - து கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது அருளைப் பொருந்தின ஆன்மாக்கள் அந்த அருள் செய்யுங் கிருத்தியங்களெல்லாஞ் செய்வர்களென்று சொன்ன சமவாதியை மறுத்து, அப்படி அருளோடுங் கூடினாலும் ஞேயந் தோன்றாத இடத்து அவர்களுக்கு உண்டாகிய சிற்றறி வொழிந்து பேரறிவுண்டாகாதென்னும் முறைமையை அறிவித்தது.

அப்படியானால் இந்த ஆன்ம சுத்தியாற் பயனேதென்று வினவின மாணவகனை நோக்கி மேலருளிச் செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

78. இங்கிலை தன்னில் மன்னி எய்திடும் கலாதி போதம்
தன்னள வறிந்து நிற்கும் தகவிலா மலங்கள் நீத்த
அங்கிலை கரணம் ஆகா வகையதில் அறிவ டங்கி
மன்னிட வியாபி யாய வான்பயன் தோன்று மன்றே. ௯

உளத்தறி வடங்க ஒடுங்கு மெல்லையில்
அளககறு பரனுந் தோன்று மென்றது.

(உரை) இங்கிலை தன்னில் மன்னி எய்திடுங் கலாதி போதம் தன்னளவறிந்து - இந்த ஆன்ம சுத்தியாவது ஆன்மாவுங் கருவிகளுங் கூடிச் சீவிக்குமிடத்து கலையாதியாயுள்ள தததுவங்களினாலே ஆன்ம போதம் சீவிக்குமதுவும அந்தத் தத்துவங்கள் சடமென்பது முணர்ந்து; நிற்கும் தகவிலா மலங்கள் நீத்த அங்கிலை கரணம் ஆகா வகையதில் அறிவடங்கி மன்னிட - இங்ஙனங் கூடி நிற்கப்பட்ட குற்றததையுடைய தத்துவங்களை நீக்கி அந்த அருளே தனுவாக நிறகிற ஆன்ம தரிசனத்தையும் விட்டு அந்த அருளே மேலீடாகத் தற்போதம் சீவியாமல் நிற்கிறதே ஆன்மசுததியாவது. இந்த ஆன்ம சுத்தியிலே நிற்கவே; வியாபியாய வான்பயன் தோன்றும் அன்றே - எவ்விடத்தும் நிறைந்து நிற்கிற சிவமாகிய சுகரூபந் தனக்குத் தோன்றும்.

தகவிலா மலங்கள் நீத்த அங்கிலை என்பது ஆன்ம தரிசனமென அறிக. கரணமாகாவகை யதிலறிவடங்கி மன்னிட என்பது ஆன்ம சுததியென அறிக. வியாபியாய வான்பயன் தோன்றும் என்பது ஆன்ம லாபமென அறிக.

இதனாற் சொல்லியது அருளானது தன்னையும் ஆன்மாவையும் மலங்களையுங் காட்ட ஆன்மா கண்டுநிற்கிற அவதரம் ஆன்மதரிசன மென்றும், ஆன்மா அந்த அருளோடுங்கூடித் தற்போதம் சீவியாமல் அந்த அருளே மேலீடாக மூழ்கி நிற்கிற இடம் ஆன்ம சுத்தியென்றும், அப்படித் தற்போதம் சீவியாமல் நிற்கவே மேல் ஆன்மலாபம் உண்டாமென்னும் முறைமையும் அறிவித்தது. ௬

அப்படி அந்த அருளிடமாகச் சிவத்தோடுங் கூடினவர்கள் அந்தச் சிவத்துடனே ஒன்றுபட்டுப் போகிறது ஒழிந்து அங்கே ஒரு ஞேயந் தோன்றுமென்கிறது பொருளல்ல என்ற சைவரை மறுத்தருளிச்செய்வான் எடுத்துக் கொண்டருளியது.

79. அடைபவர் சிவமே யாகும் அதுவன் றித் தோன்று மென்ற
கடனதே னென்னில் முன்னம் கண்டிடார் தம்மைப் பின்னும்
தொடர்வரும் அருளி னாலே தோன்றுமா காணா ராயின்
உடையவன் அடிசேர் ஞானம் உணர்தலின் றணைத லின்றே.௬

ஒன்று வுறுபய னுணரா தியிரெனின்
நன்றும் முத்தியை நாடரி தென்றது.

(உரை) அடைபவர் சிவமேயாகும அதுவன்றித தோன்று மென்ற கடனதேனென்னில்-அப்படியே சிவத்தோடுங கூடின ஆன்மாக்கள் சிவமாய்ப் போகிறதொழிந்து அவ்விடத்து வேறுமொரு பயன் தோன்றுமென்ற காரணமேதென்னில் ; முனனங் கண்டிடார் தம்மை - முன்பு பெத்தத்திலே மல மாயா கன்மங்களோடுங் கூடி மயங்கி நிற்கையினாலே தங்களுடைய உண்மையை அறிந்தாரில்லை. என்னவே தங்கள் உண்மையை அறியாதது கொண்டே சிவனையும் அறியமாட்டார்கள்;பின்னுந்தொடர்வரும் அருளினாலுந்தோன்றுமா காணா ராயின் - அந்தப் பெத்தததை நீஙகின பின்புந் தமககுக கிட்டுதற்கு அரிதாகிய ஞானத்தைப்பெற்ற அவதரததுச் சிவதரிசனப் பட்டுச் சிவபோகத்தை அநுபவியாராமாகில் ; உடையவன் அடிசேர் ஞானம உணர்தலின் அணைத லின்றே - சர்வான்மாக்களையும் அடிமையாகவுடைய சிவனது திருவடியைக் கூடுகைக்குக் காரணமான ஞானத்தை அறிந்ததுமில்லை, அந்த ஞானத்தாலே சிவனுடைய திருவடியிலே இரண்டறக் கூடினது மில்லையாம்.

உதாரணம் : ஆன்மா சிவத்தோடுங் கூடித் தற்போதங் கெட்டுச் சிவமாய் விடுமென்று சைவர் சொன்னதற்கு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில் " தன்னையும் அதனையும் தன்முதற் பொருளையும் - இன்னதென் றறியா இருவரும் முயங்கி - ஒன்றாய் உறுபயன் உவப்பும் - இன்றாய் நிற்கும் இதுசிவ கதியே " (12.153 - 156) எ - து கண்டுகொள்க. இது அத்தமாகாதென்று சைவரை மறுத்ததற்கு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில் " இருவருங் கூடி ஒருபயன் ஆய்த்தென் - றருளினை இவ்வா றபேதிகள் நிலையே ; ஒன்றும் என்றலன்றியும் உவப்பும் - இன்றாம் என்றால் என்பயன் இயம்புக " (13. 53-54; 64 - 65) எ - து கண்டுகொள்க.

இத்திருவிருத்தத்தால் ஆன்மா சிவத்தோடுங்கூடித தற்போதங் கெட்டுச் சிவமாய் விடுகிறதே முத்தியென்கிற சைவரை மறுத்து, அப்படியானுற் பெறுவானும் பேறுமில்லையாய்ச் சாயுச்சியமுமில்லையென்னும் முறைமையை அறிவித்தது. ௪

## பத்தாஞ் சூத்திரம்

### ஆன்ம லாபம்

மேல் பத்தாஞ் சூத்திரமாகிய ஆன்மலாபம் அருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது. அஃதாவது சிவனுடைய அருளோடுங் கூடித தற்போதம் சேவியாமல் நிற்கவே அந்தச் சிவமாகிய ஞேயந் தோனறுமாதலால் அந்தச் சிவத்தோடுங் கூடி ஆன்மா சிவாநுபவத்தைப் பெற்றிருக்கும் முறைமையைச் சொன்னதென அறிக.

மேல் வரும் விருததத்துக்குத தொந்தனையாவது அந்த ஞேயமாகிய சிவததோடுங் கூடி அநுபவிக்கும் முறைமை எப்படி என்று வினவின மாணவகனை நோக்கி அருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

80. பொற்புறு கருவி யாவும் புணராமே அறிவி லாமற்
சொற்பெறும் அதீதம் வந்து தோன்றுமே தோன்றி நின்ற
சிற்பர மதனால் உள்ளச் செயலறுத் திட உதிக்கும்
தற்பர மாகி நிற்றல் சாக்கிரா தீதந் தானே. க

நீக்கமில் சிவத்துடன் நிலைபெற நிற்குஞ்
சாக்கிரா தீதத் தன்மை சாற்றியது.

(உரை) பொற்புறு கருவி யாவும் புணராமே - அந்தச் சிவத்தோடுங்கூடி அநுபவிக்கும் அவதரத்துப் பொலிவினை உடைத்தாகிய கருவிகள் முப்பத்தாறேடும் பொருந்தி விகற்பியாதே; அதுவன்றியும்; அறிவிலாமற் சொற்பெறும் அதீதம் வந்து தோன்றுமே - அறியாமை யென்னுஞ் சொல் பெற்றிருக்கிற ஆணவ மலத்தால் மறைப்புண்டு அதீதாவத்தைப்பட்டுக் கிடவாதே; இங்ஙனஞ் சொல்லப்பட்ட சகலாவத்தையுங் கேவலாவத்தையும் விட்டு நீங்கின அவதரத்து; தோன்றி நின்ற சிற்பரமதனல் உள்ளச் செயலறுத்திட உதிக்கும் தற்பரம்-ஆன்மாவினிடத்திலே அநாதியே கூடிநின்று பக்குவத்திலே பிரகாசிக்கப்பட்ட மேலான அருளானது காட்டத் தான் காண்கிற காட்சியைவிட்டு அந்த ஞானந் தாளுய் நிற்கவே அந்த ஞானமாகிய அருளுக்கு முதலாயிருக்கப்பட்ட சிவமாகிய ஞேயந் தோன்றிப் பிரகாசியா நிற்கும்; ஆகி நிற்றல் சாக்கிராதீதந் தானே-அங்ஙனம் உதயஞ் செய்யப்பட்ட அந்தச் சிவத்தோடுங்கூடிச் சிவபோகமாய் நிற்கிறது தானே சாக்கிரத்தில் அதீதம்.

பொற்புறு கருவி யாவும் புணராமே எ - கு கருவிகள் முப்பத்தாறும் பொருந்தி விகற்பியாதே யென்று பொருள்படுத்தினதற்கு வழியேதென்னில், சகலாவத்தைப்பட்டு நில்லாதே என்பதுமன்றி யாவும் என்ற சுட்டிஞலே கலையாதி மண்ணுந்தமாயுள்ள தத்துவம் முப்பத்தொன்றும் நீங்கலாகச் சுத்த மாயையில் தோற்றமாயுள்ள சிவ தத்துவங்கள் நீங்கியே முத்தியென்பதைப்பற்றியென அறிக. அப்படி அந்தச் சிவதத்துவங்கள் ஐந்தையுங் குறித்துச் சொல்லவேண்டுங் காரணமேதென்னில், அந்தச் சிவதத்துவங்கள் ஐந்தினுந் தத்துவ கர்த்தாக்கள் ஐவரும் அதிஷ்டித்து நிற்கையால் முத்தியைப் பெறுமவர்களுக்குப் பிரமசாயுச்சியமென்றும் விஷ்ணு சாயுச்சியமென்றும் உருத்திர சாயுச்சிய மென்றும் மகேஸ்வர சாயுச்சிய மென்றும் சதாசிவ சாயுச்சிய மென்றும் விந்து சாயுச்சிய மென்றும் நாதசாயுச்சியமென்றும் வருகையால் அவையெல்லாஞ் சுத்த மாயையில் அடங்கி வருகையாலே, அவை சைவ சித்தாந்தத்

துக்கு விரோதமாகிய சமயிகள் கருத்தைப்பற்றி நிற்கையாலும் அது பதமுத்தியிலே கூடி வருகையாலும் அது சாயுச்சியத்துக்கு ஆகாதபடியாலே அதனை ஆகாதென்றதெனை அறிக. அப்படிச் சுத்த தத்துவங்களும் நீங்கியே சாயுச்சியமென்பதற்கு பி - ம் சித்தியாரில் "மூவகை அணுக்க ளுக்கு முறைமையால் விந்து ஞானம், மேவின தில்லை யாகில் விளங்கிய ஞான மின்றும், ஓவிட விந்து ஞானம் உதிப் பதோர் ஞான முண்டேல், சேவுயர் கொடியி னொன்றன் சேவடி சேர லாமே" (1. 26) என்பதனுள் "விந்து ஞான மோவிட" என்று அநுவயித்துப் பொருள்கூட்டி விந்து நாத முதலாயுள்ள தத்துவஙகளும் நீங்கியே முத்தியென்றதெனை அறிக. இனி, தத்துவங களுந் தத்துவ கர்த்தாக்களும் நீங்கியே முத்தியென்பதற்கு பி - ம் புராண சாரத்தில் "பாரணவும் புலனைந்தக் கரண மொன்றும் படராமே நடுநாடி பயிலு நாதங், காரணபங் கயன்முதலா மைவர் வாழ்வுங கழியுநெறி வழிபடவுங் கருதி மேலைப், பூரணமெய்ப் பரஞ் சோதி பொலிவு நோக்கி" (65) எ - ம், திருவாசகத்தில் "ஆட்டுத் தேவர்தம் விதியொழித் தன்பால் ஐயனே யென்றுன் அருள்வழி யிருப்பேன்" (23. 5) எ - ம், தத்துவம் முப்பத்தாறும் நீஙகியே முத்தி யென்பதற்குக் கோயிற்புராணத்தில் "தரைமுதலாறு றெனவரு நாதாதியின் மீதே" (179) எ - ம், திருக்களிற்றுப்படியாரில் "நாதாநதத் தேயிருப்பர்" (80) எ - ம், திருப்புகழில் "விந்துநாத வோசைக்குத் தூரமானது" எ - ம் வரும் ஏதுக்களைக் கண்டு கொள்க. இனி, அந்தச் சுத்த தததுவங்கள் சுத்த மாயையில் தோறற மாகையாற் சுதத மாயையைப்பற்றி நின்றவிடம் பதமுததியாகை யால், பதமுத்தியைச் சாயுச்சியமென்கிற சமயிகள் கருததா மென்று சொன்னதற்கு பி - ம சஙகறப நிராகரணத்தில் சிவசம வாதியை மறுக்கும அவதரத்தில் "செடியுடல் அணுகாக் குடிலை கொடுகருமென் - றோதினை நீயே பேதாய் பகட்டுரல் - ஒளிர்சினை முச்சித தளிர்எனும் இதுதகும் - இச்சா ரூபம் நச்சினர் என்னின் - மும்மலத தேதும் இன்மைய தன்றே - இதுவளா முத்திப் பதமென இயம்புவர்" (9. 84-89) எ - ம், சித்தியாரிலும் "அநாதி உடல் ஒன்றினைவிட் டொன்று பற்றிக் கன்மால் ஆயழிந்து வருதலால்

அந்த மில்லைப், பிறுதியருள் பெறறவர்கள் நித்தவுரு வததைப் பெறறிருக்கை முத்தியெனிற் பெறும்பதமே இதுவும், இறுதிநிலை இதுதானுங் காய முண்டேல் இருங்கன்ம மாயைமல மெல்லா முண்டாம், மறுதிதரு முடலாதி காரியத்தால் அநாதி மலம்அறுக்கும் மருந்தற்றால் உடன்மாயுங் காணே" (11. 3) என்பதனுள் "நித்த வுருவத்தைப் பெற்றிருக்கை முத்தியெனிற் பெறும்பதமே யிதுவும்" எ - து கண்டுகொள்க. என்றிங்ஙனம் முத்தியைப் பெறுமிடத்துச் சுத்ததத்துவம் நீங்கியே முத்தியாகையால் தத்துவம் முப்பத்தாறும் நீங்கியே முத்தியென்பது கருத்து. இதற்கு பி - ம் ஞானமிர்தத்தில் "முப்பது முதலா மூவிரண் டோவா - வொப்பில் தத்துவ மொரீஇய திப்பியன்" (55. 5-6) எ - ம், திருமந்திரததில் "முப்பது மாறும் படிமுத்தி யேணியா, யொப்பிலாப் பேரண்டத் துள்ளில் வெளிபுக்குச், செப்ப வரிய சிவங்கண்டு தாந்தெளிந், தப்பரி சாகி யமர்ந்திருந் தாரே" (126) எ - ம் கணடுகொள்க. ஆகையால், கருவி யாவும் புணராமையென்பது ஆன்ம தத்துவம் இருபத்துநாலும் வித்தியா தத்துவம் ஏழுஞ் சிவ தத்துவம் ஐந்தும் ஆகத் தத்துவம் முப்பத்தாறு மென அறிக.

இனி, அறிவிலாமற் சொற்பெறுமதீதம் வந்து தோன்றுமே எ-து அறியாமை யென்கிற அதீதாவத்தைப் பட்டுக்கிடவாதேயென்று பொருள்படுத்தினதற்கு வழியேதென்னில், முத்தியைப் பெறுமவர்கள் தத்துவம் முப்பத்தாறையுங கழன்று அந்தச் சிவத்தோடுஙகூடிச் சாககிராதீதம் புரிந்திருக்கும் அவதரத்துக கருவிகளெல்லாங கழன்ற விடங் கேவலததுக் கிடமாகையால் அறியாமையோடுங கூடிக் கேவலப்பட்டு வீழாதே யென்றும் சொன்னதென அறிக. அன்றியும், ஆன்மா முததியிற் பாடாணம்போலே கிடக்குமென்று சொல்லுகிற அகச்சமயத்திற் பாடாணவாதி புறச்சமயத்திற் பிரபாகரன்என்னும் இவர்கள் கருத்தைப்பற்றியும் அதனையாகாதெனவுமாமென அறிக. அவாகள் அபபடிச் சொன்னதற்கு பி - ம் சஙகற்ப நிராகரணத்தில் "காட்சி என்னக் காணுத் துயர - . மாட்சியை முத்தி எனவகுத் தனரே" (6. 39 - 40) என்று பாடாணவாதி சொன்னதற்குக் கண்டுகொள்க. அதனை ஆகாதென்று அவனை மறுத்ததற்கு பி - ம்

சங்கற்ப நிராகரணத்தில் “காட்சி யென்னக் காணுத் துயர - மாட்சியை முத்தி எனவகுத் துரைக்கிற் - கரணு பாவ மரணம் கருமரம் - எய்ந்தவர் முத்தி சேர்ந்தவ ரன்றே - இனைய கதிக்கோர் முனைவரும் வேண்டா - தனிதரு துயரம் எனுமிது திடனே - பாடா ணதநிற் கூடா முத்தி” (7. 9 - 15) எ - து கண்டுகொள்க. மற்றப் புறச் சமயத்திற் பிரபாகரன் முத்தியிற் பாடாணம் போலக் கிடக்குமென்றதற்கு பி - ம் சித்தியாரில் “அருஞ்செயலின் அபாவத்தே அபூர்வமெனும் அதுதோன்றித், தருஞ்செயலொன் றின்றியே தான் பலிப்ப தாகுமது, வருஞ்செயலொன் றின்றியே மண்சிலைபோலாமுத்தி,தருஞ்செயலு மெனவுணர்ந்து தாரணிமே லவன் சாற்றும்” (பரபக்கம் 205) எ - து கண்டுகொள்க. அதனை ஆகாதென்று அவனை மறுத்ததற்கு வழியேதென்னில், ஆன்மா அப்படி முத்தியிற போதங் கெட்டுப் பாடாணம்போற் கிடக்குமென்ருல் முத்தி பெற்று அநுபவிககப் போதமில்லாத பொழுது அநுபவமாகாதபடியால் அதனையாகாதென்றதென அறிக. அப்படிப் பிரபாகரனை மறுத்ததற்கு பி - ம் சித்தியாரில் “ஆநந்தம் கதி யென்ன அறிவழிகை வீடென்கை, ஊனம்பின் உணர்வழிந்தோர்க் குளதாகும் உயர்முத்தி, தானிங்குச் சிவப்பொழியத் தழல்நிற்கு மாறில்லை, ஞானஙகெட் டுயிர்நிற்கும் எனுமுரைதான் நண்ணுதால்” (ஷெ 207) எ - து கண்டு கொள்க. அன்றியும், முத்தியில் ஆன்மா போதஙகெட்டுப் பாடாணம்போற் கிடக்கு மென்பது சித்தாந்தப் பொருளுக்கு விரோத மென்பதற்கு பி - ம் சிததியாரில் “கரணஙகள் கெடவிருக்கை முததியா மென்னில கதியாகும் சினைமுட்டை கருமரத்தின் உயிர்கள், மரணங் கொண டிடஉறங்கி மயங்கி மூாசசிக்க வாயுததம பனைபண்ண வல்விடத்தை அடையச, சரணங்கள் புகுநிழல்போல தனைஅடையுஞ் சமாதி தவிராது மலமிதுவும பசுஞான மாகும், அரணஙகள் எரித்தவன்தன் அடியைஅறி விறந்தங கறிஙதிடர் செறிந்ததுகள் அகறறி டீரே” (9. 3) எ - து கண்டுகொள்க.

இனி, தோன்றி நின்ற சிற்பர மதனல் உள்ளச செயலறுத் திட உதிக்குந் தறபரம் என்ற பததததில் தோன்றி நின்ற சிற்பரம் எ - கு தன்னிடத்திலே கூடிய பிரகாசித்து நிற்கிற ஞான

மென்று பொருள்படுத்தினதற்கு வழியேதென்னில், அஃதாவது கண்களுக்கு ஆதித்தப் பிரகாசங் காட்டாக நின்றாற்போலச் சர்வான்மாக்களுக்கும் உயிர்க்குயிராய் நின்று அறிவிக்கிறது பூரணமாகிய திருவருளேயென அறிக. அப்படிக் கண்களுக்கு ஆதித்தன் காட்டாக நின்றாற்போலத் திருவருள் ஞானம் நின்று ஆன்மாக்களை அறிவிக்குமென்பதற்கு பி - ம் சித்தியாரில் "மருளினை அருளால் வாட்டி மன்னுயிர்க் களிப்பன் கண்கட், கிருளினை ஒளியா லோட்டும் இரவியைப் போல ஈசன்" (5. 9) எ - து கண்டுகொள்க. இனி, அதனு ளுள்ளச் செயலறுத்திட உதிக்குந் தற்பரம் எ - கு ஆன்மா அந்த அருளானது காட்டத் தான் காண்கிற காட்சியை இழந்து ஞானந்தானாய் நிற்கவே அந்த ஞானத்துக்கு முதலாகிய சிவமாகிய ஞேயந் தோன்றுமென்று பொருள் படுத்தினதற்கு வழியேதென்னில், அந்த நிஷ்கள சொரூபமாயுள்ள சிவமானது தன்னை ஆன்ம போதத்தாற் சுட்டியறியு நாளெல்லாங் கூடிநிற்கச் செய்தேயும் மறைந்து நின்று அந்த ஆன்மாவானது தன்செயல் அறுதியைக் கண்டு தற்சேட்டை கெடநிற்கும் அவதரத்து அந்தச் சிவம் பிரகாசிக்கையால் அபபடிச் சொன்னதென அறிக. இவை இரண்டுக்கும் பி - ம் சிவஞானபோததததில் "நானவன்என் றெண்ணினர்க்கு நாடுமுளம் உண்டாதல், தானெனஒன் றின்றியே தானதுவாய் - நானெனவொன், றில்லென்று தானே எனுமவரைத் தன்னடிவைத், தில்லென்று தானும் இறை" (10. 1) எ - து கண்டுகொள்க. அன்றியும், திருக்களிற்றுப் படியாரிலும் "உள்ள முதலனைதனும் ஒன்ற உருகவரின், உள்ளம் உருகவந் தன்னுடனும் - தெள்ளி, உணருமவர் தாஙகள் உளராகில் என்றும், புணரவர நில்லா பொருள்" (14) எ - து கண்டுகொள்க. இனி, தற்சேட்டை கெடநின்றதே சிவா நுபவம் என்பதற்கு பி - ம் தேவாரத்தில் "தன்னை மறந்தாள் தன்னாமங் கெட்டாள் தலைப்பட்டாள் நஙகை தலைவன் தாளே" (6. 25. 7) எ - ம், திருவாசகத்தினும் "ஊன் கெட் டுயிர்கெட் டுணர்வுகெட் டென்னுள்ளமும்போய்,நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ" (11. 18) எ - து கண்டு கொள்க. அன்றியும் திருவள்ளுவர் "யானென தென்னுஞ் செறுக்

கறுப்பான் வானோர்க் - குயர்ந்த வுலகம் புகும்" (குறள் 346) என்பதும் இப்பொருள் பற்றியென அறிக.

இனி, ஆகிநிற்றல் சாக்கிராதீதந்தானே என்ற பதத்தில் ஆகிநிற்றல் எ-கு ஆன்மா அந்தச் சிவத்தோடுங்கூடிச் சிவமாய் நிற்கவென்று பொருள்படுத்தினதற்கு வழியேதென்னில், அப்படிச் சொன்னது அந்தச் சிவத்தோடுங்கூடிப் பிறிவற நிற்கவென அறிக. அஃதெங்ஙனேயென்னில், ஆதித்தப்பிரகாசங் காட்டாகப் பிரபஞ்ச ரூபத்தைப் பற்றி நின்ற கண்ணானது அந்த உருவங்களை விட்டு அந்தப் பிரகாசமிடமாகச் சென்று அந்தப் பிரகாசத்துக்கு முதலாயிருக்கிற ஆதித்தனைககண்டு பிறிவற நின்றாற்போல, ஆன்மாவும் அருளிடமாகக் கூடிநின்று சத்தாதி விடயங்களைப் புசித்து நிற்கச்செய்தே அதனையும் விட்டு மனோவிகாரமுமடங்கி அந்த அருளுக்கு முதலாயிருக்கிற சிவததோடும் அந்த அருள் காட்டாகச் சென்றுகூடிப் பிறிவற்று இரண்டற நிற்கையால் அபபடிச் சொன்னதென அறிக. அப்படிப் பிரபஞ்ச ரூபத்தைப் பற்றிநின்ற கண்ணானது திரும்பி ஆதித்தனை நோக்குமளவில் அந்தப் பிரபஞ்ச ரூபங்கள தெரியாததுபோல என்று உபமானங் கூறினதற்கு பி - ம் ஞானாமிர்தத்தில் " தீதறு நெடுங்கண்ணுதவ னொட்டத் - தயலொன் றின்மை போலவும்" (18. 37 - 38) எ - அ கண்டுகொள்க. அன்றியும், ஆன்மா சிவத்தோடுஙகூடிச் சிவமாய் நிற்குமென்பதற்கு பி - ம திருவாசகத்தில் "அவமாய தேவா அவகதியி லழுந்தாதே, பவமாயங் கெடுத்தென்னை யாண்டுகொண்ட பரஞ்சோதி, நவமாய செஞ்சுடர் நல்குதலு நாமொழிந்து, சிவமான வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ" (11. 4) எ - அ கண்டுகொள்க. எனனவே, சிவமாயென்றது ஆன்மா தற்போதமாய் நிற்பதுஞ் செய்யாமல் தானென்கிற முதல் கெடுவதுஞ் செய்யாமல் தற்போதங் கெட்டு அந்தச் சிவததோடுஙகூடி இரண்டறநினறு அநுபவித்ததென அறிக. அப்படிச் சிவமாயென்ற சொல் அந்தச் சிவமாவதுஞ் செய்யாமற் பிறிந்து நிற்பதுஞ் செய்யாமல் நிற்கையென்பதற்கு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில் "ஆனய என்ப தனைததும அவவவை - தான்ஆ காமையைச் சாற்றிடும் என்க - தாமே எனும இத தனியே காரம் - அழிந்திலர் அதுவே ஆய்ததிலர் அதுவிட் -

டொழிந்திலர் பிறிவிலர் எனும்இவை உணர்த்தும்" (12. 80 - 84) எ - து கண்டுகொள்க.

இனி, சாக்கிராதீதந்தானே எ - கு கேவலசகலம் இரண்டையும் நீங்கி நிற்கவென்று பொருள்படுத்தினதற்கு வழியேதென்னில், அஃதாவது கீழாலவத்தைப்பட்டு ஆணவ மலத்தான் மறைப்புண்டு அறியாமையாய்க் கேவலாதீதமாய்க் கிடப்பதுஞ் செய்யாமல் உட்கரணம் புறக்கரணங்களோடுங்கூடிச் சகலனுய்ச் சத்தாதி விடயங்களோடுகூடிச் சீவிப்பதுஞ் செல்லாமல் நின்றவிடமென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "அறியாமை அறிவகற்றி அறிவினுள்ளே அறிவுதனை அருளினுன் அறியாதே அறிந்து, குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடும் கூடாதே வாடாதே குழைந்திருப்பையாயில், பிறியாத சிவன்தானே பிரிந்து தோன்றிப் பிரபஞ்ச பேதமெல்லாந் தானுய்த் தோன்றி, நெறியாலே இவையெல்லாம் அல்ல வாகி நின்றென்றுந் தோன்றிடுவன் நிராதார னுயே" (8. 30) எ - ம், தேவிகாலோத்திரத்தில் "திருத்தகு சமாதியைச் செய்யுங் காலத்துக், கருத்தெழுந் தடங்காது கலங்கு மாயினும், வருத்தமாய் நித்திரை மருவு மாயினுந், திருத்தறி வுறுத்துதன் னிலையிற் சேர்கவே" எ - ம், "நித்திரையும பராக்கினையு நீக்கிச் சித்த, மொரு நிலையு நீங்காம னிறுத்திக் கொண்டால்" எ - ம், கோயிற்புராணத்தில் "கரண மனைத்தும் புலனிவை காணு கைவிட்டால், மரண மெமக்கிங் கிதுதமி யேம்வாழ் வருண்மாறிற, நிரணமு மெய்ச்சஞ் சலமில தென்று லொன்றுனின், புரண மெனக்கொண் டருளுக வென்றார் நின்றார்கள்" (180) எ - ம், திருக்களிற்றுப்படியாரில், "உணராதே யாதும் உறஙகாதே உன்னிப, புணராதே நீபொதுவே நிற்கில்" (31) எ - ம், திருமந்திரத்தில் "நினைப்பு மறப்பு மிலாத விடத்தே, வினைப்பற் றறுக்கும் விமல னிருப்பன், வினைபபற் றறுக்கும விமலனை நாடி, நினைக்கப புகிலவ னிளிய னுமே" (2970) எ - ம், "இரவும பகலு மிலாத விடத்தே, குரவஞ் செய்கின்ற குழலியை நாடி, அரவஞ்செய் யாதவ ளோடுஞ் சந்திக்கிற், பரவஞ் செயா வகைப் பாலனு மாமே"(1134)எ-ம் வரும் எதுககளைக் கணடுகொள்க. ஆகையாற் கேவல சகலம் இரண்டினும் கூடாமல் அந்தச சுததத

தோடுங்கூடி நின்றவிடமே சாக்கிராதீதமென அறிக. அதற்கு வழியேதென்னில், தத்துவம் முப்பத்தாறோடுங்கூடி நிற்கச்செய்தே அவையிற்றோடுங்கூடிச் சீவிப்பதுஞ் செய்யாமல் அறிவு கெடுவதுஞ் செய்யாமல் நின்றவிடமென அறிக. இதற்கு பி - ம் திருமந்திரத்தில் "நின்றவச் சாக்கிரந் துரியம தானால், மன்றனு மஙகே மணஞ் செயா நின்றிடு, மன்றன் மணஞ்செயின் மாயையு மாய்ந்திடும், மன்றே யிவனும் அவனென லாமே" (2277) எ - ம், சித்தியாரில் "சாக்கிரத்தே அதீதத்தைப் புரிந்தவர்கள் உலகிற் சர்வசஙக நிவாததி வந்த தபோதனர்கள் இவர்கள், பாக்கியத்தைப் பகர்வது வென் இம்மையிலே உயிரின் பற்றறுத்துப் பரத்தையடை பராவுசிவ ரன்றே" (8. 35) என்றதும் இப்பொருள்பறறியென அறிக. அன்றியும் இதனைக் குருமுகாந்திரமாகப் பெற்று அநுபவித்த பெரியோர்கள் திருவாக்கினும் கண்டுகொள்க. அஃதாவது, "அதிரைம் புலன்கரிகள் ஆயுமனந் திண்டேர், கதிரொன் றியகுணமாக் காலாள் - சதுரங்கம், பூட்டிறை போலிருக்கப் புக்கடிநிற் கும்புதுமை, காட்டிறு னம்பலவன் காண்" (சிற்றம்பல நாடிகள் வெண்பா, 65) என்றமையால், இதனை இருவினை யொப்புஞ் சத்திநிபாதமு முண்டான பக்குவான்மாக்கள் ஞானசாரியனிடத்திலே ஞான உபதேசததைப் பெற்றுச் சாத்திரஙகளை ஓதியுணர்ந்து பதி பசு பாசததின் வழக்குக்களையும் பிறிததறிந்து ஞான சாத்திரஙகளைக் கேட்டுஞ் சிந்தித்துந் தெளிந்தும வருமவதரத்து நிஷ்டாபரராகைக்குப் பக்குவரானவர்கள் அந்த ஆசாரியனிடத்திலே உண்மையைப் பெற்று அநுபவத்தில் அறிகிறதொழிய நூல்களினால் அறியப்படாதாகையால் அந்த உண்மையை ஆசாரியன் கண்ணைக் கண்டுகொள்க. அப்படியாக உணமையை ஆசாரியன் முகாந்திரமாக அறிகிறதொழிய நூல்களினாலே அறியப்படாதென்பதற்கு பி - ம் ஔவையார் "நல்லன நூல்பல கற்கினுங் காணபரிதே, யெல்லை யிலாத சிவம்" (குறள் 206) எ - ம், திருமந்திரததில் "காட்டுங் குறியுங கடந்தவர் காரண, மேட்டின் புறததி லெழுதிவைத் தெனபயன், கூட்டுங் குருநந்தி கூட்டிடி னல்லது, ஆட்டின் கழுத்தி னதாகறந் தறறே" (2937) கண்டுகொள்க.

அன்றியும், கேட்டுஞ் சிந்ித்துந் தெளிந்தும் நின்றாலும் நிஷ்டை கூடும்பொழுது ஆசாரியனாலே கூடவேணுமென்பதற்கு பி - ம் சித்தியாரில் "கேட்டலொடு சிந்தித்தல் தெளிதல் நிட்டை களித்த லென ஈரிரண்டாம் கிளக்கின் ஞானம், வீட்டையடைந் திடுவர் நிட்டை மேவி னோர்கள் மேவாது தப்பினவர் மேலாய பதங்கட், கீட்டியபுண் ணியநாத ராகி இன்பம் இனிது நுகர்ந் தரனருளால் இந்தப பார்மேல், நாட்டியநற் குலத்தினில்வந் தவதரித்துக் குரு வால் ஞானநிட்டை அடைந்தடைவர் நாதன் தாளே" (8. 24) எ - து கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது சிவனுடைய அருளிடமாக நின்று ஆன்மசுத்திபண்ணி நிற்குமவர்கள் அந்த அருளுக்கு முதலாகிய சிவத்தோடுங் கூடி ஞேயத்தழுந்தி ஆன்மலாபம் பிறந்திருக்குமிடத் துக் கேவல சகல மிரண்டும் நீங்கிச் சுத்தத்தோடுங் கூடுகைக்குத் தத்துவம் முப்பத்தாறோடுங் கூடி நிற்கச்செய்தே அவையிற்றோடுங் கூடிச் சீவிப்பதுஞ் செய்யாமல் அறிவு குலைவதுஞ் செய்யாமல் நிற் கிறதே சாக்கிரதத்தில் அதீதமென்னும் முறைமையை அறிவித்தது. க

அப்படி அருளிச்செய்த முறைமையிலே கரணங்களொடுங் குமோ என்று பார்த்தவளவில் ஒரவதரத்திலும் ஒடுங்குகைக்கு வழி யில்லை, இனி அடியேன் தானாக அறிந்து ஒடுக்கிக்கொள்ளுவது பயனோ தற்சுபாவத்திலே ஒடுங்குகிறது பயனோ என்ற மாணவகனை நோக்கி அருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

81. ஒடுங்கிடா கரணம் தாமே ஒடுங்குமா றுணர்ந் தொடுக்க
ஒடுங்கிடும் என்னில் நின்ற தொடுங்கிடா கரண மெல்லாம்
ஒடுங்கிட ஒடுங்க உள்ள உணர்வுதா னொழியும் வேறாய்
ஒடுங்கிடின் அன்றி மற்ற உண்மையை உணரொ ணாதே.உ

இங்கிலை கரண மிறந்த விடமெனும்
அங்கிலை பழுதா மதுவே றென்றது.

(உரை) ஒடுங்கிடா கரணம் தாமே - கரணங்கள் தாமாக ஒடுக்கமாட்டாது; ஒடுங்குமா றுணர்ந்தொடுக்க ஒடுங்கிடும் என் னில் - கரணங்களொடுங்கும் வழியை அறிந்து ஒடுக்க அவை ஒடுங்கு

மென்னில்; நின்ற தொடங்கிடா - நீ அறிந்து ஒடுக்குகையினுலே அறிகைக்குத் துணைக்கருவிகளா யுள்ளது ஒடுங்குதல் இல்லையாம்; கரணமெல்லாம் ஒடுங்கிட ஒடுங்க - தத்துவங்களெல்லாம் ஒடுங்கத் தக்கதாக ஒடுங்கினபொழுதே ஆன்மபோதம் ஒடுங்குமென்னில் அப் பொழுது; உள்ள உணர்வுதா னொழியும் - பழைய சிற்றறிவுதானு மில்லையாய்ச் சுத்த கேவலமே முத்தியென்கிற பாடாணவாதி அத்த மாய்விடும். அப்படியானுல் அந்தச் சிவதனை அறிந்து அநுபவிக் கும் வழி எங்ஙனே என்னில்; வேறாய் ஒடுங்கிடின் அன்றி மற்ற உணமையை உணரொணுதே - இந்தக் கரணங்கள் அந்நியமாய் விடும்படி உனக்குத தரிசனமான ஞானததோடுங் கூடி நின்று லொழிந்து அந்தச் சிவத்தை அறிந்து அநுபவிக்கவொண்ணுது.

உதாரணம்: கரணங்க ளெல்லாம் ஒடுங்கின இடம் பாடாண வாதி யத்தமாம் என்பதற்கு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில் “ கரணு பாவம் மரணம் கருமரம் - ஏய்ந்தவர் முத்தி சேர்ந்தவ ரன்றே ” (7. 11-12) எ - ம, சித்தியாரில் “ கரணங்கள் கெடவிருக்கை முத் தியா மென்னில் கதியாகும் சிலைமுட்டை கருமரத்தின் உயிர்கள், மரணங்கொண் டிடஉறங்கி மயங்கிமூர்ச் சிக்க வாயுத்தம்பனைபண்ண வல்லிடததை அடையச், சரணங்கள் புகுநிழல்போல் தனைஅடை யுஞ் சமாதி தவிராது மலமிதுவும் பசுஞான மாகும் ” (9. 3) எ - து கணடுகொள்க. வேறாய் ஒடுங்கிடினன்றி என்றதற்கு பி - ம் சித்தி யாரில் முன்னிலுதாரணக்குறை “ அரணங்கள் எரித்தவன்தன் அடியைஅறி விறந்தங கறிநதிடா் செறிந்ததுகள் அகற்றி டீரே ” (9. 3) எ - து கணடுகொள்க.

இதனுற் சொல்லியது ஆன்மா தத்துவாதீதனுய் நின்று சிவாநு பவத்தை அநுபவிக்குமிடத்து அந்தத் தததுவங்கள் தானுக ஒடுஙகா தென்றும், அறிந்தொடுக்கிக கொள்ளும் அவதரத்து நீயறிந்தொடுக்கு கையினுலே அறிகைக்குத் துணைக்கருவியாயுள்ளது ஒடுஙகாதென் றும், ஆனுல் ஒடுஙகுகைக்கு வழி எஙஙனேயென்று வினவ இவை இரண்டினுங் கூடாமல் ஒடுங்குகைக்கு வழி வேறேயென்னு முறை மையை அறிவித்தது. உ

அப்படி அந்தத் தத்துவங்களோடுங் கூடிச் சீவிப்பதுமன்றிக் கேவலப்பட்டு ஒன்றும் அறியாமற் கிடப்பதுமன்றி வேறாய ஒடுஙகி

அந்தச் சிவனைப் பெறுகைக்கு வழி எப்படியென்று வினவ மேலருளிச் செயவான் எடுத்துக்கொண்டருளியது.

82. பற்றிடும் கருவி யாவும் படர்ந்துணர் வளிக்குங் காலே
உற்றறிந் திடுவ தொன்றின் உணர்வினின் உண்மை யாகும்
மற்றது பகல்வி ளக்கின் மாய்ந்திட வருவ துண்டேல்
பெற்றிடும் அதனை மாயப் பிறப்பினை அறுக்க லாமே.௯.

பற்றிடுங் கருவிகள் பகல்விளக் கெனவே
பொற்பழி வுறவருள் பொருந்து மென்றது.

(உரை) பற்றிடும் கருவி யாவும் படர்ந்துணர் வளிக்கும் காலே - ஆன்மா பிரபஞ்சத்தோடுங் கூடத்தக்க கருவிகளெல்லாங்கூடி விரிந் தறிவிகருமிடத்து;உற்றறிந் திடுவதொன்றின்உணர்வினின் உண்மை யாகும் - அந்தத் தத்துவங்களோடுங்கூடி அதுவதுவாய் நின்றறிந்து சீவிக்கிறது ஆன்ம போதத்தின் உண்மையாம்; மற்றது பகல் விளக் கின் மாய்ந்திட வருவ துணடேல் - அந்தக் கருவிகளும் ஆன்மாவும் ஆதித்தன் சந்நிதியில் எரிகிற விளக்குப் பிரகாசங்கெட்டு நின்றெரிந் தாற்போலத் தததம் நிலை குலையாமல் நிற்கச்செய்தே தம்மிற்கூடிச் சீவியாதபடி அருட்பிரகாசம் மேலிடததக்கது உண்டாமாகில்; பெற்றிடும் அதனை - ஆன்மா அந்தச் சிவாநுபவத்தைப் பெறுவதுஞ் செய்யும். அப்படிப் பெற்ருல்; மாயப் பிறப்பினை அறுக்க லாமே - மயக்கத்தைச் செய்கின்ற ஜநநத்தையும் போக்கலாம்.

மற்றதுமென்ற உம்மைகொண்டே ஆன்மாவுங் கருவிகளுமென அறிக. என்னவே, கருவிகளும் ஆன்மாவும் பகல் விளக்குப்போல் நின்றே சிவனைப் பெறவேணுமென்பதும் இரண்டுங்கூடிச் சீவியாமல் நிறகவேணுமென்பதுங் கருத்து. இதற்கு பி - ம் திருக்களிற்றுப் படியாரில் “ அன்றிவரும் ஐம்புலனும் நீயும்அசை யாதே, நின்ற படி யேநிறக முன்னிற்கும்” (35) எ - து கண்டுகொள்க. பகல் விளக்குப்போல என்பது தற்போதங் கெட்டு நிற்கையென அறிக. இதறகு பி - ம் திருவாசகத்தில் “வான்கெட்டு மாருதமாய்ந் தழல்நீர் மண் கெடினுந், தானகெட்ட லின்றிச் சலிப்பறியாத் தன்மை யனுக், கூன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட் டென்னுள்ளமும்

போய், நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ" (11. 18) எ - ம், திருமந்திரத்தில் "ஒத்திட் டிருக்க வுடம்போ டுயிர்தான், செத்திட் டிருப்பர் சிலசிவ யோகிகள்" (121) எ - ம் கண்டு கொள்க.

இதனாற் சொல்லியது தத்துவங்களும் ஆன்மாவுந் தம்மிற் கூடிச் சீவிக்கும் முறைமையும், அப்படிச் சீவித்து நிற்கச்செய்தே அவை இரண்டும் பகல் விளக்குப்போலத் தற்போதம் சீவியாமல் நிற்கவே அந்த அருள்மேலிட்ட அவதரத்து ஆன்மா அந்த அரு ளோடுங்கூடி அந்தச் சிவாநுபவத்தைப் பெறுமுறைமையும் அறி வித்தது. ௩

இங்ஙனந் தற்போதம் சீவியாமல் நின்று அந்தச் சிவாநுபவ மாகிய முத்தியைப் பெறுகைக்கு அடியேன் செய்துவருகிற இயற்கை யேதென்று வினவ அதற்கு வழி மேலருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

83. முந்திய ஒருமை யாலே மொழிந்தவை கேட்டல் கேட்டல்
சிந்தனை செய்தல் உண்மை தெளிந்திடல் அதுதா னாக
வந்தவா றெய்தல் நிட்டை மருவுதல் என்று நான்காம்
இந்தவா றடைந்தோர் முத்தி எய்திய இயல்பி னோரே. ச

கேட்டல் முதலாக் கிளர்ந்த நால்வகையும்
வாட்டரு முத்தியை மருவு மென்றது.

(உரை) முந்திய ஒருமை யாலே மொழிந்தவை கேட்டல் - முன் ஜநநங்களிற் செய்துவந்த சரியை கிரியா யோகங்களினது முற்றுதலினாலே ஆசாரியன் அருளிச்செய்த ஞான உபதேசங்களை ஏகாக்கிர சித்தனாயிருந்து விரும்பிக் கேட்டல்; கேட்டல் சிந்தனை செய்தல்-முன் சொல்லப்பட்ட ஞான உபதேசமாகிய திரிபதார்த்தங் களை இப்படியோ பதியின் உண்மை, இப்படியோ பசுவின் உண்மை, இப்படியோ பாசத்தின் உண்மையென்றும் ஆராய்ந்து சிந்தித்தலாம்; உண்மை தெளிந்திடல் - அப்படி ஆராயப்பட்ட மூன்றினுள்ளும் பாச ஞானம் அஞ்ஞானம் பசு ஞானஞ் சுதந்தர ஹீனம்; ஆகையால், இவை இரண்டையுங் கூட்டிச் சேட்டிப்பிக்கிறது பதிஞானம்,

அதுவே உண்மையாக உள்ளதென்று கண்டு அதுவே பொருளாகத் தெளிதலே தெளிதலாம்; அது தானாக வந்தவாறெய்தல் நிட்டை மருவுதல் - அந்தப் பதியானது பெத்தான்மாக்களோடுங் கூடிநின்று காரியப்படுத்தச் செய்தே தானொரு முதலில்லை என்னும்படி தோன்றாமல் நின்று காரியப்படுத்தினாற்போல நீயும் அந்த ஞானத்தினாலே அல்லவோ காரியப்பட்டு வருகிறோமென்கிறதை அறிந்து ஆன்ம போதம் சீவியாமல் ஞானந்தானாய் நின்றுவிடுதலே நிஷ்டையாம்; என்று நான்காம் - என்றிப்படி கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிஷ்டையென்று நாலு வகையாம்; இந்த வாறடைந்தோர் முத்தி எய்திய இயல்பி னோரே - இந்த ஒழுங்கிலே கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிஷ்டையைக் கூடினவர்களே முத்தி நெறியைப பொருந்தினவர்கள்.

உதாரணம்: அது தானாக வந்தவா றெய்தல் நிட்டை மருவுதல் எ-கு பெத்தத்திற் சிவன் தோற்றமற்று ஆன்மாவின் தோற்றமாய் நின்றாற்போல முத்தியில் ஆன்மாவின் தோற்றமற்றுச் சிவ தோற்றமாய் நிற்க என்றதற்கு பி-ம் இருபாவிருபஃதில் " நாடா - என்னுட் கரந்தென் பின்வந் தருளி - என்னையுந் தன்னையும் அறிவின் றியற்று - மென்னது யானெனு மகந்தை யுங்கண்டு - யாவர் யாவையும் யாதாகனுஞ் சென்று - புக்குழிப புக்குப் பெயர்த்துழிப் பெயர்த்து - மிக்க போகம் வினையால் விளைதலிட் - டேற்பணி யாளா யெனைப்பிறி யாதே - ஓடி மீள்கென ஆடல் பார்த்திட் - டென்வழி நின்றன னெந்தை" (18. 4-13) இது பெத்தம். இனி முத்திக்கு பி-ம் முன்னில் உதாரணக்குறை " அன்றே - அருள்மிக வுடைமையின் அருட்டுறை வந்து-பொருள்மிக அருள்தலும் பொய்ப்பகை யாதலும் - கைகண்டுகொள்ளெனக் கடலுலக றிய - மெய்கண்ட தேவ னெனப்பெயர் விரீஇத் - தன்னுட் கரந்து தான் முன் னாகித் - தன்னதுந் தானுமா யென்னையின் றாகி" (18. 13-19) எ-து கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது ஆன்மாக்கள் முத்திபெறுமிடத்துக் கேட்டுஞ் சிந்தித்துந் தெளிந்தும் நிஷ்டைகூடியு முத்தியைப்பெறும் முறைமையை அறிவித்தது.

## ஞான நிட்டை

அப்படி நிஷ்டைகூடி முத்தியைப் பெறுகிறதொழியச் சாத் திரங்களையோதிக் கேட்டுஞ் சிந்தித்துந் தெளிந்தும் நின்றால் அது கொண்டே முத்தியாகாதோ என்ற மாணவகனை நோக்கி அவை பாச ஞானமும் பசு ஞானமும் ஆகையால் அதனால் முத்தியுண்டா காது, அந்தப் பதி ஞானத்தோடே கூடுகிறதே நிஷ்டையென்றும் அந்த நிஷ்டையுண்டாகிறதே முத்தியென்றும் வரும் முறைமையை மேலருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

84. பாசமா ஞானத் தாலும் படர்பசு ஞானத் தாலும்
ஈசனை உணர வொண்ணா திறைஅருள் ஞானம் நண்ணித்
தேசுறும் அதனால் முன்னைச் சிற்றறி வொழிந்து சேர்ந்து
நேசமோ டுயர்ப ரத்து நிற்பது ஞான நிட்டை. (நி

பலகலை ஞானமும் பல்லுயிர் ஞானமுந்
தலைவனை யணுகாத் தன்மை சாற்றியது.

(உரை) பாசமா ஞானத் தாலும் படர்பசு ஞானத் தாலும் ஈசனை யறிய வொண்ணாது - வேதாகம புராண சாத்திரங்களென்று சொல் லப்பட்டவையிற்றால் அறியும் பாச ஞானத்தாலுந் தத்துவங்களெல் லாம் கழன்றவிடத்து ஆன்மாதானே சிவமாமென்று சொல்லுகிற பசு ஞானத்தாலுஞ் சிவனைக் கூடவொண்ணாது. பின்னை எங்ஙனே யென்னில்; இறையருள் ஞான நண்ணித் தேசுறும் அதனால் - கர்த் தாவினுடைய திருவருளாலே அந்த ஞானத்தைப் பொருந்தி அவ் விடத்துப் பிரகாசித்துநின்ற திருவருளாலே; முன்னைச் சிற்றறி வொழிந்து சேர்ந்து - பழைய இச்சா ஞானக் கிரியைகளாகிய ஆன்ம போதத்தை விட்டு அந்தச் சிவஞானத்திலே பொருந்தி; நேசமோ டுயர் பரத்து நிற்பது ஞான நிட்டை-விருப்பத்துடனே அந்த ஞானத் துக்கு மேலான சிவத்துடனே நிற்குமதுவே ஞான நிஷ்டையாம்.

வேதாகம புராண சாத்திரங்களைப் பாச ஞானமென்றது அவை யிற்றை அறியுமிடத்துத் திரிவித கரணங்களைக் கொண்டு அறிய வேண்டுகையினாலென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "வேத சாத் திரமிருதி புராணகலை ஞானம் விரும்பசவை வைகரியா தித

திறங்கள் மேலாம், நாதமுடி வானவெலாம் பாச ஞானம்" (9. 2)எ-து கண்டுகொள்க. ஆன்மா தத்துவங்களெல்லாங் கழன்றவிடந்தானே சிவமென்று சொல்லுகிறதைப் பசுஞான மென்றது ஆன்மா அவ் விடத்தொரு பொருளோடுங்கூடி அநுபோகப்படாதது கொண் டென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் முன்னில் உதாரணக் குறை "நணுகிஆன் மாஇவைகீழ் நாட லாலே, காதலினல் நான் பிரம மென்னு ஞானம் கருதுபசு ஞானம்இவ னுடலிற் கட்டுண், டோதிபுணர்ந் தொன்ருென்ரு உணர்ந்திடலாற் பசுவாம் ஒன்ருகச் சிவன்இயல்பின் உணர்ந்திடுவன் காணே" (9. 2) எ - து கண்டுகொள்க. ஆகையால் ஆன்மா சிவமாகாதெனக் கொள்க. ஆன்மா சிவமாமென்னிற் சகச ஞானம் உண்டாகவும் வேணுமென அறிக. இறையருள் ஞானம் நண்ணி என்றது ஆன்மா சிவனை அறியுமிடத்து அந்தச் சிவனுடைய ஞானத்தைக் கொண்டு சிவனை அறியவேணுமென்றதென அறிக. இதற்கு பி - ம் திருவாசகத்தில் "அவனருளாலே அவன்தாள் வணங்கி" (1. 18) எ - து கண்டு கொள்க.

இதனுற் சொல்லியது ஆன்மாக்கள் சிவனைப் பெறுமிடத்துப் பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும் பதியைக் கூடவொண்ணு தென்றும் அந்தப் பதிஞானங் கொண்டே பதியைக் கூடவேணு மென்னும் முறைமையையும் அறிவித்தது. ரு

உபாய நிட்டை

அப்படித் தற்போதம் சீவியாமல் நிற்கவென்ருல் அது முடி யாது அடியேன் நின்று சாதித்துப் பெறத்தக்கதாக எளிதாக ஒருவழி கற்பித்தருள வேணுமென்ற மாணவகனை நோக்கி முன் கற்பித்த நிஷ்டை கைகூடுகைக்கு வேறே உபாய நிஷ்டையாக ஒரு வழி அரு ளிச் செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

85. விளம்பிய வகையில் நிட்டை மேவிடல் அரிதேல் முன்னம்
அளந்தறி வளித்த வற்றின் அளவுமற் றவற்றி னலே
உளங்கொளுந் தனையு முள்ளபடியுமுற் றுணர்ந்து செவ்வே
தளர்ந்திடா துவப்ப மற்றத் தன்மைய தாகுந் தானே. கூ

போற்றரு நிட்டை பொருந்தா தவருக்
கூற்ற முளதா முபாய முரைத்தது.

(உரை) விளம்பிய வகையில் நிட்டை மேவிடல் அரிதேல்-முன் சொன்ன முறைமையினாலே உண்டான நிஷ்டை கூடுதற் கரிதாமாயின்; முன்னம் அளந்தறி வளித்த வற்றின் அளவும் - முன்பு பெத்த நிலையிலே தனக்கு வேண்டின புசிப்புக்குத் தக்கதாக அறிவித்துக் கொண்டுநின்ற தத்துவங்களினது உண்மையையும்; மற்றவற்றினாலே உளங்கொளுந் தனையும் - அந்தத் தத்துவங்களினாலே அறிந்து இன்ப துன்பங்களைப் புசித்து வருகிற தன்னுடைய உண்மையையும்; உள்ளபடியும் - கன்மத்துக் கீடாகத் தத்துவங்களையுந் தன்னையுங் கூட்டிப் புசிப்பிக்கிற கர்த்தாவின் முறைமையும்; உற்றுணர்ந்து - இவை மூன்றையும் அநுபவத்தினாலே அறிந்து; செவ்வே தளர்ந்திடா துவப்ப - இவையிற்றுக்குச் சலிப்பின்றித் தவறு வராமல் நேரேநின்று அந்தப் பொருளை விரும்பவே; மற்றத் தன்மைய தாகுந் தானே-முன்சொல்லப்பட்ட நிஷ்டையின் முறைமையாகும்.

தத்துவங்களின் உண்மையறிய என்றது தத்துவங்கள் ஆன்மா கூடினாலொழிய அறியாதாகையால் அவையிற்றைச் சடமென்றதென அறிக. ஆன்மாவின் உண்மையை அறிய என்றது ஆன்மா தானாக அறிகைக்குச் சுதந்தரமில்லாதது கொணடே சுதந்தர ஹீனனென்றதென அறிக. கர்த்தாவின் உண்மையை அறிய என்றது அந்தத் தத்துவங்கள் சடமாகையாலும் ஆன்மா தற்சுதந்தரமில்லாதவனாகையாலும் இவை இரண்டையுங் கூட்டிப் புசிப்பிக்கிறது காததாவென்பதென அறிக. என்னும் இவையிற்றுக்கு பி-ம் போற்றிப் பஃறொடையில் "நாட்டுகின்ற, எப்பிறப்பும் முற்செய் இருவினையால் நிச்சயிதகுப் - பொற்புடைய தந்தைதாய் போகதகுட்—கர்ப்பமாய்ப், புல்லிற் பனிபோற் புகுந்திவலைக் குட்புகுங்கால் - எல்லைப் படாஉதரத் தீண்டியதீப்—பல்வகையால், அஙகே கிடந்த அநாதியுயிர் தம்பசியால் - எங்கேனு மாக எடுக்குமென—வெங்கும்பிக், காயக் கருக்குழியிற் காத்திருந்துங் காமியத்துக் - கேயகதை கால்முதலாய் எவ்வுறுப்பும்—ஆசறவே, செய்து திருததிப்பின் பியோகிருததி முன்புக்க - வையவழி யேகொண் டணைகின்ற—

பொய்யாத, வல்லபமே போற்றியம் மாயக்கால் தான்மறைப்ப - நல்ல அறிவொழிந்து நன்குதீ—தொல்லையுரு, அக்காலந் தன்னிற் பசியையறி வித்தழுவித் - துக்காவி சோரத்தாய் உள்நடுங்கி—மிக் கோங்குஞ், சிந்தை உருக முலையுருகுந் தீஞ்சுவைப்பால் - வந்து மடுப் பக்கண்டு வாழ்ந்திருப்பப்—பந்தித்த, பாசப் பெருங்கயிற்றாற் பல்லுயிரும் பாவிக்க - நேசத்தை வைத்த நெறிபோற்றி—ஆசற்ற, பாலைப் பசும்பதத்தும் பாலனும் அப்பதத்தும் - நாளுக்கு நாள்சகல ஞானத்தும்—மூள்வித்துக், கொண்டாள ஆளக் கருவிகொடுத் தொக்கநின்று - பண்டாரி யான படிபோற்றி" (13-24) எ - து கண்டுகொள்க. செவ்வே தளர்ந்திடா துவப்ப எ - கு சலிப்பற்று நேரேநிற்க என்றது எல்லாஞ் சிவசேட்டையென்று கண்டு யானெனதுகெட நிற்கையென அறிக. இதற்கு பி - ம சித்தியாரில் "யான்செய்தேன் பிறர்செய்தார் என்னது யான் என்னும் இக் கோணை ஞானஎரி யால்வெதுப்பி நிமிர்த்துத், தான்செவ்வே நின் றிடஅத் தத்துவன்தான் நேரே தனையளித்து முன்னிற்கும் வினை யொளித்திட் டோடும், நான்செய்தேன் எனுமவர்க்குத் தானங் கின்றி நண்ணுவிக்கும் போகத்தைப் பண்ணுவிக்குங் கன்மம், ஊன்செய்யா ஞானந்தான் உதிப்பி னல்லால் ஒருவருக்கும் யானென திங் கொழியா தன்றே" (10. 2) எ - து கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது முன்பு கற்பித்த நிஷ்டை கைகூடா தென்ற மாணவகனை நோக்கி வேறுமோர் உபாய நிஷ்டையாகக் கொண்டு தத்துவங்களைச் சடமென்று கண்டும் ஆனமாவைத் தனக் கென்ன அறிவில்லாதவனென்று கண்டும் இவை இரணடையுஞ் சிவனே கூட்டிக் காரியப்படுத்துவனென்பதுங் கணடு தற்சேட்டை கெட நிற்கவே பண்டு கற்பித்த நிஷ்டை தானே கைகூடுமென்னும் முறைமையை அறிவித்தது. ௬௮

இங்ஙனம் அருளிச்செய்த நிஷ்டையை அடியேன் பாவித்துக் கொண்டு வருகிறேனென்று வினவின மாணவகனை நோக்கி அப்படி நீ பாவிக்கிற பாவகங்களால் அந்தப் பொருளைப் பெறவரிதெனறும், தம்பிரானார் திருவருளைப் பெறற அடியார்களுககு ஒரு பாவகங் களும் இல்லாமல் எளிதாகப் பெறலாமென்றும வருமுறைமையை மேலருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

86. பாவிக்கின் மனாதி வேண்டும் பயனிலை கரணம் நீத்துப்
பாவிப்பன் என்னில் என்ன பழுதுள பாவ கத்தால்
பாவிக்க வொண்ணு தென்று பாவிப்பன் என்னின் நீயேன்
பாவிக்க வேண்டா ஆண்ட பரனருள் பற்றி னோர்க்கே.எ

நீக்கமில் பாவக நிலையெப் பொருளுந்
தாக்கரு ஞானஞ் சாரா தென்றது.

(உரை) பாவிக்கின் மனாதி வேண்டும் - அந்த உண்மையை நீ தியானிக்குமிடத்து அந்தக்கரணங்களாகிய மனாதிகள் கூடியே தியானிக்கவேண்டும். ஆகையால் அது; பயனிலை - அந்த உண்மையாகிய சிவம் வாக்குமனாதீதமாயிருக்கையால் அதனைக் கரணங்களைக் கொண்டு நீ தியானிக்குமளவில் உனக்கொரு பிரயோசனமு மில்லையாம்; கரணம் நீத்துப் பாவிப்பனென்னில் - அந்தக்கரணங்களை நீக்கியே அந்தப் பொருளைப் பாவித்துக்கொள்ளுவேனென்று நீ சொல்லில்; என்ன - அதனாற் பயனேதுண்டாவது; பழுதுள - அந்தக்கரணங்கள் நீங்கினவிடங் குற்றத்தையுடைய கேவலமுமாய் முத்திப் பழுது சொல்லுகிற பாடாணவாதி அத்தமுமாமாகையால் அது பயனல்ல; பாவகத்தால் பாவிக்க வொணாதென்று பாவிப்பன என்னில் - அப்படியல்ல அடியேன் பாவிக்கிற பாவகங்களால் அந்தப் பொருளைப் பாவிக்கப்படாதென்று பாவித்துக்கொள்ளுவேனென்னில்; நீயேன் - அந்தப் பொருள் உன்னுடைய பாவகங்களாற் பாவிக்கப்படாதேயானால் உன்னுடைய முயற்சி ஏன். ஆகையால்; பாவிக்கவேண்டா ஆண்ட பரன் அருள் பற்றினோர்க்கே - அப்படி ஆன்ம போதத்தால் ஒன்றையுஞ் சுட்டிப் பாவிக்க வேண்டுவதில்லை நம்மையாண்ட தம்பிரானார் அநுக்கிரகித்த திருவருளைப்பெற்ற அடியாராயுள்ளவர்களுக்கு.

உதாரணம்: கரணமீத்துப் பாவிப்பன் என்றது பாடாணவாதி அத்தமாமென்று சொன்னதற்கு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில் "காட்சி என்னக் காணாத் துயர - மாட்சியை முத்தி எனவகுத் தனரே" (6. 39-40) எ - து கண்டுகொள்க. அதனைப் பழுதென்று மறுத்ததற்கு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில் "காட்சி யென்னக் காணாத் துயர - மாட்சியை முத்தி எனவகுத் துரைக்கிற் - காணா

பாவம் மரணம் கருமரம் - ஏய்ந்தவர் முத்தி சேர்ந்தவ ரன்றே - இனைய கதிக்கோர் முனைவரும் வேண்டா - தனிதரு துயரம் எனும் இது திடனே - பாடா ணத்திற் கூடா முத்தி" (7. 9-15) எ - ம் சித்தியாரில் "கரணங்கள் கெடவிருக்கை முத்தியா மென்னில் கதியாகும் சினைமுட்டை கருமரத்தின் உயிர்கள், மரணங்கொண் டிட உறங்கி மயங்கிமூர்ச் சிக்க வாயுத்தம் பனைபண்ண வல்விடத்தை அடையச், சரணங்கள் புகுநிழல்போல் தனைஅடையுஞ் சமாதி தவி ராது மலமிதுவும் பசுஞான மாகும், அரணங்கள் எரித்தவன்தன் அடியை அறிவிறந்தங் கறிந்திடீர் செறிந்ததுகள் அகற்றி டீரே" (9. 3) எ - து கண்டு கொள்க.

இதனாற் சொல்லியது அந்த உண்மை ஞானத்தைப் பாவகத்தி னாலே தியானித்து வருகிறேனென்ற மாணவகனை நோக்கி அதனை நீ தியானிக்குமிடத்துக் கரணங்கள்கூடித் தியானிக்கையால் அது வும் அத்தமல்ல என்றும், கரணங்களை நீக்கித் தியானிக்குமிடத்துக் குற்றத்தையுடைய கேவலமே முத்தியென்கிற பாடாணவாதி அத் தமமென்றும், சிவனருளைப்பெற்ற அடியார்களுக்கு ஒரு பாவகங் களும் வேண்டாமென்றும் வருமுறைமையை அறிவித்தது. எ

இங்ஙனஞ் சொல்லப்பட்ட நிஷ்டையாலும் முன்சொன்ன உண்மை நிஷ்டையாலும் அந்தச் சிவனைப்பெற்ற ஆன்மாக்கள் அந்தச் சிவனோடுங்கூடி ஒன்றுபட்டுப் போவார்களோ இரண்டுபட்டு நிற்பார் களோ என்று மாணவகன் ஆசாரியரை வினவின அவதரத்து, மாயா வாதி அநாதியில் ஒன்றாயிருந்து பொன்னிலேயிருந்து பணிகள் விரிந்தாற்போல சீவான்மாவும் பிரபஞ்சமுமாக இரண்டாய் விரிந்து மீளவும் ஒன்றுபட்டுப்போமென்று சொல்லுகையும், அதனை அதல்ல வென்று சைவர் வந்து அநாதியில் ஆன்மாவுஞ் சிவமும் இரண்டா யிருந்து முத்தியில் ஒன்றுபட்டுப் போமென்று சொல்லுகையும், அன்றியும் ஐக்கியவாதி வந்து அநாதியில் ஆன்மாவுஞ் சிவமும் இரண்டாயிருந்து முத்தியில் நீரும் நீருங் கூடி ஒன்றானாற்போல ஒன்றுபட்டுப் போமென்று சொல்லுகையும், அதனை அல்லவென்று சமவாதி வந்து ஆன்மாவுஞ் சிவமும் முத்தியிலும் இரண்டாயிருக்கு மென்று சொல்லுகையும், அன்றியும் மீளவும் அவன் அக்கினியைச்

சேர்ந்த இரும்பு அக்கினியானாற்போலச் சிவனைச் சேர்ந்த ஆன்மாக்கள் சிவமாமென்று சொல்லுகையுமான அவதாரத்து இவர்கள் சொன்னதெல்லாஞ் சித்தாந்த அத்தமல்லவென்று அவரவர் அத்தங்களை மறுத்துக்காட்டிச் சித்தாந்த உண்மையை ஓர் உபமானங்காட்டி மேலருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

87. ஒன்றிரண் டாகி ஒன்றின் ஒருமையாம் இருமை யாகி
ஒன்றிலொன் றழியும்ஒன்றா தென்னின்ஒன் றாகா தீயின்
ஒன்றிரும் புறழின் அன்றாம் உயிரின்ஐந் தொழிலும் வேண்டும்
ஒன்றிநின் றுணருமுண்மைக் குவமைஆணவத்தோ டொன்றே.

குற்ற மருவுங் கோட்பா டகற்றி
முற்றிய கதியின் முறைமைமீ தென்றது

(உரை) ஒன்றிரண்டாகி ஒன்றின் ஒருமையாம் - எங்கும் ஒரு முதலாக விரிந்திருக்கப்பட்ட பிரமமானது சீவான்மாவாக விரிந்து மீளவும் ஒன்றுபட்டுப் போமென்னில், அது சீவான்மாவாக விரிந்த அவதாரத்தும் அந்தப் பிரமத்தின் செய்திகளெல்லாம் உண்டாக வேணும். அப்படியில்லையாகையால் அது அத்தமல்லவென அறிக; இருமையாகி ஒன்றிலொன்றழியும் - அநாதியே ஆன்மாவுஞ் சிவமும் இரண்டு முதலாய் நின்று முத்தியில் ஒன்றாய்விடுமென்னில், அப்பொழுது ஆன்மா அழியவேண்டும். அதனாற் பெறுவாரில்லையாம். ஆகையால் அதுவும் அத்தமல்லவென அறிக; ஒன்றாதென்னின் ஒன்றாகா - ஆன்மா முத்தியிலுஞ் சிவத்தோடுங் கூடாமல் இரண்டுபட்டு நிற்குமென்னில், அப்பொழுது முத்தியில ஒன்றுபட்டு அநுபவிக்கிறதே பயனென்கிற பேறும் இல்லையாமென அறிக; தீயின் ஒன்றிரும் புறழின் அன்றாம் - அக்கினியைச் சேர்ந்த இரும்பு அக்கினியானாற்போல ஆன்மாவும அந்தச் சிவத்துடனேகூடிச் சிவமாமென்னில், அப்படியாகாது. அதேதென்னில்; உயிரின் ஐந்தொழிலும் வேண்டும் - ஆன்மாவுக்குப் பிராணனாய் நின்று சேட்டிப்பிக்கிற சிவனுடைய பஞ்சகிருத்தியமும் அந்தச் சிவனைப் பெற்ற ஆன்மாக்களுஞ் செய்யவேண்டும். அததன்மை ஆன்மாக்களுக்கு இல்லையாகையால் அது அத்தமல்லவென அறிக.

அப்படியானால் ஆன்மாக்கள் சிவனைப்பெற்று நிற்குமுறைமை எங்ஙனே என்னில்; ஒன்றிநின் றுணரும் உண்மைக் குவமை ஆணவத்தோ டொன்றே - அந்தச் சிவத்தோடுங்கூடி முத்தியைப்பெற்று இன்பத்தை அநுபவிக்கிறதற்கு உவமையாவது, ஆணவ மலத்தோடுங் கூடி அதீதப்பட்ட ஆன்மாக்கள் அந்த மலத்தோடும் ஒன்றுபட்டு அழிந்துபோவதுஞ் செய்யாமல் இரண்டுபட்டு நீங்குவதுஞ் செய்யாமல் நின்றாற்போலக் கூடி அனுபவிக்கும்.

உதாரணம்: இங்ஙனஞ் சொல்லப்பட்ட சமயிகள் நால்வர்க்கும் உண்டான மததுக்கும் மறுப்புக்குஞ் சங்கற்ப நிராகரணத்திலே காட்டுதும். அவை வருமாறு: ஒன்றிரண்டாகி யொன்றும் என்று மாயாவாதி சொன்னதற்கு பி - ம் "பொற்பணி யியல்பினின் - வான்வளி அனல்நீர் மண்மருங் தன்ன - மான தாது ஆறைங் கோசத் - தொகுதி யாக்கைப பகுதிய தொருபுடை" (3. 10-13) எ - ம், மீளவும் பரததிலே ஒடுங்குமென்றவன் சொன்னதற்கு பி - ம் "வாறு ரந்திரை நுரைதரு வாய்மையிற் - கூடும்" (3. 19-20) எ-ம் கண்டுகொள்க. அந்தப் பரத்திலேநின்று தோன்றிச் சீவான்மாவாக நின்று மீளவும் பரத்திலே ஒடுங்குமென்றதை அந்தப் பரததுக்குண்டான இயல்பெல்லாம் இந்தச் சீவான்மாவுக்குண்டாகவேணுமென்று அவனை ஒருமையாமென்றும் மறுத்ததற்கு பி - ம் "பரததுள தேல் இவை யும்பர மார்த்தம் - பரத்தில தேல்ஒழி முன்பகர் மாற்றம்" (4. 63-64) எ - து கண்டுகொள்க.

இனி இரண்டாவது, இருமையாகி யொன்றும் என்று ஐக்கிய வாதி சொன்னதற்கு பி-ம் "நீரும நீரும் சேருந் தகைமையின்-அறிவினோ டறிவு செறிவுறப் பொருந்தி - ஒன்றும்" (5. 16-18) எ - து கண்டுகொள்க. அதனை மறுததற்கு பி - ம் "உண்மையில் இருமையும் ஒளியே எனில்ஒரு - தன்மை யாகமுன் சாற்றின ரிலரே" (6. 26-27) எ - து கண்டுகொள்க. அன்றியும் இருமையாகி யொன்றும் என்று சைவர் சொன்னதற்கு பி - ம் "கருவியும் மலமும் பிறிவுறப் பிறியா - ஞானம் நல்கலும் தான்அது நோக்கித் - தன்னையும் அதனையும் தன்முதற் பொருளையும் - இன்னதென் றறியா இருவரும் முயங்கி - ஒன்றாய் உறுபயன் உவப்பும் - இன்றாய் நிற்கும்

இதுசிவ கதியே" (12. 151-156) எ - து கண்டுகொள்க. அப்படி முத்தியில் ஒன்றுபட்டுப் போமென்னில் ஆன்மா அழிந்துபோமாகையினால் அது அத்தமல்லவென்றும் ஒன்றினொன் றழியுமென்றும் அவனை மறுத்ததற்கு பி - ம் "இருவரும் கூடி ஒரு பயன் ஆய்த்தென்றருளினை இவ்வா றபேதிகள் நிலையே" (13. 53-54) எ - து கண்டு கொள்க. அன்றியும், சித்தியாரிலும் "அணைந்து கெட்ட தென்னில், பொன்றினதேன் முத்தியினைப் பெற்றவரார் புகல்நீ, பொன்றுகையே முத்தியெனில் புருடன் நித்த னன்றாம்" (11. 9) எ - து கண்டுகொள்க.

இனி மூன்றாவது, ஒன்றாதென்று சமவாதி சொன்னதற்கு பி - ம் "முன்னேன் தனது முதிரொளி ஞானம் - அறியாப் பச்சைச் சிறுபுழுக் கவர்ந்த - வண்டென உயிரைக் கொண்டிடும் உயிர அது - தன்னை நோக்கித் தான்அது வாகி - ஐவகைத் தொழிலும் மெய வகை உணாவும் - பிறியா வாறு பெற்றுத் - திரியாப் பெரியோர் திரடசிசோந திடுமே" (8. 19-25) எ - து கண்டுகொள்க. அப்படிக் கூடி அனுபவியாத பொழுது சாயுச்சிய மாகாதாகையால் ஒன்றாகா தென்று அவனை மறுத்ததற்கு பி - ம் "முத்தி உற்ற நற்றவ ரவை யிடைச - சேர்வர் எனறனை சார்தரு முத்தி - சாலோக் கியமோ சாயுச் சியமெனில் - பந்த முறற கந்தல கழித்தல் - அறிவினோ டறிவு பிறியாப பெற்றி - வேண்டும் என்பதற்கு ஈண்டிவர் இவ்வா - றிருப்பர் என்பதற குருத்தான் வேண்டும் - அண்ணல தருளின் நணைவினா இருப்பினும் - சீவன் முத்தரென் ரோதினா அகன்று - நீஙகியும் உருவம நீஙகா தாயின் - ஓங்கிய முத்தி யாவதென் உரைகக" (9. 73-83) எ - து கணடுகொள்க. இனி, நீயின ஒன்றிரும புறன் அன்றாம எனறு மீளவும் அவன் சொலல, அப்படி யாகாது, ஆமென்னில் உயிரின் ஐந்தொழிலும் வேணடும் என்று நாலாவது அவனை மறுததற்கு பி - ம் "முன்னவன் தன்மை - யெயதினா எல்லாச் செய்தியுஞ் செய்வர் - இருமபெரி எய்தித் தருஞ் செயல் தகவெனிற் - பொருள்நிலை கிடக்க ஒருதிட் டாந்தப - பேறே ஆயிற் சீருக் கதுவிய - புனல்ஒரு புடைசேர் கனல்தரு மாயினும் - வேறொரு பொருளை நீறாக கிலதே - நெருபபெனுட

இதனின் உருத்தனி காட்டுக - அங்கியும் ஒன்றைத் தங்கிடின் றல்லது - தன்றொழில் நடத்தா தென்றறி இனிநீ - இரும்பனற் செயதிரும்பரி சுளதே" (9. 37-47) எ - து கண்டுகொள்க.

இனி, ஐந்தாவது ஒன்றுபட்டு முத்தியிலே அநுபவித்து நிற்கிறதற்குத் திருஷ்டாந்தம் ஆணவ மலத்தோடுங்கூடி அதீதப்பட்டுக் கிடக்குமாபோலே என்றது ஆன்மா சிவத்தோடுங்கூடி ஒன்றுபட்டழிவதுமில்லை இரண்டுபட்டு நீங்குவதுமில்லை என்றதென அறிக. இதற்கு பி-ம் இந்நூலிலே முன்னே "உடலுயிர் கண்ணருக்கன் அறிவொளிபோற் பிறிவரு மத்துவிதம்" (7) என்றதும் இப்பொருள் பற்றியென அறிக. அன்றியும், திருவருட்பயனில் "ஒன்றுலு மொன்று திரண்டாலு மோசையெழா, தென்றுலு மொன்றிரண்டு மில்" (75) எ - ம், "தாடலைபோற் கூடியவை தானிகழா வேறின்பக், கூடலைநீ யேகமெனக் கொள்" (74) எ - ம், இந்நூல்களன்றித் திருவருளைப் பெற்று அநுபவித்த அடியார்கள் திருவாக்குகளிலும் உண்டான கருத்து சிவாநந்தமாலையில் "தானுவினோடத்துவிதஞ் சாதிக்கு மாணவனை, ஆணவத்தோ டத்துவித மாக்கினரார் - கோணறவே, யென்னுணை யென்னுணை யென்னுணை யேகமிரண் டென்னுமற் சும்மா விரு" (276) என்னும் வகைகளினும் இப்பொருளைக் கண்டுகொள்க. ஆகையால், திருஷ்டாந்தத்தினுலும் அநுபவத்தினுலுஞ் சிவனைப் பெற்ற ஆன்மாக்கள் முததியில் ஒன்றுபட்டு அழிவதுஞ் செய்யாமல் இரண்டுபட்டு நீங்குவதுஞ் செய்யாமல் அத்துவிதமாய் நின்றே அநுபவிப்பார்களென்பது கருத்து.

இதனுற் சொல்லியது ஆன்மா அந்தப் பரத்திலே நின்றுந் தோன்றி மீளவும் அந்தப் பரத்திலே ஒன்றுபட்டுப் போமென்கிற மாயாவாதியும், அதல்ல ஆன்மா அநாதியில் இரண்டாயிருந்து முத்தியில் ஒன்றுமென்கிற ஐக்கியவாதியும் சைவரும், அதல்ல முத்தியிலும் இரண்டுபட்டுச் சிவனைப்போலுஞ் சமமாயிருக்குமென்றும் அன்றியும் அக்கினியைச் சேர்ந்த இரும்பு அந்த அக்கினி செய்யும் முறைமைகளெல்லாஞ் செய்தாற்போலச் சிவனைப் பெற்றவர்களுஞ் சிவனைப்போலப் பஞ்ச கிருத்தியங்களுஞ் செய்வார்களென்ற சமவாதியும், தத்தம் மதங்களைச் சொல்ல அவர்கள் அத்தங்களை மறுத்துக்

காட்டிச் சைவ சித்தாந்த உண்மை ஆன்மா ஆணவ மலத்தோடுங் கூடின தன்மைபோல இருக்குமென்னுமுறைமையை அறிவித்தது.அ

இங்ஙனஞ் சொல்லப்பட்ட உண்மை ஞானத்தைப் பெற்ற ஆன்மாக்களிடத்து உண்டாகிய பாசமான ஆணவ மலம் அழியுமோ நிற்குமோவென்று வினவின மாணவகனை நோக்கிப் பாசமழியுமென்னிற் பேதவாதி அத்தமாமென்றும் பாசமழியாதென்னிற் சமவாதி அத்தமாமென்றும் இந்த இரண்டுவகையும் மறுத்துக் காட்டி மேலருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

88. அழிந்திடும் பாசம் என்னில்
நித்தமென் றுரைத்தல் வேண்டா
அழிந்திடா தென்னின் ஞானம்
அடைவது கருத வேண்டா
அழிந்திடும் சத்தி நித்தம்
அழிந்திடா ஒளியின் முன்னர்
அழிந்திடும் இருளும் நாசம்
அடைந்திடா மிடைந்தி டாவே. ௯

மொழிந்திடு மூல மலத்தின் சத்தி
அழிந்திடுந் தன்னியல் பழியா தென்றது.

(உரை) அழிந்திடும் பாசம் என்னில் - முத்தியைப் பெற்ற ஆன்மாக்களிடத்து உண்டாகிய ஆணவ மலமானது அழிந்துபோம் என்று சொல்லுகில்; நித்தமென்றுரைத்தல் வேண்டா - பதி பசு பாசமென்று சொல்லப்பட்ட முதல் மூன்றும் அநாதி நித்தமென்று வேதாகமங்கள் சொல்லவேண்டுவதில்லையாம். ஆகையால் அது அத்தமல்ல; அழிந்திடாதென்னில் - முத்தியிலும் அழியாதென்னில்; ஞானமடைவது கருத வேண்டா - ஆணவ மலம் அறியாமையைப் பண்ணி நிற்கையால் அது ஆன்மாவோடுங் கூடி மறைத்து நிற்குமட்டும் அறிவாயுள்ள சிவத்தோடுங் கூடி அநுபவிக்க என்கிறது சற்றும் நினைக்கவேண்டுவதில்லையாம். ஆகையால் அதுவும் அத்தமல்ல. பின்னை எங்ஙனேயென்னில்; அழிந்திடும் சத்தி நித்தம் அழிந்திடாது - ஆன்ம போதத்தை அநாதியே மறைக்கப்பட்ட

அந்த மலத்தின் காரியமாயுள்ள சத்தியழியும் அதனுடைய காரண மாகிய நித்தியத்துக்கு அழிவில்லையாம். அஃதென்போலவென்னில்; ஒளியின் முன்னர் அழிந்திடும் இருளும் நாசம் அடைந்திடா மிடைந் திடாவே - ஆதித்தப பிரகாச முதலாயுள்ள ஒளிகளில் முன்னில் லாத இருளானது அழிந்ததுமில்லை மறைந்து நின்றதுமில்லை.

என்னவே, ஒளியின்மேலீடுகொண்டு இருளடங்கித் தோற்றமு மற்றுக் காரியப்படாமல் நின்றாற்போல அருளின்மேலீடு கொண்டு மலம் கீழ்ப்பட்டு நின்றதென அறிக. இதற்கு பி - ம் போற்றிப் பஃறொடையில் "சேணார் இருள்வடிவும் செஙகதிரோன் பால் நிற்பக் - காணு தொழியும் கணக்கேபோல் - ஆணவத்தின், ஆதி குறையாமல் என்பால் அணுகாமல் - நீதி நிறுத்தும நிலைபோற்றி" (77 - 78) எ - து கண்டுகொள்க.

பாசம் அழியும என்பதைப் பேதவாதி கருத்தென்றது அவன் செம்பிற காளிதமானது குளிகையினாலே கெட்டுப பொன்னான தன்மைபோல ஆன்மாவுக்கு உண்டான ஆணவ மலமும் அருளி னாலே கெட்டுச் சிவமயமாமென்றானென அறிக. இதற்கு பி - ம் சஙகறப நிராகரணத்தில், "ஈசன தருளாற் பாசத தொகுதி - செறி வுறு செம்பிற் கறையுறு களிம்பு - குளிகை தாக்க ஒளிபெற் றாங்கு- நித்த சுத்த முத்த ராக - வைத்தனர் உலகின் மறைவல் லோரே" (7. 16 - 20) எ-து கண்டுகொள்க. இதனை ஆகாதென்று மறுத்ததே தெனனில், பதிபசு பாசம் மூன்றும் நித்தியமென்று இருக்கையாலே பாசம் அழியவொணாது தென்றதென அறிக. இதற்கு பி - ம் சங் கறப நிராகரணத்தில் "மறைக ளாகமத் துறைகள்மற் றெவையும் - நாசமில் பதிபசு பாசமென் றுரைத்தல் - அயர்ததோர் குளிகைச் சயத்தால் தாம்பிரக் - காளித நாசம் பாசத தேயததல் - கூடா தன்றியும் குளிகை சீருணம் - நீடா தழிதத நிலைஇல ஆதலிற் - பேத வாதம் ஓதுதல் பிழையே - இன்னும் இன்னுயிா ஏமங் குளிகை - தன்னில் அங்கியம் தருவது திடமே" (8. 1 - 9) எ - து கண்டு கொள்க. பாசம் அழியாதென்றது சமவாதி கருத்தென்ற தேதென் னில், அவன் முத்தியைப் பெற்றவிடத்துஞ் சரீரம் அழியாதென்கை யினாலும் சரீரம் உள்ளமட்டும் மும்மலமும் போகா தென்கை

யினாலும் அதனை ஆகாதென மறுத்ததென அறிக. இதற்கு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில் "அகன்று - நீங்கியும் உருவம் நீங்காதா யின் - ஓங்கிய முத்தி யாவதென் உரைக்க - செடியுடல் அணுகாக் குடிலை கொடுக்குமென் - றுரைத்தனை நீயே பேதாய் பகட்டுரல் - ஒளிர் சினை முச்சித் தளிரெனும் இதுதகும் - இச்சா ரூபம் நச்சின ரென் னின் - மும்மலத் தேதும் இன்மைய தன்றே - இதுவளர் முத்திப் பதமென இயம்புவர்" (9. 81 - 89) எ - து கண்டுகொள்க. இனி, மலத்தின் சத்தியாகிய காரியம் அழியும், நித்தமாகிய காரணம் அழி யாதென்பதற்கு பி - ம் சித்தியாரில் "தெரிவரிய மெய்ஞ்ஞானம் சேர்ந்த வாறே சிவமபிரகா சிக்குமிங்கே சீவன்முத்த ராகும், உரிய மல மௌடதத்தால் தடுப்புண்ட விடமும் ஒள்ளொளியின் ஒளிமுன் னர் இருளுந் தேற்றின், வருபரல்சேர் நீர்மருவு கலங்கலும்போ லாகி மாயாதே தன்சத்தி மாய்ந்து காயந், திரியுமள வும்உளதாய்ப் பின்பு காயஞ் சேராத வகைதானுந் தேயு மன்றே" (11. 4) எ - து கண்டுகொள்க. அன்றியும், ஞானாமிர்தத்திலும் "மிக்க - விடங்கெழு பெருவலி யுளங்கொள மந்திரத் - தடங்கிய தன்மையும் அற்றே குடங் கரிற் - கலங்கல் நீரின் நலங்கிளர் விழுக்காழ் - அளைந்த மாறென விளங்கிறந் தகன்ற - பாசப் பெருவலி தீர்த்தனன் - மாசில் ஞான மன்பெருந் தகையே" (52. 13 - 19) எ - து கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது பாசம் அழியுமோ, என்றும் அழியாதோ என்று கேட்ட மாணவகனை நோக்கிப் பாசம் அழியில் நித்தியத் துக்கும் அழிவுண்டாமென்றும் பாசம் அழியாதென்னில் ஞானம் பிரகாசியாதென்றும் மறுத்து, பாசத்தின் சத்தி அழியுமன்றி நித்தி யம் அழியாதென்று வருமுறைமையை அறிவித்தது. க

மற்றுண்டான கன்மமும் மாயையும் போகைக்கு வழி எங்ஙனே என்று வினவ மேல் அருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

89. எல்லையில் பிறவி நல்கும் இருவினை எரிசேர் வித்தின்
ஒல்லையின் அகலும் ஏன்ற உடற்பழ வினைய தூட்டும்
தொல்லையில் வருதல் போலத் தோன்றிரு வினைய துணடேல்
அல்லொளி புரையும் ஞானத் தழலுற அழிந்து போமே. க0

மும்மையாம் வினையும் முயங்கிய மாயையுஞ்
செம்மையா லகலுந் திறந்தெரிந் துரைத்தது.

(உரை) எல்லையில் பிறவி நல்கும் இருவினை - அளவிடப்படாத ஜநநங்களைத் தருகிற புண்ணிய பாவமாகிய சஞ்சித கன்மங்கள்; எரிசேர் வித்தின் ஒல்லையின் அகலும் - அக்கினியைச் சேர்ந்த விதைகளைப்போல ஆசாரியன் செய்யப்பட்ட தீக்ஷைகளினாலே விரைவிலே கெட்டுப்போம்; ஏன்ற உடற் பழவினைய தூட்டும் - எடுத்த உடலுக்கு அமைத்த பிராரத்தம் அந்த உடலுள்ளதனையும் புசித்து அந்த உடலோடே ஒக்கக் கெட்டுப்போம்; தொல்லையில் வருதல்போலத் தோன்றிரு வினைய துண்டேல் - முன்புண்டான ஜநநங்கள்தோறும் பிராரத்த கன்மம் புசிக்கச்செய்தே ஆகாமிய கன்மம் ஏறினாற்போல, இப்பொழுது பிராரதத கன்மம் புசிக்கச் செய்தே ஆகாமியங் கட்டுப்படாதோ என்னில், அப்படி உண்டாகாது. வாதனை பலத்தாலும் அபுத்தி பூர்வத்தாலும் புண்ணிய பாவங்கள் மேலைக்கு ஜநநமாகக் கட்டுப்படுமாகில்; அல்லொளி புரையும் ஞானத் தழலுற அழிந்து போமே - விளக்கின்முன் இருள்போனாற் போல இவனிடத்தி லுண்டாயிருக்கப்பட்ட ஞானக்கினியினாலே அழிந்துபோம்.

எல்லையில்லாத ஜநநங்களைத் தருகிற இருவினை யென்றது எங்ஙனே யென்னில் ஒவ்வொரு ஜநநங்களை எடுத்தால் அந்த ஜநநங்கள் தோறும் வெகுவிதமான ஜநநங்களைக் கட்டுப்படுதது மென்றதென அறிக. இதற்கு பி - ம் இருபாவிருபஃதில் "அத்துவா மெத்தி யடங்கா வினைகள்" (16. 18) எ - ம், இந்நூலினும் "முந்தநுக ருந்துபயன்" (48) எ - ம் வரும் ஏதுக்களைக் கண்டுகொள்க. இஙஙனங் கட்டுப்பட்டுக் கிடக்கிற சஞ்சித கன்மங்களை ஆசாரியன் தீக்ஷைகளினாலே போக்குவன் என்றதற்கு பி - ம் சிததியாரில் "மூன்று திறத் தணுக்கள் செயும் கன்மங் கட்கு முன்னிலையாம் மூவிரண்டாம் அதது வாவின், ஆன்றமுறை அவைஅருத்தி அறுத்துமல முதிர்வித் தரும்பருவம் அடைதலுமே ஆசா ஞகித, தோன்றிநுகராதவகை முற்செய் கன்மத் துகளறுத்தங் கத்துவா தொடக்கறவே சோதித், தேன்றவுடற் கன்மம்அநு பவத்தினல் அறுத்திங் கினிச்

செய் கன்மம் மூலமலம் ஞானத்தால் இடிப்பன்" (8. 10) எ - ம், போற்றிப்பஃறொடையினும் "செய்யதிருக், கண்ணருளா னோக்கிக் கடியபிறப் பாற்பட்ட - புண்ணு மிருவினையும் போயகல" (74 - 75) எ - து கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது சஞ்சித கன்மம் ஆசாரியன் செய்யப் பட்ட தீக்ஷைகளினாலே போமென்றும் பிராரத்த கன்மம் உடலுள்ள மட்டும் புசித்து உடலோடே ஒக்க மாயுமென்றும் ஆகாமிய கன்மம் உண்டானாலும் இவனிடத்தில் உண்டாயிருக்கப்பட்ட ஞானாக்கினி யினாலே போமென்னும் முறைமையும் அறிவித்தது. கO

## ஐந்தெழுத் தருள்நிலை

இங்ஙனஞ் சஞ்சித கன்மமானது தீக்ஷைகளினாலே போமென் றும், பிராரத்த கன்மம் இந்த உடலுள்ள மட்டும் புசித்துத் தொலைய வேணுமென்றும், அதனாலுண்டாகப்பட்ட ஆகாமிய கன்மமானது அவர்களிடத்து உண்டாகிய ஞானத்தினாலே போமென்றும் முன் னாச் செய்யுளிலே அருளிச் செய்கையினால் அபபடி வாதிக்கப்பட்ட கன்மங்கள் போக்கிக் கொள்ளுகைக்கு அந்த ஞானநிலைமை கை கூடாத அவதரத்தும் பரிபாகமாக ஆன்ம லாபமாகிய பத்தாஞ் சூத்தி ரத்துக்கு மேலாக முற்கூறின ஆன்ம சுத்தியாகிய ஒன்பதாஞ் சூத்தி ரததின் பகுதியாகிய பஞ்சாக்ஷர தரிசனமாகிய ஐந்தெழுத்து அருள் நிலையென்னும் அதிகாரம் வைக்கப்பட்டது.

அஃதாவது, பதி பசு பாசமென்று சொல்லப்பட்ட மூன்று முதலும் ஐந்து வகையாக நிற்கையால் அந்த ஐந்தினையும் சிவ னுடைய திருநாமமாகிய பஞ்சாக்ஷரமும் ஐந்தெழுத்தாகையால் அதிலே அடைத்துத தரிசிப்பிததததென அறிக. அது ஐந்திலும் நின்றமுறைமை மேல் "திருவெழுத்தைந்தில்" (91) என்னுஞ் செய்யுளிலே கண்டுகொள்க. இவ்வதிகாரத்துக்கு முந்தின செய்யு ளாகிய "பந்தமானவை யறுத்து" என்னுஞ் செய்யுளுக்குத் தொடர் தனை வருமாறு : அஃதாவது, அப்படிச் செய்யப்பட்ட தீக்ஷைகளி னாலே சஞ்சித கன்மம் போனாற்போல மற்றுள்ள கன்மங்கள் போகாதிருபபான் ஏனென்ற மாணவகனை நோக்கிப் பிராரத்த கன்

மம் இந்த உடலுள்ளமட்டும் புசித்தே தொலையுமென்பதற்கு ஒரு திருஷ்டாந்தமுகமாக அருளிச்செய்து, அப்படி வாதிக்கப்பட்ட கன்மங்கள் ஸ்ரீபஞ்சாக்ஷரத்தைக் குருமுகாந்தரமாக அறிந்து உச்சரிக்கிற சிவஞானிகளுக்குப் புசிப்புமாத்திரமாய் வந்து போகிறதொழிய அவர்களை மேலிட்டு வருத்தமாட்டாதென்னும் முறைமையை மேலருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

90. பந்தமா னவைஅ றுத்துப் பவுதிகம் உழலும் எல்லைச்
சந்தியா தொழியா திங்குத் தன்மைபோல் வினையுஞ் சாரும்
அந்தம்ஆ திகள்இ லாத அஞ்செழுத் தருளி னாலே
வந்தவா றுரைசெய் வாரை வாதியா பேதி யாவே. கக

உடலுறு நுகர்வும் உற்றிடும் வினையும்
இடர்பட அஞ்செழுத் தியம்புக வென்றது.

(உரை) பந்தமானவை அறுத்துப் பவுதிகம் உழலும் எல்லைச் சந்தியா தொழியாது - தீக்ஷைகளினாலே கன்மங்களைப் போக்கினாலும் பிராரத்த கன்மம் இந்தப் பூததேகம் உள்ளமட்டும் பொருந்துதல் தவிராது. அஃதென்போலவென்னில்; இங்குத் தன்மைபோல் - பெருங்காயத்தின் இயல்புபோல. அஃதாவது பாத்திரத்திலே இட்டு வைத்த பெருங்காயமானதை வைத்த எடை குறையாமல் வாங்கிப பாத்திரத்தைத் தூயதாயக் கழுவிப்போட்டாலும அந்தப் பாத்திரம் உள்ளமட்டும அதிலுள்ள கந்தத்தின் வாசனை போகாதாற்போல என்றதென அறிக. அப்படிப பிராரத்த கன்மம் உண்டாகவே; வினையுஞ் சாரும் - ஆகாமிய கன்மமும் ஏறுதிராது. அப்படி இங்ஙனம் பொருந்தபபட்ட பிராரத்தமும் அதனாலுண்டாகிய ஆகாமியமும்; அந்தம் ஆதிகள் இலாத அஞ்செழுத்தருளினாலே வந்தவாறுரை செய்வாரை - முடிவு முதலு மில்லாத ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை ஆசாரியன் கடாக்ஷித்த முறைமையிலே உச்சரிக்கப்பட்ட சிவஞானிகளை; வாதியா பேதியாவே - அந்தப் பிராரத்த கன்மம் புசிப்பு மாத்திரமாய் வந்து போகிறதொழிய அவர்கள் ஈடுபடத்தக்கதாக மேலிட்டு வருத்தாது. அவர்கள் அப்படி ஈடுபட்டு வருந்தாதது கொண்டே மற்ற ஆகாமிய கன்மமும் ஏறாது. அப்படியே ஏறிற்றாகிலும் பேதமாக்குவித்து ஜனனத்தை உண்டாக்காது.

அன்றியும், இந்தப் பதத்துக்குப் பிராரத்த கன்மம் வாதியாது ஆகாமிய கன்மம் பேதியாதென்றதைப பிராரத்தமொன்றிலேயும வைத்துக்கொண்டு ஒருமையாகக் கூறுவாருமுளர். அது வழக்கல்லவென அறிக. அதற்குக் குற்றமேதென்னில், அப்படிட பிராரதத கன்மம் வாதியாதென்றால் 'பவுதிக முழுவுமெல்லைச் சந்தியா தொழியாது' என்ற பதத்துக்குப் பிராரத்த கன்மம் பூததேக முள்ளமட்டும் பொருந்துதல் தவிராதென்று அறுதி கூற வழக்கில்லையாமென அறிக. அன்றியும், சித்தியாரில் "ஏன்ற உடற் கனமம்அநு பவத்தினல் அறுத்து" (8. 10) எ-ம், திருவருட் பயனில் "ஏன்றவினை யுடலோ டேகும" (98) எ-ம் நூல் களில் வரும் பொருளுக்கும் விரோதமுமாமென அறிக. இது வன்றியும், பிராரத்த கன்மம் பேதியாது ஆகாமிய கன்மம் வாதியா தென்பாருமுளர். அதுவும் வழக்கல்லவென அறிக. அதற்குக் குறறமேதென்னில், பேதியாதென்பது போகாதென்னும் பொருள் பெறறு நிறகையால் பூத தேகமுள்ளமட்டும் பிராரத்த கன் மம பொருந்துதல் தவிராதென்று முற்கூறுகையாலே மீளவும் அதனை இரட்டித்துப் பொருள்படுததவேண்டியதில்லையாம். அல்லதூஉம, பஞ்சாக்ஷரததை உச்சரிக்கிறவர்களுககுப் பிராரத்த கன்மம் போகாதென்பது வழக்கல்ல. அஃதெங்ஙனே என்னில், பஞ்சாக்ஷரததை உச்சரித்தால் கன்மம் நீங்குமென்பதன்றிப் போகாதென் பது எதுபோல என்னில் ஔஷதங்கொண்டாலும் வியாதி போகா தென்பதறகு ஒக்குமென அறிக. ஆகையால், பிராரத்த கன்மம் பேதியாதென்பது வழக்கல்லவென அறிக. அன்றியும், வாதியா பேதியா எனபதை ஆகாமிய மொன்றிலேயும் வைத்துக்கொண்டு, பஞ்சாக்ஷரததை உச்சரிக்கிற சிவஞானிகளுக்கு ஆகாமிய கன்மம் வாதியாது, அல்லாமல் வாதித்ததாகிலும் அதனாலே பேதித்து ஜநநமுண்டாக்கா தென்பாருமுளர். அதுவும் வழக்கல்லவென அறிக. அதற்குக் குற்றமேதென்னில், இசசெய்யுளிலே 'பவுதிக முழுவுமெல்லைச் சந்தியாதொழியாது' என்று பிராரத்த கன்மத்துக் குச் சொல்லுகையினாலும், வினையுஞ் சாருமென்று ஆகாமிய கன்மத் துக்குச் சொல்லுகையினாலும், அன்றியும் இதுவே கருத்தென்பதைப பறறி அமபலவாணத தம்பிரானார் இச்செய்யுளுக்குக் கருத்தாக

அருளிச்செய்தது "உடலூறு நுகர்வும் உற்றிடும் வினையும், இடர்படா அஞ்செழுத் தியம்புக என்றது" என்று பிராரத்தத்திற்கும் ஆகாமியத்திற்குமாக அருளிச்செய்கையினால், ஆகாமியம் ஒன்றிலுங் கூட்டிப் பொருள் படுத்துகை வழக்கல்லவென அறிக. ஆகையால், பிராரத்த கன்மமானது சிவஞானிகளுக்கு வாதனுபலத்தால் புசிப்புமாத்திரமாய் நிற்பதொழிய, சிவஞானிகளை மேலிட்டு அவர்கள் ஈடுபடத்தக்கதாக வருத்தாதென்பதே வாதியாதென்பதற்கு வழக்கென அறிக.

அப்படிப் பிராரத்த கன்மம் வந்து தாக்கினாலும் அதனாலீடுபட்டு வருத்தப்படாமல் நின்றவர்களும் உண்டோவென்னில், அப்படியுண்டு. அஃது யாரோவென்னில் அப்பரென்னுந் திருநாவுக்கரசு தம்பிரானார் சமணசமயத்தைவிட்டுச் சைவதிலே வந்ததற்கு அந்தச் சமணர் வெகுண்டுகொண்டு வேண்டும வருததங்கள் செய்த வளவினும் அதனாலீடுபட்டு வருந்தாமல் நின்றதுண்டு. அதற்கு பி - ம் திருக்களிற்றுப்படியாரில் "கொல்கரியின் நீற்றறையின் நஞ்சிற் கொலைதவிர்த்தல், கல்லே மிதப்பாய்க் கடல்நீந்தல் - நல்ல, மருவார் மறைக்காட்டில் வாசல்திறப் பித்தல், திருவாமூராளி செயல்" (71) எ - து கண்டுகொள்க. அப்பர் ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை உச்சரித்துக்கொண்டு நிற்கவே அந்த அமணர்செய்யப்பட்ட வருத்தங்களால் ஈடுபட்டதில்லை என்பதற்கு பி - ம் தேவாரத்தில் "சொற்றுணை வேதியன் சோதி வானவன், பொற்றுணை திருந்தடி பொருந்தக் கைதொழக், கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும், நற்றுணை யாவது நமச்சி வாயவே" (4. 11. 1) எ - து கண்டுகொள்க.

அன்றியும், சிவஞானிகளிடத்திலே கன்மங்கள் வந்து தாக்கினாலும் அதனால் வருந்தார்கள் என்பதற்கு பி - ம் சித்தியாரில் "அநுசித்தம் பனிவல்லார்க் கனல்சுடாதாகும் ஔடதமந் திரமுடையாராக் கருவிடங்க ளேறு, எங்குற்ற கன்மமெலாஞ் செய்தாலும் ஞானிக்கிருவினைகள் சென்றணையா முற்செய்வினை இங்குத், தங்கிப் போம் பாதகிரமும் குலாலன்வினை தவிர்ந்த சக்கரமும் சுந்திதசுச் சுழலு மாபோல், மங்கிப்போய் வாதனையால் உழல்விக்கும் எல்லா மலங்களும்பின் காயமொடு மாயு மன்றே" (10. 6) எ - ம், ஞானு

மிர்தத்தில், " மண்வினை மாக்கள் தம்வினை முடியா - திகிரி யுருட்டி யொருவி யாங்கு - வருத லோவா மற்றுங் குவிவாய்த் - தசும்புரை யிங்காங் கசும்புறத் தடைத்து - இருங்கடி யிகவாப் பெருங்கட னல்லதை - யுடையதை யுடையரோ வினையுணர்ந் தோரே " (48.11-16) எ - து கண்டுகொள்க.

அந்த மாதிகளிலாத ஐந்தெழுத்து எ - கு ஸ்ரீபஞ்சாக்ஷரத்தைத் தோற்றமும் ஈறுமில்லாதென்றதேதென்னில், சிவனுக்குத் தோற்றமும் ஈறுமில்லாதது கொண்டே ஸ்ரீபஞ்சாக்ஷரமுஞ் சிவனுடைய திருநாமம் ஆகையால், அதனையும் அப்படிச் சொல்லப்பட்டதென அறிக. இந்தப் பஞ்சாக்ஷரத்தைக் குருமுகாந்தரமாக அறிந்து உச்சரிக்கிற சிவஞானிகளை அந்தக் கன்மங்கள் மேலிட்டு வருத்தாதென்றதற்கு பி - ம் தேவாரத்தில் " விண்ணுற வடுக்கிய விறகின் வெவ்வழல், உண்ணிய புகிலவை யொன்று மில்லையாம், பண்ணிய உலகினிற் பயின்ற பாவத்தை, நண்ணிநின் றறுப்பது நமச்சி வாயவே " (4. 11. 3) எ - ம், அன்றியும் அந்தப் பஞ்சாக்ஷரத்தை அறிந்து உச்சரிக்கிறவர்களிடத்திலே சிவன் சாந்நித்தியமாவன் என்பதற்கு பி - ம் தேவாரத்தில் " ஏது மொன்று மறிந்தில ராயினும், ஓதியஞ் செழுத்துள்ளுணர் வார்கட்குப், பேத மின்றி யவரவ ருள்ளத்தே, மாதுந் தாமு மகிழ்வர்மாற் பேறரே " (5. 60. 1) எ - ம், அன்றியும் சிதம்பரத்தில் ஒன்பதாஞ் சூத்திரததில் " அஞ்செழுத்தை விதிப்படி உச்சரிக்க மதியருக்கன் அணையரவம் போற்றேன்றும் ஆன்மாவில் அரனே " (9. 8) எ - ம் கண்டுகொள்க.

இதனுற சொல்லியது, ஆன்மாக்களுக்கு உண்டாகப்பட்ட கன்மங்களை தீக்ஷயினலே ஆசாரியன் கிருபைசெய்து போக்கினலும் பிராரத்த கன்மம் உடலுள்ள மட்டும் புசித்தே தொலையுமென்றும், அங்ஙனம் பிராரத்த கன்மம் உண்டாகவே ஆகாமிய கன்மம் உண்டாமென்றும், அப்படி உண்டாகப்பட்ட கன்மங்கள் இரண்டும் ஸ்ரீபஞ்சாக்ஷரத்தைக் குருமுகாந்தரமாகப் பெற்று உச்சரிக்கிற சிவஞானிகளுக்குப் பிராரத்த கன்மம் புசிப்பு மாத்திரமாய் வந்துபோகிறதொழிய மேலிட்டு வருத்தாதென்றும், அது அப்படி வருத்தாதது கொணடே அதனல் உண்டாகிய ஆகாமிய கன்மமும் பேதிததுக்

கிளைத்து ஜநநத்தை உண்டாக்காதென்றும் வருமுறைமையை அறிவித்தது. கக

இங்ஙனஞ் சொல்லப்பட்ட பஞ்சாக்ஷரத்திலே பதி பசு பாசங்கள் மூன்றும் ஐந்து வகையாக நின்ற முறைமை எங்ஙனேயென்றும் இதனை யார் உச்சரிக்கப்படுமென்றும் வினவ மேலருளிச் செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

91. திருவெழுத் தஞ்சில் ஆன்மாத் திரோதமா சருள்சி வஞ்சூழ்
தரநடு நின்ற தொன்றாந் தன்மையுந் தொன்மையாகி
வருமந மிகுதி யாலே வாசியி லாசை யின்றிக்
கருவழிச் சுழலு மாறுங் காதலார்க் கோத லாமே. கஉ

தீதிலா உண்மைத் திருவைந் தெழுத்தையுங்
காதலா மவருக் கோதலா மென்றது.

(உரை) திருவெழுத் தஞ்சில் ஆன்மாத் திரோதமாசருள் சிவம் - சிவனுடைய திருநாமமாகிய நமசிவய என்ற ஐந்தக்ஷரத்தினும் ஆன்மாவுந் திரோதசத்தியும் மலமும் அருளும் சிவமும் என்று சொல்லப்பட்ட ஐந்து முதலும நிற்கும். அவையாவன: யகாரத்திலே ஆன்மாவும் நகாரத்திலே திரோதசத்தியும் மகாரத்திலே மலமும் வகாரத்திலே அருளும் சிகாரத்திலே சிவமுமாக நின்றதென அறிக. இவை ஐந்து முதலினுஞ் சிவமுன்னாக உச்சரிக்கும்பொழுது; சூழ்தர நடுநின்றது - திரோதமும் மலமும் ஒருபாலும் அருளுஞ் சிவமும் ஒருபாலுமாக முன்பின் சூழ்ந்துநிற்க நடுநின்றது ஆன்மா; ஒன்றாந் தன்மையுந் தொன்மையாகி வரும் - நடுவேநின்ற ஆனமாவானது அந்த அருளறிவித்தால் அதனாலே அறிந்தும், மற்ற மலம் மறைத்தால் அதனாலே மறைப்புண்டும், இங்ஙனம் இரண்டோடுங்கூடி ஒன்றுபட்டு அதுவதுவாய் நின்றாலும், தானொரு முதலாய வருகிறது அநாதியேயுடையது. அப்படியிருக்கவும்; மநமிகுதியாலே - மவவாகிய மலமும் நவ்வாகிய திரோதசத்தியும் மேலிட்டு நிற்கையாலே; வாசியில் ஆசையின்றிக் கருவழிச் சுழலும் - வவ்வாகிய அருளிலுஞ் சிவ்வாகிய சிவத்திலும் ஆசையற்று ஜநந மரணத் துக்கத்திலே நின்றழுந்தும்; மாறுங் காதலார்க் கோதலாமே - அந்த

மலத்தின் கௌரவ நீங்கி அருளிலே ஆசையுடையவர்களுக்கு இந்தப் பஞ்சாக்ஷரத்தை உச்சரிக்கலாம்.

பதி பசு பாசமென்று சொல்லப்பட்ட மூன்று முதலும் ஐவகையாக நின்றதற்கு வழியேதென்னில், சிவ்விலும் வவ்விலும் நவ்விலும் பதியின் கூறுகிய சிவமும் அருளுந் திரோத சத்தியும் நின்றதென அறிக. யவ்விலே பசுவாகிய ஆன்மா நின்றதென அறிக. மவ்விலே பாசமாகிய மலம் நின்றதென அறிக. இதிலே, முற்கூறிய பதியின் கூற்றுக்குப் பாசத்தின் பகுதியாயிருக்கப்பட்ட திரோத சத்தியைக் கூட்டினது ஏதென்னில், அஃதாவது ஆன்மாவை மறைக்கப்பட்ட ஆணவமலத்தைப் பாகம் வருத்தவேண்டி அருளானது திரோதமாய் நின்று காரியப்படுத்துகையால் அதனையும் பதியின் கூறாகச் சொல்லப்பட்டதென அறிக. அப்படியானால் அந்த அருளுக்குத் திரோத சத்தியென்று பேராக வேண்டுவான் ஏனென்னில், அந்த மலத்தோடுங் கூடிக் காரியப்படுத்துகையால் அவதரப் பெயரானதென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "தூயவன் தனதோர் சத்தி திரோதான கரியதென்றும்" (2. 87) எ - ம், அன்றியும் இந்நூலினும் "முறசினமருவு திரோதாயி கருணையாகி" (48) எ - ம் வரும் ஏதுக்களைக் கண்டுகொள்க. நடுநின்ற தொன்முந் தன்மையுந் தொன்மையாகி வரும் எ - து ஆன்மா அருளோடும் மலத்தோடுங் கூடி ஒன்றுபட்டு வருமென்பதற்கு பி - ம் சித்தியாரில் "சதசத்தறிவ தான்மாத் தான்சத்து மசத்துமன்று, நித்தனுஞ் சதசத்தாகி நின்றிடு மிரண்டின் பாலும்" (7. 2) எ - து கண்டுகொள்க. மந மிகுதியாலே வாசியி லாசையின்றிக் கருவழிச் சுழலும எ - கு நவ்வாகிய திரோதத்தோடும் மவவாகிய மலத்தோடுங்கூடிப பிரபஞ்சப் பற்றுவிடாமல் நிற்குமளவும் ஜநந மரண துக்கத்திலே நின்று அழுந்துமென்றதற்கு பி - ம் சித்தியாரில் "மலம்மாயை கன்ம மாயேயந் திரோதாயி மன்னிச், சலமாரும பிறபபிறப்பிற் றங்கி" (2. 88) எ - து கண்டுகொள்க. மாறுங காதலார்க கோதலாமே எ - கு பிரபஞ்சப பற்றுவிட்டு அருளிலே ஆசைபபட்டவர்களுக்கென்ற தறகு பி - ம் திருவாசகததில் "அருளைப் பெறுவா னாசைப பட்

டேன் கண்டா யம்மானே" (25. 1) எ - ம், "ஆசைப்பட்டே னட்பட்டே னுன்னடியேனே" (5. 82) எ - ம் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது ஸ்ரீபஞ்சாக்ஷரத்திலே பதி பசு பாச மூன்றும் ஐந்தாக நின்ற முறைமையும், இதில் பசுவாகிய ஆன்மா அந்த அருளை இழந்து மலத்தோடுங்கூடி ஜநந மரணதுக்கப்பட்டு நிற்குமுறைமையும், இந்த மலத்தின் மேலீடு நீங்கி அருளிலே ஆசைப்பட்டவர்களுக்கு இந்தப் பஞ்சாக்ஷரத்தை உச்சரிக்கலா மென்னும் முறைமையும் அறிவித்தது. கஉ

இங்ஙனஞ் சொல்லப்பட்ட மலமுந் திரோதாயியும் நீங்கி அந்த அருளையுஞ் சிவத்தையும் பெறும்வழி எப்படியென்று வினவ மேலரு ளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

92. ஆசுறு திரோத மேவா தகலுமா சிவமுன் னாக [ள
ஓசைகொள் அதனில் நம்மேல் ஒழித்தரு ளோங்கும் மீ
வாசியை அருளும் மாயா மற்றது பற்று உற்றங்(கு)
ஈசனில் ஏக மாகும் இதுதிரு எழுத்தின் ஈடே. கங

ஓங்கிய திருவெழுத் தினையுணர்ந் துரைப்பவர்
நீங்கருஞ் சிவத்தினை நீங்கா ரென்றது.

(உரை) ஆசுறு திரோத மேவா தகலுமா சிவமுன் னாக ஓசைகொள் - அஞ்ஞானமாகிய மலமும் அதனோடுங்கூடி இருக்கப்பட்ட திரோதான சத்தியும் ஆன்மாவைப் பொருந்தாமல் நீங்கும்படி சிவத்தை முன்னாக உச்சரிக்க; அதனில் - நீயுமப்படி உச்சரிப் பையாமாகில்; நம்மேல் ஒழித்தருளோங்கும் - நவ்வாகிய திரோத சத்தியும் மவ்வாகிய மலத்தின் மேலீட்டை நீக்கி அருளாக நின்று பிரகாசிக்கும். அதுவுமன்றியே; மீள வாசியை அருளும் - அங்ங னம் மலத்தினின்று மீளவிட்ட வவ்வாகிய அருளும் சிவவாகிய சிவத்தையுந் தாராநிற்கும்; மா யா - அப்படி மலபாகம் வந்த மகத் தான ஆன்மா; மற்றது பற்று உற்றங்கு ஈசனில் ஏகமாகும் - முன் சொன்ன அருள் தாரகமாகச் சென்று அந்தச் சிவத்தோடுங்கூடி இரண்டறநின் றனுபவிக்கும்; இது திருவெழுத்தின்ஈடே-இங்ஙனஞ் சொல்லப்பட்ட இது ஸ்ரீபஞ்சாக்ஷரத்தின் முறைமையாம்.

ஆசென்றதைக் குற்றத்தையுடைய மலமென்றதேதென்னில், ஆணவமலம் ஆன்மபோதத்தோடுங் கூடி அஞ்ஞானத்தை விளைத்து நிற்கையாலென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "என்றும் அஞ்ஞானங் காட்டும் ஆணவ மியைந்து நின்று" (2. 80) எ - து கண்டுகொள்க. உறு திரோதமென்றதை ஆணவ மலத்தோடுங் கூடி நின்று பாகம் வருத்தப்பட்ட திரோதாயியென்றது ஏதென்னில், ஆன்மாவோடும் அநாதியே கூடி வரப்பட்ட ஆணவமலத்தைப் பாகம் வருத்தவேண்டி அருளாகிய கிருபாசத்தி அதனோடுங் கூடித் திரோதமாய் மறைத்துநின்றதென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "தூயவன் தனதோர்சத்தி திரோதான கரியதென்றும்" (2. 87) எ - ம், அன்றியும் இந்நூலினும் "பாகமாம் வகைநின்று திரோதான சத்தி பண்ணுதலான் மலமெனவும் பகர்வர்" (20) எ - ம் கண்டுகொள்க. சிவமுன்னாக ஓசைகொள் என்பது சர்வமும் சிவசேட்டையாலொழிய முடியாதாகையாலே சிவத்தை முன்னிட்டுக் கொண்டு நிற்கவென்றதென அறிக. இதற்கு பி - ம் திருக்களிற்றுப்படியாரில் "சிவன்முதலே யன்றிமுத லில்லையென்றும்" (64) எ - து கண்டுகொள்க. நம்மேலொழித்தருளோங்கும் எ - கு நவ்வாகிய திரோதசத்தி மவ்வாகிய மலத்தின்மேலீட்டை நீக்கி அருளாய்நின்று பிரகாசிக்குமென்றதற்கு பி - ம் இந்நூலில் "முற்சின மருவு திரோதாயி கருணை யாகித் திருந்தியசத் திநிபாதந் திகழும்" (48) எ - ம், திருவெம்பாவையில் "பேதித்து நம்மை வளாதடுத்த பெய்வளைதன்" (8. 7. 14) எ - ம் வருமது கண்டுகொளக. மா யா என்றதை மகத்தான ஆன்மாவென்றதேதென்னில் அந்தச் சிவத்தை முன்னிட்டுநின்று உச்சரிக்கையினாலென அறிக. இதற்கு பி - ம் திருவாசகத்தில் "யானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம வெனபபெற்றேன்" (38. 10) எ - து கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது அந்த மலங்கள் நீங்கத்தக்கதாகச் சிவமுன்னாக உச்சரித்தால் முன்பு திரோதமாய் நின்ற அருளானது அந்தச் சிவத்துடனே கூட்ட ஆன்மா அந்தச் சிவத்தோடுங்கூடிப பிரிவறநிற்கும் முறைமையை அறிவித்தது. கரு

அணைந்தோர் தன்மை

# பதினொராஞ் சூத்திரம்

மேல் இங்ஙனம் முன் அருளிச் செய்யப்பட்ட உணமை நிஷ்டையாலும் உபாயநிஷ்டையாலும் இப்பொழுதருளிச்செய்த ஐந்தெழுத்து அருள்நிலையாலுங் கன்மக்ஷயம்வந்த சீவன்முத்தர்களது தன்மை உணர்த்துவான் எடுத்துக்கொண்டருளியது.

இதற்கு வகையேதென்னில், "மாயாமறறது பற்றுவுற்றிங், கீசனி லேகமாகும்" (92) எ - து ஆன்மா சிவனோடே பொருந்தப் பட்டு நிற்குமென்னும் விதியைப்பற்றிச் சிவனோடும் இரண்டறக் கூடிநின்றே மலமாயா கன்மங்களைப் போக்கிக் கொள்ள வேண்டு கையால், ஐந்தெழுத்தருள் நிலைக்கு மேலாகப பதினொராஞ சூத்திர மும் பன்னிரண்டாஞ் சூததிரமுமாகிய அணைந்தோர் தன்மை யென்னும் அதிகாரம் வைக்கப்பட்டது. இவ்வதிகாரத்துக்கு அந்தச் சூத்திரம் இரண்டும் நின்றதற்கு வழியேதென்னில், சிவஞானபோதத் தில் "காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற, காண வுள்ளதைக் கண்டு காட்டலின், அயரா அன்பின் அரன்கழல் செலுமே" என்கிற பதினொராஞ் சூததிரத்துக்குக் கருத்துப்'பரமேஸ்வரன் ஸ்ரீபாதஙகளை யணையுமாறு உணர்த்துதல் நுதலிற்று' என்றதனாலும், பன்னிரண் டாஞ் சூததிரமாகிய "செம்மலர் நோன்றாள் சேரலொட்டா, அம் மலங்கழீஇ அன்பரொடு மரீஇ, மாலற நேய மலிந்தவர் வேட மும், ஆலயந் தானு மரனெனத் தொழுமே" என்பதற்குக் கருத்து அசிந்திதனாய்நின்ற பதியைச் சிந்திதனாய்க் கண்டு வழிபடுகைக்கு அருளிச்செய்கையினாலும், இந்நூலினும் இவ்வதிகாரத்துக்கு வகுதத செய்யுளாகிய "தீங்குறுமாயை" (93) என்ற விருத்தந் தொடங்கி "தொண்டர்களிடத்தும்" (98) என்ற விருத்தம் முடிவாகிய செயயுள் ஆறினுள்ளும் "தீஙகுறு", "குறிப்பிடம்", "அகம்புறம்", "அண டம்", "மண்முதல்" என்னுஞ் செயயுள் ஐந்தினும் பரமேஸ்வர னது ஸ்ரீபாதஙகளை அணைந்துநிற்கும் முறைமையை அருளிச் செய்கையால் பதினொராஞ் சூத்திரமாகவும், "தொண்டாகள்" என்ற செய்யுளொன்றும் அசிநதிதனாய் நின்ற பதியைச் சிந்திதனாகக் கண்டு நிற்கப்பட்ட திருவேடமும் சிவாலயமும் சிவனெனக் கண்டு

வழிபடுகைக்கு அருளிச்செய்கையால் இது பன்னிரண்டாஞ் சூத்திரமாகவும் நின்றதெனை அறிக. அப்படி இந்தச் சூத்திரங்கள் இரண்டினும் நின்ற கருத்து இவ்வதிகாரத்துக்கு வகுத்த செய்புட்களில் நின்ற முறைமை எங்ஙனே என்னில், "நேயத்தோங் குணர் வகத தடக்கி" (93) எ - ம், "உறக்குறு பவர்போல் வாய்மை யொழிந்தவை யொழிந்து போமே" (94) எ - ம், "ஞானந், திகழ்ந் தகம் புறமென் னுத செம்மையார் நன்மை யாரே" (95) எ - ம், "கண்டதோா பொருளை யந்தக் கருத்தினுற காணிற் றுனே, அணடநா யகனா மேனி யானதேல் ஐய மின்றே" (96) எ - ம், "ஞானக், கண்ணினு லூன்றி யந்தக் கருத்தினி லெவையும் நோக்கி" (97) எ-ம் பரமேஸ்வரனோடும் இரண்டறக்கூடி நிற்கும் முறைமையை அருளிச்செய்கையால், இச்செய்புள் ஐநதும் பதினொராஞ் சூத்திரமாக நின்றதெனை அறிக. அன்றியும், "தொண்டர்களிடத்தும" என்ற விருத்தமும் திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் "அண்டருங் கண்டிலாத அண்ணலே"யென வணங்கி நிற்கைக்கு அருளிச் செய்கையால் இதுவொன்றும் பன்னிரண்டாஞ் சூத்திரமாக நின்றதெனை அறிக.

இநதச் செய்புள் ஆறினுள்ளும் "தீங்குறு மாயை" என்ற செய்புளுக்குத் தொந்தனை வருமாறு. இங்ஙனம் முற்கூறியவகைகளாற் கன்மக்ஷயம் வந்த சீவன்முத்தர்கள் வாதனைபலத்தால் மல மாயா கன்மங்கள் மேவிடாமல் உயிர்க்குயிராய் நிற்கிற சிவனுடைய திருவருள் ஞானத்தோடுங் கூடி இரண்டற நிற்குமுறைமையை அருளிச்செய்வான் எடுத்துக் கொண்டருளியது.

93. தீங்குறு மாயை சேரா வகைவினை திரிவி தத்தால்
நீஙகிட நீங்கா மூல நிறைஇருள் இரிய நேயத்(து)
ஓங்குணர் வகத்த டக்கி உளத்துளின் பொடுங்க நேரே
தூங்குவர் தாங்கி ஏகத் தொன்மையில் துகளி லோரே. க

தீங்குடல் வினையுஞ் செறிவுறு மலமும்
நீங்கிட அருளொடு நீங்கா ரென்றது.

(உரை) தீஙகுறு மாயை சேரா வகை - ஆன்மாவானது குறறததையுடைய மாயா தேகததை மேலெடாதபடி; வினை திரிவிதத

-தால் நீங்கிட - பிராரத்தம் புசிக்கச் செய்தே உண்டாகப்பட்ட ஹிதாஹிதங்களாலே யேறுகிற ஆகாமியமான புண்ணிய பாவங்களாகிய வினை மூன்று வகையாக அறியப்பட்ட ஞானத்தினாலே விட்டுப் போக; மூன்று வகையாவது தன்னை வினையைத் தலைவனை அறிகிற ஞானமென அறிக. அஃதேதென்னில், ஆன்மாவையுங் கன்மத்தையுஞ் சிவனையும் அறிகிறதாயிருக்கும்; அறிகிறதாவது ஆன்மாவோ என்றால் தனக்கென அறிவில்லாதவனென்று அறிந்தும் கன்மமோ என்றால் சடமாயிருப்பதென்று அறிந்தும் இவை இரண்டையுங் கூட்டிக் காரியப்படுத்துகிறது சிவனேயென்றுங் கண்டு, தங்களுக்கு யாதாமொன்றால் வருகிற இன்ப துன்பங்களெல்லாஞ் சிவச்சேட்டையாலொழிய உண்டாகாதென்று கண்டு, அவர்கள் விருப்பு வெறுப்பற்று இருப்பார்களெனறதென அறிக; நீங்கா மூல நிறை இருள் இரிய - ஆன்மாவை ஒரு காலத்திலும் விட்டு நீங்காமல் அநாதியே வியாத்தமாய மறைககப்பட்ட அஞ்ஞானமாய் இருண்ட ஆணவம் விட்டு நீஙகத்தக்கதாக; நேயத்து ஓங்குணர்வு அகத்தடக்கி - தஙகளுள்ளததிலே உதயஞ்செய்யபபட்ட மிகப் பிரகாசமாகிய பேரறிவுக்குள்ளே அடங்கித் தற்போதம் சீவியாமல் நின்று; அன்றியும், இந்தப் பதத்துக்கு ஓங்குணர்வகத்தடங்கி யென்று பாடமோதி, அந்த அருளிலே தங்களை ஒடுக்கியென்று பொருளுரைப்பாருமுளர்; இதிற் பொருளுக்கேற்க அந்தப் பாடத்தைக் கூட்டிக் கொள்க; உளத்துளின்பொடுங்க - தங்களிடத்திலே சிவபோதமாகிய பேரின்பம் பதிந்து விளையத்தக்கதாக; நேரே தூங்குவர் தூங்கி - தாஙகள் கொண்ட சமாதிக்குத் தவறு வரத்தக்க மயக்க விகற்பங்களிற்படாமல் உறங்காது உறங்கியிருப்பார்கள். அவர்களாரென்னில்; எகத தொன்மையில் துகளிலோரே - ஆன்மாவினிடததிலே ஒன்றுபட்டுப பழையதாய் வரப்பட்ட திரோத மறைப்பு நீஙகிய கலியாணாகளாகிய சிவஞானிகள்.

தீஙகுறு மாயை சேரா எ - கு குறறததையுடைய மாயாதேசும் மேலெட்டாதபடி என்று பொருள்கூறியதேதென்னில், ஆன்மாககள் மாயாதேக மெடுததால் மேலும ஜநநத்துக்கு ஏதுவாயுள்ள கன்மஙகளை யாாச்சித்துக் கொள்ளுகையாலே அபபடிச் சொன்னதென அறிக. இதற்கு பி - ம ஞானமிர்தத்தில் “ முடலை யாககையின்

வினைபிணிப் பானால் - வினைப்பொதி யெறும்த்தோல் தணிப்போ வின்றே" (30. 5 - 6) எ - து கண்டுகொள்க. இனி, வினை திரிவிதத்தால் நீங்கிட எ-கு தன்னை வினையைத் தலைவனையறிகிற ஞானத்தினாலே வினைகளை நீக்கிக் கொள்ளலாமென்று பொருள் கூறிய தன்றியே, வினை திரிவிதத்தால் நீங்கிட என்பதைக் கழிகாலமாக்கி, மூவகை வினைகளினும் பொதுப்படவேற்றி, ஆசாரியன் செய்யப்பட்ட தீகைஷயினாலே சஞ்சிதகன்மம் போமென்றும், பிராரத்த கன்மம் உடலுள்ளமட்டும் புசித்தே தொலையுமென்றும், ஆகாமிய கன்மம் அவாகளிடத அணடான ஞானத்தினாலே போக்கிக்கொள்ளுவார்களென்னவுமாமென அறிக. இதற்கு பி - ம் சிதநியாரில் "ஆசா னாகித், தோன்றிநக ராதவகை முற்செய் கன்மத அகளறுத்தங் கத்துவா தொடக்கறவே சோதித், தேன்றவுடற் கன்மமநுபவத்தினால் அறுததிங், கினிச்செய் கன்ம மூலமல ஞானததா விடிப்பன்" (8. 10) எ - து கண்டுகொள்க. அன்றியும், வினை திரிவிதததால் நீஙகிட எ - கு சிவனை நோக்கி மனத்தினால் தியானித்தும் வாக்கினால் உச்சரித்துங் காயத்தினால் தொழில்களைச் செய்தும் வினைகளை நீக்கிக்கொள்ளலா மென்னவுமாமென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "மனமது நினைய வாக்கு வழுத்தமந் திரங்கள் சொல்ல, இனமலர் கையிற் கொண்டங் கிச்சித்த தெய்வம் போறறிச், சினமுத லகற்றி வாழுஞ் செயலற மானால் யார்க்கும், முனமொரு தெய்வ மெங்குஞ் செயற்குமுன் னிலையா மன்றே" (2. 24) எ - து கண்டுகொள்க. இனி, நீங்கா மூல நிறையிருளிரிய எ - கு ஆணவமலம ஒன்றாயிருக்கவும் ஒருகாலத்தினும் விட்டு நீங்காத மலம விட்டு நீஙக என்று பொருள் கூறியது ஏதென்னில் அந்த மலத்தின் காரியமான சத்திகளழியக் காரணமாகிய நித்தியம் அழியாதென்றதென அறிக. இதற்கு பி - ம் சிததியாரில் "உரியமல மௌடதத்தால் தடுப்புண்ட விடமு மொள்ளொளியி னொளிமுன்ன ரிருளுநந் தேறறின், வருபரல்சோ நீர்மருவு கலஙகலும்போ லாகி மாயாதே தன்சததி மாய்ந்து காயந், திரியுமள வும்முளதாய்ப் பின்பு காயஞ் சேராத வகைதானுந் தேயு மன்றே" (11. 4) எ - ம், இந்நூலினும் "அழிந்திடுஞ் சத்தி நித்த மழிந்திடா" (88) எ - ம் வரும் எதுக்களைக கணடுகொள்க. இனி, நேயத்தோங் குணர்வகத தடக்கி

எ - கு எப்பொழுதும் பேரறிவாயுள்ள சிவத்தினுள்ளே இவனொடுங் கித் தற்போதம் சீவியாமல் நிற்க என்று பொருள்கூறியது ஏதென்னில், இவன் பழைய பிரபஞ்ச வாதனையோடுங் கூடிச் சத்தாதி விடயங்களில் சீவியாமல், தற்போதத்தை மீட்டு அருளிலே ஒடுங்குகையென அறிக. இதற்கு பி - ம் திருவருட்பயனில் "புலனடக்கித் தம்முதற்கட் புக்குறுவார் போதார், தலம்நடக்கு மாமை தக" (94) எ-ம், திருவள்ளுவப்பயனில் "உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான், வரனென்னும் வைப்புக்கோர் வித்து" (94) எ - ம், ஞானமிர்தத்தில் "மாணு வரும்படை தாங்கிக் கிளர - தராதரத் தெறிவே விளைஞர் போலப் - பொறிவாழ் புலப்பகை தாங்கிப் பிறப்பற - வெறியு மறப்பெயர் வாட்கையும் வாட்கை" எ - ம கண்டுகொள்க. இனி, உளத்துளின்பொடுங்க எ - கு தங்களிடத்திலே பேரின்பம் பதிந்து விளையத்தக்கதாக நிற்பார்களென்றதேதென்னில், அந்தச் சிவஞானம் விளைந்த சீவன்முத்தராயுள்ளவர்கள் தங்கள் உள்ளத்திலே சிவனைத் தியானிக்குமிடத்து அந்தச் சிவன் அங்கே பதிந்து நிற்கையால் அப்படிச் சொன்னதென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "இந்தனத்தி னெரிபாலின் நெய்பழத்தின் இரதம் எள்ளின்க ணெண்ணையும்போ லெங்குமுளன் இறைவன், வந்தனைசெய் தெவ்விடத்தும் வழிபடவே யருளு மலமறப்போ ரான்மாவின் மலரடிஞா னத்தாற், சிந்தனைசெய் தார்ச்சிக்கிற சிவனுளத்தே தோன்றித தீயிரும்பைச் செய்வதுபோற் சீவனதன்னைப், பந்தனையை யறுதத்துத்தா னாக்கித்தன் னுருவப் பரப்பையெலாங் கொடுபுகுந்து பதிப்ப னிவன்பாலே" (9. 12) எ - ம், கோவைத் திருவாசகத்தில் "நினைவித்துத் தன்னையென் னெஞ்சத் திருத்திநின் றம்பலத்துப், புனைவித்த வீசன்" (140) என்றதும் இப்பொருள்பற்றியென அறிக. இனி, நேரே தூங்குவர் தாங்கி எ - து மயக்க விகற்பங்களிற் படாமல் உறங்கா துறங்கி இருப்பார்களென்று பொருள்கூறியது ஏதென்னில், அவர்கள் கேவல சகலம் இரண்டினுஞ் செல்லாமல் அருள் நித்திரையாய் இருப்பார்களென்றதென அறிக. இதற்கு பி - ம சித்தியாரில் "அந்தக கரணங்களொடுங் கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாகில்" (8. 30) எ-ம், அருள் நித்திரை என்றதற்கு போசனவிதியில் "ஆரமுதா நீரருந்தி

யெச்சி லச்ச மகற்றி யடைகாய்நற் கடுக்காய்சுக் கடுத்ததொன்றை மென்று, கூறியபே ருணர்வுடனே தூங்கிக் கங்குற் குளிர்வெம்மைக் கிசைபூசை கொள்ள நல்கி, ஒருணர்வு நிவேதியா துண்ணு வாய்மை யுடையையா யுயர்ஞான போக முற்றுச், சாருமருள் நித்திரையு முறறுணாக ஞானச் சரிதையிது மெய்கண்டான் சந்தா னத்தே" (4) எ - ம் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது சிவஞானிகளாயுள்ள சீவன்முத்தர்கள் பிராரதத்த் தொலையுமளவுஞ் சிவனோடும் பிரிவற நின்று வியாபரிக்கு மிடத்து மலமாயா கன்மங்களை நீக்கிக்கொள்ளும் முறைமையை அறிவித்தது. க

இங்ஙனஞ் சொல்லப்பட்ட சீவன்முத்தராயுள்ளவர்கள் முன்பு செய்துவந்த நியமங்களாயுள்ளவை எல்லாஞ் செய்து வருவார்களோ விட்டுவிடுவார்களோ என்று வினவ மேலருளிச்செய்வான் எடுத்துக் கொண்டருளியது.

94. குறிப்பிடம் காலம் திக்கா சனம்கொள்கை குலம்கு ணம்சீர்
சிறப்புறு விரதம் சீலம் தபம்செபம் தியானம் எல்லாம்
மறுத்தற வொழிதல் செய்தல் மருவிடா மன்னு செய்தி
உறக்குறு பவர்போல் வாய்மை ஒழிந்தவை யொழிந்துபோமே.

மெய்ப்பொரு ளுணர்ந்தவா விரதந் துயில்பவர்
கைப்பொரு ளெனவே கழலு மென்றது.

(உரை) குறிப்பிடம் - கங்கை குமரி முதலாயுள்ள தீரத்தங் களையும் காசி திருவம்பலம் முதலாயுள்ள சிவத்தானங்களையும் நாடியிருக்கை; காலம் - விஷுசு அயனம் சங்கிரம முதலாயுள்ள காலங் களிலே செய்யுங் கிரமங்கள்; திக்கு - இந்த நாளைக்கு இன்ன திசை யிலே போகலாம் இருக்கலாம இன்ன மந்திரம் இன்ன திசையைப் பார்த்து ஜபிக்கலாமென்னும் முறைமைகள்; ஆசனம் - பதுமாதனம் கூர்மாதனம முதலாயுள்ள ஆதனங்க ளிட்டிருக்கை; கொள்கை - வாய்மை ஒபபுரவு ஈகை முதலாயுள்ள கொள்கைகள்; குலம் - பிராமணர் முதலாகச் சண்டாளர்கள் ஈறுகிய குலநீதி முதலாயுள்ளவை; குணம் - யாவராயினும் அவரவர் சீலத்தினும் ஒழுகுதல், ஒருவரை

நிந்தியாமை, புறங்கூறாமை முதலாயுள்ள குணங்கள்; சீர்-அந்தந்தச் சாதியொழுங்கு குலையாமல் நடக்கை; சிறப்புறு விரதம் - கொல்லா விரதம் அஷ்ட விரதம் முதலாயுள்ள விரதங்கள்; சீலம் - சாதித் தொழில் குணத்தொழில் பொறையுடைமை அருளுடைமை முதலாயுள்ள சீலங்கள்; தவம் - பஞ்சாக்கினிநடு சலத்தின்நடு முதலாகச் செய்யுந் தவங்கள்; செபம் - தேவதை மந்திரங்கள், சத்தி மந்திரங்கள், எதிரேறு மந்திரம், திருவம்பல வித்தை முதலாயுள்ள ஜபங்கள்; தியானம் - ஆதாரம் நிராதாரம் பிராசாத முதலாயுள்ள தியானங்கள்; எல்லாம் - இப்படிக் குறிப்பிடம் முதல் தியானமீறாகச் சொல்லப்பட்ட நியமங்களெல்லாம்; மறுத்தற வொழிதல் செய்தல் மருவிடா - அந்த உண்மை ஞானத்தைப் பெற்றிருக்கிற சிவஞானிகள் அந்த நியமங்களை விட்டுவிடவேணுமென்று தீர விட்டுவிடுவதுமில்லை, செய்து வரவேணுமென்று செய்வதுமில்லை. பின்னை எங்ஙனே என்னில்; மன்னு செய்தி - அவர்கள் அந்த உண்மையிலே பெறுகின்று; உறக்குறுபவர்போல் வாய்மை ஒழிந்தவை யொழிந்து போமே - நித்திரை செய்யுமவர்கள் கையிற் பிடித்திருக்கப் பட்ட பதார்த்தமானது அவர்கள் வேணுமென்று பிடித்திருக்கச் செய்தே அவர்களை அறியாமல் தானே நழுவினாற்போல அந்தச் சிவ ஞானத்தைப் பெற்ற சீவன்முத்தர்க்கும் அந்த உண்மை ஞான மொழிய மற்றுள்ள நியமங்களுந் தானே போம்.

உதாரணம்: அந்த உண்மை ஞானமொழிய மற்றுள்ள நியமங்களெல்லாம் உறங்கினவர்கள் கையிற் பிடித்திருந்த பண்டங்கள் போலத் தானே போமென்றதற்கு பி - ம் திருவருட்பயனில் "ஒண்பொருட்கண் ணுற்றார்க் குறுபயனே யல்லாது - கணபடுப் போர் கைப்பொருள்போற் காண்" (78) எ - ம், அன்றியும், சங்கற்ப நிராகரணத்திலே மாயாவாதியை மறுக்கிற அவதரத்திலே "ஞால நீதியும் நான்மறை நீதியும் - பாலர்உன் மத்தர் பசாசரி லெனவும் - உறங்கி னோன்கை வெறும்பாக் கெனவுந் - தானே தவிரா தானுற் புரியா - தொழிநதிடு நிரையத தழுந்துதல் திடமே" (4. 232 - 236) எ - ம் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது அந்த உண்மை ஞானத்தைப் பெற்ற சீவன்முத்தர்கள் முன்பு செய்துவந்த நியமங்களெல்லாந் தாங்கள்

வேண்டாமென்று விட்டுவிடுவதுமில்லை, செய்துவர வேணுமென்று நியமித்துச் செய்வதுமில்லை, உறங்குவார் கையிற் பதார்த்தங்கள் அவர்களை அறியாமல் தானே போனாற்போல அந்த உண்மை ஞான மொழிய மற்றுள்ள நியமங்கள் தானே போமென்னும் முறைமையை அறிவித்தது. உ

இந்த உண்மை ஞானத்தைப் பெற்ற சீவன்முத்தரானவர்கள் அந்தச் சிவத்தை உள்ளே கண்டிருப்பார்களோ புறம்பே கண்டு வழிபடுவார்களோ என்று வினவின மாணவகனைநோக்கி மேலருளிச் செயவான் எடுத்துக்கொண்டருளியது.

95. அகம்புற மென்றி ரண்டால் அர்ச்சனை புரியும் இந்தச்
சகந்தனில் இரண்டு மின்றித் தமோமய மாகி எல்லாம்
நிகழ்ந்திட மகிழ்ந்து வாழும் நீர்மையார் போல ஞானம்
திகழ்ந்தகம் புறமெ னாத செம்மையார் நன்மை யாரே. ௩

உத்தம ஞான முணர்ந்த ஞான
வித்தகர் தன்மை விளங்க உரைத்தது.

(உரை) அகம்புற மென்றிரண்டால் அருச்சனை புரியும் இந்தச் சகந்தனில் - இந்த உலகத்தின்கண்ணே சிவனை வழிபடுகிறவர்கள் உள்ளே கண்டும் பூசிப்பார்கள் புறம்பே கண்டும் பூசிப்பாகள்; இரண்டுமின்றி - இங்ஙனஞ் சொல்லப்பட்ட உட்பூசை புறப்பூசை என்கிற இரண்டு பூசையும் இல்லாமல்; தமோ மயமாகி எல்லாம் நிகழ்ந்திட மகிழ்ந்து வாழும் நீர்மையார் போல - அஞ்ஞானமே வடிவாயிருக்கிற ஆணவமலத்தின் மேலீட்டினாலே தத்துவம் முப்பத்தாறோடுங் கூடிச் சிற்றின்பமாகிய மோகமே யொழிய மறமொன்றுந் தோன்றாத முறைமையினையுடைய பெத்தரைப்போல்; ஞானம் திகழ்ந்து - பழைய பிரபஞ்ச வாதனை சற்றுந் தோன்றாமல் ஞானமே பிரகாசித்து, அந்த ஞானமானது எங்கும பூரணமா யொழிவற நிற்கிற நிகழ்ச்சியோடுங்கூடி அநுபவித்து; அகம் புறம் எனாத செம்மையார் நன்மையோரே-அந்தரியாகமாக உள்ளே கண்டு பூசித்தும் பகிரியாகமாகப்புறம்பேகண்டு பூசித்தும்வருகிற முறைமை இரண்டுஞ் சற்றுந் தோன்றாமல் நினைவு கெட்டுப்போன பெரியோா களே அநத உண்மை ஞானத்தைப்பெறற நல்லோர்கள்.

உதாரணம் : இந்தச் சகத்திலுள்ளவர்கள் உட்பூசை யென்றும் புறப்பூசையென்றும் பூசித்து வருவார்களென்பதற்கு பி - ம் சித்தியாரில் " நாட்டுமித யந்தானும் நாபியினில் அடியாய் நாலமுதல் தத்துவத்தால் எண்விரல் நாளத்தாய், மூட்டுமோ கினி சுத்த வித்தைமல ரெட்டாய் முழுவிதழெட் டக்கரங்கள் முறைமையினின் உடைத்தாய்க், காட்டுகம லாசனமேல் ஈசர்சதாசிவமும் கலாமூர்த்த மாம்இவற்றின் கண்ணுருஞ் சத்தி, வீட்டை அருள் சிவன்மூர்த்தி மானுகிச் சத்தி மேலாகி நிற்பன் இந்த விளை வறிந்து போற்றே" (9. 9) எ - ம், " கந்தமலர் புகையொளி மஞ்சனம் அமுது முதலாக் கண்டன எல்லாம் மனத்தாற் கருதிக்கொண்டு, சிந்தையினிற் பூசித்து" (9. 10) எ - ம் உட்பூசைக்குக் கண்டு கொள்க. இனி, புறப்பூசைக்கு பி - ம் சித்தியாரில் " புததிரமார்க கம்புகலில் புதியவிரைப் போது புகையொளி மஞ்சனம் அமுது முதல்கொண் டைந்து, சுததிசெய்தா சனம்மூர்த்தி மூர்த்தி மானுஞ் சோதியையும் பாவிததா வாகித்துச் சுதத, பத்தியினு லர்ச்சிததுப் பரவி போற்றிப் பரிவினுெடும் எரியில்வரு காரியமும் பண்ணி, நித்தலுமிக் கிரியையினை இயற்று வோர்கள் நின்மலன் தன் அருகிருப்பர் நினையுங் காலே" (8. 20) என்றது கண்டுகொள்க. இஙஙனஞ் சொல்லப்பட்ட பூசைகளிரண்டும் அந்தச் சிவஞான மேலிட்டவர்களுக்கு இல்லையென்பதற்கு பி - ம் பூசாகரணத்தில் " ஞானவா ரமிர்தமுண்டார் நயந்தது நுகர்ந்து வாழ்வார், ஊனமில் யோகச் செய்தி யொழிவதுண் டாக வுண்டாம், ஈனமில் தொழில்பின் இன்று முண்டெனி லெய்திற் றின்று, மானபின் ஞானயோக மல்ல தொன் றறியா தாரே" (24) எ - து கண்டுகொள்க. எல்லாம் நிகழ்ந்திட மகிழ்ந்துவாழும் நீர்மையார்போல என்றது சிவஞானிகளுக்குப பசுஞானிகளை ஒப்பிட்டதேதென்னில், அந்தப் பசுஞானிகளுக்கு இந்தப பிரபஞ்ச மயக்கங்கொண்டே அந்தத் திருவருளின் தோற்றமறறு நின்றாற்போல, இந்தச் சிவஞானிகளுககும் அந்தத் திருவருளின் மேலீடுகொண்டே இந்தப் பிரபஞ்சந தோன்றுமல் நின்றதென அறிக. இதற்கு பி - ம் மெய்ஞ்ஞான விளக்கத்தில் "அறியார்களு மறியார்மிக வறிவார்களு மறியார், அறியார்களு மறியார்களு மொன்றே

தமிலன்றும், அறியார்களும் பசுபாசமென் னிருளான்மறைந் தறி யார், அறிவார்களும் பரமானந்த ஒளியால்நிறைந் தறியார்" எ - து கண்டுகொள்க. அந்தப் பசு ஞானிகளுக்கு இந்தத் திருவருள் தோன்றுதென்றது ஏதென்னில், நமக்குக் கர்த்தாவாக ஓர் சிவனுண் டென்றும், அந்தச் சிவனுக்கு அடிமையாக நாமோராான்மா வுண் டென்றும், இந்த ஆன்மாவாலே செய்யப்பட்டதொரு புண்ணிய பாவங்களாகிய கன்மமுண்டென்றும், அதனாலொரு நரகசுவர்க்கமுண் டென்றுந் தோன்றாமல் நின்றதெனை அறிக. அந்தச் சிவஞானி களுககு இந்தப பிரபஞ்சந் தோன்றுதென்றதேதென்னில், மண் ணாசை பெண்ணாசை பொன்னாசை என்னப்பட்ட மூன்றாசையும் விட்டு யாவரோடும் விருப்பு வெறுபபற்று யானெனதுகெட நிற் கையினாலெனை அறிக.

இதனாற் சொல்லியது, அந்தச் சிவஞானம் மேலிட்டு நிற்கிற சீவன்முத்தாகள் அந்தச் சிவஞானத்தின் மேலீட்டினாலே உட்பூசை புறபபூசை என்கிற பூசைகள் இரண்டினையும் விடாமல் விட்டு அந் தச் சிவஞானமே தனுவாய் நிற்கிற முறைமை, பிரபஞ்ச வாதனை மேலிட்டு நிற்கிற பசுஞானிகள் அந்தத் திருவருளின் தோற்றஞ் சற்றுந் தோன்றாமல் நிற்குமதுபோலே இருக்குமென்னும் முறை மையை அறிவித்தது. ௩

## ஞான யோகம்

அந்த உணமை ஞானத்தைப்பெற்று அதனோடுங்கூடி அநுபவிக் கிற சீவனமுததர்களுககுப் பழைய வாதனைபலத்தாலே பிரபஞ்ச வாதனை மேலிட்டாலும் அதனோடுங்கூடி மயஙகாமல் அதனைத் தோன்றின மாததிரத்திலே நீக்கிகொண்டு அந்த ஞானநிலை குலை யாமல் நிற்கைக்கு மேல் ஞானத்தில் யோகத்தை அருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

96. அண்டம்மே விடஅனைத்தும் அனைததையும் அண்டம் மேவிக்
கொணடல்போல் எவையும்ஞானங் குறைவிலாநிறைத லாலே
கணடதோா பொருளை அந்தக் கருத்தினால் காணில் தானே
அண்டநா யகனார் மேனி யானதேல் ஐய மின்றே. ௪

அவ்வியல் புருதவர்க் ககன்ற ஞானத்தின்
செவ்விய யோகத் திகழ்வினை யுரைத்தது.

(உரை) அண்டம் மேவிட அனைத்தும் - ஆகாசமிடமாகச் சரிக்கப்பட்ட பிருதிவி முதலான நாலு பூதங்களும் அதற்கு உட்பட்டவையும் அந்த ஆகாசத்தோடும் பொருந்தி வியாத்திபண்ணி நிற்க; அனைத்தையும் அண்டம்மேவிக் கொண்டல்போல் - அந்த ஆகாயந் தான் அவையெல்லாந் தன்னிடத்திலே கவளீகரித்துநின்ற கோட்பாடுபோல; எவையும் ஞானங் குறைவிலா நிறைதலாலே - எல்லா ஆன்மாக்களினும் அவையிற்றோடுங் கூடி இருக்கப்பட்ட அத்துவாக்களினும் பூரணனாயுள்ள சிவனுடைய ஞானமானது தன்னிடத்திலே அடக்கிக் கவளீகரித்துக்கொண்டு நிற்கையாலே; கண்டதோர் பொருளை அந்தக் கருத்தினாற் காணில் - தான் ஹிதா ஹிதப்படத்தக்கதாகச் சத்தாதி விடயங்களிலே யாதாமொன்று தன்னிடத்திலே வந்து தாக்கினாலும் முன்சொன்ன உபமானம்போலே சிவனுடைய ஞானத்தினாலொழிய மற்றொன்றினாலும் வாராதென்று கண்டு விருப்பு வெறுப்பற்று நிற்கில்; தானே அண்டநாயகனார் மேனி யானதேல் - அங்ஙனங் கண்ட பொருள் தானே தேவர்களுக்குக கர்த்தாவாயிருக்கபபட்ட சிவனுடைய திருமேனியாம். அப்படிக் காணவே; ஐயமின்றே - அங்ஙனந் தாக்கின விடயஙகளாலே மேலைக்கு ஜனனமுணடாகாதென்கிறது சந்தேகமில்லை.

அன்றியும், "தானே, அண்டர் நாயகனார் மேனியானதேல் ஐயமின்றே" என்றொரு பதமாக்கி அபபடிக் கண்ட சிவஞானிகள் சிவனுடைய திருமேனியாகிய ஞானததோடுங் கூடிச் சாயுச்சியத்தைப் பெறுகைக்குச் சந்தேகமில்லை யென்னவுமாமெனை அறிக ஆனதேல் என்றதனால் ஆன்மா சிவனாவனோ என்னில், அபபடிச சிவனாகான், அந்தச் சிவததோடுங கூடுமென்பது கருத்து. இதறகு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில் "ஆனாய் என்ப தனைத்தும் அவ்வவை - தான்ஆ காமையைச் சாற்றிடும் என்க - தாமே எனும்இத் தனியே காரம - அழிந்திலர் அதுவே ஆய்த்திலர் அதுவிட் - டொழிந்திலர் பிறிவிலர் எனும்இவை உணர்த்தும்" (12. 80-84) எ - து கணடுகொள்க.

கண்டதோர் பொருளை அந்தக் கருத்தினாற் காணில் எ - து எல்லாஞ் சிவச்சேட்டையென்று கண்டுநிற்கிற சிவஞானிகளுக்கு அதற்குத் தக்கதாகச் சிவன் நின்று சாந்நித்தியஞ் செய்வனென்பதற்கு பி - ம் சித்தியாரில் "யான்செய்தேன் பிறர்செய்தார் என்னது யான் என்னும் இக்கோணை ஞான எரியால் வெதுப்பி நிமிர்த்துத், தான்செவ்வே நின்றிடஅத் தத்துவன்தான் நேரே தனையளித்து முன்னிற்கும் வினையொளித்திட் டோடும், நான்செய்தேன் எனுமவர்க்குத் தானங் கின்றி, நண்ணுவிக்கும் போகத்தைப் பண்ணுவிக்குங் கன்மம், ஊன்செய்யா ஞானந்தான் உதிப்பினல்லால் ஒருவருக்கும் யானெனதிங் கொழியா தன்றே" (10. 2) எ - ம், திருப்பாட்டில் "யாதே செய்தும் யாமலோ நீயென்னி, லாதேயேயுமளவில் பெருமையன்" (5. 50. 6) எ - து கண்டுகொள்க. தன்னிடத்திலே தாக்குகிற விடயங்களெல்லாஞ் சிவசொரூபமென்று கண்டு நிற்க என்றதற்கு பி - ம் திருவாசகத்தில் "கூறுநாவே முதலாகக் கூறுங்கரண மெல்லாநீ" (33. 5) எ - து கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது அந்தச் சிவஞானத்தோடுங் கூடி அநுபவிக்கிற சீவன்முத்தர்கள் அந்த நிலை குலையத்தக்கதாகப் பிரபஞ்சவாதனை மேலிட்டுச் சத்தாதி விடயங்களில் தாக்கினாலும் அவைகளெல்லாஞ் சிவச்சேட்டையாலொழிய ஆன்ம சேட்டையால் வாராதென்பது கண்டு ஒருவரோடும் விருப்பு வெறுப்பற்று நிற்கவே, அப்படித் தாக்கின விடயங்களாலே மேலைக்கு ஜனனத்துக்கு ஏதுவாகிய ஆகாமியங் கட்டுப்படாதென்னும் முறைமையை அறிவித்தது.

௨

## ஞானக்கிரியை

இங்ஙனஞ் சொல்லப்பட்ட ஞானயோகத்தில் நிற்கப்பட்ட சீவன்முத்தர்களுக்கு இந்தப் பிரபஞ்சவாதனை யப்படித் தோன்றின மாத்திரத்திலே நீக்கிக்கொள்ள வொட்டாமல் வாதனாபலத்தால் நீட்டிக்க மேலிட்ட அவதரத்தும் அதனோடும் ஆன்மபோதத்தைச் செலுத்தாமற் சிவசிந்தனையாக நிற்கத் தக்கதாக மேல் ஞானக்கிரியை அருளிச்செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

97. மண்முதற் கரண மெல்லாம் மறுஅசத் தாக்கி ஞானக்
கண்ணினில் ஊன்றி அந்தக் கருத்தினுல் எவையும் நோக்கி
எண்ணிஅரு செழுத்து மாறி இறைநிறை வுணர்ந்து போற்றல்
புண்ணியன் தனக்கு ஞான பூசையாய்ப் புகலு மன்றே.

மாசணு காது மனமிறந் தியற்றும்
பூசனை ஞான பூசனை யென்றது.

(உரை) மண்முதல் கரணமெல்லாம் மறு அசத்தாக்கி - பிருதிவி முதலாயுள்ள தத்துவங்களெல்லாம் நாமல்ல, குற்றத்தையுடைய சடமென்று கண்டு; சடமெனக் காணவென்றது இது தானுகக் காரியப்படமாட்டாதென்று காண்கையென அறிக. என்னவே, இது பூத சுத்தியாம்; ஞானக்கண்ணினில் ஊன்றி - அப்படி அறிகிறதும் அந்தத் திருவருளா லொழிய ஆன்ம போதத்தால் அறியப்படா தென்று கண்டு; அப்படிக் காணவே, அது ஆன்மசுத்தியாம்; அந்தக் கருத்தினுல் எவையும் நோக்கி - அப்படி ஆன்மபோதத்தாற்றுனே அறிகைக்குச் சேட்டையில்லை யென்று கண்டதுகொண்டே ஆன் மாவுக்கு அறிவில்லையென அறிந்து கண்டு கேட்டு உண்டுயிர்த்து உற்றறிந்து நிற்கிறதெல்லாம் அந்தத் திருவருளென்று கண்டு; அப் படிக் கண்டு நிற்கவே அது திரவிய சுத்தியாம்; ஐந்தெழுத்து மாறி - ஐந்தெழுத்தையும் ஐந்தெழுத்தாகக் கொள்ளாமல் மாறிக்கொள்ள; மாறிக்கொள்ளலாவது சிவ்விலே சிவமும் வவ்விலே அருளும் யவ்விலே ஆன்மாவும் நவ்விலே திரோதமும் மவ்விலே மலமுமாகக் கொண்டு, ஐந்து எழுத்தையும் விட்டு ஐந்து முதலாக விசாரித்துக் கண்டு; அப்படிக் காணவே மந்திரசுத்தியாம். அன்றியும்; எண்ணி - இன்ன உருவென்று எண்ணித் தொகைபடுத்திச் செபிக்க என்னவு மாம்; இறை நிறைவுணர்ந்து - கர்த்தாதானே எங்கும் பூரணமாய் நின்று மற்றுண்டான சித்தசித்துக்கள் இரண்டினும் பிரிவற நின்று சேட்டிப்பித்து நிற்கிறதை அறிந்து; அப்படிச் சித்தசித்துக்கள் இரண்டினுஞ் சிவன் நிறைந்து நிற்கிறதை இந்த இலிங்கத்தினும் உண்டென்று காணவே இலிங்க சுத்தியாம்; போற்றல் - இஙஙனம் ஐந்து வகையாகச் சொல்லப் பட்ட பூத சுத்தி ஆன்ம சுத்தி திரவிய

சுத்தி மந்திர சுத்தி இலிங்க சுத்தி என்னும் முறைமைகளுக்குத தவறு வாராமல் வழிபட்டு ; இங்ஙனம் வழிபடவே ; புண்ணியன் தனக்கு ஞானப் பூசையாய்ப் புகலு மன்றே - இங்ஙனம் பஞ்ச சுத்திகளாகச் சொல்லப்பட்ட தெல்லாஞ் சிவனுக்கு ஞான பூசையாமென்று சிவாகமஞ் சொல்லும்.

இங்ஙனஞ் சொல்லப்பட்ட பஞ்ச சுத்திகளுக்கு எழுதின பொரு ளுக்கு உதாரணம் ஞானபூசைத் திருவிருத்தத்திலே காட்டுதும். அவை வருமாறு : மண்முதல் கரணமெல்லாம் சடமென்று கழித்த தற்கு பி - ம் "அஞ்சலிசெய் திருந்துடல நானல்லன் " எ - ம், " புஞ்ச மலி தனுகரணம் புவனம் போகம் பொய் " எ - ம், " எடுத்த வீடு தானழியு மளவும் அதிற் றங்குவோர் போல " (8) எ - ம் வரும் ஏதுக்களைப் பூதசுத்திக்குக் கண்டுகொள்க. ஞானக்கண்ணினில் ஊன்றி யென்றது ஆன்மசுத்தி யென்றதற்கு பி - ம் " தீங்கிலுயிர் சிவலிங் கஞ் சிவன் சீவன் யாதுஞ் செயவேண்டாம் பசுஞானம் " எ - ம், " மெய்ப்பணி மடங்கத் தூங்கிடும் " (9) எ - ம் கணடுகொள்க. அந்தக் கருத்தினால் எவையும் நோககி யென்றதை தான் காண்கிற தெல்லாஞ் சிவன் காண்கிறனென்று காணவே திரவியசுத்தி யாமென்றதற்கு பி - ம் " நாலிரண்டு திருவுருவ நோக்கநோக்கால் நலஙகொள் திரவியசுத்தி நயந்து " (11) எ - து கணடுகொள்க. எண்ணி ஐந்தெழுத்துமாறி என்றதை மந்திர சுததியென்று ஸ்ரீபஞ் சாக்ஷரத்தை ஐந்தெழுத்தாகக் கொள்ளாமல் ஐந்துமுதலாகக்கண்டு எணணிச் செபிக்க என்றதற்கு பி - ம் "பத்துரு மந்திரசுத்தி பயிற்றி" (12) எ - து கண்டுகொள்க. இறைநிறைவுணர்ந்தென்றதை இலிங்க சுத்தியென்றது, கர்த்தா எங்கும் பூரணனாயிருக்கையாலே நம் பொருட்டாகப் பூசைகொள்ளக் கொண்ட திருமேனியிலும் உண் டென்று காண என்றதென அறிக. இதற்கு பி - ம் " நாதன், மேலுகந்த மலமொறுக்கி யுருவ நோக்கி விமலனிறை வுணர்ந் தெவையும் மேனி யான, சீலமுமிங கருவுதிரு வுருவ மான சிறப்பு முணர்ந் திலிங்க சுத்தி சேர்த்தி டாயே " (11) எ - து கண்டு கொள்க.

இதனாற் சொல்லியது, முன்சொன்ன ஞானயோகத்தில் நிற்கு மவாகளுக்கு அந்தநிலை குலையததக்கதாகப் பிரபஞ்சவாதனை மேலிட்

டாலும் அதனோடு கூடாமல் அதனை நீக்கிக்கொள்ளத் தக்கதாக ஞானக்கிரியையைச் செய்யுமிடத்துப் பஞ்ச சுத்தி செய்ய வேண்டு கையால், அதற்குத் தத்துவங்களை யெல்லாம் சடமென்று காணவே பூதசுத்தியாமென்றும், அப்படிக் கண்டு நீக்கிக்கொள்ள நமக்கென்ன ஒரு சேட்டையில்லையென்று காணவே ஆன்மசுத்தியாமென்றும், அப்படித் தனக்கென்ன ஒரு செயலில்லையென்று கண்டு தான் காண்கிற தெல்லாஞ் சிவதிருஷ்டி யென்று காணவே திரவிய சுத்தியா மென்றும், ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை ஐந்து முதலாகக் காணவே மந்திர சுத்தியாமென்றும், எங்கும் பூரணனாயிருக்கிற சிவன் இந்தச் சிவலிங் கத்திலும் உண்டென்று காணவே லிங்க சுத்தியாமென்றும், இங்ங னஞ் சுத்திசெய்து வழிபடவே சிவனுக்கு ஞானபூசையாமென்றும் வருமுறைமையை அறிவித்தது. ரு

## பன்னிரண்டாஞ் சூத்திரம்

### ஞானச்சரியை

இங்ஙனம் பஞ்ச சுத்திகளுஞ்செய்து அந்த ஞானபூசையைச் செய்துவரும் அவதரத்து, அதிலும் ஆன்மபோதங் குவியாமல் வாதனாபலத்தாலே திரிவித கரணங்களோடுங்கூடிப் பிரபஞ்சத்திலே ஓடினாலும் பழைய பிரபஞ்சத்தொழிலாய் நின்று சீவியாமல் அருள்தொழிலாய் நிற்கத்தக்கதாக மேல் பன்னிரண்டாஞ் சூத்திர மாகிய ஞானச்சரியையை அருளிச்செய்வான் எடுத்துக்கொண்டரு ளியது.

93. தொண்டர்களிடத்தும் வானோர் தொழுந்திரு மேனிதானும்
அண்டரும் கண்டி லாத அண்ணலே எனவ ணங்கி
வெண்தர ளங்கள் சிந்த விழிமொழி குழறி மெய்யே
கண்டுகொண் டிருப்பர் ஞானக் கடலமு தருந்தி னோரே.

சிவமாம் வேடஞ் சிவாலய மெனத்தொழுந்
தவமா ஞானச் சரியை சாற்றியது.

(உரை) தொண்டர்களிடத்தும் மகேசுவரரிடத்திலும்; வானோர் தொழுந் திருமேனி தானும் - பிரம விஷ்ணுக்கள் முதலா

யுள்ள தேவர்களும் வந்து வழிபாடு செய்யப்பட்ட சிவலிங்கப் பெருமானிடத்திலும்; அண்டருங் கண்டிலாத அண்ணலே எனவணங்கி - அந்தத் தேவர்களாலுங் காணப்படாத சிவனல்லவோ நம் பொருட்டாகத் திருமேனிகொண்டு எழுந்தருளினுனென்று இந்த இரண்டிடத்திலும் வழிபட்டுத் தெண்டனிட்டு; விழி வெண் தரளங்கள் சிந்த - கண்களானது முத்துப்போலே நீரை யுதிர்க்க; மொழி குழற - வார்த்தை தழுதழுக்க; மெய்யே கண்டு கொண்டிருப்பர் - உண்மையாகக் கண்டு தியானித்துக் கொண்டிருப்பார்கள்; ஞானக் கடலமு தருந்தி னேரே - அருள் வெள்ளமாகிய சமுத்திரத்திலே விளைந்த சிவபோகமாகிய அமுதினைப் புசித்த சிவஞானிகள்.

தொண்டர்களிடத்தும் எ - கு திருவேடத்தாரைச் சிவனெனக் கண்டு வழிபட என்று பொருள் கூறியது ஏதென்னில், அவர்கள் கொண்ட வேடத்தினுலுந் தியான சமாதியினுலும் அவர்களிடத்திலே சிவன் சாந்நித்தியமாகச் செய்து நிற்கையால் அப்படிச் சொன்னதென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் "அறிவரியான் றனையறிய யாக்கை யாக்கி அங்கங்கே உயிர்க்குயிராய் அறிவு கொடுத் தருளாற், செறிதலினுல் திருவேடஞ் சிவனுருவே யாகுஞ் சிவோகம்பா விக்கும்அததாற் சிவனும ஆவர், குறியதனுல் இதயத்தே அரனைக் கூடுங் கொள்கையினுல் அரனவர் குறியொடுதாமழியும், நெறியதனுற் சிவமேயாய் நின்றிடுவர் என்முல் நேசத்தால் தொழுதிடுநீ பாசத்தார் விடவே" (12. 3) எ - து கண்டுகொள்க.

இனி, வானேர் தொழுந் திருமேனிதானும் எ - கு சிவலிங்கப் பெருமானைச் சிவனெனக் கண்டு வழிபட என்று பொருள் கூறியது ஏதென்னில், இநதச் சிவலிஙக மூர்த்தமானது சிவனுடைய வடிவாகிய சத்தி சிவான்மீகமாயிருககையாலும், மந்திர தந்திரங்களினுலும் வழிபடுவோர்க்குக் காட்டத்தில் அக்கினி கடைந்த இடத்திலே பிரகாசித்தாற்போலவும் பசுவினிடத்துண்டாகிய பால் அப்பசுவினுடலெங்கும் நின்முலும் அந்தப் பசுவின் முலைக்கண்ணிலே தோன்றினுற் போலவும் அந்த இலிங்க மூர்த்தத்திலே பூரணமாகிய சிவம் பிரகாசிக்கையாலும், அப்படிச் சொன்னதென அறிக. இதற்கு பி -ம் சித்தியாரில் "திருக்கோயி லுள்ளிருக்குந் திருமேனி தன்னைச்

சிவனெனவே கண்டவர்க்குச் சிவனுறைவன் அங்கே, உருக்கோலி மந்திரத்தால் எனநினையும் அவர்க்கும் உளனெங்கும் இலன்இங்கும் உளனென்பார்க்கும், விருப்பாய வடிவாகி இந்தனத்தின் எரிபோல் மந்திரத்தின் வந்துதித்து மிகுஞ்சுரபிக் கெங்கும், உருக்காண ஒண்ணாத பால்முலைப்பால் விம்மி ஒழுகுவது போல்வெளிப்பட் டருளுவன்அன் பர்க்கே " (12. 4) எ - து கண்டுகொள்க.

மற்றுள்ள நூல்களெல்லாம் மூன்று முதலையுஞ் சிவனெனக்கண்டு வழிபடவென்று வருகையாலே இந்நூல் மகேசுவரரையுஞ் சிவலிங்கப் பெருமானையும் வழிபடச் சொன்னதொழிய ஆசாரியனை வழிபடச் சொல்லாதிருப்பான் ஏனென்னில், அது ஆசாரியன் முன்னிலையாக எழுந்தருளிச்செய்யச் சீடன் தெண்டம்பண்ணி வழிபட்டுக் கேட்டு வருகையால் அதனைச் சொல்லவேணடுவதிலலை என்பது கருதது. ஆனாலும், ஆசாரியனையுஞ் சிவனெனக் கணடு வழிபடுகைகது பி - ம் சித்தியாரில் " பரம்பிரமம் இவனென்றும பரசிவன தானென்றும் பரஞானம் இவனென்றும் பராபரன்தா னென்றும், அரன்தருஞ்சீர் நிலையெல்லாம இவனே யென்றும அருட்குருவை வழிபடவே அவனிவன் தானாயே, இரஙகியவா ரணம்யாமை மீனண்டம சினையை இயல்பினொடும் பரிசித்தும் நினைந்தும் பார்த்தும், பரிந்திவைதா மாக்குமாபோற் சிவமே யாக்கும் பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்துந் தானே " (12. 7) எ - து கண்டுகொள்க.

இந்தப் பூமியின்கண்ணே எழுந்தருளியிருக்கப்பட்ட இலிங்க மூர்த்தத்தை வானோர் தொழுந் திருமேனி என்றதேதென்னில், தேவர்களும் முத்தியைப் பெறுமவதரத்து இந்தப் பூமியின் கண்ணே வந்து சிவனை அருச்சித்துப் பெறவேண்டுகையால் அப்படிச் சொன்னதென அறிக. இதற்கு பி - ம் சித்தியாரில் " வானிடத தவருமண்ணில் வந்தரன் தனையர்ச்சிப்பர் " எ - ம், திருவாசகத்திலும் "புவனியிற்போய்ப் பிறவாமையில் நாள்நாம் போக்குகின்றோம் " (20. 10) எ - ம் கண்டுகொள்க. அப்படியிருக்க இந்த இலிங்க மூர்த்தத்தை அண்டருங் கணடிலாத அண்ணலே என்றதேதென்னில், இந்த இலிஙக மூர்தததை வழிபடுமவர்கள் அந்த உண்மை ஞானமாகிய பூரணத்தை இலிங்கத்தினிடத்

திலே தியானித்து வழிபட வேண்டுகையால் அந்த உண்மை ஞானத்தை அவர்கள் அறியாத படியாலே அப்படிச் சொன்னதென அறிக. அஃதெங்ஙனேயென்னில், அவர்கள் சிவனை இழந்துநின்று செய்த பசு புண்ணியத்தினாலே தெய்வபதத்தைப் பெற்றுச் சிற்றின்பமாகிய போகங்களை அநுபவித்திருக்கையால் அந்த உண்மை ஞானத்தை அறியாதவர்கள் என்றதென அறிக. இதற்கு பி - ம் திருவாசகத்தில் "வான நாடரும் அறியொ ணாதநீ" (5. 95) எ-ம், "கனவேயுந் தேவர்கள் காண்பரிய கனைகழலோன்" (11. 10) எ - ம, "அளவறுப்பதற் கரியவன் இமையவர்க் கடியவர்க் கெளியான்" (5. 35) எ - ம் வரும் ஏதுக்களைக் கண்டுகொள்க.

இனி, இங்ஙனஞ் சிவனை வழிபடுகிறவர்கள் பிரியப்பட்டு வகை கூறுமல் விதனப்பட்டு 'வெண்டரளங்கள் சிந்த விழிமொழி குழறி' என்ன வேண்டுவான் ஏனென்னில், யாதாமொரு விதனமுற்றவர்கள் தங்கள் விதனம் நீக்கத்தக்க முதியோரைக் கண்டவிடத்துத் தாங்கள் பட்ட விதனத்தின் மேலீட்டினாலே தங்கள் விதனத்தைச் சொல்லி யாறுமிடத்து அவர்கள் மெய்யறியாமற் கண்ணீருங் குதித்து நாவுந் தழுதழுத்து நின்றாற்போல, மோக்ஷகாமிகளா யுள்ளவர்களுந் தாங்கள் ஜநந மரண துக்கத்திலே அழுந்தியும் இயம தண்டப்பட்டும் நரகவேதனைப் பட்டும் வருகிற விதனத்தை உபதேசக் கிரமங்களினாலே கண்ட அவதரத்துச் சிவசந்நிதியிலே தங்கள் விதன மாற வேணடுகையால் வாக்கு மனாதீதமா யுள்ள சிவன் நம்பொருட்டாகத் திருமேனிகொண் டருளினனென்று கண்டு தங்கள் விதனத்தின் மேலீட்டை அந்தச் சந்நிதியிலே விண்ணப்பஞ் செய்யச் செயதே அவர்கள மெய்யறியாமல் உண்டாகிய கண்ணீருங் குழறுதலுமென அறிக. என்னவே, மனதிலுண்டான விதனங் கண்ணீராலே அறியப் படுமென்பது கருதது. அஃதெஙஙனே யென்னில் "அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ், ஆர்வலர் - புன்கணீர் பூசல் தரும்" (குறள் 71) என்று திருவள்ளுவ தேவரும் அருளிச் செய்ததும் இப்பொருள் பற்றியேயென அறிக. சிவனைப் பெறவேண்டுமென்று விதனமுற்றவர்களுக்குக கண்ணீருங் குழறுதலும் உண்டாமென் பதற்கு பி - ம திருவாசகத்தில் "மெய்தா னரும்பி விதிர் விதிர்த்துன்

விரையார் கழற்கென், கைதான் தலைவைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பி" (5. 1) எ - ம், "உள்ளந்தாள் நின்றுச்சி யளவுநெஞ்சாய் உருகாதால் உடம்பெல்லாங் கண்ணா யண்ணா, வெள்ளந்தான் பாயாதால் நெஞ்சங் கல்லாங் கண்ணிணையு மரமாந் தீவினையி னேற்கே" (5. 21) எ - ம், "வேண்டுந்தனையும் வாய்விட்டலறி விரையார் மலர்ப் பாதம், பூண்டுகிடப்ப தென்று கொல்லோ என் பொல்லா மணியைப் புணர்ந்தே" (27. 3) எ - ம் பெரிய புராணத்தில் "ஈசனையே பணிந்துருகி இன்பமிகக் களிப்பெய்தத், பேசிய வாய் தழுதழுப்பக் கண்ணீரின் பெருந்தாரை, மாசிலா நீறழிந்தங் கருவிதர மயிர்சிலிர்ப்பக், கூசியே யுடல்கம்பித் திடுவார்மெய்க் குணமுள்ளார்" (பத்தராய்ப் பணிவார் 6) எ - ம், பாணராற்றுப் படையில் "முதுமலை நோக்கிக் கதுமெனச் செல்வுழி - யுவகைப் பேரியாறு தவலறப் பெருகி - யுண்மனந் தளிர்பப உரோமஞ் சிலிர்ப்பக் - கண்ணெனு மதகின் கண்ணீருடைய - என்பிடையுருகி நன்குடல் விதிர்ப்ப - வேர்த்துமெய் யரும்பி நாத்தழு தழுப்ப" எ - ம் வரும் ஏதுக்களைக் கண்டுகொள்க.

இனி, மெய்யே கண்டுகொண்டிருப்பர் எ - கு உணமையாகக் கண்டு தியானித்துக் கொண்டிருப்பார்களென்று பொருள் கூறியது ஏதென்னில், பூரண கர்த்தாவாய் உயிருக்குயிராய நின்று அறிவிக்கிற சிவமானது குருலிங்க சங்கமமாகப் புறம்பே கொள்ளப் பட்ட திருமேனியிலும் உண்டென்று வழிபடுகையால் அப்படிச் சொல்லப்பட்டதென அறிக. இதற்கு பி - ம் தேவாரத்தில் "என்னிலாரு மெனக்கினி யாரில்லை, என்னி லும்மினி யாரொரு வன்னுளன், என்னு ளேயுயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக், கென்னு ளேநிற்கும் இன்னம்பர் ஈசனே" (5. 21. 1) எ - ம், திருமந்திரத்தில் "உள்ளத்து முள்ளன் புறத்துள்ள னென்றவர்க், குள்ளத்து முள்ளன் புறத்துள்ள னெம்மிறை" (1532) எ - ம், திருவருட்பயனில் "உள்ளும் புறம்பு மொருதன்மைக் காட்சியருக - கெள்ளுந் திறமேதுமில்" (96) என்றதும் இப்பொருள் பற்றி நின்றதென அறிக. அன்றியும், பூசாகரணத்திலும் இதுவே பொருளென்பதைப்பற்றி "ஆருயிர் சிவத்தை விட்டுப் புறச்சிவ மாச்சிப பானேல்,

ஈருயிர்ச் சிவமுண் டாகி லிசைவதன் றெங்கு முள்ள, தோருயிர்ச் சிவமே மற்றுப் புறச்சிவ முருச்சி வத்திற், பேருயிர்ச் சிவமே தென்னிற் பெருதகுப் பிணக்கு நூலே" (16) என்பதனாலும், அந்தச் சிவ முதலை யுள்ளும் புறம்பும் ஒரு தன்மையாகக் கண்டவர்களே சிவஞானிகள் என்பதனைக் குருமுகாந்தரமாகக் கண்டுகொள்க.

இனி, ஞானக் கடலமு தருந்தினோரே என்றது ஞானத்துக்குச் சமுத்திரத்தை உவமையாகக் கூறியதேதென்னில், சமுத்திரம் போல ஞானமும் அளவுபடாதபடியாலும், தன்னிடத்திலே கூடின ஆன்ம ஜாலங்களை அந்தச் சமுத்திரம்போல உள்ளடக்கி நிற்கையாலும், அந்தச் சமுத்திரம்போல அமுதம் விளைகையினாலும், அப்படிச் சொன்னதென அறிக. அப்படிச் சமுத்திரம் போல ஞானம் அளவுபடாதென்பதற்கு பி-ம் திருக்களிற்றுப் படியாரில் "கடல்அலைத்தே ஆடுதற்குக் கைவந்து நின்றுங், கடலளக்க வாராதாற் போலப் - படியில், அருத்தி செய்த அன்பரைவந் தாண்டதுவும் எல்லாம், கருத்துக்குச் சேயனாய்க் காண" (90) என்பதனுள் "கடலளக்க வாராதாற் போல" என்பதைக் கண்டுகொள்க. அன்றியும், சமுத்திரம்போலச் சிவனும் ஆன்ம ஜாலங்களை யுள்ளடக்கி நிற்பானென்பதற்கு பி-ம் சித்தியாரில் "இரும்பைக் காந்தம் வலித்தாற்போல் இயைந்தங் குயிரை எரியிரும்பைச் செய்வதுபோல் இவனைத்தா னாக்கி, அரும்பித்தின் தனத்தைஅன லழிப்பதுபோல் மலத்தை அறுத்தமலன் அப்பணைந்த உபபேபோல் அணைந்து, விரும்பிப்பொன் னினைக்குளிகை ஒளிப்பது போல் அடக்கி மேளித்துத் தானெல்லாம வேதிப்பா னாகிக், கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக் கட்டியையொத் திருப்பனந்த முத்தியினிற் கலந்தே" (11. 12.) என்பதனுள் "விரும்பிப்பொன் னினைக்குளிகை ஒளிப்பதுபோல் அடக்கி" என்பதைக் கண்டுகொள்க. இனி, சமுத்திரம் போல அமுதம் விளைகையாலுமென்பதற்கு பி-ம் ஞானமிர்தத்தில் "மந்தர மத்தென நிறுவிநாணென - ஐந்தலை யரவு சுற்றி நஞ்சொடு - பணமணி பிதுங்கப் பற்றி யவுணரோ - டமரரு மியக்க லாற்று நாள்செல - முகுந்தன் தனாது முதுவலி யெறுழ்த்தோள் - வருந்த ஆங்கு வாய்விட் டலறி-

நுரைத்தலை விரித்துத் திரைப்பெருங் கையெடுத - தின்றுங் கூப்பிட் டன்றுவந் தெழுந்த - உவரி அமுத மென்ப" (6. 19) எ'- து கண்டு கொள்க.

இதனாற் சொல்லியது, அசிந்திதனாய் நின்ற பதியைச் சிந் திதனாகக் கண்டு வழிபடுகைக்குச் சிவஞான சித்தியில் பன் னிரண்டாஞ் சூத்திரமாகிய "செங்கமலத் தாளிணைகள் சேர லொட் டாத் திரிமலங்கள் அறுத்தீசன் நேசரொடுஞ் செறிந்திட், டங்க வர்தந் திருவேடம் ஆலயங்க ளெல்லாம் அரனெனவே தொழு திறைஞ்சி ஆடிப் பாடி, எங்குமியாம் ஒருவருக்கும் எளியோ மல் லோம் யாவாக்கும் மேலானோம் என்றிறுமாப் பெய்தித், திங்கள்முடி யார் அடியார் அடியோ மென்று திரிந்திடுவர் சிவஞானச் செய்தி யுடை யோரே " என்னும் விதியைப் பற்றி, சிவஞானிகளா யுள்ள வர்கள் திருவேடத்தாரையுஞ் சிவலிஙகப பெருமானையுஞ சிவனெனக் கண்டு வழிபடுமுறைமையை அறிவித்தது. க

ஆக இங்ஙனஞ் சொல்லபபட்ட உண்மை ஐம்பதினும் ஆன்ம இலக்கணமுதல் அணைந்தோர் தன்மை முடிவாகச் சொல்லப்பட்ட அதிகாரம் ஒன்பதும் இவ்வளவிலே முடிந்தது.

## நூற் கருத்து

மேல் இந்நூற் சொல்லபபட்ட சைவசித்தாந்தத்திலுண்டா கிய அத்தத்தின் கோட்பாட்டை அருளிச் செய்வான் எடுத்துக் கொண்டருளியது.

99. நிலவுல காய தாதி நிகழ்சிவாத் துவிதாந் தத்துக்
குலவினர் அளவ ளாவாக் கொள்கைய தாகி வேதத் [ய்
தலைதரு பொருளாய் இன்பாய்த் தாவில்சற் காரி யத்தா
மலைவறும் உணர்வாற் பெத்த முத்திகள் மதித்தா மன்றே.

அந்தமில் சமயத் தளவா தருமறை
அந்த முறுபொருள் அறைந்தே னென்றது.

(உரை) நிலவுல காயதாதி நிகழசிவாத் துவிதாந் தத்து-புறச்சமய மாகப் பொருந்தப்பட்ட உலகாயதன் முதல் அகச்சமயமாக விளங்

கப்பட்ட சைவராகிய சிவாத்துவிதி ஈருக; குலவினர் அளவளாவாக் கொள்கைய தாகி - அவர்கள் கொண்டாடப்பட்ட அத்தங்களாகிய அளவுகளுக்கு அளவுபடாத கோட்பாட்டை யுடைத்தாய்; வேதத் தலைதரு பொருளாய்-வேதத்தின் முடிவிலே யுண்டாகப்பட்ட அத்த மாய்; இன்பாய்-பரமாநந்தமாகிய பேரின்பமாய்; தாவில் சற்காரியத் தாய்-கேடில்லாத சற்காரிய வாதமுமாய்; சற்காரியமாவது உள்ளதே யுள்ளதென்றும் இல்லாதது ஒருகாலத்தினும் இல்லையென்றும் நின்ற தென அறிக. அஃதாவது பதி பசு பாசம் மூன்றினுள்ளும் யாதொரு பொருளை ஓரிடத்திலே யுண்டென்று நாட்டிப் பின்னை மற்றோரிடத திலே இல்லையென்கிறது சித்தாந்த விரோதமாகையால் அஃதிந் நூலுககு இல்லையென்றதென அறிக; மலைவறும் உணர்வால்-சிவனு டைய குற்றமற்ற பேரறிவாகிய திருவருளினாலே; பெத்த முத்திகள் மதிததாம் அன்றே - இந்நூலைப் பெத்தமாகிய பொதுவென்றும் முத்தியாகிய உண்மையென்றுஞ் சொல்லா நின்றேம். அன்றியும், பெதத முத்தி யென்றது போகமோக்ஷ மென்னவுமாமென அறிக.

உலகாயதன்முதற் சிவாத்துவிதி ஈருகச் சொல்லப்பட்ட சமயி களுக்குத் தொகை இவ்வளவென்று அறிகைக்கு முன்சொன்ன பொதுவிலே "புறச்சமயத் தவர்க்கிருளா யகச்சமயத் தொளியாய்" (7) என்ற செய்யுளுக் கெழுதின நுட்பத்திலே கண்டுகொள்க. பெததமுத்தியென்றது ஏதென்னில், பெத்தம் பாசத்தோடுங் கட்டுப் பட்டு நிற்கை. முத்தி அந்தக் கட்டுவிடுகையென அறிக. திருவாசகத் தில் "கட்ட றுத்தெனை யாண்டுகண் ணாரநீ, றிட்ட வன்பரோ டியாவருங் காணவே, பட்டி மண்டப மேற்றினை யேற்றினை, எட் டினோ டிரண்டுமறி யேனையே" (5. 49) எ - து கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது இந்நூலிற் சொல்லப்பட்ட சைவ சித்தாந்த அத்தம் உலகாயதன்முதற் சிவாத்துவிதி ஈருகச் சொல் லபபட்ட சமயிகள் கொள்ளுங் கோட்பாட்டை யுடையதல்லவாய் வேதாந்தத தெளிவாய அநுபோக அத்தமாய் முன்னொடுபின் மலை வற்ற பொருளா யிருக்கப்பட்ட அததததைச் சிவனுடைய திரு வருளினாலே பொதுவென்றும் உண்மையென்றுஞ் சொல்லா நின்றேனென்னும் முறைமையை அறிவிததது. இது நூறகருத்து. உ

## நூல் உபதேச முறைமை

இங்ஙனம் பெத்தமாகவும் முத்தியாகவுஞ் சொல்லப்பட்ட இந்த நூலினையும் இதனால் விளங்கப்பட்ட சைவசித்தாந்த அத்தமும் ஆசாரியர் சீடனுக்குக் கொடுக்கும் முறைமையும் மேலருளிச் செய்வான் எடுத்துக்கொண்டருளியது.

100. திருவருள் கொடுத்து மற்றிச் சிவப்பிர காச நன்னூல்
விரிவது தெளியு மாற்றால் விளம்பிய ஏது நோக்கிப் [ன்
பெருகிய உவமை நான்கின் பெற்றியில் நிறுவிப் பின்மு
தருமலை வொழியக் கொள்வோன் தன்மையிற் சாற்ற லாமே.

பெருநூற் பொருளைப் பின்முன் மலைவற
அருளுடன் கொள்பவர்க் கறைக என்றது.

(உரை) *திருவருள் கொடுத்து* - மலபாகமும் வந்து சத்திநிபாதமும் உண்டாய் வந்தான் ஒரு சீடனுக்கு ஆசாரியன் தனது திருவடியை வைத்து; *மற்றிச் சிவப்பிரகாச நன்னூல் விரிவது* - (மற்று - வினைமாற்று) இங்ஙனஞ் சிவப்பிரகாசமென்னும் நல்ல நூலினது அத்தத்தின் விரிவானதை; *தெளியுமாற்றால்* - அறிந்து தெளியும் வழியால்; *விளம்பிய ஏது நோக்கி* - நூல்களில் சொல்லப்பட்ட இயல்பு காரியம் அனுபலத்தி யென்கிற ஏதுவாகிய காரண காரியங்கள் ஆராய்ந்து பார்த்து; *பெருகிய உவமை நான்கின் பெற்றியில் நிறுவி* - மிகவும் உவமையாகச் சொல்லப்பட்ட வினை பயன் மெய் உருவென்று சொல்லப்பட்ட வினையாலுவமை பயனாலுவமை பண்பாலுவமை உருவாலுவமையாகிய நால்வகையிலுண்டாகிய இயல்பிலே கருத்தை நிறுத்தி; *பின்முன் தரு மலைவொழியக் கொள்வோன் தன்மையிற் சாற்ற லாமே* - இந்நூலில் உண்டாகிய அத்தத்தை முன்னொடுபின் மலைவறக் கொள்ளத்தக்க முறைமையினையுடையவரிடத்திலே தெளியச் சொல்லலாம்.

*திருவருள் கொடுத்தென்றது* தீக்ஷையினாலே பாச க்ஷயம் பண்ணி உண்மை ஞானத்தைக் கடாட்சித்தென அறிக. *நன்னூ லென்றது* "கருததிலுறை திருவருளும் இறைவன் நூலுங் கலந்து" (11) என்னும் பொருளைப் பெற்று நின்றதென அறிக. *விரிவது தெளியுமாற்றால்*

என்றது "வளர்விருத்தம்"(11)என்னும் பொருள்பெற்றதென அறிக. அஃதாவது, இந்நூலிற் சொற்சுருங்கி அத்தம் விரிந்திருக்கையினு லும் ஆராயுந்தோறும் ஆராயுந்தோறும் அத்தம் மேன்மேலும் விரிந்து வருகையினுலுமென அறிக. விளம்பிய ஏது நோக்கி என்றதை இயல்பென்றுங் காரியமென்றும் அநுபலத்தியென்றுஞ் சொன்னது ஏதென்னில், இயல்பேது என்றது பொருள் தன்னையே உவமை யாக்கி மாப்பூத்ததென்றால் மரமென அறிகையெனக் கொள்க. காரிய ஏதுவென்றது புகையைக் கண்டதுகொண்டே இவ்விடத்து அனலுண்டென அறிதல். அநுபலத்தி யேதுவாவது குளிரில்லாதது கொண்டே பனியில்லை யென்றதென அறிக. இவையிற்றுக்கு பி - ம் சித்தியாரில் "ஏது மூன்றும் இயல்புகா ரியத்தோ டநுப லத்தியிவை, ஓதின் இயல்பு மாமரத்தைக் காட்டல் உறுகா ரியம் புகைதன், ஆதி யான அனல்காட்ட லாகும் அநுப லத்தியது, சீத மின்மை பனியின்மை காட்டல்போலுஞ் செப்பிடிலே"(அளவை 10) எ - து கண்டுகொள்க. உவமை நான்காவது "வினைபயன் மெய்யுரு என்ற நான்கே, வகைபெற வந்த உவமைத் தோற்றம்" (தொல்காப்பியம், பொருளதிகாரம், உவமவியல் 1) என்னும் விதியைப்பற்றிக் கார்போலுங் குழல், தருப்போலுங்கை, புலி போலப் பாய்ந்தான், பொன்போலும் ஆவாரம்பூ என்று வருவதென அறிக. இங்ஙனம் ஏதுவும் உவமையுஞ் சொன்னதேதென்னில், பதி பசு பாச மென்ற மூன்றினுள் யாதாமொரு பொருளை அறியு மிடத்து ஏதுக்களினுலும் உவமைகளினுலும் அறியவேண்டுகையா லென அறிக. இதற்கு பி - ம் சங்கற்ப நிராகரணத்தில் "வாத செற்பை விதண்டையும் ஏதுவும் - ஓது நால்வகை உவமையுந் திகழ் தர - அருள்சேர மாந்தர் வெருள்சே ராமல் - தாக்கமும் விடயமுந் தக்க - நற்கவி மாந்தர் நகநவிற் றுவனே" (2. 45-49) எ - து கண்டுகொள்க. "பின்முன் தருமலைவொழியக் கொள்வோன் தன் மையிற் சாற்ற லாமே" எ - கு முன்னெடுபின் மலைவறக் கொள்ள வல்லவன் என்றது ஆரென்னில், முன் ஜநநங்களிலே சரியை கிரியை யோகங்களை முற்றும் அநுட்டித்துவந்த புண்ணியவான்கள் என்றதென அறிக. இதற்கு பி - ம் துகளறுபோதத்தில் "உற்ற

சரியை ஒழியாத நறகிரியை, குற்றமிலா யோகக் குறிநெறியும் - முற்றிப், பிறந்தார்கள் தாமறியப் பேசுகேன் அன்றிப், பிறந்தார் அறியாத பேறு" (2) எ - ம், இந்நூலினும் "கேடில்புகழ் தருஞ் சரியை கிரியா யோகக் கேண்மையரேல் இவையுணர்த்தக் கிளக்கு நூலே" (49) எ - ம் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, சமயாசாரமுஞ் சந்தான ஆசாரமும் உண்டாய் வந்தான் ஒரு சீடனுக்கு ஆசாரியன் திருவடியை வைத்து இந்தச் சிவப்பிரகாசமென்னுந் திருநாமத்தினையுடைய நல்ல நூலிலே விரியப்பட்ட சைவ சித்தாந்ததின் உண்மையான அதத்தை ஏதுக்களினாலும் உவமையினாலும் நிச்சயித்து அந்த அத்தத்தை முன் னொடுபின் மலைவறக் கொள்ளத்தக்க பக்குவனுக்குக் கிரமத்திலே கொடுக்கலாமென்னும் முறைமையை அறிவித்தது. ௩

இப்பிறப்பே சீவன்முத்தி யெய்துவிக்கும் மேற்பிறக்கும்
அப்பிறப்பும் இங்கே அறுததருளி - ஒப்பறவே
உண்மையருள் கொற்றங் குடிவாழ் உமாபதிதன்
வண்மையருட் குண்டோகைம் மாறு.

உரைச் சிறப்புப் பாயிரம்

1\. தொந்தனையாற் சூத்திரத்தாற் சொற்பொருளாய் அம்பலவன்
தந்தகுற ளாற்றொகையாற் றன்னருளாற் - சிந்தையின்மெய்
காணச் சிவப்பிரகா சங்கரைக்கண் டான்மதுரைத்
தாணுச் சிவப்பிரகா சன்.

2\. ஓதுபுகழ் சகாத்தமா யிரத்து நானூற்
றொருபதின்மேற் செல்கின்ற காலந தன்னின்
மாதுபயில் மதுரையில்வாழ் சிவப்பிர காசன்
வண்மையருள் நிகழ்சசியினால் உண்மை யாக
ஈதுமலம் ஈதுவினை ஈது மாயை
ஈதுயிர்பின் ஈதுசிவம் என்றே காட்டித்
தீதில்சிவப் பிரகாசச் செய்யுள் நூறுந்
தோந்துரையிட் டேயுலகிற் சிறப்பித் தானே.

சிவப்பிரகாச உரை முற்றும்.

திருச்சிற்றம்பலம்

---

# மதுரைச் சிவப்பிரகாசர்

உமாபதி சிவாசாரியர் இயற்றிய சங்கற்ப நிராகரணத்தின் பாயிரத்திலுள்ள 'ஏழஞ் சிருநூறு எடுத்த ஆயிரம் - வாழுநற் சக ஊம் மருவா நிற்ப' என்ற அடிகளால் அந்நூல் செய்யப்பெற்ற காலம் சகம் கஉஙகு என்று விளங்குகிறது. இக்காலம், சிவப்பிர காசத்தைச் சகம் கஉஉஅ-ல் (அதாவது கி. பி. 1306-ல்) செய்தா ரென்னும் பழமையான வழக்கு உண்மையே யென்பதை உணர்த்து கிறது. இந்நூலுக்கு மதுரைச் சிவப்பிரகாசர் செய்த விரிவுரையும், இலக்கணம் சிதம்பரநாத முனிவர் செய்த உரையும், நல்லசிவதேவர் செய்த சிந்தனையுரையும், வேறு சில புத்துரைகளும் அச்சில் வெளி வந்துள்ளன. மதுரைச் சிவப்பிரகாசருரையானது சித்தாந்த சாத்திர வுரைகள் பலவற்றுள்ளும் மிகப் பழமையானது. இவ்வுரைக்குமுன் னும் சிவப்பிரகாசத்துக்கு 'வியாக்கிகள்' இருந்தனவென்றும் அவை பொழிப்புரையாக எழுதப்பட்டவை யென்றும் இவர் கூறுகிறார்.

உரைச் சிறப்புப் பாயிரத்தின் இரண்டாவது செய்யுள் 'ஓது புகழ் சகாத்தம் ஆயிரத்து நானூற் றொருபதின்மேற் செல்கின்ற' காலத்தில் உரை செய்யப்பெற்றது எனக் கூறுகிறது; ஆகவே, இதன் காலம் சகம் கசகO அல்லது கி. பி. 1488. மெய்கண்ட சந்தா னத்தில் காவை அம்பலநாதத் தம்பிரான் திருவடிமரபில் வந்த மதுரை ஞானப்பிரகாசர் தமது குருவென்று உரையாசிரியர் கூறு கிறார். இந்தச் சித்தாந்த பரம்பரையினர் ஞானசம்பந்தரிடம் பேரன்பு பூண்டவர்களென்பது 'சம்பந்தமாமுனிவன் - எந்தைபதம், சென் னியின்மேல் வைத்துச் சிவப்பிரகாசக் கருத்தை, அன்ன வயற்காவை அம்பலவன் - சொன்னான்' என்னும் கலிவெண்பாப் பகுதியால் பெறப்படுகிறது. இந்நூலுக்கு அடிவரவும் அதிகார அடைவும உரைக்கும் அகவல் 'மெய்ப்படு சிவப்பிர காச விருத்தக், கருத்தின துணைமை விரிதத்துரைத தருளினன், சண்பையில் வாழுந் தவகுரு நாதன, பண்பமர் சிற்றம பலவன் தானே' என்று சொல்வதால், இதிற் குறிப்பிடப்படும் சீகாழிச் சிற்றம்பல நாடிகளிடத்தும் இவர் மிக்க ஈடுபாடுடையவரெனப் புலப்படுகிறது.

சிவப்பிரகாசர் உரைசெய்யத் தொடங்கும்போது நூல் வரலாற்றையும் உரை வரலாற்றையும் விரித்துரைத்து, பிறகு சூத் திரம ஒவவொன்றுக்கும 'தொர்ந்தனை' எழுதுகிறார். திருவிருத்தத் தின தோற்றுவாயை முதலில் அவதாரிகையாகத் தந்து, விருத்தத தின் பின், காவை அம்பலநாதத் தம்பிரான் இயற்றிய கொளுவைக் கூறி, அதன் பிறகு, மூலத்திலுள்ள சொற்களுக்கு விளக்கமாகப

பொருள் உரைக்கிறார். கடைசியில், நுட்பம், விசேடம் அல்லது விதப்பு என்ற தலைப்புக்களின்கீழ், தாம் கூறிய பொருள் பொருந்தும் முறையை முதனூல் வழிநூல்களையும் பிற சைவ சாத்திரங்களையும் மேற்கோள்களாகக் காட்டித் தெளிவு படுத்துகிறார்.

சிவாகமம், சதுர்த்த சங்கிரகம், சூதசங்கிதை முதலிய வடமொழி நூல்களை இவர் மேற்கோளாக எடுத்தாளுவதிலிருந்து இவரது வடமொழிப் புலமை புலனாகும். தொல்காப்பியம், நன்னூல், நேமிநாதம் என்பன இவர் குறிப்பிடும் இலக்கண நூல்கள். தேவாரங்களையும் பிற திருமுறைகள் எல்லாவற்றையும் எடுத்தாளுகிறார். கோவையாரைக் கோவைத்திருவாசகம் என்றும், திருக்குறளைத் திருவள்ளுவப் பயன் என்றும், ஔவையார் குறளை வீட்டுநெறிப்பால் என்றும் வழங்குகிறார். வீட்டுநெறிப்பால் என்ற பெயர் இக்குறளின் ஏட்டுப் பிரதிகள் சிலவற்றிலும் காணப்படுகிறது. மெய்கண்ட சாததிரங்களுள், திருக்களிற்றுப்படியார், சிவஞானபோதம், சித்தி, இருபாவிருபது, உண்மை விளக்கம், போற்றிப்பஃறொடை, திருவருட்பயன், சங்கற்ப நிராகரணம் என்பன இவர் குறிப்பிடுபவை. உமாபதியார் செய்த கோயிற்புராணத்தையும் திருத்தொண்டர் புராண சாரத்தையும் எடுத்தாளுகிறார். நாலடி, ஞானாமிர்தம், தேவிகாலோத்தரம், தத்துவப்பிரகாசம், ஞானபூசை, ஞானபூசாகரணம், ஞானதீக்கை, ஞானஅந்தியேட்டி, போஜனவிதி, பிராசாத அகவல், சிவானந்தமாலை, தத்துவவிளக்கம், சிற்றம்பலநாடிகள் வெண்பா, ஞானப்பஃறொடை, துகளறுபோதம் முதலியன இவா மேற்கோளாகக் காட்டும் நூல்கள். ஞானஅந்தியேட்டி, வீட்டுநெறிப்பால் முதலியவற்றுக் குரியனவாக இவர் காட்டும் சில பாடல்கள் அந்நூல்களில் காணபபடவில்லை. சிறறம்பல நாடிகள் ஞானப்பஃறொடையானது அச்சான சிற்றம்பலநாடிகள் சாத்திரக்கொததில் காணபபடவில்லை. இவர் கூறும் புததநூல், உருபசொருப அகவல், சிவார்ச்சனுபோதம் என்பன அறியப்படாதவை. சித்தியாா பரபககவுரையில் காணப்படும் 'பௌத்த நூல்' இங்கே குறித்த புத்த நூலாகவே இருததல் கூடும். தததுவசரிதை, மெய்ஞ்ஞான விளககம் என்னுமிரண்டும் இவரால் எடுததாளப்படுவதுமன்றி, தத்துவராய சுவாமிகளுடைய பெருந்திரட்டிலும் தொகுக்கப்பட்டுள்ளன. (இம்மெய்ஞ்ஞானவிளக்கம் பிறகாலத்தே இதே பெயரோடு வழஙகப்படும பிரபோதசந்திரோதயம் அன்று.) சிவானந்தமாலை, சிற்றம்பல நாடிகள் வெண்பா முதலியவற்றைக குறிப்பிடும்போது, இவை 'திருவருளைப் பெற்று அனுபவித்த அடியார்கள் வாக்கு' என்று பாராட்டுகிறார்.

திருநெறிவிளக்கம் என்ற ஒரு சாத்திர நூலைப் புகழ்ந்து கூறுகிறார்; இது சிவப்பிரகாசத்தைப் பின்பற்றிய நூலென்றும், இதன் விருத்தமொவ்வொன்றும் சிவப்பிரகாசத்தை அடியொற்றியமைந்த தென்றும சொல்லிவிட்டு, சிவப்பிரகாசத்தில் விளக்கமுறாத பொருளை இதைக்கொண்டு விளக்குவார். இந்நூலும் இப்போது கிடைக்கவில்லை. அருணகிரிநாதர் 15-ம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் வாழ்ந்தார் என்பது ஆராய்ச்சியாளர் முடிபு; திருப்புகழை இவ்வுரைகாரர் எடுத்தாளுவதால் இம்முடிபு வலியுறுகின்றது.

இவர் சிவப்பிரகாசத்துக்கு மட்டுமன்றி இருபாவிருபதுக்கும் உரைசெய்திருக்கிறார். இவருரையில் பல மேறகோள்களைச்சோத்து, நமச்சிவாயத் தம்பிரான் சகம் கசுருகூ - ல் (கி. பி. 1677) விரிவு படுத்தியிருக்கிறார்.

இவருடைய சிவப்பிரகாச வுரையானது சிவப்பிரகாசத்துக்குச் சிறந்த ஒரு பாஷ்யமாகவும் சித்தாந்த உண்மைகளைத தெரிவிககும் சைவ சமயக் கருவூலமாகவும் அமைந்திருக்கிறது. அன்றியும், இதன்கண் எடுத்தாளப்பட்டுள்ள மேற்கோள்களாலும் கூறப்பட்ட விஷயஙகளாலும், 14, 15-ம் நூற்றாண்டுகளில் சைவ சிததாந்த சமயம் இருந்த நிலையைத் தெளிவாக உணர முடிகிறது. இவருடைய காலம் 15-ம் நூற்றாண்டின் பிற்பகுதி எனத் தெரிகின்றமையால், இவருக்கு முன்னுள்ள நூல்களைக்கொண்டு அக காலததுச் சமயநிலையை அறிதல் எளிது. உமாபதிசிவாசாரியர் காலம் 14-ம் நூற்றாண்டின் தொடக்கத்தோடு முடிவடைகிறது. அவரை யடுத்து பல சைவப் பெரியார்கள் தோன்றிச் சமய போதனைகள் செய்தும் சமய நூல்கள் செய்தும வந்திருக்கிறார்கள. துகளறுபோதம் முதலிய சாத்திரங்கள் செய்த சீகாழிச் சிற்றம்பல நாடிகள் வாழ்ந்தகாலம இது. அவருடைய சீடர்களில், தததுவநாதர் சிததாநத சாததிரஙகளுள் ஒன்றாகிய உண்மை நெறி விளககததை யும் இருபாவிருபதுரையையும் செய்தார; தத்துவப் பிரகாசர் தத துவப பிரகாசமும சித்தியார் பரபக்ஷ உரையும் இயற்றினார. காழிக் கண்ணுடைய வள்ளலாரும் காவை அம்பலவாணத் தம்பிரானும் வாழ்ந்தது இக்காலத்தே தான். சிவானந்தமாலை, திருநெறி விளககம், ஞானபூசைத் திருவிருததம் முதலிய அரிய சிததாநத நூல்கள் இக்காலத்தே தோன்றியன. இவ்வாறு, இவ்விரு நூற்றாண்டு களின் சமய சரித்திரத்தை வரையறை செய்யப் பெருந்துணையா யுள்ளது மதுரைச் சிவபபிரகாசருடைய உரை.

# பாட்டு முதற்குறிப்பகராதி